

# எனது நாட்டில் ஒரு துளி நேரம்

விடுதலைப் புலிகளின் நடைமுறை அரசின்
இறுதி நான்கு வருடங்கள்

ந.மாலதி

# எனது நாட்டில் ஒரு துளி நேரம்

விடுதலைப்புலிகளின் நடைமுறை அரசின்
இறுதி நாலு வருடங்கள்

விடியல் பதிப்பகம்
கோவை– 641 015

**விடியல் பதிப்பகம்** முதற்பதிப்பு ஏப்ரல் 2013 தி.ஆ. 2044
விடியல் பதிப்பகம், 23/5, ஏ.கே.ஜி. நகர், 3வது தெரு
உப்பிலிபாளையம் அஞ்சல், கோயம்புத்தூர் 641 015.
தொலைபேசி: 0422 - 2576772, 9789457941

**எனது நாட்டில் ஒரு துளி நேரம்**

**விடுதலைப்புலிகளின் நடைமுறை அரசின்**
**இறுதி நாலு வருடங்கள்**

ந. மாலதி

ISBN 978 - 81 - 89867 - 57 - 7

அட்டை வடிவமைப்பு: மணி, சென்னை - 5
அச்சாக்கம்: ஜோதி எண்டர்பிரைசஸ், சென்னை.

பக்கங்கள் : 240

விலை : /-

Vidiyal Pathippagam, First Edition April 2013 Thiruvalluvar Era 2044
**VIDIYAL PATHIPPAGAM**, 23/5, AKG Nagar, 3rd Street,
Uppilipalayam Post, Coimbatore 641 015.
Phone: 0422 - 2576772, 9789457941
vidiyal@vidiyalpathippagam.org
vidiyalpathippagam.org

**Yenadhu Natil Oru Thuli Neram**

N. Malathy

ISBN 978 - 81 - 89867 -57 - 7

Cover Design : Mani, Chennai - 5
Printed at Jothy Enterprises, Chennai.

Pages : 240

Price : /-

# உள்ளடக்கம்

# சொல் விளக்கம்

*பொது*

*சிறுவர் இல்லம் :* ஆதரவற்ற சிறுவர்களைப் பராமரிக்குமிடம்

*மெனிக் பாம்:* மூன்று இலட்சம் மக்களைத் தடுத்து வைத்த இடம்

*வெள்ளை வான்:* மக்களைக் கடத்திக் கொலை செய்யும் அல்லது காணாமற்போகச் செய்யும் வாகனத்தைக் குறிப்பது

*சமாதான நடவடிக்கை சார்ந்த சொற்கள் (பிற்சேர்க்கையில் வரலாற்றுக் குறிப்பைப் பார்க்க)*

*கண்காணிப்புக் குழு:* போர்நிறுத்த ஒப்பந்த மீறல்களைக் கண்காணிக்க நோர்வே நாட்டினால் அமர்த்தப்பட்ட குழு

*கூட்டுத் தலைமை:* இலங்கைக்கு உதவி வழங்கும் நாலு நாடுகளின் கூட்டுத் தலைமை.

(அமெரிக்கா, ஐரோப்பிய ஒன்றியம், ஜப்பான், நோர்வே)

*ஆங்கிலச் சொற்சுருக்கம்*

*ஐநா:* UN (United Nations)

*யூனிசெப்:* UNICEF

*ஐசிஆர்சி:* ICRC (International Commission of Red Cross)

*நிசோர்:* NESoHR (North East Secretariat on Human Rights)

*வன்னியிலிருந்து சில பொதுமக்களுக்கான அமைப்புகள்*

தமிழர் புனர்வாழ்வுக் கழகம்

பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையம்

வட–கிழக்கு மனித உரிமைச் செயலகம் (நிசோர்)

வட–கிழக்கு புள்ளிவிபர மையம்

செந்தளிர்: பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வுக் கழகத்தால் நடத்தப்பட்ட சிறுவர் இல்லம்

குருகுலம்: தமிழர் புனர்வாழ்வுக் கழகத்தால் நடத்தப்பட்ட சிறுவர் இல்லம்

*வன்னியில் இயங்கிய சில விடுதலைப்புலிகளின் நிறுவனங்கள்*

பெண்கள் ஆய்வு மையம்

தமிழ்த் தேசியத் தொலைக்காட்சி

வழங்கல்: விடுதலைப்புலி உறுப்பினர்களுக்கான விநியோகத் தளம்

செஞ்சோலை: பெண் சிறுவர்களுக்கான இல்லம்

காந்தரூபன், அறிவுச்சோலை: ஆண் சிறுவர்களுக்கான இல்லம்

அன்புச்சோலை: வயோதியருக்கான இல்லம்

மயூரி இல்லம்: போரில் ஊனமுற்ற பெண் போராளிகளுக்கான இல்லம்

மக்கள் தொடர்பகம்: மக்கள் தொடர்புறுவதற்கான இடம்

நவமறிவுக் கூடம்: ஊனமுற்ற போராளிகளுக்கான கல்வி நிலையம்

*விடுதலைப்புலிகளின் கலாச்சாரச் சொற்கள்*

போராளி: – விடுதலைப்புலி உறுப்பினர்

வீரமரணம்: – களத்தில் போராளியின் இறப்பு

மாவீரர்: – போரிட்டு மடிந்த போராளிகள்

வித்துடல் விதைத்தல்: – மாவீரரின் உடலைப் புதைத்தல்

மாவீரர் துயிலும் இல்லம்: – மாவீரர்களின் புதைகுழிகள் அமைந்த இடம்

மாமனிதர்: – பொதுமக்களுக்கு கொடுக்கப்பட்ட விருது

*விடுதலைப்புலிகளின் முக்கிய தினங்கள்*

| | | |
|---|---|---|
| *கேணல் கிட்டு தினம்:* | *ஜனவரி* | *16* |
| *அன்னை பூபதி தினம்:* | *ஏப்பிரல்* | *19* |
| *கரும்புலி தினம்:* | *ஜூலை* | *5* |
| *திலீபன் தினம்:* | *செப்டம்பர்* | *26* |
| *புலேந்திரன் குமரப்பா தினம்:* | *ஒக்டோபர்* | *5* |
| *பெண்கள் எழுச்சித் தினம்:* | *ஒக்டோபர்* | *10* |
| *மாவீரர் தினம்:* | *நவம்பர்* | *27* |

# நிலப்படம்

*கீழே காணப்படும் நிலப்படத்தில் இளம் கறுப்பு நிறத்திலிருக்கும் பகுதி வட–கிழக்கு மாகாணம் என்ற பெயரில் ஒரு நிர்வாகத்தின் கீழிருந்தது. 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தமும் இப்பகுதியை வைத்தே தயாரிக்கப்பட்டது. ஈழத்தமிழர் தமது தாயகமாகக் கோரும் பகுதி மேலதிகமாக மேற்கிலிருக்கும் புத்தளம் மாவட்டத்தை உள்ளடக்கியது. இங்கு விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசம் எதுவுமில்லாதால் அது 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தில் உள்ளடக்கப்படவில்லை.*

*வட – கிழக்கு மாகாணத்தில் யாழ்ப்பாணக் குடாநாடு தவிர்த்த ஏனைய வடக்குப்பகுதியே வன்னி என்றழைக்கப்படும். போர்நிறுத்த ஒப்பந்தம் கைச்சாத்திடும்போது விடுதலைப்புலிகள் வன்னியில் பெரும்பகுதியைத் தமது கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். அவர்களின் நிர்வாக மையமாகக் கிளிநொச்சி நகரம் விளங்கியது. 2006ம் ஆண்டு வன்னியில் போர் தீவிரமடைவதற்கு முன் விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் இருந்த பகுதியே இந்நூலில் வன்னி என்றழைக்கப்படுகிறது.*

*2006ம் ஆண்டு இறுதியில் விடுதலைப்புலிகள் கிழக்கு மாவட்டத்தில் தோற்கடிக்கப்பட்டு அங்கிருந்து பின்வாங்கிய பின்னர் லங்கா அரசு கிழக்கு மாவட்டத்தையும் வடக்கு மாவட்டத்தையும் பிரித்து வெவ்வேறு நிர்வாகத்தின் கீழ் கொண்டு வந்தது.*

# முன்னுரை

**வி**டுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் இருந்த வன்னிப் பகுதியில் கடைசி நான்கு ஆண்டுகள் தொண்டராகப் பணிபுரிந்தேன். ஒரு தனிமனித வாழ்வில் துளிநேரம்தான் ஆனால் யாரும் தம் வாழ்வில் மறந்துவிட முடியாத உச்ச கணம்.

ஒரு இனத்தை துடைத்தொழிக்கும் பயங்கரவாதச் செயலை எந்த சுவடும் இல்லாமல் எப்படி நிகழ்த்துவது என்பதற்கு மனித வரலாற்றில் இதுபோன்ற முன்னுதாரணத்தை மனிதகுல வரலாறு நெடுகிலும் காணமுடியாத சாதனை அப்போது நடந்தேறியது. அதில் ஒரு பார்வையாளராக இருந்தேன். விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் அவர்கள் அழிக்கப்பட்ட 2009 மே மாதம் வரை இருந்த வன்னிப் பகுதியில் இறுதி நான்கு வருடங்கள் தொண்டராகப் பணிபுரிந்த அனுபவத்தை இங்கே பதிவு செய்கிறேன்.

உலக அங்கீகாரம் இல்லாத அரச அமைப்புக்களின் ஆயுதப் போராட்ட வரலாற்றில் விடுதலைப்புலிகள் 2009ம் ஆண்டு மே மாதம் அழிக்கப்பட்ட நிகழ்வு முக்கியத்துவம் பெற்ற ஒன்றாக அடையாளப்படுத்தப்பட வேண்டியுள்ளது. இது நீண்டகாலத்திற்கும் பலவிதமான கோணங்களிலிருந்து ஆராயப்படும். இந்நூலும் அத்தகைய ஆய்வுகளுக்கு ஆதாரம் ஆகலாம். இந்நூலைப் பதிவதற்கு என்னைத் தூண்டிய முக்கியமான காரணம் அதுவன்று.

மக்கள் தம் சரித்திரத்தைப் பதிந்து நினைவில் வைத்திருப்பது அவர்களின் சந்ததிக்கு மிகவும் முக்கியமானது. சரித்திரத்தின் காட்சிகள், சாட்சியம் இல்லாமல் முற்றாக அழிக்கப்பட்ட பின்னர் நினைவுகூர ஏதாவது வேண்டும் என்பதால் இந்த நூலை எழுதினேன். எவருக்கும் கிடைத்தற்கரிய அனுபவங்கள் எனக்குக் கிடைத்தன. இவ்வனுபவத்தைப் பாதுகாப்பு அச்சுறுத்தல்கள் இல்லாமல் பதிவதற்கு எனது நியூசிலாந்து நாட்டுக் குடியுரிமையும் ஒரு தனித்துவமான சந்தர்ப்பத்தைத் தந்தது. இந்த அனுபவத்திலிருந்து உயிர் தப்பிய பலருக்கும் இத்தகைய பாதுகாப்பு இன்றுவரை சாத்தியமில்லை.

நான் புலம்பெயர்ந்த தமிழர்களில் ஒருவர். வன்னியில் நானிருந்த இறுதி நாலு வருட காலத்திற்கு முன் முப்பது வருடங்களுக்கு மேலாக நியூசிலாந்து நாட்டில் எனது குடும்பத்துடன் வசித்தேன். நியூசிலாந்தில் எனது பிள்ளைகள் வளர்ந்து எனக்கு சிறிது அவகாசம் கிடைத்த சில வருட காலம் இலங்கையின் சமாதானத்திற்கான ஒரு ஆர்வலர் என்று என்னைக் கருதிக்கொண்டு சில அரசியல் பணிகளில் ஈடுபட்டேன். இயல்பாகவே நான் ஒரு சமூக ஆர்வலர். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின்னர் சிறந்த சமூகப் பரிசோதனைக் களமாக தோன்றிய வன்னிச் சமூகம் என்னை ஈர்த்தது. நான் முதலிரண்டுமுறை வன்னிக்குச் சென்றபோது சிறிது காலமே தங்கினேன். இப் பரிசோதனைக் களத்தில் எனக்கும் பங்கு உண்டா என்று அறிவதற்கு 2002ம் ஆண்டு முடிவில் ஆறு வாரங்களும், ஏப்பிரல் 2004ல் தொடங்கி மூன்று மாதங்களும் தங்கினேன். பின்னர், வன்னியால் ஈர்க்கப்பட்டு மார்ச் 2005ல் நீண்டகாலம் தங்கும் நோக்கத்துடன் அங்கு சென்றேன்.

வன்னியில் 2005ம் ஆண்டிலிருந்து 2009ம் ஆண்டு வரை நான்கு வருடங்கள் இருந்தேன். இக்காலத்தில் நோர்வேயின் ஒத்துழைப்புடன் உருவான 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தம் சிறிது சிறிதாக பலமிழந்து கொண்டிருந்தது. இறுதியில் வெடித்த கொடூரப் போரில் விடுதலைப்புலிகள் அழிக்கப்பட்டனர். அவ்வமைப்பின் முக்கியத் தலைவர்கள் கொல்லப்பட்டார்கள் அல்லது காணாமற்போகச் செய்யப்பட்டார்கள்.

வன்னியில் நான் இருந்த நான்கு வருட காலத்தில் விடுதலைப்புலிகளின் தலைவர்கள் சிலருடனும், வன்னி அமைப்புக்கள் சிலவற்றிலும் பணியாற்றினேன். நிசோர் என்று பொதுவாக அறியப்படும் வட–கிழக்கு மனித உரிமைச் செயலகம், விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகம், பெண்கள் சார்ந்த வேலைகள் செய்யும் ஓர் அமைப்பு, ஒரு சிறுவர் இல்லம் ஆகிய அமைப்புக்களில் நான் பணியாற்றினேன். சிறுவர் போராளிகளை விடுவிக்கும் திட்டத்தில் விடுதலைப்புலிகளுடன் இணைந்து செயற்பட்டமை, சமாதானப் பேச்சு வார்த்தைக்கான ஆவணங்கள் தயாரித்தமை, நிசோரில் லங்கா ராணுவத்தின் மனித உரிமை மீறல்களை ஆவணப்படுத்தியமை, குடும்ப வன்முறை பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்த முன்னெடுக்கப்பட்ட வேலைத்திட்டம் ஆகியன வன்னி எனக்குத் தந்த அனுபவங்கள்.

போரின் இறுதிக் கட்டத்தில், மார்ச் 2009ல் முள்ளிவாய்காலிலிருந்தும், வன்னியிலிருந்தும், ஐசிஆர்சி கப்பலில் நான் வெளியேறினேன். இங்கிருந்து தொடராக வெளியேறிய மூன்று

இலட்சம் மக்களுடன் நானும் மெனிக் பாம் முகாமில் லங்கா ராணுவத்தால் தடுத்து வைக்கப்பட்டேன். நான் மெனிக் பாம் முகாமிலிருந்த காலத்தில் விடுதலைப்புலிகளின் தோல்வியுடன் போர் முடிவுக்கு வந்தது. 2009ம் ஆண்டின் பிற்பகுதியில் நான் மெனிக் பாம் முகாமிலிருந்தும் இலங்கையிலிருந்தும் வெளியேறி நியூசிலாந்தை அடைந்தேன்.

ஈழத்தமிழரின் போராட்ட வரலாறு பற்றி வாசகர்கள் ஓரளவு அறிந்திருப்பார்கள் என்ற நம்பிக்கையில் இந்நூலை எழுதியிருக்கிறேன். இலங்கைத் தீவின் வரலாற்றுப் பின்னணியை அறிய விரும்பும் வாசகர்களுக்காக பிற்சேர்க்கையாக ஒரு சுருக்கமான வரலாற்றை இணைத்துள்ளேன். ஒன்றை மட்டும் முக்கியமாக குறிப்பிட வேண்டும். 2002ம் ஆண்டு நோர்வேயின் அனுசரணையுடன் விடுதலைப்புலிகளும் லங்கா அரசும் போர்நிறுத்த ஒப்பந்தம் கைச்சாத்திடும் முன்னரே மக்கள் 30 ஆண்டு காலப் போரால் இன்னல்களையும் இழப்புக்களையும் சந்தித்தார்கள். இதை வாசகர்கள் கருத்தில்கொள்ள வேண்டியது மிகவும் முக்கியம்.

வறுமையாலும், ஆதரவில்லாமலும் அல்லலுற்ற சிறுவர்களைப் பாராமரித்த சிறுவர் இல்லங்களையும் ஏனைய சிறுவர் நல அமைப்புக்களையும் சென்று பார்வையிட்டது வன்னியில் எனது முதல் அனுபவமாக இருந்தது. முப்பது வருடங்களாக நடைபெற்ற போரின் பாதிப்புக்களுக்கு ஈடுகொடுப்பதற்காக இந்நிறுவனங்கள் அமைக்கப்பட்டன. எனது இரண்டாவது வன்னிப் பயணத்தின் போது சிறுவர்கள் எதிர்நோக்கிய போரின் பாதிப்புகளை வெளிக்கொண்டுவரும் ஒரு பணியில் ஈடுபட்டேன். பிற்காலத்தில் நான் சிறுவர் போராளிகள் சார்ந்த வேலைகளில் ஆழமாக ஈடுபடுவதற்கு இது உதவியாக இருந்தது.

வன்னியில் இயங்கிய சிறுவர் இல்லங்களில் ஒன்று செஞ்சோலை. ஜனனி என்றழைக்கப்பட்ட ஒரு மூத்த பெண் விடுதலைப்புலி உறுப்பினரின் தலைமையில் இச்சிறுவர் இல்லம் இயங்கியது. ஜனனியும் செஞ்சோலையும் விடுதலைப்புலிகளின் வரலாற்றில் போற்றப்படும் இரு அம்சங்கள். ஜனனியுடனும் செஞ்சோலையுடனும் எனது உறவு எனது முதலாவது வன்னிப் பயணத்தின்போதே தொடங்கியது. ஜனனியினதும் செஞ்சோலையினதும் சாதனைகளையும் வலிகளையும் ஒரு முழு அத்தியாயத்தில் விவரித்திருக்கிறேன்.

நான் மனித உரிமை அமைப்பான நிசோரில் பணி செய்ய ஆரம்பித்தது நான் அதுவரை செய்த சிறுவர்கள் சார்ந்த பணியின் தொடர்ச்சியாகவே இருந்தது. ஏனெனில் அக்காலத்தில் நிசோரும்

சிறுவர் போராளிகளைப் பற்றிய புகார்களையே அதிகமாக எதிர்கொண்டது. நிசோரும் 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் ஓர் அங்கம். இருப்பினும் நிசோருள் எனக்கான ஒரு ஆவணமாக்கல் பணியை நானே நிர்ணயித்துக்கொண்டு லங்கா அரசினால் தமிழர்களுக்கெதிராக செய்யப்பட்ட முந்தைய கொடுமைகளை ஆவணமாக்கும் முயற்சியில் இறங்கினேன். ஏராளமான பழைய பாரிய நிகழ்வுகள் ஆவணமாக்கப்பட வேண்டி இருந்தன. நில அபகரிப்பு, வகைதொகையான கொலைகள், காணாமற் போதல்கள், தமிழர் தாயகத்தில் மக்கள் குடியிருப்பை திட்டமிட்டு மாற்றல் எனப் பல அம்சங்கள் ஆவணமாக்க வேண்டியிருந்தன.

கொஞ்சம் கொஞ்சமாக நான் விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலக வட்டத்திற்குள் இழுக்கப்பட்டேன். இங்கு நான் பணி செய்தபோது சிறுவர் போராளிகளைப் பற்றி அறிவதற்கு எனக்கு அதிக வாய்ப்புக்கள் கிடைத்தன. தொடர்ந்து சிறுவர் போராளிகள் சார்ந்த வேலைத் திட்டத்தினுள்ளும் நான் ஒரு பெரிய பங்காற்றினேன். இதுபற்றி இந்நூலில் விரிவாக விவரித்திருக்கிறேன். ஆகவே விடுதலைப்புலிகள் அமைப்பில் சிறுவர் போராளிகள் ஏன் ஒரு பாரிய பிரச்சினையாக இருந்தது என்பதும் சர்வதேச மட்டத்தில் இது எவ்வாறு ஒரு சூடான பிரச்சினையாக இருந்தது என்பதும் வாசகர்களுக்குப் புரியும்.

நிசோரில் பணி செய்தபோது சில மேற்குலகப் பிரதிநிதிகளுடன் உரையாடும் சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தன. பின்னர் சமாதானச் செயலகத்தில், சமாதான முன்னெடுப்பாளர்கள், ஐநா பிரதிநிதிகள், ஏனைய சர்வதேசப் பிரதிநிதிகள் போன்ற பலருடனான சந்திப்புக்களை அவதானிக்கும் வாய்ப்புக்களும் கிடைத்தன. சிறுவர் போராளிகளை விடுவிக்கும் திட்டத்தில் ஐநா அமைப்பான யூனிசெப்புடனும் தொடர்ச்சியான உரையாடல்களில் ஈடுபட்டேன். இவையெல்லாமே சர்வதேச சமூகத்தின் லங்கா–தமிழீழம் சார்ந்த நிலைப்பாட்டைப் பற்றிய எனது கருத்துருவாக்கத்திற்குப் பொருள் சேர்த்தன. நான் சமாதானச் செயலகத்தில் ஆற்றிய வேறொரு பணிக்காக லங்கா–தமிழீழம் சார்ந்த சர்வதேச ஊடகங்களில் வெளியான செய்திகளையும் கூர்ந்து படிக்க வேண்டியிருந்தது. எனது இந்நேரடி அனுபவங்களைத் தளமாக வைத்து சர்வதேச அமைப்புக்களின் அக்காலத்திய நிலைப்பாட்டையும் இங்கு விளக்க முயன்றிருக்கிறேன்.

நான்கு வருட கால அனுபவத்தில் நான் கண்ட வன்னியை வாசகர்கள் கண்முன்னே நிறுத்த வேண்டும் என்பதே இந்நூலினூடாக

நான் எடுத்த அடுத்த முயற்சி. வன்னியை விளங்கிக்கொள்வதற்கு அதன் சடங்குகளை அறிந்துகொள்வது முக்கியம். விடுதலைப்புலிகளால் உருவாக்கப்பட்ட இச்சடங்குகளை வன்னி மக்கள் எல்லோரும் பின்பற்றினார்கள். இச்சடங்குகள் எல்லாம் களத்தில் இறந்த மாவீரர்களை மையப்படுத்தியவை. மாவீரர் துயிலும் இல்லங்கள் உட்பட்ட பலவகையான உருவகங்கள் எங்கும் அமைக்கப்பட்டிருந்தன. மக்களும் இவற்றுடன் உணர்வுரீதியாக ஐக்கியப்பட்டிருந்தனர். விடுதலைப்புலிகளின் வன்னி ஊடகங்களும் வன்னிச் சமூகச் சூழலின் இன்னுமொரு பிரதான அங்கம். வன்னியில் பல ஊடகங்கள் இருந்தாலும் அவற்றில் ஈழநாதம் பத்திரிகை, புலிகளின் குரல் வானொலி, தமிழ்த் தேசியத் தொலைக்காட்சிச் சேவை ஆகியன வன்னியில் முதன்மையாக வியாபித்திருந்தன. இவை மூன்றும் பின்னர் லங்கா ராணுவத்தின் பல்வேறு விதமான தாக்குதல்களுக்கு உள்ளாயின. வன்னிச் சமூகம், முக்கியமாக விடுதலைப்புலிகள் சமூகம், பல்வேறு சமூகம் சார்ந்த விவாதங்களில் ஆர்வமாக ஈடுபட்டது. எனக்கு வன்னியில் மிகவும் விருப்பமான அனுபவங்களாக இவையிருந்தன. கட்டாய ஆட்சேர்ப்பு, கிரிக்கெட் உலகப் பந்தயப் போட்டி இரண்டும் மிகவும் ஆர்வமாக விவாதிக்கப்பட்டன. கட்டாய ஆட்சேர்ப்புப் பற்றிய விவாதங்கள் அதிகம் இடம்பெறாவிட்டாலும் அதனால் ஏற்பட்ட விளைவுகள் பல விவாதங்களுக்குத் தூண்டுதலாக இருந்தன.

நான் முதலில் வன்னியில் பணியாற்ற நினைத்தபோது பெண்கள் சார்ந்த திட்டங்களில் ஈடுபடுவே எண்ணினேன். ஆனால் 2008ம் ஆண்டில்தான் இதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. இடைப்பட்ட காலத்தில் வன்னியில் பெண்களின் நிலையை உன்னிப்பாக அவதானிக்க முடிந்தது. பெண்களின் நிலை முதலில் எனக்கு ஏமாற்றமாகவே இருந்தது. நிலைமையை விரிவாக அறியத் தொடங்கியதும் அங்கு நிலவிய சூழலில் உருவாகி, வளர்ந்து, இயங்கிய பரந்துட்ட பெண்ணிய வலைப்பின்னல்கள் எனக்குப் பிரமிப்பூட்டின. அவை பெண்களின் நலனை கண்காணிப்பதில் தமது சக்தியை குவிமையப்படுத்தின. இது ஒரு புதுமையான பெண்ணியமாக எனக்குப்பட்டது. முள்ளிவாய்க்கால் அழிவினால் ஏற்பட்ட ஏராளமான இழப்புக்களில் இப்புதுமையான பெண்ணிய வளர்ச்சியின் இழப்பே என் மனதை அதிகம் வருத்துகிறது.

2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தம் பல சர்வதேச அமைப்புக்களை வன்னிக்குக் கொண்டு வந்தது. இதனால் வன்னிச் சமூகம் விடுதலைப்புலி நிறுவனங்கள், லங்கா அரச உள்ளூர் நிறுவனங்கள், சர்வதேச நிறுவனங்களென பல வர்ணங்களைக்

கொண்டிருந்தது. அவையெல்லாம் ஒன்றோடொன்று தொடர்புகளைப் பேணுவதற்குப் பல வழிகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இவையெல்லாமே வன்னிச் சமூகத்தின் அரசியல்–பொருளாதார வாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்தின. இருந்தும் அக்கால வன்னிச் சமூகம் விடுதலைப்புலிகளின் கொள்கைகளின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டே இருந்தன. ஒப்பந்த கால ஆரம்பத்தில் விடுதலைப்புலிகளின் கீழியங்கிய பல நிறுவனங்களின் வளர்ச்சியும் பல புது நிறுவனங்களின் உதயமும் தொடர்ந்த வண்ணம் இருந்தன. வாசகர்களுக்கு இவ்வளர்ச்சி பற்றிய புரிதலையும் தர முயன்றிருக்கிறேன்.

இறுதியில் போரின் கொடூரமும் பல இடப்பெயர்வுகளும் பின்னர் இறுதியாக முள்ளிவாய்க்காலை வந்து அடைந்ததும் அங்கிருந்து ஐசிஆர்சி கப்பலில் வெளியேறி மெனிக் பாம் முகாமில் அடைக்கப்பட்டதும் எனது வன்னி அனுபவங்களின் இறுதி கட்டம்.

வன்னியில் எனது பணிகளின் பொருட்டு நிலவிய நேரப் பற்றாக் குறைவாலும் பின்னர் போரின் தாக்கத்தாலும் எனது அனுபவங்களால் அறிந்தவற்றின் ஆழத்தையும் விசாலத்தையும் அப்போது நான் புரிந்துகொள்ளவில்லை. நியூசிலாந்தில் பாதுகாப்பும் நேரமும் கிடைத்தபொழுது எனது அனுபவங்களால் அறிந்தவற்றை அசைபோட்டுப் பார்க்க முடிந்தது. நான் வன்னியில் தேடிக்கொண்ட எனது நேரடி அனுபவங்களைப் பற்றிய ஒரு புதிரை விடுவிப்பது போன்ற தெளிவு கிடைத்தது. இதையும் விவரித்து இந்நூலை நிறைவு செய்திருக்கிறேன்.

பலரின் செயற்பாடுகளாலேயே வாழ்க்கையின் அனுபவங்கள் ஏற்படுகிறது. என்னுள் பதித்திருக்கும் அனுபவங்களை எனக்குத் தந்தவர்கள், இறுதிவரை சளைக்காமல் போராடிய வன்னி மக்களே. இந்நூலுக்குரிய எல்லாப் பெருமையும், புகழும், மதிப்பும் வன்னி மக்களையே சேரும். இந்நூலை முழுமையாக்கப் பல விதங்களில் உதவிய உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

# மக்கள் தொடர்பகத்தில் ஒரு பெண்

அந்த வீட்டிற்கு முன் ஒரு திண்ணை. சூரியனின் வெப்பத்திலிருந்து ஒதுங்கி வியர்வையை ஆற்றுவதற்குக் காற்றோட்டமான இடம். நான்கு வருடங்களாக ஏறக்குறைய ஒவ்வொரு நாளும் நான் இந்த வீட்டைத் தாண்டிச் செல்வேன். ஏனெனில் இது கிளிநொச்சியிலிருந்த விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகத்திற்கு அடுத்து இருந்த வீடு. இந்தத் திண்ணை முன்னிருந்த முற்றம் பெரிய மாமரங்களின் குடை நிழல்களில் குளிர்மையாக இருந்தது. முற்றத்து மண் சிறுவர் விளையாடுவதற்கு உவந்த ஆற்று மண். அம்முற்றத்தில் சிலர் குந்தி இருந்தார்கள். அவர்களில் அநேகமானோர் பெண்கள். இன்னும் சிலர் திண்ணை மேல் இருப்பதையே விரும்பினார்கள். சிறுவர்கள் சிலர் கவலையற்று ஓடித் திரிந்தார்கள். திண்ணைக்குப் பின்னால் வீட்டிலிருந்து தடபுடலான சத்தங்கள் வந்துகொண்டிருந்தன.

விடுதலைப்புலிகளின் பல மக்கள் தொடர்பகங்களில் இந்த வீடும் ஒன்று. விடுதலைப்புலிகளிடம் மக்கள் தமக்குத் தேவைப்படுவதை விண்ணப்பிக்கவும், அவ்வமைப்புப் பற்றிய முறையீடுகள் செய்வதற்குமான முதற்கட்டத் தொடர்பிடங்கள் இவை. அங்கிருந்த ஆண்கள் அரைக்கை சேட்டுடன் கால்சட்டையோ அல்லது சாரமோ அணிந்திருந்தார்கள். வயதான பெண்கள் எல்லோரும் சேலை உடுத்தியிருந்தார்கள். இளவயதுப் பெண்கள் முழங்காலுக்குச் சற்றுக் கீழிறங்கும் பாவாடையுடனும் மேலங்கியுடனும் விளங்கினார்கள். விடுதலைப்புலிகளின் பொதுசேவை மகளிர் அணிந்திருந்த கால்ச் சட்டை, சேட், பெல்ட் சீருடை தான் விடுதலைப்புலிகளின் அலுவலகம் என்பதற்கான அங்கு தெரிந்த ஒரேயொரு அடையாளம். பொது வேலையில் ஈடுபடும் விடுதலைப்புலி அமைப்பைச் சேர்ந்த ஆண்களுக்குச் சீருடை இல்லை.

திண்ணையில் மேசைக்குப் பின் ஒரு ஆண் அமர்ந்திருந்தார். அவருக்கு முன்னாலிருந்த கதிரையில் ஒரு பெண் அமர்ந்து அவருடன் ஏதோ பேசிக்கொண்டிருந்தார். அவர்களுடைய உரையாடல் முடிந்ததும் அடுத்துக் காத்திருப்பவர் அழைக்கப்பட்டார்.

இப்போது மேசையருகே செல்லும் தாயின் கையில் ஒரு குழந்தை. அவருடன் பதினாறு வயது மதிக்கத்தக்க ஒரு இளம்பெண். இருவரும் சென்று மேசைமுன் அமர்ந்தார்கள். இவர்கள் அந்த அலுவலரிடம் சொல்வதிலிருந்து இவர்கள் யாழ்ப்பாணத்திலிருந்து பஸ்ஸில் வந்திருக்கிறார்கள் என்பது தெரிந்தது. அவ்விளம் பெண்ணின் பள்ளிக்கூட சான்றிதழ்களைப் பெறுவதற்காகவே அவர்கள் கிளிநொச்சிக்கு வந்திருக்கிறார்கள். இந்த ஆவணங்கள் விடுதலைப்புலிகளின் ஏதோ ஒரு கிளையிடம் உள்ளதாம். அந்த இளம்பெண் விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து படித்திருக்கிறாள். 2003ம் ஆண்டில் ஐநாவுடன் இணைந்து சிறுவரை அமைப்பிலிருந்து விடுவிக்கும் திட்டம் ஒன்றை விடுதலைப்புலிகள் அமுலாக்கினார்கள். இத்திட்டத்தைப்பற்றி பின்னர் இந்நூலில் விவரிக்கிறேன். இத்திட்டத்தினூடாக இப்பெண்ணும் விடுவிக்கப்பட்டு வீட்டிற்கு அனுப்பப்பட்டிருக்கிறாள். அந்தப் பள்ளிக்கூட ஆவணங்களைப் பெறவே தாயும் மகளுமாக இப்போது வந்திருக்கிறார்கள்.

அலுவலர் அந்த ஆவணத்தைப் பெற எங்கு போக வேண்டுமென்று அவர்களுக்கு விளக்கத் தொடங்கினார். அவர் சொல்ல வந்ததை சொல்லி முடிப்பதற்கு முன் அந்த இளம்பெண் நிலத்தைப் பார்த்தபடி பிடிவாதமான குரலில் எதையோ சொல்லத் தொடங்கினாள்.

''நான் இங்கதான் இருக்கப்போறன். நான் வீட்டை வரேல்ல.''

இதைக்கேட்டதும் அங்கே ஒரு நிசப்தம். தங்களுக்குள் ஏதேதோ பேசிக்கொண்டிருந்த அத்தனை பேரும் பேச்சுக்களை நிறுத்திவிட்டு இவர்கள் பக்கம் கவனம் செலுத்தத் தொடங்கினார்கள். அவள் விடுதலைப்புலிகள் அமைப்புடன் இருக்கவே விரும்புகிறாள் என்பதும், தாயுடன் யாழ்ப்பாணம் திரும்ப விரும்பவில்லை என்பதும் சுற்றி இருந்தவர்களுக்குத் தெளிவாகவே புரிந்தது. தாயின் கண்களில் கண்ணீர் நிரம்பியது. குரல் தளுதளுக்க அவர் பதில் வந்தது.

''இதுக்குத்தான் என்னை இவ்வளவு தூரம் இழுத்துக்கொண்டு வந்தியா?''

அத்தாய் வியப்படையவில்லை. குரலில் துயரமும் கோபமுமே தொனித்தது. ஆச்சரியம் இருக்கவில்லை. இப்பெண்ணின் சொற்கள் அத்தாய்க்குப் புதியன அல்ல என்பது தெரிந்தது. இளம்பெண்ணின் முகம் இறுகியது. கீழே குனிந்த முகத்தை அவள் நிமிர்த்தவே இல்லை. இதே நிலையில் தாயும் மகளும் மேலும் சில வார்த்தைகள் பரிமாறிக் கொண்டனர். தாயின் குரல் ஆத்திரத்தில் ஏறிக்கொண்டே

போக பெண்ணின் சத்தம் குறைந்துகொண்டே போனது. இடையில் அலுவலர் குறுக்கிட்டார்.

''விரும்பினால் இவரைப் போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கான கல்லூரியில் சேர்த்துவிடலாம்.''

அங்குள்ள உள்ளூர் அமைப்பான தமிழர் புனர்வாழ்வுக் கழகம் நடத்திக்கொண்டிருந்த போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கான கல்லூரியைத்தான் அலுவலர் குறிப்பிட்டது. இக்கல்லூரியும் 2003ம் ஆண்டின் சிறுவரை விடுவிக்கும் திட்டத்தின் விளைவாக உருவாக்கப்பட்டு ஐநாவின் யூனிசெப் சிறுவர் அமைப்பின் நிதியுதவியுடன் இயங்கி வந்தது.

இறுதியில் கண்ணீருக்கும், ஆத்திரத்துக்கும் மத்தியில் அந்தத் தாய், தன் பெண் தன்னுடன் திரும்பிவரப்போவதில்லை என்ற முடிவுக்கு வந்தார். பின்னர் அப்பெண்ணின் கழுத்திலிருந்த தங்கச் சங்கிலியை கழற்றித் தருமாறு கட்டளையிட்டார். மறுபேச்சில்லாமல் அப்பெண்ணும் சொன்னதைச் செய்தார். பின்னர் தாய் காதிலுள்ள தோடுகளையும் கழற்றும்படி உத்தரவிட்டார். இப்போது அத்தாய்க்கு ஆத்திரத்தில் பேசக்கூட முடியவில்லை. முற்றத்தில் அமர்ந்திருந்த சில பெண்கள் குறுக்கிட்டு பெண்ணின் காதிலுள்ளதை கழற்றவேண்டாம் என்று வேண்டினர். தன் மகளிடமிருந்து கழற்றிய பொருட்களோடு அத்தாய் அழுதுகொண்டே,

''உன்ர கொப்பனின்ர ஆத்திரத்துக்கு நான் என்ன செய்யப்போறன். என்ன சொல்லப்போறன்'',

என்று சொல்லியபடி அவ்விடத்திலிருந்து மறைந்தார்.

இது நடந்தது 2004ம் ஆண்டு. போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கான கல்லூரியில் அவ்விளம் பெண் சேர்க்கப்பட்டிருப்பாள். அவளுக்கு என்ன நடந்திருக்கும்? அவளுடைய பெற்றோர் மென்மேலும் முயற்சிசெய்து ஏ–9 பாதை மூடப்படுவதற்கு முன்னர் அவளை யாழ்ப்பாணத்துக்குக் கூட்டிச் சென்றிருப்பார்களா? அவர்கள் தம்முயற்சியில் தோல்வியுற்றிருந்தால் நிச்சயமாக அவள் 2006க்குப் பின்னர் நிகழ்ந்த போரில் பங்கெடுத்திருப்பாள். களத்தில் அவளும் வீரமரணமடைந்தாளா? அல்லது மே 2009ல் முள்ளிவாய்காலிலிருந்து வெளியேறி இருப்பாளா? அப்படியாயின் லங்கா அரசின் சிறையில் அடைக்கப்பட்டாளா? பின்னர் விடுவிக்கப்பட்டாளா? இராணுவத்தால் பாலியல் வன்முறைக்கு உள்ளாகி கொலை செய்யப்பட்டாளா? இராணுவத்திற்குப் பெருந்தொகை பணம் கொடுத்து அவள் குடும்பம் அவளுக்கு விடுதலையைப் பெற்றுக்

கொடுத்ததா? தமிழீழ மக்களைச் சுற்றிப் பின்னப்பட்டிருக்கும் பிரமாண்டமான துயரவலைக்குள் இதுவும் ஒரு சிறுகதை.

அக்காலத்தில் வன்னி மண்ணில் புதுசு புதுசாக துளிர்த்துக் கொண்டிருந்த ஊடகங்கள் மக்களின் துயரங்களைச் சொல்வதில் முன்னின்றன. ஆனால் அவ்விளம் பெண்ணினுடையதைப் போன்ற கதைகள் வன்னி ஊடகங்களில் வெளிவரவில்லை. உலகின் ஏனைய ஊடகங்களோ விடுதலைப்புலிகள் மீது சுமத்தப்பட்ட சிறுவர் போராளிகள் என்னும் குற்றச்சாட்டின் அங்கமாகவே அவ்விளம் பெண்ணின் கதையைக் கணிக்கும்.

உண்மையில் வன்னியில் அக்காலத்தில் இடம்பெற்றுக் கொண்டிருந்த நிகழ்வுகள் சிறுவர் போராளிகள் என்ற குறுகிய பிரச்சினைக்குள் அடங்குவன அல்ல. விடுதலைப்புலிகளின் ஆள்பற்றாக்குறை, இளையோருக்கே உரித்தான இலட்சிய வேட்கை உட்பட்ட பல்வேறு தூண்டல்கள் குடும்பத்தின் இளையோர் சார்ந்த பாச உணர்வுகள் ஆகிய முக்கோண உந்து சக்திகளால் உண்டாகும் ஒரு சமூக விளைவே அப்போது அங்கு இடம்பெற்றுக் கொண்டிருந்தது. இச்சமூக நீரோட்டத்தின் மீதுதான் ஐநாவின் சிறுவர் போராளி சாசனத்தையும் ஐநா பாதுகாப்புச் சபையின் 1612[2] தீர்வையும் பயன்படுத்தி விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் எனும் ஊடகக் கிளர்ச்சி ஒன்று ஏற்படுத்தப்பட்டிருந்தது. அன்று மக்கள் தொடர்பகத்தில் அவ்விளம் பெண்ணின் நடத்தையை நான் பார்த்துக் கொண்டிருந்தபோது இவையெல்லாம் எனக்குத் தெரிந்திருக்கவில்லை. இருப்பினும் நான் பார்த்தது ஒரு புலத்து (வெளிநாட்டில் இருந்து வந்த) தமிழருக்குத் கிடைத்தற்கரியது. ஏனெனில் அது விடுதலைப்புலிகளினால் புலத்துத் தமிழருக்காக ஒழுங்கமைக்கப்பட்ட ஒரு நிகழ்வு அல்ல.

அதை எப்படி நான் பார்க்க நேர்ந்தது? அது ஏப்ரல் 2004. எனது இரண்டாவது வன்னி வருகையின் தொடக்கம். எனது முதலாவது வருகை 2002ம் ஆண்டு முடிவில் நடந்தேறிய அமைதியான நிகழ்வு. அம்முறை விடுதலைப்புலிகளின் தலைவர்கள் யாரையும் நான் சந்திக்கவில்லை. வள்ளிபுனம் காட்டுக்கு மத்தியில் அமைந்திருந்த செஞ்சோலை சிறுவர் இல்லத்தில் ஒரு மாதகாலம் தங்கியமையே அவ்வருகையின் சிறப்பாக அமைந்தது. சில புலத்துத் தமிழ் நண்பர்களின் தூண்டுதலால் இம்முறை என் வருகை விடுதலைப்புலிகளின் அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச்செல்வனின் சந்திப்போடு தொடங்கப் போகிறது. அரசியல்துறைத் தலைமை அலுவலகத்தில் இருந்த எவருக்கும் என்னைத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. தெரிந்திருக்கவும் இல்லை.

அவுஸ்திரேலியத் தமிழர் ஜெயகுமாரின் அறிமுக மின்னஞ்சல் ஒன்று மட்டும் என்னிடம் இருந்தது. ஜெயகுமார் 2007ம் ஆண்டு அவுஸ்திரேலியாவில் இயற்கை மரணம் எய்திய பின் விடுதலைப்புலிகளால் மாமனிதர் பட்டம் கொடுத்துக் கௌரவிக்கப்பட்டவர். அங்குமிங்குமாக கொஞ்சம் அலைக்கழித்த பின் என்னை என்ன செய்வது என்று அவர்கள் முடிவு செய்யும்வரை என்னை மக்கள் தொடர்பகத்தில் காத்திருக்கும்படி கேட்டார்கள். இதனால்தான் அங்கு நடந்தேறிய அச்சம்பவத்தை நான் காண நேர்ந்தது.

# ஒதுக்கப்பட்ட சிறுவர்கள்

மக்கள் தொடர்பகத்தில் இரண்டு மணிநேரம் காத்திருந்த பின்னர், சமாதானச் செயலகத்தைச் சேர்ந்த புலித்தேவனுடன் ஒரு சந்திப்பும், பின்னர் தமிழ்ச்செல்வனுடன் ஒரு சந்திப்பும் கிடைத்தன. இச்சந்திப்புகளைத் தொடர்ந்து சமாதானச் செயலகத்தின் உறுப்பினர் ஒருவர் எனக்குத் தேவையான வசதிகள் செய்துகொடுக்கும்படி பணிக்கப்பட்டார். அவர் தன் வோக்கிடாக்கியை எடுத்து ஏதோ ஒரு சொல்லைப் பல தடவைகள் சொன்னார். என் காதுக்கு அது தமிழ் சொல்லாகவே படவில்லை. பின்னர் பலதடவைகள் போராளிகள் தங்களின் வோக்கிகளில் இதே சொல்லைத் திரும்பத் திரும்பச் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். பல காலத்தின் பின்னர்தான் அதன் அர்த்தத்தைப் புரிந்துகொண்டேன். அவர்கள் சொல்லும் வார்த்தை இதுதான் – ''சரவண்ண சரவண்ண''. சரவணன் அண்ணை மருவிச் ''சரவண்ண'' ஆகியது.

சரவணன் போரில் காயமுற்றுச் சக்கரக் கதிரையில் முடக்கப்பட்ட ஒரு போராளி. வன்னியில் அவர் ஒரு தனி அமைப்பேதான். போராளிகள் வைத்திருக்கும் வோக்கிகள் மூலம் ஒருவரை ஒருவர் தொடர்புபடுத்தும் மையமாகச் செயற்பட்டார். அமைதியான குணமுள்ள அவர் இவ்வேலையை அதிதிறம்பட செய்ததால் முழு அமைப்பாலுமே மதித்து நேசிக்கப்பட்டவர். பிற்காலத்தில் தினமும் பலமுறை வன்னியில் லங்கா இராணுவம் குண்டுகள் வீசத் தொடங்கியபோது குண்டு வீச்சு விமானங்கள் வன்னியை அடையும் முன்பே அவரிடமிருந்து விடுதலைப்புலிகளின் நிறுவனங்களுக்குக் வோக்கிகளில் ஒரு முன்னெச்சரிக்கை வரும். தெற்கில் குண்டுவீச்சு விமானங்கள் கிளம்பிய உடனே இதை ஏதோ ஒரு வழியில் அவரால் அறிய முடிந்தது. அவருடைய வீடும் அலுவலகமுமாக இருந்த இடத்திற்குப் பலமுறை குண்டுகள் வீசப்பட்டதில் ஆச்சரியம் இல்லை. இதனால் அவரின் சக உதவியாளர் பலர் உயிரிழந்தனர்.

என்னைப் போல் வயதான ஒரு புலத்துத் தமிழ் பெண், விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டிலிருந்த முன்பின் தெரியாத

வன்னிப் பகுதிக்கு வேலை செய்யப் போனது சிலருக்கு ஆச்சரியமாக இருக்கும். எனது இரண்டாவது வன்னி பயணத்திற்குப் பின்னர்தான் நான் விடுதலைப்புலிகளின் மேல்மட்ட உறுப்பினர்கள் சிலருக்கு அறிமுகமானேன். போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின்னரான அக்காலத்தில் புலத்துத் தமிழர் வந்து தங்கி அவர்களாலான பணிகளைச் செய்வதற்கு வசதிகள் செய்து கொடுக்க வன்னியிலிருந்த பல அமைப்புக்கள் ஆயத்தமாக இருந்தன. ஆகையால் என்னைப் போன்ற புது முகங்களும் வன்னிக்கு வந்து தங்கியிருந்து பணிகள் செய்தது சாதாரணமாக நடந்தேறிய ஒன்றே.

தமிழ்ச்செல்வனுடனான எனது சந்திப்பில் மக்கள் தொடர்பகத்தில் நான் கண்டதை விவரித்துச் சிறுவர் போராளிகளைப் பற்றிய ஆய்வு செய்ய வேண்டியதன் தேவையைப் பற்றிப் பேசினேன். உண்மையில் இக்காலகட்டத்தில் விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் என்பது மிகச்சூடான ஒரு விடயமாக அரசியல் தூதுவர்களாலும், சமாதானக் கண்காணிப்புக் குழுவாலும், ஊடகங்களாலும், மனித உரிமை அமைப்புக்களாலும், இன்னும் பலராலும் பேசப்பட்டு வந்தது. சிறுவர் போராளிகள் தொடர்பாக நான் தமிழ்ச்செல்வனிடம் பேச்செடுத்ததால் இதைப் பற்றி ஆராயும் வேலை என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. இதனால் வந்த இரு விளைவுகள் என்னால் மறக்கமுடியாதவை. ஒன்று, பல சிறுவர் நல நிறுவனங்களுக்குச் சென்று அவைகளைப் பற்றி ஆழமாக அறிவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. மற்றது, என்னுடன் பற்பல வேலைத் திட்டங்களில் பின்னர் இணைந்து வேலை செய்யவிருக்கும் கரன் எனும் ஒரு வியக்கத்தக்க போராளியுடன் வேலைசார்ந்த நல்லுறவு ஒன்று ஏற்பட்டது.

கரனும் ஒரு சிறுவர் போராளிதான். விடுதலைப்புலிகள் அமைப்பின் பல்வேறு கிளைகளின் அனுபவ அறிவினைத் துழாவி அள்ளக்கூடிய ஆற்றல் படைத்தவர். நான்கு ஆண்டுகள் நான் செய்த பல ஆவணப்படுத்தல் திட்டங்களுக்கு அச்சாணியாகச் செயற்பட்டவர். எனக்கு விடுதலைப்புலிகள் அமைப்பின் முப்பது ஆண்டு சரித்திரத்தை கற்பித்த ஆசிரியராக இருந்தவர். அமைப்பின் பல்வேறு பகுதிகளில் சிதறிக்கிடந்த ஆவணங்களைப் பற்றி அறிந்து வைத்திருந்தார். எனது ஆவணமாக்கல் வேலைகளுக்குத் தேவைப்பட்ட போதெல்லாம் இவற்றைத் திரட்டித் தருவார். சிறுவர் போராளியாக இருந்தபோதும், அறிவுசார் வேலைத்திட்டங்களில் அவருக்கிருந்த ஆர்வம் திகைச்சுவையானது. 2009ம் ஆண்டில் கூட அந்த ஆர்வத்தை அவர் கைவிடவில்லை. கடைசி வரையும் அறிவுசார்

விளைவுகளுக்கு ஊக்க மூட்டினார். ஏப்ரல் 2009ல் எறிகணைத் தாக்குதலில் இவர் உயிரிழந்தார்.

கரனுடன்தான் நான் முதன்முதலில் போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களைப் பற்றி ஆய்வு செய்யத் தொடங்கினேன். சிறுவர் போராளிகள் சார்ந்த வேலைத் திட்டங்களில் நான் பின்னர் ஆழமாக ஈடுபட்டேன். இதைப்பற்றி விவரமாக பின்னர் பார்ப்போம். போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கான திட்டங்களை அறிவதே எமது அப்போதைய நோக்கமாக இருந்தது. இன்னொரு வகையில் சொல்வதானால், சிறுவர்களைப் பாதித்திருக்கும், சிறுவர் போராளி தவிர்த்த ஏனைய பாதிப்புக்களைக் கோடிட்டுக் காட்டுவதே இத்திட்டத்தின் நோக்கமாக இருந்தது. இவ்வேனைய பாதிப்புகளைப் பற்றி கிரசா மசேல் (Graca Machel)[3] என்பவர் 1991ல் ஐநாவுக்காக எழுதிய அறிக்கையில் விவரித்திருந்தார். அவர் தன் அறிக்கையில் குறிப்பிட்ட ஏனைய பாதிப்புக்களில் மிதிவெடி விழிப்புணர்வு, உடல்நலன், சத்துள்ள உணவு, உளப்பாதிப்பு, கல்வி, நிரந்தரத் தீர்வு, பாலியல் சுரண்டல் ஆகியன அடங்கும். ஆனால் வன்னியில் சிறுவர்களின் இவ்வேனைய பாதிப்புக்களைப்பற்றி ஈழத்தமிழர்களைத் தவிர மற்றவர்கள் எவருக்கும் ஆர்வமிருக்கவில்லை. மற்றவர்கள் எவரும் அக்கறை செலுத்தவும் இல்லை.

நாங்கள் முதலில், ஆறு சிறுவர் இல்லங்களைச் சென்று பார்த்தோம். தமிழீழம் முழுவதும் உள்ள சிறுவர் இல்லங்களில் பராமரிக்கப்பட்டு வரும் சிறுவர்கள் பற்றிய புள்ளிவிபரங்களைக் கரன் சேகரித்தார். அக்காலத்தில் 6000 சிறுவர்கள் சிறுவர் இல்லங்களில் இருப்பதாகக் கணக்கெடுத்தார். வட–கிழக்கு மாகாண 2004ம் ஆண்டு புள்ளிவிபரக் கையேட்டிலிருந்து தமிழீழத்தில் ஏறக்குறைய 600,000 சிறுவர் இருப்பதாக அறிந்தோம். ஆக 100ல் ஒரு சிறுவர், சிறுவர் இல்லத்திலே பராமரிக்கப்பட்டு வருகிறார்கள் என்பதைக் கணித்தோம். இது பலருக்கும் ஆச்சரியமளித்தது. இதேபோல் 2004ம் ஆண்டு கால கட்டத்திலேயே 300ல் ஒரு சிறுவர் பெற்றோர் இருவரையும் இழந்திருக்கிறார்கள் என்பதையும் கணித்தோம். அன்றைய 2006 ஆண்டு கட்டத்திலேயே தமிழ்ச் சிறுவர் நிலை இவ்வளவு மோசமானதாக இருந்தது.

சிறுவர் இல்லங்களை நாங்கள் பார்த்தபோது அங்கிருந்த சிறுவர்களின் கதைகளை, அவர்கள் எப்படி அங்கு வந்தார்கள் என்ற அவர்களின் காரணங்களை அவர்கள் சொல்ல ஒலிப்பதிவு செய்து கொண்டேன். அவர்களின் கதைகளூடான அன்றுவரை தமிழீழ மக்களின் மேல் நடத்தப்பட்ட இராணுவத் தாக்குதல்களின், இடப் பெயர்வுகளின் சரித்திரத்தையே என்னால் அறிந்துகொள்ள முடிந்தது.

1980ம் ஆண்டிலிருந்து 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தம் கைச்சாத்திடப்படும் வரை, ஒவ்வொரு இராணுவத் தாக்குதல்களிலும் சிறுவர்கள் தங்கள் பெற்றோரையும் சகோதரர்களையும், இழந்துள்ளதை அவர்களின் கதைகள் கூறின. அவர்கள் மீது நேரடியாக எல்லாவிதமான தாக்குதல்களும் இருந்தன. விமானத் தாக்குதல், எறிகணைத் தாக்குதல், கண்ணிவெடி, இராணுவக் கைதையடுத்து காணமற் போதல், துப்பாக்கிச் சூட்டினால் கொல்லப்படல், சிறு கப்பல்களில் செல்லும்போது தாக்கப்படல் போன்றவை எல்லாம் அவர்களின் கதைகளில் இருந்தன. அவர்களின் துயரக் கதைகளில் பெற்றோரின் இறப்பு என்பது ஓர் அம்சம் மட்டுமே. பல சிறுவர்களின் பெற்றோர் காயப்பட்டதனால் உழைக்கும் திறனை இழந்து அதனால் தம் பிள்ளைகளைப் பராமரிக்க இயலாமற் போயுள்ளனர். இடப் பெயர்வுகளின் போது சிறுவர் பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட்டு மீண்டும் ஒன்றுசேர முடியாதிருந்தனர். போரிழப்புக்களால் ஏற்பட்ட வறுமைச் சுமையை தாங்கமுடியாமல் சில பெற்றோர்கள் தம் பிள்ளைகளைக் கைவிட்டனர். இவ்வகையில் தம்பிள்ளைகளைக் கைவிட்ட சில பெற்றோர், 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் பின் தம் பிள்ளைகளைத் தேடி வந்தனர். நான் ஒலிப்பதிவு செய்த சிறுவர்களின் கதைகளை கட்டுரை எழுதும் எண்ணத்துடன் ஆங்கிலத்தில் மாற்றி எழுதினேன். சிறுவர் இல்லங்களின் சூழலை இவை நன்றாக விளக்குவதால் நான் எழுதி வைத்த சில கதைகளை இங்கு தருகிறேன்.

இசையரசி: இச்சிறுமி ஆறு வருடங்களுக்கு முன் சிறுவர் இல்லத்தில் சேர்ந்தார். இவரது தாயை இவருக்கு நினைவிருக்கிறது. ஆனால் தந்தையை நினைவேயில்லை. இவரின் தந்தை இராணுவத்தால் கைது செய்யப்பட்டு காணமால் போனார். இவர் தாய் கிளிநொச்சி வைத்திய சாலையில் இருக்கும்போது ஒரு விமானத் தாக்குதலில் கொல்லப்பட்டார்.

சந்திரிகா: 1987ம் ஆண்டில் இடம்பெற்ற இந்திய இராணுவத்துடனான போரின் போது இவரும் இவரின் சகோதரியும் இவர்களின் பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட்டனர். பின்னர் இவர்களின் பெற்றோரைப்பற்றி எவ்வித தகவலும் இல்லை. இருவரையும் இவர்களின் பேத்தியார் பராமரித்து வந்தார். இப்போது பேத்தியாரும் இறந்துவிட்டார். 2009ம் ஆண்டில் நான் வன்னியை விட்டு வெளியேறுவதற்குச் சில வாரங்களுக்கு முன் சந்திரிகாவைச் சந்தித்தேன். நான் பயணித்த வாகனத்தில் சீருடையில் ஏறிய சில பெண் போராளிகளுள் சந்திரிகாவும் இருந்தார். நிறைந்த புன்னகையுடன், ''என்னைத் தெரிகிறதா அன்ரி?'' என்றார்.

*ஜெயகௌரி: ஒரு எறிகணைத் தாக்குதலில் கொல்லப்பட்ட பன்னிரண்டு பேர்களில் இவருடைய பெற்றோரும் அடங்குவர்.*

*தர்சினி: 1995ம் ஆண்டில் ஒட்டுமொத்த யாழ்ப்பாண இடப்பெயர்வின் பின் மாமன், பேத்தியாருடன் கொழும்புக்குப் போனார். அங்கு மூவரும் இராணுவத்தால் கைது செய்யப்பட்டனர். சிறையில் இரண்டு வருடங்கள் மற்ற இருவரையும் பிரிந்து இருந்தார். சிறையிலிருந்து பேத்தியாரும் இவரும் விடுதலை ஆகியதும் வன்னிக்கு வந்தனர். இப்போது பேத்தியாரும் தாயும் ஒன்றாக வாழ்கின்றனர். ஆனால் வறுமை காரணமாகத் தர்சினியை பள்ளிக்கூடத்திற்கு அவர்களால் அனுப்ப முடியவில்லை.*

*போரின் அழிவுகளை நோக்கும் போது அதன் மத்தியில் சிக்குண்டு அல்லலுறும் சிறுவர்கள் வீதியெங்கும் காணப்படுவார்கள் என்றுதான் எண்ணத் தோன்றும். வன்னியில் அப்படி இருக்கவில்லை. இது எதனால் என்ற கேள்வி எழவே செய்யும். இதற்கான பெருமை விடுதலைப்புலிகளைச் சார்ந்ததா? அல்லது தமிழ் சமுதாயத்தையும் அதன் கலாச்சாரத்தையும் சார்ந்ததா? என்று வியந்தேன். ஒரு சில தசாப்தங்களுக்கு முன் நடுத்தரவர்க்கத் தமிழர் மத்தியில் பரவலாக காணப்பட்ட பின்வரும் காட்சி இன்றும் பலரின் நினைவில் பதிந்திருக்கும்.*

> *''ஒரு நடுத்தரவர்க்கக் குடும்பத்தின் வீடு. சீரான உடையுடுத்தி இரு சிறுவர்கள் நிலத்திலிருந்து சோகி விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு சோகி ஒரு சிறுவனின் கையிலிருந்து தாவி அடுத்திருந்த முற்றத்தில் விழுகிறது. இருவரில் இளையவராக தெரிந்தவர் வீட்டுக்குள்ளே பார்த்துக் கூப்பிட்டாள், 'ராணி, சோகி முற்றத்தில் விழுந்துவிட்டது. வந்து எடுத்துத் தா'. கூப்பிட்ட சிறுமியிலும் இளைய வயதுடைய ஒரு சிறுமி உள்ளேயிருந்து ஓடி வருகிறாள். சோகியை எடுத்துக் கூப்பிட்ட சிறுமியின் கையில் கொடுத்து விட்டு மீண்டும் பாத்திரங்கள் கழுவுவதற்குச் சமையலறைப் பக்கம் போய்விடுகிறாள்.''*

*நான் யாழ்ப்பாணத்தில் இருந்த காலத்தில் மீண்டும் மீண்டும் பார்த்த இதுபோன்ற காட்சிகளை நினைத்தபோது, வன்னியில் உள்ள ஒதுக்கப்பட்ட சிறுவர் பராமரிப்புக்கு விடுதலைப்புலிகள்தான் காரணம் என்பதில் எனக்கு எவ்விதச் சந்தேகமும் இருக்கவில்லை.*

*தமிழர் புனர்வாழ்வுக் கழகம், ''சிறுவர் பூங்கா'' எனப்படும் வேறு ஒரு விதமான சிறுவர் அமைப்புக்களையும் இயக்கி வந்தது. இவற்றிலும் நூற்றுக்கணக்கான சிறுவர்கள் பராமரிக்கப்பட்டு வந்தார்கள். வறுமையால் மிகவும் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில்*

இவை அமைக்கப்பட்டு இருந்தன. இப்பிரதேசங்களில் வறுமை காரணமாக பெற்றோர் இருவருமே நாளாந்தம் கூலிவேலைக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. இப்பெற்றோர் தம் இளைய குழந்தைகளை மூத்த பிள்ளைகளின் பராமரிப்பில் விட்டுவிட்டு வேலைக்குச் செல்வார்கள். இதனால் இரு பிள்ளைகளுமே பாதிக்கப்படுகிறார்கள். மூத்த பிள்ளை பள்ளிக்கூடத்திற்குப் போகாமல் பாதிக்கப்படுகிறார். இளைய குழந்தை போதிய பராமரிப்பின்றிப் பாதிக்கப்படுகிறார். இச்சிறுவர் பூங்காக்கள் இரண்டு வயதிலிருந்து ஐந்து வயது வரையான குழந்தைகளைப் பராமரித்தன. பெற்றோர் நாளாந்தம் வேலைக்குப் போகும்போது குழந்தைகளை இச்சிறுவர் பூங்காக்களில் விட்டுவிட்டுச் சென்றார்கள். வேலையிலிருந்து திரும்பும்போது அவர்களை வந்து கூட்டிச்சென்றார்கள். இச்சிறுவர் பூங்காக்கள் குழந்தைகளின் உடல் உளம் இரண்டின் வளர்ச்சியிலும் கவனம் செலுத்தின. குழந்தைகள் வாரத்தில் ஆறு நாட்கள் இங்கு வந்தார்கள். ஒவ்வொரு மாதமும் குழந்தைகள் எடை நிறுக்கப்பட்டு அவர்களைப் பற்றிய விவரங்கள் தொகுத்து வைக்கப்பட்டன. மருத்துவர்கள் ஒழுங்காக இங்கு வந்து இவ்விவரங்களைப் பார்வையிட்டார்கள். குழந்தைகளுக்கு ஏதாவது பிரச்சினை இருக்குமானால் சீக்கிரமாகவே இது மருத்துவர்களின் கவனத்துக்கு வந்தது. நான்கு வயது முடிந்த குழந்தைகளுக்காக அங்கேயே ஒரு முன்பள்ளியும் நடத்தப்பட்டது. இச்சேவைக்காக பெற்றோரிடம் எவ்வித கட்டணமும் பெறப்படவில்லை. பெற்றோரும் ஆர்வத்துடன் பெற்றோர் சந்திப்புக்களுக்கும், பட்டறைகளுக்கும் வந்தனர்.

மிகக்குறைவான வளங்களைக் கொண்டு இச்சிறுவர் அமைப்புகள் வழங்கி வந்த பராமரிப்பு மனதைக் கவரக்கூடியதாக இருந்தது. இவ்வமைப்புக்களில் பணியாற்றியவர்களின் மனப்பாங்கும் பிரமிப்பைத் தருவதாக இருந்தது. சிறுவர்களின் பின்னணியை விவரிக்கும்போது அவர்கள் கண்கலங்கினார்கள். சிறுவர்களின் சாதனைகளை விபரிக்கும்போது பரவசமடைந்தார்கள். இச்சிறுவர் அமைப்புக்களில் பணியாற்றுபவர்களின் மனப்பாங்கில் கவரக்கூடிய ஒரு பொதுவான தன்மையை என்னால் அவதானிக்க முடிந்தது. இது அவர்களின் தகுதி பற்றியதல்ல. அவர்களின் வினைத்திறன் பற்றியதுமல்ல. அவர்களின் அர்ப்பணிப்பு பற்றியது கூடவல்ல. தமது கையிலுள்ள இவ்வேலையில் அவர்கள் முழுமையாக மூழ்கி ஒரு நெருக்கமான குடும்பச் சூழலையே அவர்கள் உருவாக்கியிருந்தார்கள் என்பதுவே அவதானிப்பவரின் கவனத்தை ஈர்த்தது. இவ்வாறு உருவாக்கப்பட்ட பிணைப்பான

குடும்பம் போன்ற சூழல், தத்தமது வேலைகளைச் செய்யும்போது இருசாராரும் துய்த்து மகிழக்கூடியதாக இருந்தது. இதனால் இத்தன்மையுள்ள இச்சூழல் அங்கு செலவிடப்படும் வளங்களுக்குரிய எதிர்பார்ப்புக்களைவிட அங்கு பெறப்படும் சேவைகளின் பலன்களை பலமடங்கு பெரிதாக்கியது.

இக் கலாச்சாரம் உருவானதற்குக் காரணிகளான சிலவற்றை ஊகிக்கலாம். ஒரு சமூகம் ஒட்டுமொத்தமாக இடர்ப்பாடுகளைச் சந்திக்கும்போது அதன் பிணைப்பு இறுக்கமாகிறது. ஒரு சமூகத்தில் எவ்வகையான தலைவர்கள் உருவாக்கப்படுகிறார்கள் என்பது அச்சமூகத்தின் வடிவமைப்பில் தங்கியிருக்கிறது. நீதிக்காகப் போராடும் சமூகத்தில் அதிகாரம், புகழ், இலாபம் என்பனவற்றை நோக்கங்களாகக் கொண்டவர்களை விட சமூக உணர்வுள்ளவர்களே தலைமைப் பதவிகளை நாடுவார்கள். இதைவிட, சமூகத்தின் அடிமட்டத்தில் இருந்த ஒரு பகுதியினர் போராட்ட காலத்தில் முன்னோக்கித் தள்ளப்பட்டதும் ஒரு காரணி. தென்னாசிய சிந்தனையோட்டம் சாதிய எண்ணங்கள் கொண்டது. பரந்துபட்ட மானிட சமத்துவ சிந்தனை இப்பகுதிக்கு அந்நியமானது. விடுதலைப்புலிகளின் கொள்கைகள் அடிமட்ட மக்களையும் போராட்டத்தில் இணையத் தூண்டும் செயல் இச்சாதி சார்ந்த சிந்தனையோட்டத்திற்குச் சவாலாக இருந்தது. வன்னியில், விடுதலைப்புலிகள் சமூகத்திற்குள், பழைய சாதியச் சிந்தனைகள் நிச்சயமாக தகர்க்கப்பட்டுவிட்டன. இவ்வகையான சமூக நோக்கு ஒரு குறிப்பிட்ட தன்மையினரைச் சமூகசேவை நிறுவனங்களில் தலைமைப் பதவிகளுக்குக் கொண்டு வந்தது. இத்தலைவர்களில் பலர் முந்தைய தாழ்த்தப்பட்ட சமூகங்களிலிருந்து வந்தவர்கள். வறுமையில் வாழ்ந்த இச்சமூகங்களில் மக்களிடையே இருந்த தொடர்பாடல்கள் தற்காலத்திய உலகமயமாக்கப்பட்ட மக்களிடையே காணப்படும் தொடர்பாடல்கள் போலல்லாது பழையமரபுகளை ஒட்டியே இடம்பெற்று வந்தது. இம்மரபு வழியான தொடர்பாடல்களை இவர்கள் தம் சமூகசேவைக் களங்களுக்கும் கொண்டு வந்தார்கள். இத்தகைய சமூகத் தொடர்பாடல்களும் அரிதான ஒரு சமூகசேவைக் கலாச்சாரத்தை வன்னியில் உருவாக்கியிருந்தது. இதில் உள்ள மனிதாபிமான தன்மையோடு ஓர் ஆய்வுக்குரிய விடயமாகவும் இச்சூழல் பேணப்பட்டிருக்க வேண்டும் என்பது எனது ஆதங்கம்.

வன்னியில் இயங்கி வந்த சர்வதேச சிறுவர் அமைப்புக்களிடம் அங்குள்ள சிறுவர் இல்லங்களில் துஷ்பிரயோகம் பற்றிய அவர்களின் அபிப்பிராயத்தைப் பெற ஒருதடவை கடுமையான முயற்சி

மேற்கொண்டேன். இரண்டாம் உலக யுத்தத்தைத் தொடர்ந்து மேற்குலகில் இயங்கி வந்த சிறுவர் அமைப்புக்களில் நடைபெற்ற துஷ்பிரயோகங்கள் பற்றிப் பிற்காலத்தில் பல அவச்செய்திகள் வெளிவந்துள்ளன. அதுபோலல்லாமல் வன்னிச் சிறுவர் இல்லங்களில் துஷ்பிரயோகம் இடம்பெற்றதென்று எவ்வித குற்றச்சாட்டுகளும் வந்ததில்லை. ஆனாலும் இங்கு இயங்கி வந்த சர்வதேச சிறுவர் அமைப்புக்கள் இங்குள்ள சிறுவர் அமைப்புக்களுக்கு நற்சான்றிதழ் வழங்குவதற்குத் தயங்கின. தாங்கள் அப்படி எதுவிதமான துஷ்பிரயோகச் செய்திகளையும் கேள்விப்பட்டதில்லை என்று சொல்ல மறுத்தார்கள். நான் இதை அறிய முயன்றபோது அவர்கள் எவ்வளவு நெருக்கடியான விதிகளுக்குக் கட்டுப்பட்டு இயங்குகிறார்கள் என்பதை என்னால் கணிக்க முடிந்தது. ஒரு சர்வதேச பணியாளர் சொன்னார், ''துஷ்பிரயோகம் பற்றிய செய்திகள் இல்லாவிட்டால் மட்டும் துஷ்பிரயோகமே இல்லை என்று சொல்லிவிட முடியாது'' என்று. தர்க்கரீதியாக இது சரியே ஆனாலும், வன்னியில் இயங்கிய சிறுவர் இல்லங்களின் சீரான செயல்பாடுகளைப் பற்றி இவர்கள் நற்சான்றளிக்கத் தயங்கியது அவதானிக்கப்பட வேண்டியது. இக்காலகட்டத்திலே விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் என்ற மந்திரத்தைச் சொல்லி நிதிபெறுவது என்பது ஒரு பொற்சுரங்கம் போல. அதே விடுதலைப்புலிகள் அமைப்பு ஒதுக்கப்பட்ட சிறுவர்களைத் திறம்படப் பராமரிக்கிறது என்று சொல்வது ஒத்துப்போகாது அல்லவோ? சர்வதேச பணியாளர்களின் இந்நடத்தை விடுதலைப்புலிகளின் பரந்துபட்ட நற்திட்டங்களையும் சிறுமைப்படுத்தி அவர்களின் கண்டிக்கப்பட வேண்டிய சிற்சில செயற்பாடுகளைப் பெரிதுபடுத்துவதைக் காண முடிந்தது.

பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்காகத் திறம்பட நடத்தப்பட்ட இத்தகைய செயற்திட்டங்கள் இருந்தும், இவற்றை நடத்திய பதினைந்து வருட அனுபவங்களின் பின்னணியில், தெளிவுகள் தோன்றத் தொடங்கியுள்ளதை என்னால் காண முடிந்தது. இது இவ்வாறாக இருந்தாலும், வன்னியில் இயங்கி வந்த சர்வதேச சிறுவர் அமைப்புக்களும் இதுபோன்ற பாட்டையே பாடி வந்தாலும், போர்ச் சூழலில், கடந்த காலப் போர் அழிவுக்களுக்கு மத்தியில் இல்லங்களில் வாழ்ந்த சிறுவர்களுக்கு இதைவிட சிறந்த பராமரிப்பு கிடைத்திருக்குமா என்பது சந்தேகமே. சூழலைச் சர்வதேச அமைப்புக்கள் புரிந்துகொள்வது முடியாத காரியமாகவே இருந்தது.

விடுதலைப்புலிகளின் நிர்வாகத்தில் இருந்த பிரதேசங்களில் இயங்கிய சிறுவர் இல்லங்களில் துஷ்பிரயோகம் இருக்கவில்லை

என்பதுதான் என் கணிப்பு. மே 2009 முள்ளிவாய்க்கால் அழிவுக்குப் பின்னர் பராமரிப்பற்ற சிறுவர்களின் தொகை பல மடங்கு அதிகரித்ததால் சிறுவர் இல்லங்களின் செயற்பாடுகளை அதிகரிக்க வேண்டிய தேவை இன்றுள்ளது. விடுதலைப்புலிகள் இல்லாத இக்காலத்தில் இது மிகவும் ஆபத்தானநிலை. ஏனெனில் இவ்வில்லங்களை நேர்மையுடன் கண்காணிப்பதற்கான கட்டமைப்புக்கள் இப்போது தமிழீழத்தில் இல்லை. ஆதலால் உறவினர் குடும்பங்களில் சிறுவர்களை இணைத்து முழுக் குடும்பத்திற்கும் உதவி வழங்குவது பல கோணங்களிலும் நன்மை தரக்கூடியது என்றே நான் நினைக்கிறேன். இவ்வகை உதவிக்குக் கூடிய நிதி தேவைப்பட்டாலும், இதனால் பாதிக்கப்பட்ட சிறுவர், ஒரு குடும்பம், ஏன் அவர்கள் வாழும் கிராமம் முழுதும் நன்மை அடையும். சிறுவர் இல்லங்களில் சிறுவர்கள் எதிர்நோக்கக்கூடிய ஆபத்துக்களும் பெருமளவில் தவிர்க்கப்படும்.

# ஜனனியும் செஞ்சோலையும்

நான் டிசம்பர் 2002ல் முதன்முதல் வன்னியில் தங்கியது ஒரு குறுகிய காலமேயானாலும் அது மறக்கமுடியாதது. அப்போது வள்ளிபுனம் காட்டின் மத்தியில் அமைந்திருந்த செஞ்சோலை சிறுவர் இல்லத்தில் நான் தங்கியபோதுதான் ஜனனியுடன் தோழமை கொண்டேன். சிறுமிகளுக்கு சங்கீதம் சொல்லிக்கொடுப்பது என்னும் சாக்கில் நான் அங்கு சென்றேன். 2002ம் ஆண்டுக்கு முன்னரான சண்டைக் களங்களிலிருந்து கூடிய தூரத்தில் இருக்கும் வண்ணம் செஞ்சோலைச் சிறுவர் இல்லம் அக்காட்டின் மத்தியில் அமைக்கப்பட்டிருந்தது. விடுதலைப்புலிகளைப் பற்றி ஓரளவு அறிந்தவர்கள்கூட ஆதரவற்ற சிறுமிகளுக்காக அவ்வமைப்பு நடத்திவந்த செஞ்சோலைச் சிறுவர் இல்லத்தைப் பற்றிக் கேள்விப்படாமல் இருக்கமுடியாது. போரின் பாதிப்புகளால் அதிகரித்து வந்த ஆதரவற்ற சிறுவர்களுக்காக இது 1991ம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

செஞ்சோலையின் பிறப்பிலிருந்து இறுதிவரை ஜனனி அதற்களித்த நீண்ட பங்களிப்பினால் அவர் விடுதலைப்புலிகளின் வரலாற்றில் ஒரு குறிப்பிடக்கூடிய தலைவராக இருந்தார். பிரபாகரனின் மனைவி மதிவதனியும் ஜனனியும் நெருங்கிய நண்பர்கள். 1980களில் யாழ்-பல்கலைக்கழக மாணவிகள் சிலர் மேற்கொண்ட உண்ணாவிரதப் போராட்டத்தில் இருவரும் பங்கெடுத்துக்கொண்டிருந்தபோது இவர்கள் அங்கிருந்து இந்தியாவுக்கு விடுதலைப்புலிகளால் கூட்டிச் செல்லப்பட்டனர். இவர்கள் இருவரின் நட்பும் செஞ்சோலையூடாகத் தொடர்ந்தது. இதனால் செஞ்சோலைச் சிறுமிகளுக்குப் பிரபாகரன் தம்பதிகளுடன் நேரடியாகத் தொடர்புகொள்ளும் வாய்ப்பு இருந்து வந்தது.

வள்ளிபுனக் காட்டின் மத்தியில் அமைந்திருந்த செஞ்சோலை ஒரு கற்பனா உலகம் போல எனக்குத் தோன்றியது. வன்னிக்காட்டுப் பாலை, வீரா போன்ற மரங்களிடையில், குரங்குகளுக்கும், பாம்புகளுக்கும், இடையிடையே வரும் யானைகளுக்கும் ஏராளமான நுளம்புகளுக்கும் மத்தியில் அங்குமிங்குமாக

அமைக்கப்பட்டிருந்த, ஓலையால் வேயப்பட்ட மண்கொட்டில்களில் 150 சிறுமிகள் மிகச்சிறப்பாகப் பராமரிக்கப்பட்டார்கள். அவர்கள் எல்லோருக்கும் ஜனனி 'பெரியம்மா'. எல்லோரும் ஜனனியின் கவனத்துக்காகப் போட்டி போட்டார்கள். நான் அவர்களுடன் மூன்று வாரங்கள் தங்கினேன். ஜனனியுடன் பலவற்றைப் பற்றிப் பேச நிறைய வாய்ப்புக்கள் கிடைத்தது. அன்றிலிருந்து அவருடனான தொடர்பு அறும் வரை எமது தோழமை தொடர்ந்தது.

அந்த வள்ளிபுனக்காட்டிலே நாங்கள் பல திட்டங்கள் போட்டோம். திரும்பவும் வன்னிக்கு வந்து செஞ்சோலைச் சிறுவர் இல்லத்துடன் என்னை இணைத்துக்கொள்வது என்பது பற்றியும் பேசினோம். இது எனக்கு மிகவும் ஆர்வத்தைத் தந்தது. ஏனெனில் மீண்டும் வன்னிக்கு வந்து நீண்ட காலம் இருந்து சமூக வேலை செய்ய வேண்டும் என்ற எண்ணம் என்னுள் ஏற்கனவே தோன்றியிருந்தது. அதற்கு ஒரு திட்டம் கிடைத்தது எனக்கு மிக உற்சாகத்தைத் தந்தது. அத்திட்டங்கள் வீணானவை என்பதும், நான் எப்படி பின்னர் கிளிநொச்சியில் ஒரு மனிதஉரிமை அமைப்புக்குள்ளும் தொடர்ந்து விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகத்திற்குள்ளும் இழுக்கப்படுவேன் என்று அப்போது நான் சிறிதும் நினைக்கவில்லை. ஜனனியின் பல கனவுகளில் தேசபக்தியுடன் சேர்ந்த சிறுவரின் வளர்ச்சித்திட்டம். அவருடைய வழமையான சிந்தனைகள் போலவே இத்திட்டங்களும் முதலில் செஞ்சோலைச் சிறுமிகளிடையே நடைமுறைப்படுத்திய பின்னரே சமூகத்துக்குள் கொண்டு செல்லப்பட வேண்டும் என்று எண்ணினார். அவருடைய வாழ்க்கை அனுபவத்தில் பெரும் பகுதி செஞ்சோலைக்குள்ளேயே மூழ்கிப்போனதால் வெளியுலகத்தைப் பற்றிய கவனமே இன்றித் திட்டங்கள் போட்டார். அவரைச் சார்ந்தவர்களும் அதேபோல அவருடைய செஞ்சோலைத் திட்டங்களுக்கு உழைக்கவேண்டும் என்றும் எதிர்பார்த்தார். அவருடைய திட்டங்களில் சில சிறப்பானவை ஆகவும், மற்ற சிலரின் நேரத்தை அளவுக்கதிகமாக எதிர்பார்ப்பனவை ஆகவும் இருந்தன.

வள்ளிபுனக் காட்டின் மத்தியில் குழந்தைப்பருவச் சிறுமிகளிலிருந்து இளவயதுப் பெண்கள் வரை பலருடன் நான் பழகினேன். அவர்களின் துயரமிக்க வாழ்க்கைச் சரித்திரங்களை அந்த வள்ளிபுனக் காட்டில் கேட்டபொழுது வேறு ஒரு உலகத்திலிருப்பது போன்ற உணர்வு. இப்படியும் நடக்குமா என என்னையே நான் கேட்ட கேள்விகளுக்கு எப்படியும் நடக்கும் என்பதே பதில்களாக அவர்களின் வாழ்க்கை அமைந்திருந்தது. சுடுகாட்டில் சாம்பலுக்கு நடுவே இருந்து எடுக்கப்பட்ட ஒரு சிசுவுக்குச் சாம்பவி என்று பெயரிட்டிருந்தார்கள்.

அங்கிருந்த பல இளம்பெண்கள் சிறுமிகளாக இருந்தபோது பெற்றோர்களைத் தங்கள் வீட்டிலேயே லங்கா ராணுவம் கொலை செய்ததை கண்ணெதிரே பார்த்திருக்கிறார்கள். சிலர் படுகொலைகளில் தொகைவகையாகப் பலர் கொலை செய்யப்பட்டதை நேரில் பார்த்திருக்கிறார்கள். 1980களில் தமிழீழத்தின் கிழக்கு மாவட்டங்களில் வெளியுலகத்துக்குத் தெரியாமல் நடந்த பல படுகொலைகளை நேருக்கு நேரே பார்த்த சிறுமிகளும் பலர் அங்கிருந்தார்கள். இவர்களில் பலருக்கு ஆதரவற்ற ஆண் சிறுவர்களுக்கென நடத்தப்பட்ட அறிவுச்சோலைச் சிறுவர் இல்லத்தில் சகோதரர்கள் இருந்தார்கள்.

அவ் வள்ளிபுனக் காட்டில் செஞ்சோலைச் சிறுமிகளுக்கென்றே ஒரு கணனிக் கட்டடமும் இருந்தது. அங்கு நாலைந்து மேசைக்கணனிகள் ஒரு சிறிய மின்னாக்கியின் உதவியுடன் இயக்கக்கூடியதாக அமைக்கப்பட்டிருந்தது. செஞ்சோலை நிறுவனம் ஒரு பெரிய நிலப்பரப்பில் கிட்டத்தட்டப் பதினைந்து மண்கொட்டில்களில் பரவியிருந்தது. இரவில் பாம்புகள் ஊரக்கூடிய இடம். வெளிச்சமில்லாமல் ஒரு கொட்டிலிலிருந்து இன்னுமொன்றுக்கு இரவில் போகும்போது கொஞ்சம் பயமுண்டாகும். ஆனால் அச்சிறுமிகளோ வெளிச்சமின்றி, எவ்வித பயமுமின்றி இரவில் திரிவார்கள். ஒரு இளம்பெண்ணிடம் இரவில் வெளிச்சமில்லாமல் நடப்பது ஆபத்தானது என்று நான் சுட்டிக்காட்டிய போது,

''இதேமாதிரி நாங்கள் பல வருடங்கள் இருந்துவிட்டோம். எங்கள் ஒருவரையும் பாம்புகள் கடித்ததில்லை. நாங்கள் அவைகளை அவை பாட்டில் விட்டுவிடுவோம். அவையும் எங்களை எங்கள் பாட்டில் விட்டு விடுவினம்.'' என்றார்.

அவரின் வார்த்தைகள் இயற்கையுடன் வாழ்வது பற்றிய ஒரு ஆழமான கருத்தைச் சொல்வது போலிருந்தது.

சிறுமிகளின் கல்வி வாய்ப்புகளை மேம்படுத்துவதற்காகச் செஞ்சோலையைக் கிளிநொச்சிக்கு நகர்த்துவது பற்றிய திட்டங்களையும் ஜனனி அக்காலகட்டத்தில் வகுத்துக் கொண்டிருந்தார். இதற்கான முதற்படியாகக் கிளிநொச்சியில் ஒரு பெரிய காணி தேவைப்பட்டது. இதுவே அக்காலகட்டத்தில் ஜனனியின் சிந்தனையில் நிறைந்து இருந்தது.

போர் ஒரு கட்டத்திலிருந்து மீண்டு கொண்டிருந்த அக்காலத்தில் வன்னியில் விடுதலைப்புலிகளின் எல்லா நிறுவனங்களுமே பெரும் நிலப்பரப்பில் பரந்திருந்த மண் கட்டடங்கள்தான். இவற்றில் ஒரு சிறுகுடிசை தேநீர் தயாரிக்கும்

குடிசையாக இருக்கும். அதில் தேநீர் தயாரிப்பதற்கு என்று ஒருவர் இருப்பார். மின்சார வசதியில்லாத அக்காலத்தில் இத்தேநீர் குடிசையில் ஒரு குடத்தில் எப்போதும் நீர் கொதித்தபடி இருக்கும். அங்கே வருபவர்களுக்கு அவர்கள் வந்த சில நிமிடங்களிலெல்லாம் இவரிடமிருந்து தேநீர் வந்து சேரும். செஞ்சோலைத் தேநீர்க் குடிசையில் நிலத்தில் அமர்ந்து, தேநீர் ஊற்றுபவருடன் பேசிக்கொண்டு நானும் சிலசமயங்களில் தேநீர் அருந்தியிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் செஞ்சோலைப் பணியாளரும் சிறுவர்களும் சிலசமயம் வந்து செல்வார்கள். அப்போது அங்கு இடம்பெறும் அன்பும், கரிசனையும் நிறைந்த உரையாடல்களை வெளியுலகத்தில் காணமுடியாதது. அவ்வுரையாடல்களுக்கு ஏற்ற தனித்துவமும், சமத்துவமும் கொண்ட சமூகச் சூழல் அது.

வன்னியிலிருந்த ஏனைய சிறுவர் இல்லங்களைப் போலல்லாமல் செஞ்சோலைக்கும் அறிவுச்சோலைக்கும் விடுதலைப்புலிகளின் தலைமைச் செயலகம் நேரடியாக நிதி கொடுத்து வந்தது. இவ்விரு நிறுவனங்களின் பொறுப்பிலிருந்த பணியாளர்களும் விடுதலைப்புலிகள் அமைப்பின் உறுப்பினர்களாகவே இருந்தார்கள். செஞ்சோலையில் ஜனனியின் தலைமையின் கீழ் பெண் போராளிகள் பணியாற்றினார்கள். செஞ்சோலையில் பெரிய பொறுப்புக்களை ஏற்றிருந்த ஒன்றிரண்டு போராளிகள் மட்டுமே நிரந்தரமாகச் செஞ்சோலையோடு இணைந்திருந்தார்கள். ஏனைய போராளிகள் குறிப்பிட்ட காலத்துக்கு மட்டுமே இதனுடன் இணைந்திருப்பார்கள். பின்னர் வேறு பணிகளுக்கு மாற்றப்பட்டு விடுவார்கள். செஞ்சோலையில் பணியாற்றும் போராளிகள் மட்டுமில்லாமல் எல்லாப் போராளிகளுமே இவ்விரண்டு நிறுவனங்களிலும் பராமரிக்கப்பட்டு வந்த சிறுவர்களின் மேல் அக்கறையையும் அன்பையும் செலுத்துவதற்கான ஊக்கம் பெற்றிருந்தார்கள். அநேகமான விடுதலைப்புலி உறுப்பினர்களும் தங்கள் இதயங்களில் இச்சிறுவர்களுக்கு என ஒரு தனிஇடத்தை ஒதுக்கி இருந்தார்கள்.

வள்ளிபுனத்தில் இயங்கிவந்த செஞ்சோலையில் மிகவும் இளவயதான ஒரு சில போராளிகளைச் சந்தித்தேன். இவர்களில் சிலர் 18 வயதிற்குக் குறைந்தவர்களாகவும், அங்கு பராமரிக்கப்பட்டு வந்த சில பெண்களிலும் பார்க்க வயதில் குறைந்தவர்களாகவும், இருந்திருக்கலாம். இவர்களில் இருவர் என்னைக் கவனிக்கும்படி பணிக்கப்பட்டு இருந்தார்கள். ஒவ்வொரு நாளும் பல தடவைகள் இவர்கள் எனக்கு உணவும் தேநீரும் கொண்டு வந்து தருவார்கள். எப்பொழும் சிரித்துக்கொண்டே இருக்கும் அவர்கள் தம் வயது 18

என்று சொன்னார்கள். இவர்களின் நிலை எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. இளவயதினராகவும், ஏமாளித்தனம் உள்ளவர்களாகவும் இருந்தார்கள். விடுதலைப் போராளிகள் என்று நாம் கற்பனை செய்பவர்களிலிருந்து மிக மாறுபட்டவர்களாக இருந்தார்கள். இருந்தாலும் இவர்களுக்கு அமைப்பினுள் கிடைத்த தோழமையினால் மிகவும் மகிழ்வாகவே இருந்தார்கள்.

அவர்கள் ஏன் விடுதலைபுலிகள் இயக்கத்தில் இணைந்தார்கள் என்று நான் விசாரிக்கவில்லை. பதில் ஏற்கனவே எனக்குத் தெரிந்ததுதான் – நாட்டுக்காகப் போராடுவதற்கு. மேலதிகமாக அவர்களைக் குறுக்குவிசாரணை செய்ய எனக்கு விருப்பம் இருக்கவில்லை. உண்மையில் நான் வன்னியில் எந்தப் போராளியையும் எதற்காக இணைந்தாய்? என்ற கேள்வியை என்றுமே கேட்டதில்லை. ஏனெனில் இக்கேள்வியைக் கேட்ட பல புலம்பெயர்ந்த, – தமிழர் அறிந்துகொண்டதுபோல் அவர்களின் பதில் இவ்வாறாகவே இருந்தது. 2007ம் ஆண்டில் மட்டும் ஒரு தொகுப்புக்காக எனக்கு நன்றாகத் தெரிந்த சில பெண் போராளிகளிடம் இக்கேள்வியைக் கேட்டேன். அவர்களின் பதில்களை இந்நூலில் வேறு ஓரிடத்தில் தொகுத்துத் தருகிறேன்.

ஒரு குடும்பம் வாழும், ஒரு வீடு போன்ற வாழ்க்கைச் சூழலை முடியுமானவரை உருவாக்கிக் கொடுப்பது சிறுவருக்கு உகந்தது என்பது ஜனனிக்கு இயல்பாகவே தெரிந்திருந்தது. செஞ்சோலையில் பத்துப் பதினைந்து சிறுவர்களைக் கொண்ட ஒரு வீட்டில் ஒரு பராமரிப்பாளருடன் சிறுவர்கள் வளர்க்கப்பட்டார்கள். செஞ்சோலையில் பணியாற்றிய போராளிகள் இப்பராமரிப்புப் பொறுப்பை எடுக்கவில்லை. அவர்கள் கல்வி, உணவு, உடை, அலுவலக நிர்வாகம், கட்டடப் பராமரிப்புப் போன்ற பொதுவான பொறுப்புக்களையே ஏற்றிருந்தார்கள். பொருத்தமான பராமரிப்பாளரை நியமிப்பது ஜனனிக்குப் பெரும் பிரச்சினையாக இருந்தது. இதற்கான நிதியை எடுப்பது ஜனனிக்குப் பிரச்சினையாக இருக்கவில்லை. ஏனெனில் பிரபாகரன் செஞ்சோலைக்கு நிதி வாரி வழங்குவதில் என்றுமே தயங்கியதில்லை. உரிய வயதுள்ள பெண் பராமரிப்பாளர்கள் தத்தம் குடும்பங்களை விட்டுவிட்டு செஞ்சோலையில் தங்கிச் சிறுவர்களைப் பராமரிப்பது அந்த மண்ணின் கலாச்சாரத்திற்கு மாறானது. செஞ்சோலையில் பணியாற்றிய பராமரிப்பாளர்களும் போரினால் பாதிக்கப்பட்டுத் தத்தம் குடும்பங்களை இழந்தவர்களாகவே இருந்தார்கள். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் அவ்வகையான, குடும்பமற்ற பெண்கள், அவ்வேலை செய்வதற்குக் கிடைப்பது

அரிதாயிற்று எனினும், சிலர் இருக்கவே செய்தார்கள். அவர்களைக் கொண்டு செஞ்சோலை சிறப்பாகவே இயங்கியது.

இங்கு பணியாற்றிய ஒரு பராமரிப்பாளருடன் அவருடைய குடும்பத்தைப் பற்றிப் பேசிய போதுதான் போராளி என்ற சொல்லுக்கு வன்னி மக்கள் கொடுக்கும் பொருளை அறிந்து கொண்டேன். அவர் அதை எனக்கு விளக்கினார் என்றில்லை. அவர் அச்சொல்லைச் சொல்லும்போது அவரின் உடல் –மொழியும் பாங்கும் மக்களின் மனதில் போராளிக்குக் கொடுத்திருக்கும் சிறப்பான இடத்தை எனக்கு எடுத்துக் காட்டின. வன்னிச் சமூகத்தைப் பற்றி என்னுள் உருவாகிக்கொண்டு வந்த கருத்தை அவ்விளக்கம் எனக்குத் திரட்டித் தந்தது. போராடிக்கொண்டிருக்கும் எந்த ஒரு சமூகமும், அதன் போராளிகளிடமிருந்து பெரும் தியாகங்களை வேண்டி நிற்கும் போது இவ்வகையான ஒரு புதிய பொருள் கருக்கொள்வது இயல்பே.

வள்ளிபுனக்காட்டில் செஞ்சோலையில் நடந்த, எனது மனதில் பதிந்த இன்னுமொரு நிகழ்ச்சியையும் சொல்லவேண்டும். அங்கு சிறுமிகள் நடுவில் ஏராளமான குரங்குகள் திடீரென ஒரு பெரும் படையாக வந்து இறங்கும். வேலிகளிலும், கொட்டில்களுக்கு மத்தியில் இருந்த மரங்களிலும், கூரைகள் மேலும் அவை உலா வரும். ஒருமுறை தனது தாயைவிட்டு விலகிப் பின்னால் வந்து கொண்டிருந்த ஒரு குரங்குக்குட்டியை ஒரு ஏழு வயதுச் சிறுமி ஆசையுடன் தூக்கி எடுத்துக் கொண்டாள். தாய்க் குரங்கு பாய்ந்து வந்து அச்சிறுமியின் காலைப் பிடித்துக்கொண்டது. சிறுமி ஓட விளைந்த போது தாய்க் குரங்கும் சிறுமியின் காலை விடாப்பிடியாகப் பிடித்தபடியே ஓடியது. சிறுமி குரங்குக்குட்டியை கீழே போட்ட பின்னர்தான் தாய்க் குரங்கு சிறுமியின் காலை விட்டது. சிறுமிக்குத் தீங்கு செய்யாமல் அத்தாய்க் குரங்கு தனது குழந்தையை மீட்டெடுக்க எடுத்த முயற்சி என்னை வசீகரித்தது. குரங்குகளுக்குக் கூட இச் சிறுமிகளைத் துன்புறுத்தக்கூடாது என்ற கருத்து போய்ச் சேர்ந்து விட்டதோ என்று நினைத்தேன். செஞ்சோலைக் கொட்டில்களுக்குக் கதவுகள் இல்லை. குரங்குகள் கதவில்லாத அக் கொட்டில்களுக்கு உள்ளே சென்று சிறுமிகளின் கைப்பெட்டிகளின் சப்பரைத் திறந்து பொருட்களை எடுத்துப்போவதும் உண்டாம்.

குரங்குகளைப் பற்றி பேசும்போது குருகுலம் என்ற பெயருடைய வேறு ஒரு சிறுவர் இல்லத்தில் நான் பார்த்த காட்சியையும் இங்கு குறிப்பட வேண்டும். இச்சிறுவர் இல்லம் கிளிநொச்சியில் மனிதர்கள் பல வருடங்களாக வாழ்ந்த ஒரு காணியில் அமைக்கப் பட்டிருந்தது. அக்காரணத்தால் இக்காணியில் முதிர்ந்த பல மாமரங்கள் குடைவிரித்துக் குளிர்ச்சியான நிழலைப் பரப்பியிருந்தன.

அது மாம்பழக்காலம். மரங்கள் நிறைய மாம்பழங்கள். அவை ''எம்மைச் சாப்பிடு சாப்பிடு'' என்று சிறுமிகளின் அவாவைத் தூண்டிவிடும். சிறுமிகளின் பாதுகாப்புக் கருதி அவர்கள் மரத்தில் ஏறுவதையும் பழங்களுக்குக் கல் எறிவதையும் பராமரிப்பாளர்கள் தடை செய்திருந்தார்கள். சிறுமிகள் மாம்பழம் சாப்பிடுவதற்கு ஒரு சிறந்த மாற்று வழியைக் கடைப்பிடித்தார்கள். மாம்பழங்கள் பழுத்துத் தொங்கும்போது அந்த விருந்துண்பதற்குக் குரங்குகள் படை படையாக மரங்களில் வந்திறங்கும். சிறுமிகள் மரங்களுக்கு அடியில் நின்று கூச்சல் போட்டுக்கொண்டு உயரமாக எகிறித் துள்ளுவார்கள். குரங்குகளும் மரக்கொப்புகளில் நின்றுகொண்டு அதையே செய்யும். குரங்குகளின் துள்ளலால் பழுத்த பழங்கள் கீழேவிழும். சிறுமிகளும் குரங்குகளுடன் சேர்ந்து பழவிருந்து உண்பார்கள்.

செஞ்சோலையில் சிறுமிகளுக்கும் அங்கு பணியாற்றிய ஏனையோருக்கும் அடிக்கடி மலேரியாக் காய்ச்சல் வரும். அவர்கள் எல்லோரும் மலேரியாத் தடை மருந்து எடுப்பார்கள். அப்படியிருந்தும் மலேரியாக் காய்ச்சல் வரும். மலேரியாக் காய்ச்சலை விட அதை மாற்ற எடுக்கும் மருந்தின் பக்கவிளைவுகள் மோசமானவை என்பது அங்கிருந்த சிறுமிகளின் கருத்து. இரண்டு வருடங்களுக்குப் பின், 2006ம் ஆண்டில், வன்னியில் மலேரியா முற்றாக அழிக்கப்பட்டுவிட்டது என்ற செய்தியையும் அதை விடுதலைப்புலிகளின் சுகாதாரப் பகுதியும் வன்னியில் இயங்கிய லங்காவின் சுகாதாரப் பிரிவும் சேர்ந்து சாதித்தன என்ற செய்தியையும் வாசித்துப் பெருமையடைந்தேன். இதுவும் விடுதலைப்புலிகளின் பெரும் சாதனைகளில் ஒன்றுதான். அதை முன்னரே செய்ய முடியாமல் போனதற்கு 2002ம் ஆண்டுக்கு முன்னரான லங்கா அரசின் மலேரியா நுளம்பு அழிப்பதற்கான மருந்துத் தடையே காரணம் என்றும் சொன்னார்கள். இத் தடையை லங்கா அரசு 2007ம் ஆண்டில் மீண்டும் விதித்தபோது, வன்னியில் மீண்டும் மலேரியா பெருகப் போகிறது என்ற கவலையை சுகாதாரப் பிரிவைச் சேர்ந்தவர்கள் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினர்.

2002ம் ஆண்டில் நான் வள்ளிபுனக் காட்டில் இருந்த செஞ்சோலையிலிருந்து விடைபெற்ற போது ஜனனி மலேரியாக் காய்ச்சலில் மருத்துவக் கொட்டகையில் படுத்திருந்தார். 2004ம் ஆண்டில் நாம் மீண்டும் சந்தித்து எமது தோழமையை வளர்த்துக் கொண்டோம். அக்கால கட்டத்தில் செஞ்சோலையில் ஒரு பகுதியினர் கிளிநொச்சியில் ஒரு தற்காலிக இடத்திற்கு மாறி வந்துவிட்டனர். இவ்விடமும் நான் என்னுடைய இரண்டாவது பயணத்தின் போது தங்கியிருந்த கனகாம்பிகைக் குளத்தின் முன்னேயிருந்த ராங்

ஹாட்டலுக்கு அருகிலேயே இருந்தது. என்னுடைய இவ்விரண்டாவது பயணத்தின் பெரும்பாலான நேரம் அறையில் முடங்கியபடி சலிப்புடனேயே கழிந்தது. ஏனெனில் என்னிடம் வாகன வசதி எதுவுமே இருக்கவில்லை. கிளிநொச்சியில் இருந்த மாமரநிழல்களால் குளிர்ச்சியாக்கப்பட்ட இச்செஞ்சோலை வளாகத்தில் ஒரு மாமர நிழலின் கீழ் ஒரு திறந்த தகரக்கொட்டகை இருந்தது. அது குளிர்மையாகவும் காற்றோட்டம் உள்ளதாகவும் இருந்தது. அதிலிருந்தபடி செஞ்சோலைச் சிறுமியரின் ஒட்டங்களையும் பாட்டுக்களையும் ரசித்தபடி பலநேரங்களைப் போக்கினேன். நான் ஜனனிக்கு வேண்டியவராதலால் 'நான் ஏன் அங்கிருக்கிறேன்' என்று எவரும் என்னைக் கேட்டதில்லை.

கிளிநொச்சியில் அமைந்திருந்த அந்த செஞ்சோலைக் காணி அடர்த்தியான மனித இருப்புக்குப் பொருத்தமானதல்ல என்ற காரணத்தால் ஜனனி அப்போதும் செஞ்சோலைக்கான நிரந்தரக் காணி தேடும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டார். தற்காலிகமான இடம் என்பதால் செஞ்சோலைப் பிள்ளைகளுக்கு வசதிகள் குறைவாகவே இருந்தன. பிள்ளைகளும் பணியாளர்களும் குறைந்த வசதியுடன் போராடியபடியே தத்தம் வேலைகளைச் செய்தார்கள்.

இக்காலகட்டத்திலேயே ஜனனி செஞ்சோலை வரலாற்றை எழுதும் பணியை என்னிடம் ஒப்படைத்தார். இதனால் செஞ்சோலையில் பணியாற்றிய சில மூத்த விடுதலைப்புலி உறுப்பினருடன் நீண்டநேரம் உரையாடும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. என்னுடைய சொந்தப் பாணியில் செஞ்சோலை வரலாற்றை எழுதும் சுதந்திரத்தை ஜனனி எனக்குத் தரவில்லை. வன்னியில் இதுவே எனது தொடக்கப் பணிகளில் ஒன்றாக இருந்ததால், எனது சொந்தப் பாணியைத் திணிக்கவும் தயக்கமாக இருந்தது. இதனால் என்னால் எழுதப்பட்ட ''செஞ்சோலை வரலாறு'' ஜனனியின் வார்த்தைகளால் சொல்லப்பட்ட வரலாறாகவே இருந்தது. எனது பணி, வார்த்தைகளை எழுத்தில் போடுவதாக மட்டுமே இருந்தது. அத்துடன் சிறுமிகள் பற்றிய புள்ளிவிபரங்களை மின்னுருவில் மாற்றி சில வரைபடங்களையும் இணைத்தேன். எனக்குத் தெரிந்தமட்டில் இணையத்தில் ஏற்றப்படாமல் வன்னியில் மட்டும் பாதுகாக்கப்பட்டு வைத்திருந்த ஏனைய ஆவணங்கள் போலவே இதுவும் தொலைந்து விட்டது. ''செஞ்சோலை வரலாறு'' தொலைந்ததாலும், செஞ்சோலை வரலாற்றை எழுத்தில் பதிய வேண்டும் என்ற ஜனனியின் ஆர்வத்தை மனதில் கொண்டு அவ்வரலாறு பற்றி எனக்கு நினைவிலிருக்கும் சில விபரங்களை இங்கு தருகிறேன்.

செஞ்சோலையூடாக 450 பிள்ளைகள் வந்து சேர்ந்து, வளர்ந்து, சென்றிருக்கிறார்கள். அவர்களில் 200 பிள்ளைகளின் பதிவு செஞ்சோலையில் இந்தக் காலகட்டத்தில் இருந்தது. ஆரம்பத்தில் ஆண் குழந்தைகளையும் பெண் குழந்தைகளையும் ஒன்றாகவே செஞ்சோலை பராமரித்தது. ஆண் குழந்தைகள் வளர்ந்து வர அவர்களுக்கென்று தனியாக அறிவுச்சோலை என்ற அமைப்பு நிறுவப்பட்டது. செஞ்சோலை வரலாற்றின் ஒரு அம்சம் பற்றி மீண்டும் மீண்டும் பேசுவதற்கு ஜனனி எப்போதுமே சளைத்ததில்லை. நீண்ட தொடர்ச்சியான செஞ்சோலையின் இடப்பெயர்வுகள் பற்றிய பேச்சாகவே இருந்தது. அவ்வளவு தொகையான பலவயதுடைய சிறுவர்களைப் பராமரிப்பதற்கு எத்துணை வசதிகள் வேண்டும். இவை ஒவ்வொன்றையும் ஒவ்வொரு இடப்பெயர்வின்போது இழப்பதும், மீண்டும் அவற்றை கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்துக் கட்டி எழுப்புவதும், மீண்டும் இழப்பதும், மீண்டும் கட்டி எழுப்புவதும், அவருக்குப் பெரும் வேதனை அளித்தது. ''செஞ்சோலை வரலாறு'' நான் எழுதுவதற்கு முன்னர் செஞ்சோலை 17 தடவைகள் இடமாற்றம் பெற்றிருந்தது.

செஞ்சோலையில் பராமரிக்கப்பட்டு வந்த ஏறக்குறைய 150 பிள்ளைகளின் குடும்பங்கள் அவர்களைத் தேடி வந்ததால் அப்பிள்ளைகள் செஞ்சோலையிலிருந்து அதிகாரப்பூர்வமாக விலகினார்கள். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் அனேகமானோர் அவ்விதம் குழந்தைகளைத் தேடி வந்தார்கள். சில சிறுவர்கள் மனக்குழப்பங்கள் காரணமாக செஞ்சோலையிலிருந்து ஓடினார்கள். இப்படி ஓடியவர்களின் வாழ்க்கை சீரற்ற வாழ்கையாகவே போயிற்று. திருமணம் செய்து செஞ்சோலையிலிருந்து சென்ற பெண்களை ஜனனி கைவிடவில்லை. அப்பெண்கள் தங்கள் கணவர் குழந்தைகளுடன் தாய் வீட்டிற்கு வருவதுபோல் சமூகக் கொண்டாட்ட நாட்களிலும் ஏனைய நாட்களிலும் கூடச் செஞ்சோலைக்கு வந்து சென்றார்கள். செஞ்சோலையில் வளர்ந்த சில பெண்கள் அங்கே இருந்து களவாகச் சென்று தங்களைப் பற்றிப் பொய்யான தகவல்களைக் கொடுத்து விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைந்துகொள்வது என்பது ஒரு தொடர் பிரச்சினையாக இருந்தது. சிறுவர் இல்லங்களில் வளரும் இளையோரை விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைக்கக்கூடாது என்ற ஆணை எப்போதுமே இருந்து வந்தது. இப்படிக் களவாகச் சென்று விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைந்த பிள்ளைகளைக் கண்டுபிடித்து மீட்டு வருவதற்கு எதிர்கொள்ளும் பிரச்சினைகளைப் பற்றியும் செலவாக்கிய அதிக நேரவிரயத்தைப் பற்றியும்

செஞ்சோலையில் பணிசெய்யும் ஒரு விடுதலைப்புலி உறுப்பினர் என்னிடம் விபரமாகக் கூறியிருக்கிறார். இவர்களில் சில பிள்ளைகள் மீண்டும் மீண்டும் ஓடிச்சென்று விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைவதற்கான தம் உறுதியை வெளிப்படுத்தினார்கள். இவர்கள் அமைப்பிலேயே இருப்பதற்கு அனுமதி பெற்று இருந்தார்கள். இவர்களும் தாய் வீடு செல்வதுபோல் செஞ்சோலைக்கு வந்து போனார்கள். அக்காலத்தில் 15 செஞ்சோலைப் பெண்கள் அவ்வாறு அமைப்பிலிருந்தனர். இன்னும் 10 செஞ்சோலைப் பெண்கள் மாவீரர்களாகியிருந்தனர்.

செஞ்சோலைப் பிள்ளைகள் எல்லோருமே ஏதோ ஒரு தொழிலில் பயிற்சி பெறுவதற்கான வாய்ப்புக்களை ஜனனி ஏற்படுத்திக் கொடுத்தார். பொலீஸ், முதலுதவி மருத்துவர், தாதி, ஆசிரியர், தையல், தட்டச்சு, சமையல், படப்பிடிப்பாளர் என்று தமக்கு வருமானம் ஈட்டக்கூடிய பலவிதமான தொழில்களில் அவர்கள் பயிற்சிகள் பெற்றிருந்தார்கள். செஞ்சோலையின் தொடக்க காலத்திலிருந்தே அதனுடன் இணைந்து செஞ்சோலைப் பிள்ளைகளுக்கென்றே ஒரு செஞ்சோலைப் பாடசாலையும் இயங்கி வந்தது. செஞ்சோலை யாழ்ப்பாணத்திலிருந்தபோது அங்கிருந்த கல்விசார் நிபுணர்களின் உதவியுடன் இது வளர்ச்சிபெற்றுச் சிறப்பாக இயங்கியது. 1995ம் ஆண்டு நடந்த மாபெரும் யாழ் இடப்பெயர்வின் பின்னரும் இவ்வுதவி வன்னியில் தொடர்ந்தது. இக்கல்வித்துறை நிபுணர்கள் ஒவ்வொருவராக மீண்டும் யாழ்ப்பாணத்திற்கு நகர்ந்த போது அவர்களின் ஆதரவு இல்லாமல் போயிற்று. 2006ம் ஆண்டில் இப்பாடசாலையை மூடவேண்டும் என்றும் செஞ்சோலைப் பிள்ளைகள் எல்லோரும் பொதுப் பாடசாலைகளுக்குப் போக வேண்டும் என்றும் விடுதலைப்புலிகள் முடிவு செய்தபோது ஜனனி இதை எதிர்த்துப் போராடினார். செஞ்சோலைப் பாடசாலையின் சிறந்த பெறுபேறுகளைக் காட்டி பிள்ளைகளுக்கு இதுவே சிறந்தது என்று வாதாடினார். தனது விவாதத்திற்கு என்னையும் வேறு பலரையும் சேர்த்துக்கொண்டார். செஞ்சோலை ஒரு சிறந்த வளாகத்தைத் தனக்கென அடைந்தபோது அதனோடு சேர்ந்த பாடசாலைக்கான ஜனனியின் போராட்டமும் தோல்வியில் முடிந்தது.

நான் 2002ம் ஆண்டில் வள்ளிபுனத்தில் சந்தித்த பெரிய பெண்களில் பெரும்பாலனோருக்கு, ஏறக்குறைய 50 பேருக்கு, 2008ம் ஆண்டு கிளிநொச்சி இடப்பெயர்வு நடக்குமுன் திருமணமாகியிருந்தது. இவர்களில் அனேகமானோர் விடுதலைப்புலி உறுப்பினர்களையே திருமணம் செய்திருந்தார்கள். சிலர் தாங்களாகவே விரும்பிச் செய்தார்கள். சிலருக்கு ஜனனி திருமணம் பேசிச் செய்து வைத்தார்.

இவர்கள் அனைவரும் சந்தோசமான தம்பதிகளாகக் காணப்பட்டார்கள். பெண்கள் மரபு சார்ந்த மனைவிகளாகவும், விடுதலைப்புலிகளின் கலாச்சாரப் பாதிப்பால் இவர்களின் கணவர்மார் சாதாரணத் தமிழ் கணவர்களைவிட பரிவு கொண்டவர்களாகவும் காணப்பட்டார்கள்.

செஞ்சோலையில் வளர்ந்து வந்த பிள்ளைகள் அனைவரும் அங்கு இணையுமுன் பல வருடங்கள் பாடசாலைக்குச் செல்லாதவர்கள். இணையும்போது சிலருக்குத் தங்களைச் சுத்தமாக வைத்திருப்பது பற்றிய அறிவுகூட இருக்கவில்லை. செஞ்சோலைப் பணியாளர்களின் அர்ப்பணிப்பான சேவையினால் நாலைந்து வருடங்களின் பின்னர் இவர்கள் எழுதப்படிக்கத் தெரிந்த பெண்களாக வளர்ந்தனர். புத்திக்கூர்மையுள்ளவர்கள் கல்விப் பொதுத்தராதரச் சோதனையிலும் சித்தி எய்தினர். விடுதலைப்புலி உறுப்பினர்களின் அர்ப்பணிப்பாலும் கடினஉழைப்பாலும் இப்பிள்ளைகள் வளர்ச்சியடைந்து பின்னர் நற்குணமுள்ள விடுதலைப்புலி உறுப்பினர்களை மணந்து மகிழ்வான வாழ்க்கை நடத்தியமை உள்ளத்தை உருக்கும் வெளியில் சொல்லப்படாத கதைகள். ஏனெனில் வன்னியில் இப்பிள்ளைகளுக்குச் செஞ்சோலைப் பிள்ளைகள் என்று இருந்த மதிப்பைக் களங்கப்படுத்த விடுதலைப்புலிகள் அனுமதிக்கவில்லை.

ஒரு சிக்கலான கடினமான சூழலில் ஒரு சாதனையைச் செய்ய முனைந்துகொண்டிருந்த ஜனனிக்கும் செஞ்சோலைக்கும் பலவிதமான மன உளைச்சல்கள் வந்துகொண்டிருந்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லை. செஞ்சோலைக்கும் அறிவுச்சோலைக்கும் விடுதலைப்புலிகள் ஏராளமாக நிதி கொட்டினார்கள். இதிலும் செஞ்சோலை பெண்கள் சார்ந்த திட்டமாதலால் பிரபாகரனின் மனதில் அது ஒரு தனி இடத்தைப் பிடித்திருந்தது என்றே சொல்லலாம். தீவிர பெண்ணியவாதிகளாக இருந்த சில பெண் போராளிகளின் கருத்துக்களை உள்வாங்கி சமூகத்தில் பெண்களுக்குச் சமநிலை கொடுக்கவேண்டியதன் தேவையையும் சிறப்பையும் பிராபாகரன் உணர்ந்திருந்தார் என்றே எண்ணத் தோன்றுகிறது. விடுதலைப்புலிகள் அமைப்பில் செஞ்சோலைக்கு இருந்த சிறப்பான இடத்துக்கும் அதற்கு விடுதலைப்புலிகள் அமைப்புத் தாராளமாக கொட்டிய நிதிக்கும் ஈடாக செஞ்சோலைப் பிள்ளைகள் கல்வியில் பெரும் சாதனைகள் செய்யவேண்டும் என்ற எதிர்பார்ப்பு அமைப்பில் இருந்தது. இந்த எதிர்பார்ப்பைச் செஞ்சோலை நிறைவு செய்யவில்லை என்பது அமைப்புக்கு ஒரு ஏமாற்றமாகவே இருந்தது. இக்கருத்துக்கு எதிராகப் போராடுவது ஜனனிக்கு தொடர்ந்து ஒரு

பெரும் சவாலாக இருந்தது. செஞ்சோலைப் பிள்ளைகளின் சாதனைகளைத் தனியே கல்விரீதியாக மட்டும் மதிப்பிடும்போது அவை பெரிதாகத் தோன்றாவிட்டாலும் அவர்களின் பின்னணியையும் அவர்களின் ஒட்டுமொத்த சாதனைகளையும் மதிப்பிடும் போது இவை சிறப்பானவையே என்று விடுதலைப்புலிகளின் தலைமைச் செயலகத்திற்கு உணர்த்த ஒரு போராட்டத்தையே அவர் நடத்தி வந்தார். இப்போராட்டத்தில் தான் தோற்று வருகிறோம் என்ற உணர்வு அவரை மிகவும் புண்படுத்தியது.

செஞ்சோலைப் பிள்ளைகள் பள்ளிப் பருவத்தில் செஞ்சோலையில் இணைந்திருந்தால் அவர்கள் பேரதிர்ச்சிகளைச் சந்தித்தவர்களாக இருந்தார்கள். பச்சிளம் குழந்தைகளாக இணைந்திருந்தால் செஞ்சோலையின் சிறந்த பராமரிப்பு இருந்தாலும் பெற்றோரின் அரவணைப்பு அற்றவர்களாக இருந்தார்கள். இரு வகையினரும் பதின்பருவத்தில் குழப்பம் அடைந்தார்கள். கல்வியில் அவர்களுக்கு இருந்த ஆர்வம் குறைந்து வந்தது. செஞ்சோலையில் கிடைத்த ஆதரவால் அவர்கள் இதிலிருந்து மீண்டு வந்தாலும் இக்குழப்பம் அவர்களின் கல்விச் சாதனையில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தவே செய்தது. இக் கல்விச் சாதனையின் பின்னடைவே ஜனனி எதிர்நோக்கிய குற்றச்சாட்டுக்குக் காரணம். 2005ம் ஆண்டு காலப் பகுதியில் ஜனனி தனக்கு ஒரு விடுமுறை தேவை என்று அடிக்கடி சொல்வார். அவர் எதை விடுமுறை என்று கருதுகிறார் என்று கேட்டபோது எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. காட்டுப் பிரதேசத்தில் ஒரு துப்பாக்கியுடனும் ஒரு புத்தகத்துடனும் ஒரு காவல்நிலையத்தில் தனியே காவற் கடமையில் இருப்பதையே அவர் விடுமுறை என்று கருதினார்.

செஞ்சோலைக்கான தனது நோக்கைக் காலப்போக்கில் ஜனனி உருவாக்கிக்கொண்டார். 2002ம் ஆண்டு போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் செஞ்சோலையின் வரலாற்றையும் தனது நோக்கையும் ஆவணமாக்குவதில் தீவிரமாகச் செயற்பட்டார். தனது நோக்கை சில பக்கங்களே கொண்ட ஒரு ஆவணமாகத் தாயாரித்தார். அதில் என்ன எழுதியிருந்தார் என்பது எனக்கு நினைவிலில்லை. ஆனால் அது ஒரு நல்ல ஆவணம் என்று எண்ணியது நினைவிலிருக்கிறது. தமிழ்ச் சமூகத்திலிருந்து அநாதைச் சிறுவர் என்னும் சொல்லையும் அதனோடு சேர்ந்த தரம் குறைந்த இரண்டாம்தரச் சிறுவர் என்ற எண்ணங்களையும் அழித்துவிடவேண்டும் என்று அவர் மீண்டும் மீண்டும் சொல்லி வந்தது நன்றாக நினைவிலிருக்கிறது. வன்னியில் விடுதலைப்புலிகளும் ஜனனியும் சேர்ந்து செஞ்சோலையூடாக இவ்விலக்கை அடைந்திருந்தார்கள். இதற்கான காரணி செஞ்சோலை

மட்டுமே என்று ஜனனி சொல்ல விரும்பினார். தனது ஆவணத்திற்கு ஒரு தலைப்புத் தரும்படி கேட்டார். ''செஞ்சோலை–ஓரெண்ணக்கரு'' என்பது மிகவும் பொருத்தமானதாக இருந்தது.

நான் வன்னியில் சிறுவர் போராளிகளின் வேலைத் திட்டத்திலே ஈடுபட்டபோது செஞ்சோலை சார்ந்த ஒரு குறையைச் சந்தித்தேன். செஞ்சோலையை விடுதலைப்புலிகள் அமைப்புக்கு மிகவும் நெருக்கமாக ஜனனி வைத்திருந்ததையே குறிப்பிடுகிறேன். விடுதலைப்புலி உறுப்பினர்கள் என்பதற்கும் மேலாக பல போராளிகளைப் போல் ஜனனியும் பிரபாகரனின் மேல் ஒரு தனியன்பு வைத்திருந்தார். பெண் போராளிகளிடையே இவ்வன்புக்கு இன்னுமொரு பரிமாணம் இருந்ததை என்னால் அவதானிக்க முடிந்தது. தமது பாதுகாப்பளராக, ஆணாதிக்க சமூகத்தில் தமக்குச் சுதந்திரம் தந்தவராக பெண் போராளிகளால் பிரபாகரன் கருதப்பட்டார். இதற்கும் மேலாக ஜனனிக்குப் பிரபாகரன்–மதிவதனி தம்பதிகளின் நெருக்கத்தால் இவ்வன்பு இன்னுமொருபடி உயர்ந்திருந்தது. எவ்வாறு ஒரு தமிழ்ப் பெண் தனது சொந்த அண்ணனைக் கருதுவாரோ அவ்வகையான ஒரு அன்பும் அதில் கலந்திருந்தது.

அத்தகைய அன்பு கலந்த நெருக்கத்தால், செஞ்சோலையை விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து கொஞ்சம் விலக்கி வைத்து இயக்குவதால் ஏற்படும் நன்மைகளை அவர் உணரத் தவறினார். செஞ்சோலை வளாகத்துள் நுழைந்தால் அங்கு விடுதலைப்புலிகளின் சின்னங்களும், படிமங்களும், படங்களுமே வரவேற்கும். உறுப்பினர்களும் அவர்களின் சீருடைகளில் சாதாரணமாக வந்து போவார்கள். இதனால் யூனிசெப் போன்ற சர்வதேச சிறுவர் நல நிறுவனங்கள் அங்கு சுலபமாக வந்து போவதில் சிறு தயக்கம் இருந்தது. ''செஞ்சோலை புலிகுட்டிகள் வளர்க்கும் இடம்'', என்ற பிரச்சாரத்துக்குத் வலுச் சேர்ப்பதாக இருந்தது. சிறுவர் போராளிகளை விடுவிக்கும் எனது வேலைகளை பின்னர் விவரிக்கும்போது இதுபற்றி மேலும் கூறுவேன்.

2006ம் ஆண்டில் செஞ்சோலையும், அறிவுச்சோலையும் சிறப்பான தத்தம் நிரந்தர வளாகங்களுக்கு இடம் மாறின. ஜூலை 2006ல் செஞ்சோலை தனது ஆண்டு விழாவை இப்புதிய வளாகத்துள் கொண்டாடியது. செஞ்சோலை பற்றி ஜனனியின் ஊக்கத்தால் உருவாக்கப்பட்ட பல ஆவணங்கள் அப்போது வெளியிடப்பட்டன. அன்று வெளியிடப்பட்ட ஆவணங்களுள் எனது நினைவிலிருப்பவற்றைத் தருகிறேன்: ஒன்று கல்வியாளரால் எழுதப்பட்ட ''செஞ்சோலையின் கல்விசார் சாதனைகள்'' பற்றியது,

முன்னே குறிப்பிட்ட ஜனனியின் ''செஞ்சோலை ஒரெண்ணக்கரு'', நான் ஆங்கிலத்தில் எழுதிய ''செஞ்சோலையின் வரலாறு'', யோகி யோகரட்னத்தால் தமிழ் மொழியாக்கம் செய்யப்பட்டது. செஞ்சோலையில் வளர்ந்த பெண்ணால் எழுதப்பட்ட செஞ்சோலை அனுபவங்கள், பலரின் கட்டுரைகள் தாங்கிய அவ்வாண்டின் நினைவுமலர் இவற்றில் எதுவாவது இன்று இருக்கிறதா என்று எனக்குத் தெரியவில்லை.

2006ம் ஆண்டில் அருகருகே இருந்த தம் புத்தம் புது வளாகங்களுக்கு நகரும் முன் செஞ்சோலையும், அறிவுச்சோலையும் அருகருகே இருக்கவில்லை. அறிவுச்சோலைக்கு நான் சில தடவைகள் போயிருக்கிறேன். 2004ம் ஆண்டில் சிறுவர் இல்லங்களைப் பற்றிய எனது தகவல் சேகரிப்பின்போது முதல்தடவையாக சென்றேன். சிறுவர் போராளிகள் சார்ந்த எனது வேலைத்திட்டத்தின் போதும் சில தடவைகள் சென்றேன். அறிவுச்சோலையுடனான எனது தொடர்புகள் குறைவாக இருந்தாலும், அதுவும் செஞ்சோலையைப் போலவே இயங்கி வந்தது என்பது எனக்குத் தெளிவாகவே தெரிந்தது. உண்மையில் செஞ்சோலையில் இருந்து யாழ் பல்கலைக்கழகத்துக்குச் சென்று படித்துக்கொண்டிருந்தவர்களை விட அறிவுச்சோலையிலிருந்து யாழ் பல்கலைக்கழகத்துக்குச் சென்று படித்துக்கொண்டிருந்தவர்கள் அதிகம்.

2007ம் ஆண்டில் என்னை மீண்டும் செஞ்சோலை வட்டத்திற்குள் இணைப்பதற்கு ஜனனி முயன்றார். சிறுமிகளின் தங்குமிடத் தேவைகளையும், கல்வித் தேவைகளையும் பூர்த்தி செய்ததால் இப்பொழுது அவர்களின் உளநலத்தைப் பற்றி அவர் ஆழமாகச் சிந்திக்கத் தொடங்கியிருந்தார். இதில் எனக்கு பயிற்சி இல்லையென்றாலும் நானும் இதில் பங்குகொள்ள வேண்டும் என்று விரும்பினார். இதுபற்றி நானும் நிறைய வாசித்தேன். வளர்ந்த பெண்களை ''நான் யார்?'' என்ற தலைப்பில் ஒரு ஆவணத்தொகுப்புத் தயாரிக்க ஊக்குவித்தால் அது அவர்களுக்கு நலமாக இருக்கும் என்று முடிவு செய்து இது பற்றி ஜனனியுடன் பேசினேன். அது பெண்களுக்குக் குழப்பம் விளைவிக்கும் என்று சொல்லி ஜனனி அதை புறக்கணித்ததால் நானும் அதைக் கைவிட்டேன்.

என்னையும் தனது திட்டமொன்றினுள் இணையும்படி கடைசியாக ஜனனி வற்புறுத்தியது 2008ம் ஆண்டில். சிறுவர் இல்லம் நடத்துபவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கக்கூடிய ஒரு ஆவணத்தைத் தயாரிப்பதாக ஒரு திட்டத்தை அவர் விபரித்தார். அது ஒரு நல்ல திட்டமாகவே தோன்றியது. ஆனால் அத்திட்டம் விரிவடையும்போது அது செஞ்சோலையை மையப்படுத்தியே

இருந்தது. செஞ்சோலை வன்னியில் இருந்த ஏனைய சிறுவர் இல்லங்களிலும் இருந்து மிகவும் வேறுபட்டது. எனவே செஞ்சோலையை மையப்படுத்திய திட்டம் ஏனைய சிறுவர் இல்லங்களுக்கு எந்தவிதத்திலும் உதவாது என்பது என் கருத்து. இத்திட்டத்தை நிறைவேற்ற வன்னிப் பொதுமக்களிடையே இருந்து வெவ்வேறு துறைகளிலுள்ள பன்னிரண்டு பேர்களை அவர் தேர்ந்தெடுத்தார். இவர்களை இரண்டிரண்டு பேராகப் பிரித்து வெவ்வேறு தலைப்புக்களில் செஞ்சோலையின் வளர்ச்சியைப் பற்றி எழுதும்படி கேட்டுக்கொண்டார்.

ஊடகவியலாளரான சத்தியமூர்த்தியையும் என்னையும் செஞ்சோலையின் கல்வி வளர்ச்சி பற்றி எழுதும்படி பணித்தார். சத்தியமூர்த்தியுடன் ஒரு வேலைத்திட்டத்தில் சேர்ந்து பணியாற்றும் வாய்ப்புக்கிடைத்ததற்கு நான் நன்றியுடையேன். அவர் ஒரு பகட்டற்ற மனிதர். விடுதலைப்புலிகளின் அனைத்துலகப் பிரிவின் ரிரிஎன் தொலைக்காட்சியில் கிரமமாக அரசியல் பகுப்பாய்வுகளை வழங்கி வந்தார். அதனால் புலத்துத் தமிழர்களுக்கு நன்றாகத் தெரிந்தவர். அவர் செஞ்சோலையின் கல்வி வளர்ச்சி பற்றிய தனது புரிதல்களை எழுத்தில் வடித்தார். இதனூடாக அவரின் எழுத்தாற்றல் பற்றியும் தெரிந்துகொண்டேன். ஜனனியின் இச்செயற்திட்டத்திற்கான கூட்டங்களில் நான் அதிகம் பங்கேற்கவில்லை. ஆனால் சத்தியமூர்த்தியுடன் அதுபற்றி நீண்ட உரையாடல்களை நடத்தியிருக்கிறேன். அவர் உயிருடன் இருந்திருந்தால் அக்காலத்து வன்னியைப்பற்றியும் அழகாக வார்த்தைகளில் வடித்திருப்பார். அக்டோபர் 2008ல் நாங்கள் எல்லோரும் கிளிநொச்சியில் இருந்து இடம்பெயர்ந்தோம். கடைசியாக நான் சத்தியமூர்த்தியை அவரது மனைவியோடு தர்மபுரம் வீதியில் சைக்கிளில், ஐநாவின் உலருணவுப்பொதியுடன் (Dried Food Pack) செல்லும்போது கண்டேன். வழமையான தன்னடக்கமான புன்னகையுடன் எனக்குக் கையசைத்தார். தனது இரண்டு வயதுக் குழந்தையுடன் சோதனைகள் மிகுந்த அத்துயர நாட்களையும் உளவுறுதியுடன் முகம் கொடுக்கிறார் என்பது தெரிந்தது. பெப்பிரவரி 2009ல் செல் தாக்குதலில் அவர் கொல்லப்பட்டார். நான் கடைசியாகப் பங்கு கொண்ட இச்செஞ்சோலைத் திட்டம் நிறைவு பெறவில்லை.

கிளிநொச்சியில் இருந்து இடம்பெயர்ந்த பின்னர் நான் பெண்கள் புனர்வாழ்வு மையம் நடத்திய வள்ளிபுனத்திலிருந்த செந்தளிர் என்னும் வேறொரு சிறுவர் இல்லத்தில் தங்கியிருந்தேன். அங்கிருந்தபோது, 2009ம் ஆண்டு ஆரம்பத்தில் செஞ்சோலை, அறிவுச்சோலை ஆகிய இரு சிறுவர் இல்லங்களிலும் இருந்து

*வளர்ந்தவர்களை விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைத்து லங்கா ராணுவத்தைத் தடுக்கும் போர்முயற்சியில் ஈடுபடுத்தியதாகக் கேள்விப்பட்டேன். இவர்கள் 18 வயதிற்கு மேற்பட்டவர்களா இல்லையா என்பது தெரியவில்லை. கிளிநொச்சி இடப்பெயர்விற்குப் பின் நான் ஜனனியைச் சந்திக்கவில்லை. இறுதிக்கட்டத்தில் அவர் முள்ளிவாய்க்காலில் இருந்து வெளியேற மறுத்தார் என்று சில விடுதலைப்புலி உறுப்பினர்கள் மூலமாக அறிந்தேன். அவர் தனது உயிரைத் தானே எடுத்திருக்கலாம் அல்லது கொல்லப்பட்டிருக்கலாம்.*

*செஞ்சோலைப் பிள்ளைகளுக்கு முள்ளிவாய்க்கால் பேரழிவின் போதும், அதன் பின்னரும் என்ன நடந்தது என்பது பற்றி எனக்கு நேரடித் தகவல்கள் எதுவும் தெரியாது. செய்திகளின் படி இவர்களில் சிலரேனும் வவுனியாவில் கத்தோலிக்க சகோதரிகள் பராமரிப்பில் இருக்கிறார்கள் என்று அறிகிறேன். நியூசிலாந்து திரும்பிய பின் வவுனியாவில் சாலினி என்ற செஞ்சோலைச் சிறுமியின் இறப்பு பற்றிய செய்திகளை இணையத்தில் வாசித்தேன். 2007ம் ஆண்டில் நான் மீண்டும் செஞ்சோலையுடன் இணைந்து செயற்பட முயற்சிகள் எடுத்தபோது வயது வந்த சில செஞ்சோலைப் பிள்ளைகளுடன் கதைத்தேன். அப்போது இணையத் தளங்கள் பற்றியும் அவற்றிலிருந்து அவர்களுக்கு விருப்பமான விடயங்கள் பற்றிய தகவல்களை நான் கொண்டுவந்து தரமுடியும் என்பது பற்றியும் சொன்னேன். சாலினி மட்டுமே இதில் ஆர்வம் காட்டி நட்சத்திர மண்டலத்தைப் பற்றி அறிய விரும்புவதாக என்னிடம் சொன்னார். புத்திசாலியான, சொந்தமாகச் சிந்திக்கும் தன்மையுள்ள ஒரு சிறுமி சாலினி.*

# சடங்குகள்

2002ம் ஆண்டில் எனது முதல் வன்னிப் பயணத்தின் போது மூன்று வாரங்கள் செஞ்சோலையில் தங்கியதும் 2004ம் ஆண்டில் எனது இரண்டாவது வன்னிப் பயணத்தின் போது கரனுடன் அங்கே இருந்த சிறுவர் இல்லங்களைத் தரிசித்ததும் அதுவரையான என் வன்னி அனுபவங்களின் சிறப்புக் கூறுகள். இவ்வனுபவங்களையே இதுவரை வர்ணித்திருக்கிறேன். 2005ம் ஆண்டில் ஆரம்பமான எனது நான்கு ஆண்டு கால வன்னி வாழ்க்கையின் போதே எனது ஆழமான வன்னி அனுபவங்கள் ஆரம்பிக்கின்றன. இந்த நான்கு ஆண்டு கால வன்னி அனுபவங்களை அடுத்துவரும் பகுதிகளில் விவரிக்குமுன் வன்னி மக்களின் வாழ்வுடன் பின்னிப் பிணைந்திருந்த சடங்குகளைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன். இவை தனித்துவமானவை. வன்னியில் சில காலம் மட்டுமே தங்கியிருந்தவர்களும் இச்சடங்குகளில் சிலவற்றையேனும் பார்க்காமல் இருந்திருக்க முடியாது.

சமயச் சடங்குகள் மரபுவழியாக எவ்வாறு நடத்தப்படுகிறதோ அவ்வாறே வன்னியிலும் நடத்தப்பட்டன. இது தவிர வன்னியில் வேறு ஒரு வகையான சடங்குகள், சமூக–அரசியல் மையப்படுத்தப்பட சடங்கு வகைகள், விடுதலைப்புலிகளால் நடத்தப்பட்டன. வன்னியின் வாழ்க்கை முறையில் விடுதலைப்புலிகளால் நடத்தப்பட்ட இத்தகைய சடங்குகள் நிரம்பி இருந்தன. ஒவ்வொரு மாவீரர்களின் நினைவு நாட்கள், பல்வேறு நிறுவனங்களின் ஆண்டு விழாக்கள், புதிய நிறுவனங்களின் திறப்பு விழாக்கள், பழைய நிறுவனங்களின் புதிய கட்டடத் திறப்பு விழாக்கள் என்று பல சடங்குகள். இதையும் விட மிகப்பெரும் கோலாகலமாக நினைவு கூரப்பட்ட தினங்களாக மாவீரர் தினம், கரும்புலிதினம் போன்ற தினங்களும் பொங்குதமிழ் போன்ற நிகழ்வுகளும் இருந்தன. தமிழரின் பண்டைய நிகழ்வான பொங்கல் விழாவும் விடுதலைப்புலிகளால் மிகவும் கோலாகலமாக கொண்டாடப்பட்டது. தெருக்கூத்துகளும் மேடை நிகழ்வுகளும் அநேகம் இருக்கும். போராட்ட ஊர்வலங்கள் பல நிகழும். அடிக்கடி

நிகழும் சர்வதேசப் பிரதிநிதிகளின் வருகையும் கூடச் சடங்குகள் போலவே தோற்றமளித்தன.

விடுதலைப்புலிகளின் நிறுவனங்கள் தோறும் நினைவாலயங்கள் நிரந்தரமாக நிறுவப்பட்டிருக்கும். பாடசாலைகள் உட்பட லங்கா–அரச நிறுவனங்களில் சடங்கு நாட்களுக்கு மட்டும் நினைவுச் சின்னங்கள் தற்காலிகமாக நிறுவப்படும். நிரந்தரமாக நிறுவப்பட்டிருந்த மாவீரர் நினைவாலயங்களில், அந்த நிறுவனத்தில் முன்னர் பணியாற்றிய மாவீரர்களின் படங்களும் அங்கு பணியாற்றும் போராளிகளுக்கு நெருக்கமான மாவீரரின் படங்களும் வைக்கப்பட்டிருக்கும். இந் நினைவாலயங்கள் வழிபாட்டுக்குரிய புனிதத் தலங்களாக மக்கள் மனதில் ஏற்கப்பட்டிருந்தன. தினமும் காலையில் வேலை ஆரப்பிப்பதற்கு முன் இவற்றுக்கு விளக்கேற்றி மலர் தூவி வணங்கும்போது மாவீரர்களின் முடிவான தியாகத்தை எல்லோருக்கும் தினமும் நினைவுபடுத்துவதாக அச்சடங்குகள் அமையும்.

இதைவிட இன்னும் ஒரு படிவமும் அங்கு வணக்கத்திற்கு உரியதாக விளங்கியது. பெருங்கற் குவியலால் ஆன சிறு குன்று. அதன் மேல் துப்பாக்கி ஒன்று வானத்தைப் பார்ப்பது போல் நிறுத்தப்பட்டு துப்பாக்கியின் குழாயில் ஒரு இராணுவத்தொப்பி கவிழ்க்கப் பட்டிருக்கும். இவ்வழிபாட்டுக்குப் பல மூலகாரணங்கள் இருக்கலாம். ஆயுதப்போராட்டத்தில் ''ஆயுதம்'' என்ற அம்சத்தை முதன்மைப்படுத்துவதாக இது இருந்தது. தமிழரிடம் தம் தொழிலுக்குரிய ஆயுதங்களை வணங்கும் ஆயுத வழிபாட்டுக் கலாச்சாரம் உண்டு. உதாரணமாக விவசாயிகள், தச்சர், கொல்லர், இசைக் கலைஞர் போன்றோர் தமது தொழிலுக்குரிய ஆயுதங்களையும், கருவிகளையும் குலதெய்வங்கள் முன் வைத்து வழிபடுவர். கடவுள் அங்கே இல்லை. ஆனால் விளக்கேற்றுவதும் பூக்கள் போடுவதும் மனதில் பயபக்தியுடன் போற்றுவதும் அங்கிருந்தன. துப்பாக்கிப் படிவத்தை வணங்குவதை 'வீர வழிபாடு' என்றும் கூறலாம்.

தெருவோரங்களிலும் பல திறந்த நினைவாலயங்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஏனைய நினைவாலயங்கள் போலவே இவையும் வழிபாட்டுக்கு உரியனவாக விளங்கின. இவற்றைவிட, பிரபல மாவீரர்களின் சிற்பங்கள் பெரிய சந்திகளில் நிறுவப்பட்டிருந்தன. ஏ–9 வீதியூடாக அக்காலத்தில் பிரயாணம் செய்த எவருமே இவற்றைக் காணாமல் இருக்கமுடியாது. மாவீரர்களின் படங்களும், சிற்பங்களும், துப்பாக்கிக் குன்றுப் படிவமும் எங்கும் பரவலாக நிறைந்து மக்களின் மனதில் பதிந்திருந்தன.

தமிழ்நாட்டிலிருந்து ஒரு சிற்பக் கலைஞர் கிளிநொச்சியில் வந்து தங்கியிருந்து மாணவர்களுக்குச் சிற்பக் கலையைக் கற்பித்தார். அதோடு மாவீரர் சிற்பங்களையும் செதுக்கினார். அவர் சிற்பவேலை செய்யும்போது பார்க்கும் வாய்ப்பு எனக்கும் கிடைத்தது. தமிழ்நாட்டிலிருந்து பல்வேறு துறைகளைச் சார்ந்த கலைஞர்கள் இக்காலத்தில் வன்னிக்கு வந்து மாணவர்களுக்கு நுண்கலைகள் பயிற்றுவித்தார்கள்.

ஆயுதப்போராட்டத்திற்குரிய படிவங்கள் வன்னி மண்ணிலும், வன்னி மக்கள் வாழ்விலும் வியாபித்திருந்தன. போர் தீவிரமடைய ஆரம்பித்தபின் இப்படிவங்களுடன் லங்கா ராணுவத்தின் கொடூரங்களைச் சித்தரிக்கும் விளம்பரத் தட்டிகளும் இளைஞர்களைப் போராட அழைப்பு விடுக்கும் விளம்பரத் தட்டிகளும் தெருவோரங்களில் நிறுவப்பட்டன. இதுபோன்ற விளம்பரத் தட்டி ஒன்றில் ஒரு இளம்பெண் துப்பாக்கியை குறிவைத்தபடி நின்றாள். ''இவள் போராட நீங்கள் தெருவோரத்தில் நின்று வீண்பேச்சுப் பேசப் போகிறீர்களா?'' என்று போரில் இணையாத இளம் ஆண்களைக் கேட்பதுபோல் அதன் தலைப்பு எழுதப்பட்டிருந்தது.

முக்கிய நாட்களில் நிறுவனங்களில் வேலை செய்பவர்கள் அவரவர் நிரந்தர அல்லது தற்காலிக நினைவாலயங்களில் வழக்கத்தை விடவும் அதிகநேரம் கூடுவார்கள். குறிப்பிட்ட நேரத்தில், சரியாகக் காலை 9.00 மணிக்கு, 'புலிகளின் குரல்' வானொலியில் கொடிவாழ்த்துப் பாடல் ஒலிபரப்பப்படும். ஒவ்வொரு நிறுவனத்திலும் அந்நிறுவனத்தின் முதல்வர் தமிழீழக் கொடியை ஏற்றுவார். விடுதலைப்புலிகளின் நிறுவனங்களில் இவர் விடுதலைப்புலி அமைப்பின் முக்கிய உறுப்பினராக இருப்பார். ஏனைய நிறுவனங்களில் அந்நிறுவனத்தின் முதல்வர் இதை ஏற்றுவார். கொடியேற்றிய பின் மறைந்த மாவீரர்களுக்காகவும், கொல்லப்பட்ட பொதுமக்களுக்காகவும் இரண்டு நிமிட மௌன அஞ்சலி இடம்பெறும். இதுபோன்ற இரண்டு நிமிட அஞ்சலிகள் இன்று உலகம் முழுவதும் பரந்திருக்கும் ஈழத்தமிழர்களின் ஒரு கலாச்சார வழக்கமாகவே மாறிவிட்டது. வன்னியில் இயங்கிய சர்வதேச நிறுவனங்கள் இச்சடங்குகளில் பங்கு பற்றவில்லை. ஆனால் அவர்களும் இவற்றை மதித்தே நடந்தனர்.

கொடியேறும்போது விடுதலைப்புலி உறுப்பினர்கள் தமது விரித்த வலக்கையை நெஞ்சின் நடுவே வைத்து விடுதலைப்புலி அமைப்பின் முறைப்படி வணக்கம் செய்வார்கள். பொதுமக்கள் அநேகமாக இதைச் செய்வதில்லை. இதனால் சிவில் உடையில்

இருக்கும் உறுப்பினர்களை இவ்வணக்கமுறை தனிப்படுத்திக் காட்டும். கொடியேற்றும் முன் விளக்கேற்றப்படும். துப்பாக்கிக் குன்று இருந்தால் முதலில் அதற்கும் பின்னர் மாவீரர் படங்களுக்கும் விளக்கேற்றி மலர் வணக்கம் செய்யப்படும். இச்சடங்குகள் சுருக்கமாக, 30 நிமிடங்களுள் முடிந்துவிடும். இச்சடங்குகளில் இறுதியில் இடம்பெறும் உரையே இதில் அதிக நேரத்தைப் பிடிக்கும். மூன்று நாட்களுக்குத் தொடரும் மாவீரர் நாட்கள், பன்னிரண்டு நாட்கள் தொடரும் திலீபன் நினைவு நாள், கரும்புலி நாள், அன்னை பூபதி நாள், பெண்கள் எழுச்சி நாள், கேணல் கிட்டு நாள் ஆகிய நாட்களில் இச் சடங்குகள் நடக்கும். சமாதானச் செயலகத்தை அடுத்தும் ஒரு திறந்தவெளி ஆலயம் இருந்தது. இங்கு நடைபெறும் பல சடங்குகளில் நான் பங்கு கொண்டிருக்கிறேன். அநேகமாகத் தமிழ்ச்செல்வனே இங்கு கொடியேற்றுவார்.

நவம்பர் 27ல் வரும் மாவீரர் தினம் தனிச் சிறப்பு வாய்ந்தது. இது மற்ற சடங்குகளையும், கொண்டாட்டங்களையும் விடச் சிறப்பாக இருக்கும். வன்னிச் சமூகம் வேறு ஒரு மனோநிலையில் இருப்பது போல் தோன்றும். இதற்கு ஒரு வாரத்துக்கு முன்னரே தெருக்கள் எல்லாம் விழாக்கோலம் பூணத் தொடங்கிவிடும். மாவீரர்கள் பற்றிய பலவிதமான ஒப்பனைகளும், அமைப்புக்களும், தெருவெல்லாம் நிறுவப்படும். மாவீரர் நாளன்று காலையிலிருந்தே மாவீரர் குடும்பங்களும் மற்றோரும் மாவீரர் துயிலும் இல்லங்களுக்குத் தரிசிக்கப் போவார்கள். முதியவர்களும் உடல் ஊனப்பட்டோரும் கூடுதலாகப் பகல் நேரத்தில் தரிசிக்கப் போவார்கள். அன்றிரவு மாவீரர் நாளின் உச்சக்கட்டத்தில் மாவீரர் துயிலும் இல்லங்கள் அனைத்திலும் மக்கள்கூட்டம் நிரம்பிவழியும். மாவீரர் நாளன்று துயிலும் இல்லங்களுக்குப் பகலில் வந்த முதியவர்களுடன் நான் உரையாடியிருக்கிறேன். அந்நாட்களில் அவர்களின் மனோநிலை திருவிழாக் காலத்தில் விரதம் இருந்து கோவிலுக்குச் செல்வோரின் மனோநிலையும் ஒரு உறவினரைப் போய்ப் பார்க்கச் செல்வோரின் மனோநிலையும் கலந்தது போலிருக்கும். அன்றைய இரவு மாவீரர் துயிலும் இல்லங்களில் இடம்பெறும் நிகழ்வுகள் உலகெங்கும் காணமுடியாத தனித்துவம் வாய்ந்தவை.

அத்தினத்தில் மாவீரர் துயிலும் இல்லங்களுக்குச் செல்வோர் பூமாலை எடுத்துச்செல்வது வழக்கம். இதனால் அந்நாட்களில் பூக்களுக்குப் பெரும் பஞ்சம் ஏற்பட்டுவிடும். மாவீரர் துயிலும் இல்லங்களிலுள்ள கல்லறைகளில் மக்கள் பூமாலை, பழம், வைத்து ஊதுவத்தி ஏற்றி நினைவஞ்சலி செய்வார்கள். மாவீரரின் உறவினர்கள் மாவீரரின் கல்லறைகளைச் சுற்றி நின்று மாவீரரானவர் அன்று தான்

இறந்தது போல் ஓலமிட்டு அழுவார்கள். இதையே ஆயிரக்கணக்கான கல்லறைகள் முன் ஒரேநேரத்தில் நிகழ்வதைக் கற்பனை செய்து பார்த்தால் அதுவே மாவீரர் நாளின் உச்சம். அதைப் பார்ப்பவர்களும் அதனால் பாதிக்கப்படாமல் இருக்கமுடியாது.

பெரும்தொகையான மக்களை ஒருங்கிணைத்து வைத்திருப்பதற்கு சடங்குகள் மிகவும் உதவி செய்கின்றன. சமூகங்களில் பல்வகையான மனித அமைப்புக்கள் இதுபோன்ற சடங்குகளை நடைமுறைப்படுத்துகின்றன. கலாச்சாரச் சடங்குகள், சமயச் சடங்குகள் தொடக்கம் அரசியல் கட்சிகளின் சடங்குகள், இராணுவச் சடங்குகள் என இவை பலவகையாக நடத்தப் படுகின்றன. மிகவும் விசுவாசமான சில விடுதலைப்புலி உறுப்பினர்கள் விடுதலைப்புலிகளின் சில சடங்குகளை முக்கியமாக கொடியேற்றும் சடங்கை விமர்சித்து எள்ளி நகையாடியதை நான் கேட்டிருக்கிறேன். சமய நம்பிக்கை உள்ளவர்கள் சிலர் சமயச் சடங்குகளை விமர்சிப்பது போலத்தான் இவர்களும் விடுதலைப்புலிகளின் இலக்கிலும் போராட்டத்திலும் நம்பிக்கை இருந்தாலும் அதன் சடங்குகளை விமர்சிக்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டேன்.

சில விமர்சையாகக் கொண்டாடப்பட்ட நிகழ்வுகளில் பொங்குதமிழ் நிகழ்வும் ஒன்று. 2004 – 2005ம் ஆண்டுகளில் பல பொங்குதமிழ் நிகழ்வுகள் தொடராகத் தமிழீழம் முழுவதும் வெவ்வேறு இடங்களில் நடத்தப்பட்டன. இதில் பங்குபெறச் சென்றவர்களுக்கு லங்கா ராணுவம் தொல்லை கொடுத்து வந்தது. கிளிநொச்சியில் 2005ம் ஆண்டில் நடந்த மாபெரும் பொங்குதமிழ் நிகழ்வுக்கு நானும் சென்றிருந்தேன். ஏறக்குறைய 10,000 மக்கள் இதற்கு வந்திருந்தார்கள். எல்லோரும் ஒன்றிணைந்து பல கோசங்களை எழுப்பிய வண்ணம் இருந்தார்கள். அவற்றில் சில தமது கோரிக்கைகளுக்குச் செவிசாய்க்கும்படி அனைத்துலக சமூகத்துக்குச் சொல்லப்பட்டதாக இருந்தன. என்னுடைய வாழ்க்கையிலேயே முதல்தரமாக இத்தகைய மாபெரும் மக்கள்கூட்டம் ஒன்றாக விடுதலைக் கோசமிடுவதை நான் கேட்டேன். தமிழ் மக்களின் விடுதலைக் கோரிக்கையை அனைத்துலகச் சமூகம் புறக்கணித்ததை மக்கள் வெளிக்கொணர்ந்தது உணர்ச்சிகரமாக இருந்தது. இப்பொங்குதமிழ் நிகழ்வுகள் தமிழ் மக்களிடையே சுதந்திர தமிழீழத்திற்கு இருந்த பெரும் ஆதரவைச் சமாதான நடவடிக்கைகளை மேற்கொண்ட அனைத்துலகச் சமூகத்துக்குத் தெளிவாக எடுத்துக் காட்டின. அனைத்துலகச் சமூகம் தமிழீழ மக்களின் விடுதலைக் கோரிக்கையை புறக்கணிக்கிறது என்ற விழிப்புணர்வையும் இந்நிகழ்வுகள் தமிழ் மக்களுக்குக் கொடுத்தது.

2005ம் ஆண்டு கிளிநொச்சியில் இப்பொங்கு தமிழ் நிகழ்வு போருமற்ற சமாதானமும் அற்ற சூழலில் நிகழ்ந்தது. இக்காலத்தில் சமாதான முன்னெடுப்புக்களை மீண்டும் துரிதப்படுத்த வேண்டும் எனும் ஆர்வம் அனைத்துலகச் சமூகத்திடம் காணப்பட்டது. இதனால் தமிழீழத்தில் நடக்கும் சின்னஞ் சிறு காரியங்கள் கூட அனைத்துலக ஊடகங்களில் செய்தியாக வந்துகொண்டிருந்தன. இம்மாபெரும் பொங்குதமிழ் நிகழ்வு எந்த ஒரு அனைத்துலக ஊடகத்திலும் சிறுசெய்தியாகக் கூட வெளிவரவில்லை. இது என்னைப் பெரும் திகைப்படையச் செய்தது. அனைத்துலகச் சமூகத்தின் சமாதான முயற்சிகளின் நடுவே அனைத்துலகச் சமூகத்தின் கவனத்தை ஈர்ப்பதற்கு இத்தகைய மாபெரும் மக்கள் திரள் நடத்திய நிகழ்வு, செய்தி மதிப்பானது என்று அவ்வூடகங்கள் கருதவில்லை. இது அனைத்துலக ஊடகங்களை ஆய்வு செய்பவர்கள் கவனத்திலெடுக்கப்பட வேண்டிய ஒன்று.

லங்கா அரசிற்கு எதிராகப் பல ஊர்வல ஆர்ப்பாட்டங்களும் வன்னியில் நிகழ்ந்தன. இவையும் விடுதலைப்புலிகளால் ஒழுங்கு செய்யப்பட்டவையே. விடுதலைப்புலிகளின் ஒழுங்கமைப்புக்கு இசைய இவை நடத்தப்பட்டதால் இவற்றில் வழமையாக இத்தகைய ஆர்ப்பாட்டங்களிலிருக்கும் சுதந்திரச் செயற்பாடுகள் குறைவாகவே இருந்தன. இருந்தாலும் அவற்றிற்கு மக்கள் ஆதரவு இல்லை என்றோ மக்கள் அவற்றுடன் தங்களை அடையாளப்படுத்தவில்லை என்றோ சொல்லிவிட முடியாது.

இரவு முழுக்கத் தொடர்ந்த மாபெரும் இசை நிகழ்ச்சி ஒன்றிற்குச் சென்றிருந்தேன். விடுதலைப்புலிகளின் பல பிரபல பாடகர்கள் அதில் பங்கேற்றார்கள். தேசவிடுதலைப் பாட்டுக்களுடன் பிரபல தமிழ்ச்சினிமா நடிகர் எம்.ஜி.ஆர் நடித்த திரைப்படங்களில் இருந்தும் சில நல்ல கருத்துள்ள பாடல்களையும் பாடினார்கள். நிகழ்வின் இறுதிக்கட்டத்தில் பார்வையாளர்களில் சிறுவர்களும் இளம் ஆண்களும் எழுந்து நின்று பாட்டுக்கு ஏற்ப ஆடினார்கள்.

இதைவிடப் பழந்தமிழர் கலையான தெருக்கூத்துகளும் அடிக்கடி தெருவோரங்களில் போடப்படும். இவை முன்பு சமயக் கதைகளையும் மன்னர்களின் கதைகளையும் கருப்பொருளாகக் கொண்டவையாக இருந்தன. வன்னியில் இக்கலை வடிவம் சமகால அரசியலையும், போராட்டத்தையும் கருப்பொருளாக வைத்து நடத்தப்பட்டன. இவை தரமானவையாகவும் நகைச்சுவை கலந்தவையாகவும் இருந்தன. எல்லோரும் ரசித்து மகிழ்வார்கள். அப் பாரம்பரியக் கலைவடிவம் இப்போது மக்களுக்கு அரசியல் செய்தியைக் கொண்டு செல்லப் பயன்படுத்தப்பட்டது. இவ்வாறான

அரசியல் செய்திகள் இவ்வழியாக அடிமட்ட மக்களையும் சென்றடைந்தது. விடுதலைப்புலிகள் கையாண்ட இத்தெருக்கூத்து முறையும் இது கூறிய அரசியல் தகவலும் இதை எளிமையாக அடிமட்ட மக்களையும் சென்றடையும் வழியில் இயக்கியதும் தமிழீழ மக்களிடையே இத்தகைய செயற்பாடு முதல்முறையாகவும், சொல்லப் போனால் இன்றுவரை கடைசிமுறையாகவும் இருக்கிறது.

2002ம் ஆண்டுக்கு முன்னர் லங்கா அரசின் குண்டு வீச்சுக்களால் அழிக்கப்பட்ட வைத்தியசாலைகள் அனைத்துலக நிதியுதவியுடன் மீண்டும் கட்டப்பட்டன. வெளிநாடுகளின் நிதியுதவியுடனும் புலத்துத் தமிழர்களின் நிதியுதவியுடனும் ஏராளமான புதுக் கட்டடங்கள் கட்டப்பட்டன. பாடசாலைகளும் சிறுவர் இல்லங்களும் புதுப்பித்துக் கட்டப்பட்டன. போரில் அழிக்கப்பட்ட கோவில்களும் தேவாலயங்களும் மீண்டும் கட்டி எழுப்பப்பட்டன. பழைய நிறுவனங்களுக்குப் புதுக்கட்டடங்களும், புது நிறுவனங்களுக்குப் புதுக்கட்டடங்களுமாக எழுந்த வண்ணம் இருந்தன. இக்கட்டடப் பணிகள் ஒவ்வொன்றும் முற்றுப்பெற்றதும் அவற்றுக்குத் திறப்புவிழா நடக்கும். அநேகமான நிறுவனங்கள் தமது ஆண்டு நிறைவு விழாக்களையும் கொண்டாடின. இதற்கு முக்கிய பிரமுகர்கள் அழைக்கப்படுவார்கள். இவ்விழாக்கள் எல்லாம் கொடியேற்றத்துடனேயே தொடங்கும். இளம் கலைஞர்கள் தேசிய விடுதலை உணர்வுள்ள நிகழ்ச்சிகளை மேடையேற்றுவதற்கு இவ்விழாக்கள் நல்ல தளம் அமைத்துக் கொடுத்தன. மூத்த விடுதலைப்புலி உறுப்பினர்கள் சிலரே இந்நிகழ்வுகளில் உரையாற்றுவார்கள். பாலகுமாரும், இளங்குமரன் என்றழைக்கப்பட்ட பேபி சுப்ரமணியனும் இதற்காக விரும்பி அழைக்கப்படும் பேச்சாளர்களாக இருந்தார்கள். இவர்கள் இருவருமே போரின் இறுதியில் ராணுவத்தால் அழைத்துச் செல்லப்பட்டு பின்னர் காணாமற் போயுள்ளனர்.

தமிழர் விழாவான தைப்பொங்கல் ஒரு சமயச் சார்பற்ற விழாவாதலால் இதை ஒரு தேசிய விழாவாகப் பெருமளவில் விடுதலைப்புலிகள் கொண்டாடுவார்கள். தைப்பொங்கலைத் தவிர தமிழர்களின் ஏனைய விழாக்கள் எல்லாம் சமஸ்கிருத–இந்து மதத்துடனோ அல்லது காலனிய கிறிஸ்தவத்துடனோ கலந்திருந்தது. வன்னிப் பிரதேசம் விவசாயிகள் நிறைந்த பிரதேசமாக இருந்ததும் பொங்கலைச் சிறப்பாகக் கொண்டாடக் காரணமாக இருந்திருக்கலாம். தைப்பொங்கல் அன்று ஏ–9 வீதியில் இருந்த அழகாக அலங்கரிக்கப்பட்ட ஒரு பெரிய மைதானத்தில் 100 பானைகளில் பொங்கல் பொங்கப்படும். ஒரு பொங்கலன்று

என்னையும் சில நிறுவனங்களுக்கு அழைத்திருந்தார்கள். தமிழ்ச்செல்வனும் சில நிறுவனங்களுக்கு வந்திருந்தார். மாவீரர்களின் வயதான பெற்றோரைப் பராமரிக்க நடத்தப்படும் அன்புச்சோலையிலும், போர்க்காயத்தால் சக்கரநாற்காலியில் முடக்கப்பட்ட பெண்போராளிகள் தங்கும் மயூரி இல்லத்திலும் நானும், தமிழ்ச்செல்வனும் சந்தித்தோம். மயூரி இல்லத்தில் பொங்கல் பொங்கி முடிவதற்கு நாங்கள் காத்துக்கொண்டிருந்த நேரத்தில் மயூரி இல்லப் போராளிகள் தமிழ்ச்செல்வனுடன் சரளமாகவும் நகைச்சுவையுடனும் சிரித்துப் பேசினார்கள். அவருடன் வந்திருந்த வேறொரு மூத்த போராளி தன் அழகான குரலில் பாடி எல்லோரையும் மகிழ்வித்தார். அன்புச்சோலையில் தமிழ்ச்செல்வன் வயதான பெற்றோருக்குப் பரிசில்கள் வழங்கினார். எனக்கும் பரிசு தந்தார். அங்குள்ளவர்களுக்குக் கொடுத்த அதே பரிசை எனக்கும் தருவதால் நான் புண்படவில்லை என்று அறிந்துகொண்ட பின்னரே தந்தார். எனது மிகுதிக் காலத்தை அன்புச்சோலையில் கழித்தால் எவ்வளவு நன்றாக இருக்குமென்று அப்போது நான் எனக்குள் நினைத்துக் கொண்டேன். அங்கு பணியாற்றியவர்கள் அங்குள்ள பயனாளிகளுடன் அன்பாகவும் மகிழ்வாகவும் பழகினார்கள். இதமான காலநிலையும் அடர்ந்து படர்ந்த மரநிழல்கள் கொண்ட பரந்த பிரதேசமும் ரம்மியமான சூழலை அங்கு உருவாக்கி இருந்தது.

# நிசோரில் முறையிட்டோர் (NESOHR)

எனது நான்கு வருட கால ஆழமான வன்னி அனுபவங்கள் 2005ம் ஆண்டின் முற்பகுதிகளிலே நிசோர் என்னும் மனித உரிமை அமைப்பின் செயலராக ஆரம்பித்தது. நான் வன்னியில் பங்குபற்றிய முதல் நிகழ்வு ஜூலை 2004ல் நடந்த நிசோர் திறப்பு விழாவே. நிசோரின் தலைவர் கருணரட்ணம் அடிகளார் திறப்பு விழாவுக்கு முதல் நாளன்றுதான் என்னைச் செயலர் பதவியை ஏற்குமாறு கேட்டுக் கொண்டார். நிசோரின் திறப்புவிழா சிறிய அளவில் எளிமையாக நடந்தது. தமிழரின் வழக்கமான நீண்டு தொடரும் சடங்குகளைப் போலல்லாமல் வன்னியில் சடங்குகள் விழாக்கள் எல்லாமே சுருக்கமாகத்தான் நடந்தேறின. திறப்புவிழாவைத் தொடர்ந்து உடனேயே என்னால் நிசோரில் பணியாற்ற முடியவில்லை. மார்ச் 2005ல் தான் அங்கு பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. இடைப்பட்ட காலத்தில் நான் வன்னியிலிருந்து வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. மார்ச் 2005லிருந்து ஒரு வருடத்துக்கும் மேலாக அங்கு முழுநேரமாக வேலை செய்தேன். அதன் பின் நிசோரைவிட்டுச் சமாதானப் பணியகத்தில் வேலை செய்யத் தொடங்கினேன். 2008ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் வன்னியிலுள்ள மல்லாவி என்னும் இடத்தில் வைத்து லங்கா ராணுவத்தின் கிளேமோர் தாக்குதலில் கருணரட்ணம் அடிகளார் கொல்லப்பட்டார். அதன் பின் தேவை கருதி, மீண்டும் நிசோரில் சேர்ந்து, அதன் இயக்கம் 2009ம் ஆண்டு ஜனவரியில் தடைப்படும் வரை, வேலை செய்தேன்.

நிசோரின் ஆரம்பம் இரண்டு வெவ்வேறு நடப்புகளின் விளைவாக உருவானது. 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கு முன்னரான போர்ச் சூழலில் லங்கா ராணுவத்திற்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையில் திண்டாடிய மக்களின் முறைபாடுகளைக் கேட்டு தீர்வு காண்பதற்காகத் தமிழீழமெங்கிலும் சமூகத்தில் அனுபவம் மிக்கவர்கள் கூடி தொண்டர் அமைப்புக்களாக பிரஜைகள் குழுக்களை உருவாக்கினார்கள். போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் சர்வதேச சமாதான முன்னெடுப்பாளர்கள்

மனித உரிமை அமைப்பொன்றையும் விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசத்தில் உருவாக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். முதலில் நோர்வேயின் நிதியுதவியுடன் இயங்கிய சமாதானச் செயலகத்தின் ஒரு கிளையாக இதை உருவாக்கவே விடுதலைப்புலிகள் திட்டம் போட்டார்கள். ஆனால் பிரஜைகள் குழுக்களில் தொண்டாற்றிய பலர் கருணரட்ணம் அடிகளாரின் தலைமையில் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து விடுதலைப்புலிகள் மேல் அழுத்தம் கொடுத்து சமூக அமைப்பாக நிசோரை உருவாக்கினார்கள். இவ்விரு வெவ்வேறு நடப்புக்களின் விளைவாக உருவாகிய நிசோர் விடுதலைப்புலிகளிடம் இருந்து விலகி ஓரளவு சுதந்திரத்துடன் இயங்க முடிந்தது.

கருணரட்ணம் அடிகளாரை எல்லோருக்கும் பிரபலமாக கிளிபாதர் என்றே தெரியும். அவர் ஒரு கத்தோலிக்க அருட்தந்தையாக இருந்ததால் மக்களைக் காக்கும் அருட்தந்தைக்குரிய மனப்பாங்கு நிசோரிலும் பிரதிபலித்தது. ஒரு பழைய பல்நோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் கட்டடத்திலேயே நிசோரின் அலுவலகம் அமைக்கப்பட்டிருந்தது. ஒரு சுவர் நீளத்துக்குப் பெரிய வெடிப்பு. அதை மறைத்துச் சீமெந்து பூசப்பட்டிருந்தது. அதுவும் அடிக்கடி உடைந்து மறைத்துவைக்கப்பட்டிருந்த தனது வெடிப்பை அம்பலப்படுத்தும். அக்கட்டட அமைப்பு சிறப்பாக இல்லாவிட்டாலும் அங்கு வரும் பயனாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட வரவேற்பு இதமானதாக இருந்தது.

வன்னி எங்கிலும் இருந்தும் யாழ்ப்பாணம், திருகோணமலையிலிருந்தும் கூட முறைப்பாட்டாளர்கள் வந்தார்கள். அக்காலகட்டத்தில் நிசோருக்கு வந்த பெரும்பான்மையான முறைப்பாடுகள் விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்தோரை விடுவித்துத் தரும்படி கேட்டு வந்த கோரிக்கைகளாகத்தான் இருந்தன. இவையெல்லாமே சிறுவர் போராளிகள் பற்றியது அல்ல. எனது வன்னி அனுபவத்தின் ஆரம்ப காலமாதலால் விடுதலைப்புலிகளுக்கு எதிராக வந்த முறைப்பாடுகளிலிருந்து நான் விலகியே நின்றேன். இதைக் கையாண்டவர்களில் கிளிபாதர்தான் முதன்மையான ஆள். அவர் இவற்றைக் கையாண்ட விதத்தை நான் ஆர்வத்துடன் உன்னிப்பாகக் கவனித்து வந்தேன்.

உதவியேதுமற்ற தாய்மார் தம் மகனையோ அல்லது மகளையோ அமைப்பிலிருந்து விடுவித்துத் தரும்படி கேட்டு வருவார்கள். இவர்களின் பிள்ளைகள் 18 வயது தாண்டியவர்களாகவும்

இருப்பார்கள். தமது வயதான காலத்தில் தம்மைக் கவனிக்க வேறு ஒருவரும் இல்லை என்பதையே இத்தாய்மார்கள் தம் கோரிக்கையின் முதற்காரணமாக முன் வைப்பார்கள். சில சமயங்களில் கிளிபாதர் இவர்களின் பிள்ளைகளை விடுவித்துக் கொடுப்பார். விடுவித்த பிள்ளைகளோடு பெற்றோர் கிளிபாதருக்கு நன்றி சொல்ல வரும்போது நிசோரில் எல்லோரது மனமும் இளகும். ஒரு 25 வயது பெண்ணை 2005ம் ஆண்டில் கிளிபாதர் விடுவித்துக் கொடுத்தார். அவரின் தாய்க்கு இப்பெண் மட்டும்தான் குடும்பத்திலிருந்தாள். அப்பெண் விடுதலைப்புலிகள் அமைப்பில் பல வருடங்கள் இருந்திருக்கிறாள் என்பது தெளிவாகத் தெரிந்தது. அத்தாயையும் அவர் மகளையும் சேர்த்துப் பார்க்கும்போது இவ்வளவு வறுமைக் கோட்டில் இருக்கும் அத்தாயால் இத்தகைய மிடுக்கும் தன்னம்பிக்கையும் கொண்ட பெண்ணை வளர்த்தெடுத்திருக்க முடியாது என்பது கண்கூடு. துடிப்புமிக்க அவ்விளம் பெண்ணும் தாயும் நிசோரில் இருந்து வெளியேறும் போது பேசிக்கொண்ட வார்த்தைகள் என் காதில் விழுந்தது. தான் விரைவில் மீண்டும் அமைப்புக்குப் போய்விடுவேன் என்று அப்பெண் தாய்க்குச் சொன்ன போது தாய் கோபத்துடன்;

*''உனக்கென்ன தெரியும். உன்னை விடுவிக்க நான் எத்தினை தரம் எத்தினை இடங்களில் ஏறியிறங்கியிருப்பன்.''*

இதற்குப் பதிலாக அவ்விளம் பெண்ணின் பலத்த சிரிப்புத்தான் கேட்டது. அக்காலத்தில் விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து விடுவிக்கப்பட்டவர்களில் பலர் இதை வரவேற்கத்தான் செய்தார்கள். ஆனால் இவர்களில் அதிகமானோர் விடுதலைப்புலிகளின் பரப்புரையினால் உந்தப்பட்டு அண்மைக்காலத்தில் இணைந்தவர்களாகவே இருந்தார்கள். இணைந்த பின்னர் அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட கடும் பயிற்சிகளினால் மனமுடைந்து தமது விடுவிப்பை வரவேற்கவே செய்தார்கள். ஆனால் அக்காலத்தில் இதுவே பொதுவாக நடந்தது என்றும் சொல்வதற்கில்லை. குடும்பம்–இளையோர்–விடுதலைப்புலிகள் என்ற முக்கோண இழுவைப் போராட்டம் பல தடவைகள் வன்னியில் அரங்கேறியதை நான் நேரே பார்த்திருக்கிறேன். இம்முக்கோண இழுவைப் போராட்டத்தில் அகப்பட்ட பல இளையோர்களின் குடும்பங்கள் பிரச்சினைகள் நிறைந்ததாகவே இருந்தது. மூன்று தசாப்தகால லங்கா அரசின் வன்முறைகளும் அதற்கெதிரான போராட்டமும் நடந்தேறிக் கொண்டிருந்த வன்னியில் பிரச்சினைகள் நிறைந்த குடும்பங்களுக்குப் பஞ்சமே இருக்கவில்லை.

விடுதலைப்புலிகளுக்கு எதிராக வந்த முறைப்பாடுகளைத் தீர்த்து வைக்கும் கிளிபாதரிடமிருந்த வல்லமையை நிசோரில் பணியாற்றிய நாங்கள் எல்லோருமே மதிப்புடன் நோக்கினோம். கடந்தகால போர்ச்சூழல் வேதனைகளைப் பகிர்ந்துகொண்டதால் உருவான ஒரு நீண்டகால நெருக்கமான பிணைப்புத் தமிழ்ச்செல்வனுக்கும் கிளிபாதருக்கும் இடையே இருந்தது. இந்நெருக்கமே விடுதலைப்புலிகளுக்கு எதிரான முறைப்பாடுகளைத் தீர்த்து வைக்க உதவியது போல் அப்போது எனக்குத் தோன்றியது. தீர்வுகாணாத முறைப்பாடுகளைக் கிளிபாதர் தமிழ்ச்செல்வனிடம் எடுத்துச் செல்வார். சில முறைப்பாடுகளின் தீர்வுக்கு அதிகாரத்திலிருந்த எவராவது தடையாக இருப்பார்கள். அவர்கள் அத்தீர்வை செயற்படுத்தத் தேவையில்லை என்று முடிவு செய்திருப்பார்கள். இத்தகைய சந்தர்ப்பங்களில் தமிழ்ச்செல்வனின் நேரடித் தலையீடு தேவைப்படும். கிளிபாதரால் இதைக் கொண்டுவர முடிந்தது.

கிளிபாதர் தீவிரமான சுற்றுச்சூழல் பாதுகாவலரும் கூட. அரிதான இயற்கையையும் சூழலையும் மாசுபடுத்தும் எவருக்கும் எதிராகப் போருக்குக் கிளம்பி விடுவார். கடலிலும் அதன் வளத்திலும் அவருக்குத் தீராத காதல். மணிக்கணக்கில் அதைப்பற்றிப் பேசுவார். சூழலை – கடலையும் வனங்களையும் – அனுபவிப்பதில் இன்பம் கண்டார். இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையே கப்பல் போக்குவரத்திற்காக பாலம் அமைக்க நீண்டகாலமாகத் திட்டமிடப்பட்டு வந்த சேதுசமுத்திரப் பாலம் என்ற திட்டத்தை இவர் தீவிரமாக எதிர்த்தார். இயற்கைக்கும் மனிதனுக்கும் இடையே இருக்கும் நீண்டகால உறவு பற்றிய ஆழமான புரிதலிலிருந்தே அவரின் சூழலோம்புவாதம் ஊற்றுப் பெற்றது. அழிந்து கொண்டிருக்கும் மக்களின் விவசாய முறைகள், மீன்பிடிப் பழக்கங்கள், உணவுச் சார்ந்த பழக்கங்கள் எல்லாம் எவ்வாறு இயற்கையை நிலைகுலையாது வைத்திருந்தன என்பது பற்றி அடிக்கடி பேசுவார்.

மாங்குளத்திலிருந்த அவரின் இருப்பிடம் பல்வகையான மரங்களும் செடிகளும் நிறைந்த சுவர்க்கமாக இருந்தது. இவ்விடத்திற்கு அந்நியமான சில தாவரங்களையும் அங்கு அவர் வளர்த்தார். அங்கு வருவோருக்குத் தன் தோட்டத்தைத், தாய் தன் குழந்தையைப் பெருமையுடன் காட்டுவது போல, சுற்றிக் காண்பிப்பார். மான் இனத்தைச் சேர்ந்த ஒரு சோடி பெரிய மரைகளை அவர் செல்லமாக வளர்த்தார். அவரை விட உயரமான அவை அவரைக் கண்டதும் தம் கழுத்தை நீட்டி அவரின் முகத்தருகே தம்முகத்தைக் கொண்டு செல்லும். கிளிபாதரும் அவற்றின் முகத்தில்

முத்தம் கொடுப்பார். அவற்றை அணைத்து மனிதருடன் பேசுவது போல் அவைகளுடன் பேசுவார். கிளிபாதர் ஒருபோதும் காலணிகள் போடுவதில்லை. பூமித்தாய் மேலிருந்த அவரின் காதலால் கரடுமுரடான நிலங்களில் நடக்கும்போதும்கூட காலணிகள் போட மாட்டார்.

2006ம் ஆண்டில் ஒருமுறை நானும் வேறு சிலரும் கிளிபாதரின் வாகனத்தில் யாழ்ப்பாணத்திலிருந்து கிளிநொச்சியை நோக்கி ஏ–9 பாதையில் பயணம் செய்து கொண்டிருந்தோம். பின்னால் வந்துகொண்டிருந்த ஐநா வாகனம் ஒன்று எம்மைத் தாண்டிச் செல்ல முயன்றபோது, ஐநாவுக்கு எதிரான போராட்டமாகப் பாவனை செய்து அந்த ஐநா வாகனத்தை அவர் தடுத்ததை அவ்வாகனத்திலிருந்த எல்லோரும் சுவைத்துச் சிரித்தார்கள். ஐநாவும் லங்கா அரசுடன் சேர்ந்து தமிழரை அடக்குகிறது என்ற எண்ணம் விளக்கமறிந்த தமிழ் மக்களிடையே அக்காலகட்டத்திலேயே இருந்தது. விழாக்களை ஆரவாரமாகக் கொண்டாட வேண்டுமென்ற கிளிபாதரிடமிருந்த எண்ணம் எனக்கு ஏமாற்றத்தை அளித்தது. டிசம்பர் 10ம் திகதிகளில் வரும் மனித உரிமை தினத்தைப் பெருமளவில் கொண்டாடுவதை மிகவும் விரும்பினார்.

அக்காலத்தில் நிசோருக்கு வந்த முறைப்பாடுகளில் இரண்டாவது இடத்தில் இருந்தது காணி சார்ந்தவைகளாக இருந்தன. வன்னியில் இருந்த பல குடியிருப்புக் காணிகளின் சட்டரீதியான உரிமை வலுவாக இருக்கவில்லை. நிசோருக்கு வந்த காணி சம்பந்தமான முறைப்பாடுகள் பொதுமக்கள் ஒருவருக்கும் விடுதலைப்புலி உறுப்பினர் ஒருவருக்கும் இடையேயான தகராறாக இருந்தது. இதற்கான தீர்வை நிசோரில் பெறலாம் என்று மக்கள் எதிர்பார்த்தனர். உண்மையில் காணி சம்பந்தமான முறைப்பாடுகள் நிசோரின் நிர்வாக வரையறைக்குள் இல்லை. தனது தேவாலயத்தைச் சேர்ந்த மக்களின் பிரச்சினைகள் அனைத்தையும் கேட்டுத் தீர்த்து வைக்கும் ஒரு அருட்தந்தையின் நிலையிலிருந்து ஒரு மனித உரிமை அமைப்பின் தலைவர் என்ற நிலைக்கு மாறக் கிளிபாதர் சிரமப்பட்டார். சொல்லப் போனால் நிசோரில் சில திருமணத் தம்பதிகளின் தகராறுகள் கூட தீர்த்து வைக்கப்பட்டன. 2005ம் ஆண்டில் நிசோருக்கு வருகை தந்த இளைப்பாறிய நோர்வே நாட்டு நீதிபதி, கார்சன் சிமித் என்பவர், மேற்படி செய்தியறிந்து நிசோர் மக்களுக்குப் பலதரப்பட்ட உதவிகள் செய்யும் நிறுவனமாக இருக்கிறது என்று சொல்லிவிட்டுப் போனார். வேலைத்தளத்தில் தெளிவான கட்டமைப்பை விரும்பும் எனது இயல்புக்கு எதிரான நிசோரின் இத்தகைய செயற்பாடு என்னையும் கொஞ்சம் திணறச் செய்தது.

காணி சம்பந்தமான முறைப்பாடுகளில் நிசோர் தலையிட்டதால் நிசோருக்குக் காவல்துறையுடனும், நீதிமன்றத்துடனும் கருத்து வேறுபாடு ஏற்பட்டதை வெகுகாலத்துக்கு பின்னரே நான் நடேசனிடமிருந்து தெரிந்து கொண்டேன். அக்காலம் நடேசன் காவல்துறைப் பொறுப்பாளர் பதவியிலிருந்து விலகி அரசியல்துறைப் பொறுப்பாளர் பதவி ஏற்றிருந்தார். ஒருவர் தனக்கிருந்த அதிகாரங்களை எல்லாம் திரட்டிப் பாதிக்கப் பட்டவர்களுக்கு உதவ முயற்சி செய்கிறார். மற்றவர் கொடுக்கப்பட்ட அதிகாரக் கட்டுக்கோப்புகளை உடைக்கும் செயலுக்கு எதிராக நிலைப்பாடு எடுக்கிறார். இருவருக்குமிடையில் இருந்த இக்கருத்து வேறுபாட்டால் விரும்பிய நேரத்தில் காவல்துறையின் சிறைச்சாலைகளுக்குச் சென்று பார்வையிடுவதற்குக் கிளிபாதர் கேட்ட அனுமதி அவருக்கு வழங்கப்படவில்லை என்ற விபரத்தை நடேசன் எனக்குச் சொன்னார்.

காவல்துறைக்கு எதிராகவும் சில முறைப்பாடுகள் நிசோருக்கு வந்தன. இருப்பினும் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் தொடக்க காலத்தில் இவை அதிகமில்லை. அக்காலத்தில் வந்த ஒரு முறைப்பாடு அக்கால நிலைமைக்கு எடுத்துக்காட்டாக இருந்தது. இந்த முறைப்பாடு ஒரு மாட்டுவண்டி ஓட்டப்போட்டி சம்பந்தமானது. போட்டியின் முடிவில் யார் வெற்றி பெற்றார்கள் என்பது பற்றிக் கருத்து வேறுபாடு எழுந்து இருதரப்பினரும் மோதியிருக்கிறார்கள். காவல்துறை தலையிட வேண்டியிருந்தது. காவல்துறையால் கைது செய்யப்பட்ட ஒருவரின் தாயார் தனது மகனைப் பார்க்க அனுமதி கிடைக்கவில்லை என்றும் தனது மகனைக் கொடுமைப்படுத்துகிறார்கள் என்றும் நிசோருக்கு முறைப்பாடு கொண்டு வந்தார்.

விடுதலைப்புலிகளைப் பற்றிச் செய்திகளில் வாசித்தும் ஏனைய சில தமிழர்கள் சொல்வதைக் கேட்டுமே அறிந்திருந்த எனக்கு நிசோர் ஒரு மிகப்பெரிய ஒரு பட்டறிவைத் தந்தது. கிளிபாதரின் கண்காணிப்பில் நிசோர், தமிழ் மக்களும் விடுதலைப்புலிகளும் சந்தித்துக்கொள்ளும் ஒரு இடமாக, வித்தியாசமான மக்கள் தொடர்பகமாக விளங்கியது. காணி சார்ந்த முறைப்பாடுகள் காலப்போக்கில் குறைந்து, நிசோருக்கு அதிகம் வரும் இரண்டாவது பிரச்சனையாக விடுதலைப்புலிகளின் வரி எடுக்கும் செயல்பாடு இருந்தது. ஏ-9 வீதியூடாக பாரவூர்திகளில் கொண்டுவரப்படும் வணிகப்பொருட்களுக்கு வரி எடுப்பதே இம்முறைப்பாடுகளில் அதிகமாக இருந்தன. விடுதலைப்புலிகளின் வரியைக் குறைப்பதற்காக வணிகர்கள் பொய்ப் பற்றுச் சீட்டுகளைக் காட்டி

அல்லது வேறுவிதமான ஒழிப்பு மறைப்புக்களைச் செய்து அகப்பட்டால் அவர்களின் ஒட்டுமொத்தப் பொருட்களும் பறிமுதல் செய்யப்படும். வணிகர்கள் தமது பொருட்களை மீட்டுத் தரும்படி நிசோரைத் தேடி வருவார்கள். இத்தகைய முறைப்பாடுகளும் கூட 2006ம் ஆண்டில் ஏ–9 வீதி மூடப்பட்ட பின்னர் அற்றுப்போயின. ஆக, நிசோரின் செயற்பாடுகளில் விடுதலைப்புலிகளின் ஆட்சேர்ப்புச் சார்ந்த முறைப்பாடுகளே எப்போதும் முதன்மை இடத்தை எடுத்து வந்தன. சில உதாரணங்கள் இதைச் சிறப்பாக எடுத்துக் காட்டும்.

விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்த, கணவனில்லாத ஒரு தாயின் 17 வயது மகனை, அமைப்பிலிருந்து விலத்தி, போரினால் பாதிக்கப்பட்ட சிறுவருக்காக நடத்தப்பட்டு வந்த கல்வி நிறுவனத்தில் விடுதலைப்புலிகள் இணைத்தார்கள். இதே கல்வி நிறுவனத்தில்தான் நாம் முன்னர் மக்கள் தொடர்பகத்தில் சந்தித்த யாழ்ப்பாணத்திலிருந்து வந்து பின்னர் தாயுடன் போக மறுத்த பதின்பருவப் பெண்ணையும் இணைக்கலாம் என்று அங்கிருந்த பணியாளர் யோசனை தெரிவித்தார். இப்போது இந்தத்தாய் தனது மகனை அக்கல்வி நிறுவனத்திலிருந்து விலத்தி வீட்டுக்கு அனுப்பும்படி நிசோரிடம் வந்து கேட்டார். ஆனால் அவர் மகன் வீட்டுக்குத் திரும்ப மறுத்துவிட்டார். தான் கல்வி கற்று க.பொ.த சோதனை எழுதவேண்டும் என்பது அவர் வைத்த வாதம். அவரின் தாயோ அவரை வீட்டிற்கு வந்து மின் இணைப்பு வேலை செய்யும் மாமனுக்கு உதவியாளராக இருந்து அவ்வேலையைப் பழக வேண்டும் என்று வலியுறுத்தினார். அத்தாய் பல நாட்கள் நிசோரில் வந்திருந்து நிசோரின் உபசரிப்புகளையும் ஏற்று ஒரு சிறு போராட்டமே நடத்தினார். மகனின் கல்விக்கு அவர் ஏன் எதிர்ப்புத் தெரிவிக்கிறார் என்று கேட்ட போது, விடுதலைப்புலிகள் கல்வி என்று எதைக்கருதுகிறார்கள் என்பது பற்றி தனக்கு நன்றாகவே தெரியும் என்றும், மீண்டும் போர் வந்தால் தனது மகன் போருக்குப் போவதைத் தடுப்பதற்காகவே தான் இதை எதிர்ப்பதாகவும் சொன்னார். மீண்டும் போர் தொடங்கும் சாத்தியங்கள் அரிது என்றே நான் உட்பட பலரும் எண்ணியிருந்த 2005ம் ஆண்டுக் காலப்பகுதியில் அத்தாய் போரின் சாத்தியங்களைப் பற்றி நன்றாகவே எடைபோட்டிருந்தார்.

2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தை ஒட்டிய சமாதான நடவடிக்கைகளுக்கு மனித உரிமை ஆலோசகராகச் சர்வதேச மன்னிப்புச் சபையின் முன்னாள் தலைவர் இயன் மார்டின் என்பவர் செயலாற்றினார். இவர் சில தடவைகள் வன்னிக்கு வந்து போயிருக்கிறார். 2005ம் ஆண்டில் இடம்பெற்ற அவரின் வருகையே

போர் மீண்டும் தொடங்குவதற்கு முன்னான அவரின் இறுதி வன்னி வருகையாக இருந்தது. இக்காலத்தில் விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் என்ற குற்றச்சாட்டு சமாதான நடவடிக்கைகளில் ஆதிக்கம் செலுத்தி வந்தது. இதனை மட்டுப்படுத்தும் நோக்குடன் விடுதலைப்புலிகள் ஒரு ஊடகச் சூழ்ச்சியில் இறங்கினார்கள். இயன் மார்டின் வருகையின் போது நிசோரில் வைத்து இயன் மார்டின் முன்னிலையில் பல சிறுவர் போராளிகளை பெற்றோரிடம் ஒப்படைக்கும் வேலைகள் நடைபெற்றன. யூனிசெப்பின் கிளிநொச்சி வதிவிடப் பிரதிநிதியும் நிசோருக்கு வரவழைக்கப் பட்டிருந்தார். விடுவிக்க இருக்கும் சிறுவர்கள், அவர்களின் பெற்றோர்கள், பல முக்கிய பேர்வழிகள், எப்போதும் இங்கு காணப்படும் வன்னி ஊடகங்கள் என்று நிசோர் பணியகம் நிரம்பி வழிந்தது. அம்முறை இயன் மார்டினின் வரவுக்கு வெளி ஊடகங்கள் வரவில்லை.

இயன் மார்டின், யூனிசெப் – கிளிநொச்சி பொறுப்பாளர், நிசோர் பணியாளர், மேலும் விடுதலைப்புலிகளின் சிறுவர் விடுவிப்புப் பணிசெய்பவர் ஆகியோர் முன், விடுவிக்கப்பட இருக்கும் சிறுவர் போராளிகளும் அவர்களின் பெற்றோர்களும் திராளாக அமர்ந்திருந்தார்கள். பெற்றோர்களும் சிறுவர்களும் வருகை தந்திருப்பவர்களுடன் சுதந்திரமாக உரையாட வேண்டும் என்னும் எண்ணத்துடன் சந்திப்பு ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. அப்போது பக்கத்து அறையில் பெரும் சந்தடிகள் எழவே நான் அங்கு சென்றேன். விடுவிக்கப்பட இருந்த ஒரு பதினாறு வயதுப் பெண் சில நிசோர் பணியாளர்களுடன் அங்கிருந்தாள். அப்பெண் தன் குடும்பத்துடன் போக விரும்பவில்லை என்று நிசோர் பணியாளர்கள் சொன்னார்கள். இப்போது அச்சம்பவத்தை எண்ணிப்பார்க்கும்போது அது விடுதலைப்புலிகளால் நடத்தப்பட்ட ஒரு நாடகமோ என்றும், நானும் வருகை தந்திருப்பவர்கள் போல் அதனுள் இழுக்கப்பட்டேனோ என்றும் எனக்குச் சந்தேகம் வரும். இருந்தாலும் அப்பெண் தன் குடும்பத்துடன் திரும்பிப் போக விரும்பவில்லை என்பதில் எனக்குச் சந்தேகமிருக்கவில்லை. அப்போது யாரோ அப்பெண்ணை சிறப்பு வருகையாளர்களுடன் போய்ப் பேசும் படி சொன்னார்கள். அப்பெண்ணும் அவ்வாறே செய்து இயன் மார்டினை மிகவும் சங்கடத்துக்கு உள்ளாக்கினாள். அப்பெண்ணின் பிரச்சினைக்கு யூனிசெப் பிரதிநிதிகளை பொறுப்பெடுக்குமாறு நான் கேட்டுக்கொண்டேன். அவர்களோ அப்பெண்ணுடன் சிறிதுநேரம் பேசிவிட்டு ஒன்றும் சொல்லாமல் சென்றுவிட்டார்கள். அப்பெண்ணோ வீட்டிற்குத் தன்னை அனுப்பவேண்டாம் என்று

கேட்டு அழுதபடியே இருந்தாள். அவளை வீட்டிற்கு அனுப்பினால் அவள் துஷ்பிரயோகம் செய்யப்படுவாள் என்ற சந்தேகம் எங்களில் பலருக்கு இருந்தது. அப்பெண்ணின் தந்தை அவளைப் பலவந்தமாக இழுத்துச் செல்ல முனைந்தார். அவரை நான் உட்பட பலரும் சேர்ந்து தடுத்தோம். வேறு எந்தச் சிறுவர் அமைப்பிலும் சேரமறுத்த அப்பெண் விடுதலைப்புலிகள் அரசியல்துறை மகளிர் பிரிவினருடன் தங்க வைக்கப்பட்டாள். அவள் க.பொ.த சோதனையில் சித்தி எய்தினாள் என்றும் பின்னர் விடுதலைப்புலிகளுடன் இணைந்தாள் என்றும் அறிந்தேன்.

2006ம் ஆண்டில், தனது இரண்டாவது குழந்தையுடன் நிறைமாதக் கர்ப்பிணியாக இருந்த ஒரு இளம்பெண் நிசோருக்கு வந்தாள். தனது கணவர் விடுதலைப்புலிகளின் துணைப்படையில் இருப்பதாகவும் தனது பிரசவத்திற்காக அவருக்கு விடுமுறை வேண்டித் தரும்படியும் அவ்விளம் பெண் கேட்டாள். விடுதலைப்புலிகளின் துணைப்படையில் இருப்பவர்கள் விடுதலைப்புலி உறுப்பினர்கள் அல்லர். அவர்கள் ஊதியத்திற்காகப் படையில் இணைந்தவர்கள். அப்பெண்ணின் வீட்டிற்கு அருகில் இருக்கின்ற வைத்தியசாலைக்கு மாட்டுவண்டியில் அதிகநேரம் பயணம் செய்ய வேண்டுமாதாலால் தனது கணவன் பிரசவத்திற்குத் தன்னுடன் இருக்கவேண்டும் என்று அப்பெண் கேட்டுக்கொண்டாள். அவர்கள் கேட்ட விடுமுறை மறுக்கப்பட்டதால் தான் நிசோருக்கு வந்ததாகவும் அப்பெண் சொன்னாள். அவள் கணவனுக்கு விடுமுறை கொடுக்கப்பட வேண்டும் என்று நிசோர் பரிந்துரை செய்தது. அது கிடைத்ததோ இல்லையோ என்பது எனக்குத் தெரியவில்லை.

2005ம் ஆண்டில் வந்த வேறொரு முறைப்பாடு ஒரு பதினாறு வயதுப் புலத்துப் பையனைப் பற்றியது. புலத்தில் திசையின்றிக் குழப்பமாகத் திரிந்த இப்பையனை அவனது குடும்பம் உலகம் பற்றிய ஒரு படிப்பினையாக இருக்கும் என்று கருதி வன்னியிலிருந்த விடுதலைப்புலிகளின் அனைத்துலகப் பிரிவுக்கு அனுப்பி வைத்தார்கள். அவனை விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைப்பது அவன் குடும்பத்தின் நோக்கமாக இருக்கவில்லை. ஒரு படிப்பினைக்காக மட்டுமே அவனை அங்கு அனுப்பி வைத்தார்கள். புலத்தில் கல்விகற்ற இளையோரின் சேவை விடுதலைப்புலிகளின் அனைத்துலகத் தொடர்பகத்திற்கு மிகவும் தேவைப்பட்டது. இப்பையனும் அனைத்துலகத் தொடர்பகத்திலிருந்த ஒரு விடுதலைப்புலி உறுப்பினருக்குத் தான் அமைப்பில் இணைவதாக வாக்குக் கொடுத்திருக்கிறான். 2005ம் ஆண்டில் அப்பையனின்

குடும்பம் அவனை அழைத்துச் செல்லப் புலத்திலிருந்து வந்தபோது பையனின் மனம் மாறிவிட்டது. அவன் தன் குடும்பத்துடன் புலத்துக்குத் திரும்ப விரும்பினான். அப்பையன் 18 வயதுக்கும் குறைந்தவன் ஆதலால் அவன் புலத்துக்குத் திரும்பிப்போவதில் தடை எதுவுமில்லை. ஆனால் அப்பையனைத் தடைசெய்யும் எண்ணத்தோடு அனைத்துலகத் தொடர்பகத்திலிருந்த ஒரு உறுப்பினர் அவனின் அண்ணனோடு கடும் வார்த்தைகள் பரிமாறி இருக்கிறார். இறுதியில் பையன் குடும்பத்திடம் ஒப்படைக்கப்பட்டான். தாங்கள் அனைத்துலகத் தொடர்பகத்தில் முகம் கொடுத்த கடுகடுப்பான நடத்தையைப் பற்றி முறைப்பாடு செய்வதற்குக் குடும்பத்தினர் பையனோடு நிசோருக்கு வந்தார்கள். இவ்விடயத்தைப் பிரபலமாக்கப் போவதாக அந்த அண்ணன் மிரட்டினார். இதை ஒரு சிறுவர் போராளிப் பிரச்சினையாக அவர் மாற்றப்போகிறார் என்பதை உணர்ந்து சமாதானச் செயலகப் பணியாளராக இருந்த புலித்தேவனும் நிசோருக்கு வந்து அவ்வண்ணனுடன் நயமான வார்த்தைகள் பேசி அவரின் கோபத்தைத் தணிக்க முயன்றார். இறுதியில் குடும்பம் பையனுடன் மகிழ்வாகப் புலத்துக்குத் திரும்பினாலும் அவ்வண்ணன் மட்டும் தனக்கு அனைத்துலகச் செயலகத்தில் கிடைத்த அவமரியாதையை எண்ணிப் புழுங்கிக்கொண்டே போனார். தனக்குக் கிடைத்த அவமரியாதைக்குப் பழிவாங்கலாகத் தனது தம்பியை ஒரு சிறுவர் போராளி என்று உலகத்துக்குக் காட்டுவதில் அவருக்கு எவ்விதத் தயக்கமும் இருக்கவில்லை.

மதன் என்ற வன்னிப் பையன் அவனுடைய பன்னிரண்டாவது வயதில் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைக்கப்பட்டான். பின்னர் இளம்வயதைக் கருதி அவனும் வேறு வயது குறைந்த சிறுவர்களுடன் அமைப்பிலிருந்து விலக்கப்பட்டான். அவனுடைய பதினாறு வயதில் அவன் மீண்டும் 2003ம் ஆண்டில் அமைப்பில் இணைக்கப்பட்டான். 2005ம் ஆண்டில் அவனுடைய பதினெட்டாம் வயதில் குடும்பத்தினர் நிசோருக்கு முறையிட வந்தார்கள். அப்போது மதன் பயிற்சிபெற்ற திறமையான போராளியாக விளங்கினான். அவனுடைய குடும்பம் அவனை அமைப்பிலிருந்து விடுவிக்கக்கோரி நிசோருக்கு வரவில்லை. குடும்பம் அவனைச் சந்திப்பதற்கு இரண்டு வருடங்களாகத் தடைசெய்யப்பட்டிருந்ததைப் பற்றியே அவர்கள் முறைப்பாடு செய்தார்கள். நிசோருக்கு முறைப்பாடு செய்து ஒரு வருடத்திற்குப் பின் மதன் தன் குடும்பத்திடம் சென்றான். அதன் பின்னும் சிலதடவைகள் குடும்பத்திடம் சென்று சிலநாட்கள் தங்கியிருக்கிறான். அவன் குடும்பமும் அவனின் ஆளுமை

வளர்ச்சியைக் கண்டு பெருமிதம் கொண்டது. 2006ம் ஆண்டில் மதன் ஒரு மோதலின்போது உயிரிழந்தான்.

இவை நிசோருக்கு வந்த முறைப்பாடுகளில் என் மனதில் பதிந்தவற்றில் சில. போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின்னர் 2003ம் ஆண்டில் யூனிசெப் அமைப்பு சிறுவர் போராளிகளை விடுவிப்பது பற்றிய ஒரு செயற்திட்டத்தை விடுதலைப்புலிகளுடன் கைசாத்திட்டனர். வன்னியில் இயங்கி வந்த உள்ளூர் நிறுவனமான தமிழர் புனர்வாழ்வுக் கழகம் இத்திட்டத்தின் முக்கிய பங்காளியானது. விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து சிறுவர் போராளிகளை விடுவிப்பது பற்றிய செய்திகளும் செயல்களும் அதிகரித்த ஒரு விறுவிறுப்பான காலகட்டமாக அது இருந்தது. இதற்குப் பெருந்தொகையான நிதியுதவி பெறுவது அக்காலத்தில் எளிதாக இருந்தது. சர்வதேச அரச சார்பற்ற அமைப்புக்கள் பல இதில் ஈடுபட விழைந்தன. விடுவிக்கப்பட்ட சிறுவர்களுக்கு மறுவாழ்வு அழிப்பதற்கு என்று பல சர்வதேச அரசசார்பற்ற அமைப்புக்களும் இத்திட்டத்தின் பங்காளிகள் ஆனார்கள். யூனிசெப்பின் செயற்திட்டமும் பெரும் ஆரவாரத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. இத்திட்டத்தினூடாக விடுதலைப்புலிகள் ஏறத்தாழ 150 சிறுவர் போராளிகளை விடுவித்தனர். விரைவில் இச்செயற்திட்டம் விடுவிக்கப்பட்ட சிறுவர்களுக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் ஏமாற்றமாகப் போனது. விடுதலைப்புலிகள் அமைப்பில், நல்லுணவு, வேலை, கட்டுப்பாடு, தோழமை ஆகியவற்றிற்குப் பழகிப்போன விடுவிக்கப்பட்ட இச்சிறுவர்களின் மறுவாழ்வுக்கு இச்சர்வதேச அமைப்புக்களின் செயற்பாடுகள் பெரிதாகப் பயனளிக்கவில்லை. சிறுவர்கள் வேறு வழிகளில் செல்லச் சரியாக வழிநடத்தப்படாததால் அவர்கள் மீண்டும் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைவதையே விரும்பினார்கள். பெருந்தொகையான நிதிபெற்றும் சிறுவர்களின் மறுவாழ்வுக்காக அதைச் சர்வதேச அரச சார்பற்ற அமைப்புக்கள் செலவு செய்யவில்லை என்று விடுதலைப்புலிகள் குற்றம்சாட்டி இச்செயற்திட்டத்திற்கு ஒத்துழைக்க மறுத்தனர். உண்மையில் 2007ம் ஆண்டில் இச்செயற்திட்டத்தின் நடைமுறைப்படுத்தல் பற்றிய மீளாய்வு ஒன்றை யூனிசெப் அமைப்பு வேறோர் அமைப்பைக்கொண்டு செய்தது. இச்செயற்திட்டத்தில் பங்கு பெற்ற சர்வதேச அமைப்புக்களிடையே போதிய ஒருங்கிணைப்பு இருக்கவில்லை என்றே அம்மீளாய்வு அறிக்கையில் சொல்லப்பட்டது.

விடுதலைப்புலிகளுக்கு எதிரான சிறுவர் போராளிகள் சார்ந்த குற்றச்சாட்டும் தீவிரமடைந்துகொண்டே போனது. நிசோர்

அமைப்புச் செயற்படத் தொடங்கியபோது சிறுவர்களை விடுவிப்பதற்கு விடுதலைப்புலிகளுக்கு அது மாற்று வழியாக விளங்கியது. யூனிசெப்போ 2003ம் ஆண்டுச் செயற்திட்டத்தினூடாக தான் எடுத்துக்கொண்ட பங்கைக் கைவிடவில்லை. அச்செயற்திட்டத்திற்கு மீண்டும் உயிர் கொடுக்கும்படி விடுதலைப்புலிகளுக்குக் கடும் நெருக்கடி வந்துகொண்டே இருந்தன. இச்சிறுவர் போராளிகள் தொடர்கதையில் பிற்காலத்தில் எனக்கும் ஒரு பங்கு இருந்தது. இதனால் இதைப்பற்றி மீண்டும் பின்னர் பேசுவேன்.

மனிதஉரிமைக் கல்வி என்பதும் அக்காலத்தில் மற்றுமொரு கவர்ச்சிகரமான சொற்றொடராக இருந்தது. விடுதலைப்புலிகள், காவல்துறையினர், நிசோர் பணியாளர்கள், பாடசாலைப் பிள்ளைகள், பொதுமக்கள் எல்லோருக்குமே இது மிகவும் தேவை என்பது போல இது பிரபலமாகப் பேசப்பட்டது. இதற்கும் சர்வதேச அமைப்புகளிடமிருந்து நிதிகள் கிடைக்கப்பெற்றது. இதுவும் சமாதான முயற்சிக்குப் பலமூட்டும் என்று யாரோ பணபலம் உள்ளவர்கள் எங்கோ இருந்து சிந்திப்பது போலிருந்தது. பல அரசுகள் லங்கா ராணுவத்திற்கும் மனிதஉரிமைக் கல்விக்குப் பெரும் நிதியுதவி செய்ததாக அக்காலத்திய செய்தியில் வாசித்தது எனக்கு நினைவிருக்கிறது. நான் நியூசிலாந்து நாட்டில் தமிழீழம் சார்ந்த அரசியல் வேலைகள் செய்த காலத்தில் அவுஸ்திரேலிய அரசின் வெளியுறவு அமைச்சிடமிருந்து தாமும் லங்கா ராணுவத்தின் மனித உரிமைக் கல்விக்குப் பெரும் நிதியுதவி கொடுத்ததாக 2002ம் ஆண்டில் எனக்கும் ஒரு கடிதம் வந்தது.

கியூடெக் என்னும் ஒரு கத்தோலிக்க நிறுவனம் வன்னியில் பணியாற்றிய பல பணியாளர்களுக்கு மனிதஉரிமைக் கல்வி வகுப்புக்கள் நடத்தப்போகிறது என்ற செய்தியைக் கேட்டு நிசோரில் பரபரப்பேற்பட்டது. இப்பரபரப்பு எதற்காக என்பது எனக்குப் புரியவில்லை. இருப்பினும் நிசோரில் பலர் அவ்வகுப்புக்களை நிசோர்தான் நடத்தவேண்டும் என்று நினைத்தார்கள் என்பதை என்னால் அறியமுடிந்தது. இவ்வகுப்புக்களை நடத்தும் மனிதவளம் நிசோரிடம் இருக்கவில்லை என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. உண்மையில் இவ்வகைக் கல்வியை முன்னெடுக்க தேவையான ஆதாரங்கள் வன்னியில் எந்த அமைப்பிடமும் இருக்கவில்லை. நிசோரும் கிளிபாதரின் தலைமையில் சில மனிதஉரிமை வகுப்புக்களை எடுக்கத்தான் செய்தது.

மனிதஉரிமைகள் சாசனங்களில் கூறப்படும் சீரிய குறிக்கோள்கள் பற்றிய தெளிவான விளக்கத்திற்குச் சாசனங்களில்

கூறப்பட்டவற்றை மட்டும் அறிந்திருத்தல் போதுமானதல்ல. உலகத்தில் அவை செயற்படுத்தப்படும் நடைமுறைகள் பற்றிய விளக்கமும் தேவை. மனிதஉரிமைகள் என்பது நாட்டின் சட்டங்களாலும், மனிதஉரிமைகள் ஆணைக்குழுக்களாலும், சர்வதேச மனிதஉரிமை அமைப்புக்களாலும், ஐநா அமைப்புக்களாலும் முன்னெடுக்கப்படுகிறது. இதுபற்றிய விளக்கத்தை ஆங்கில மொழியறிவு இல்லாமல் அடைவதென்பது சாத்தியமில்லை. தமிழில் இதுபற்றிய மொழியாக்கங்கள் மிகக்குறைவே. வன்னியில் சில ஐநா அமைப்புக்கள் சில ஐநா சாசனங்களின் தமிழ் மொழியாக்கங்களை விநியோகித்து இருந்தார்கள். இம்மொழியாக்கங்களின் தமிழ் நடை கரடுமுரடாக வாசிப்பதற்கு மிகக் கடினமானதாக இருந்தன. ஐநா சாசனங்களில் பெருமளவாகப் பிரயோகிக்கப்படும் சில சொற்களுக்குக்கூட தெளிவான குழப்பமில்லாத தமிழ் சொற்கள் இதுவரை இல்லை. ஆழமான வாசிப்பிற்குரிய வளங்களும் இல்லாமல் மனிதஉரிமைக் கல்வியை வன்னியில் முன்னெடுக்க முடியும் என்று நான் நம்பவில்லை. சிறுவர் போராளிகள் சார்ந்து அதிகம் நிதி செலவு செய்து அதுபற்றி வன்னியில் அதிகம் பேசிய ஐநா, சிறுவர் போராளிகள் பற்றிய ஐநா சாசனத்தின் தமிழ் மொழியாக்கத்தைக்கூட அங்கு கொடுக்கவில்லை என்று நான் அறிந்தபோது வேண்டுமென்றேதான் அதைச் செய்யாமல் விட்டார்களோ என்று சந்தேகித்தேன். ஏனெனில் சிறுவர் போராளிகளைப் பற்றி ஐநா சாசனத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதற்கும் அவர்கள் இதுபற்றி முன்னெடுத்த செயற்திட்டங்களின் தீவிரத்திற்கும் ஒற்றுமை இருக்கவில்லை.

வன்னியில் சமாதான காலத்துக்கு முன் நடந்தேறிய படுகொலைகளை ஆவணமாக்கும் நோக்கத்துடன் க.பொ.த சோதனையில் சித்தியெய்திய சில மாணவர்களைக் கொண்டு தகவல்கள் சேகரிக்கும் ஒரு திட்டத்தை நிசோரில் முன்னெடுத்தோம். இதற்காகச் சில பாடசாலைகளுக்குச் சென்று மாணவர்களுடன் பேசினோம். இதைச் சரியாகத் தொடராததால் இம்முயற்சி வெற்றி பெறவில்லை. இம்முயற்சியூடாகக் கிடைத்த ஒரு அனுபவம் பற்றி இங்கு குறிப்பிடவேண்டும். ஏனெனில் இதே விடயத்தை வேறு பல சந்தர்ப்பங்களில் என்னால் அவதானிக்கக்கூடியதாக இருந்தது. பெண்கள் பாடசாலை ஒன்றில் எமது முயற்சியின் நோக்கத்தை விளக்கும் எண்ணத்துடன் நிசோர் ஏற்கனவே தயாரித்த படுகொலை பற்றிய அறிக்கை ஒன்றின் சில பகுதிகளை வாசித்துக் காட்டினோம். அவ்வறிக்கையில் ''தலையாட்டி'' என்னும் சொற்பதம்

பாவிக்கப்பட்டிருந்தது. தமிழீழத்தில் இப்பதம் ஒரு விசேட கருத்துடன் வழக்கில் இருந்தது. லங்கா ராணுவத்தால் முகமூடி அணிந்து கொண்டுவரப்பட்டு, வரிசையில் நிற்போரில் விடுதலைப்புலிகள் சார்ந்தவர்களை அடையாளப்படுத்த தலையை மட்டும் ஆட்டுபவர் என்ற பொருள்பட தலையாட்டி எனும் சொல் வழக்கத்திலிருந்தது. விடுதலைப்புலிகளால் அவருக்கு ஆபத்து வராமல் இருக்கும் பொருட்டே அவருக்கு முகமூடி அணிவிக்கப் பட்டது. அப்பாடசாலையிலிருந்த புத்திசாலியான பெண்களுக்கு இப்பதத்தின் பொருள் தெரியவில்லை. வன்னியில் இன்னும் சில காலம் இருந்த பின்னரே இவர்களின் அறியாமை பாலினத் தொடர்புடையது என்பதை உணர்ந்துகொண்டேன். உண்மையில் ஆண் மாணவர்களுக்கு அரசியல் வட்டத்தின் நிகழ்வுகள் பற்றிய விழிப்புணர்வு அதிகமாவே இருந்தது. பெண் மாணவர்கள் ஓரளவு ஒதுங்கியே வளர்க்கப்பட்டார்கள்.

அமெரிக்கத் தூதரகம் இரு தடவைகள் நிசோருடன் தொடர்பு கொண்டது. ஒருமுறை நிசோரிடம் வந்த முறைப்பாடுகள் பற்றிய புள்ளிவிபரங்களைக் கேட்டது. ஒருமுறை கிளிபாதரை கொழும்புக்கு வந்து சந்திக்கும்படி கேட்டது. அமெரிக்கத் தூதரகத்துக்குப் புள்ளி விபரங்கள் அனுப்புவது பற்றி நிசோரில் பரபரப்பு ஏற்பட்டது. கிளிபாதர் இதில் நேரடிக் கவனம் செலுத்தினார். சிறுவர் போராளிகள் பற்றிய முறைப்பாடுகள் மிகவும் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டன. எதற்காக இப்பரபரப்பு என்பது எனக்கு அப்போது புரியவில்லை. சிறுவர் போராளி இணைப்புப் பற்றிய முறைப்பாடுகள் வரும்போது அவர்கள் விடுவிக்கப்பட்டு வந்தார்கள் என்றே நான் எண்ணினேன். அக்காலத்தில் அவ்விடுவிப்புகளுக்கு நிசோருடனும் விடுதலைப்புலிகள் முழுமையாக ஒத்துழைக்கவில்லை என்ற சந்தேகம் பிற்காலத்தில் எனக்குத் தோன்றியது.

மிகவும் வயதான ஒரு முதியவர் திருகோணமலையிலிருந்து நிசோருக்கு வந்தார். அவர் திருகோணமலையிலுள்ள தனது நிலங்களைப் பற்றிய பல ஆவணங்களைத் தன்னுடன் கொண்டு வந்திருந்தார். 1970களில் அமர்ந்த சன்சோனி கொமிசனின் ஒரு கடிதமும் அவரிடம் இருந்தது. அக்கடிதத்தில் இனக்கலவரங்களால் அவருக்கு ஏற்பட்ட இழப்புகளுக்கு இழப்பீடு கொடுக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டு இருந்தது. சன்சோனி கமிசனால் பரிந்துரைக்கப்பட்ட இழப்பீடுகள் எதுவும் தமிழருக்குக் கொடுக்கப்படவில்லை என்பது வரலாற்று உண்மை. முதல் தடவையாக மிக வயதான ஒருவரிடமிருந்து, தனக்கேற்பட்ட இழப்புக்களுக்கான நிவர்த்திக்கு வருடக்கணக்காகக் காத்திருப்பது

பற்றி நேரடியாக என்னால் கேட்க முடிந்தது. தமிழரின் நிலைபற்றிய எனது புரிதலுக்குப் புதியதொரு பரிமாணத்தை அது தந்தது.

யாழ்ப்பாணத்திலிருந்து ஒரு கிராமசேவகரின் குடும்பம் நிசோருக்கு வந்தது. அக்கிராம சேவகர் விடுதலைப்புலிகளால் கைது செய்யப்பட்டார். பின் அவரைக் காணவில்லை என்று முறைப்பாடு செய்தார்கள். விடுதலைப்புலிகளுக்கு எதிராக வந்த முறைப்பாடுகளைக் கையாளுவது கிளிபாதரின் கையில் என்பதால் அதன் பின்னணியை என்னால் முழுமையாக அறிந்துகொள்ள முடியவில்லை. அக்கிராம சேவகர் லங்கா ராணுவத்துக்கு விடுதலைப்புலிகள் சார்ந்த தகவல்களைக் கொடுத்திருக்கலாம் என்று மட்டும் ஊகிக்க முடிந்தது. அவரின் கதி என்ன ஆயிற்று என்பதும் எனக்குத் தெரியவில்லை.

தமிழீழத்தின் ஏனைய மாவட்டங்களிலும் நிசோரின் கிளைகளை அமைப்பதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஆனால் இம்முயற்சிகள் வெற்றியளிக்கவில்லை. விடுதலைப்புலிகளுக்கு எதிரான முறைப்பாடுகளைப் பதிவு செய்தால் அவை பிழையானவர்களின் கைகளில் அகப்படும் வாய்ப்புண்டு. ஏற்கனவே விடுதலைப்புலிகளை ஒரு தீயசக்தியாக படமிட்டுக் காட்டிக்கொண்டிருந்த லங்கா–உலக சக்திகளுக்கு இதுவும் மேலதிக தரவுகளாகி விடும் என்னும் சந்தேகம் எப்போதும் வன்னியில் இருந்து வந்தது.

2005ம் ஆண்டு டிசம்பர் மாதமளவிலே நிசோரை ஆரம்பித்த உறுப்பினர்களில் இருவர் லங்கா ராணுவத்தின் படைகளால் கொல்லப்பட்டு விட்டனர். ஒருவர் அம்பாறை மாவட்ட முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் சந்திரநேரு. மற்றவர் மட்டக்களப்பு நாடாளுமன்ற உறுப்பினர் ஜோஸப் பரராஜசிங்கம். இவர்கள் இருவரின் படங்களும் கிளிநொச்சியில் நிசோரின் வரவேற்பறையில் தொங்கின. அம்பாறையிலிருந்து வன்னிக்கு வந்து 2004ம் ஆண்டு டிசம்பர் ஆழிப்பேரலை அழிவின் பின்னரான மீள்கட்டுமானங்களைப் பற்றிக் தமிழ்ச்செல்வனுடன் கலந்துரையாடிவிட்டுத் திரும்பும்போது சந்திரநேரு கொல்லப்பட்டார். அப்போது அதே காரில் அவருடன் பயணம் செய்த மட்டக்களப்பு அரசியல்துறைப் பொறுப்பாளராக இருந்த கௌசல்யனும் கொல்லப்பட்டார். டிசம்பர் 2005ல் ஜோசப் பரராஜசிங்கம் கிறிஸ்துமஸ் இரவன்று மட்டக்களப்பில் ஒரு தேவாலயத்தில் வைத்துக் கொல்லப்பட்டார். பரராஜசிங்கத்தின் உடல் இறுதிமரியாதைக்காக வன்னிக்குக் கொண்டுவரப்பட்டது. ஒரு முன்மாலை நேரத்தில் அவரின் உடலைப் பொறுப்பேற்க வன்னியின்

எல்லையில் நின்றவர்களுடன் நானும் கிளிபாதருடன் நின்றேன். உடல் கிளிநொச்சியை நோக்கிய 50 கிலோமீற்றர் நீண்டபாதையில் எட்டு மணித்தியாலப் பயணத்தில் சென்றது. வழியில் பல இடங்களில் நிறுத்தப்பட்டுச் சொற்பொழிவுகளும் மலர் அஞ்சலிகளும் நடந்தன. இரவான பின் வாகனத் தொடர் மக்கள் நடமாட்டமில்லாத பகுதிகளூடாகச் சென்றபோது இடையிடையே ஒரு தனிமனித உருவம் கையில் பூக்களுடன் காத்து நிற்கும். வாகனத் தொடரும் அவ்வுருவம் அஞ்சலி செலுத்துவதற்காக நிற்கத் தவறவில்லை. இவைகள் பரராஜசிங்கம் என்னும் மனிதரைப்பற்றிச் சொற்பொழிவுகளால் சொல்லமுடியாததை ஆழமாகச் சொன்னது. இரண்டு வருடங்களின் பின் ஏப்பிரல் 2009ல் கிளிபாதரும் கிளைமோர் தாக்குதலில் கொல்லப்பட்டபோது பொங்கிய அடிமட்ட மக்களின் துயரம் மேலும் அதிகரித்தது. 2008ம் ஆண்டில் கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர்ந்து புதுக்குடியிருப்பில் ஒரு அறையில் நிசோர் இயங்கிய போது அங்கே மூவரின் படங்களும் தொங்கின.

டிசம்பர் 2005 பிறந்தவுடன் திடுமென அதிகரித்த கொலைகளும் காணாமற் போதல்களும் நிசோரின் செயல்பாட்டில் மாற்றத்தைக் கொண்டு வந்தன. கொலைகளாலும் காணாமற் போதலாலும் பாதிக்கப்பட்ட குடும்பங்களும் தமது முறைப்பாடுகளைப் பதிய முன்வந்த நிறுவனங்கள் எல்லாவற்றிற்கும் சென்று முறையிட்டார்கள். லங்கா மனிதஉரிமை ஆணைக்குழு, லங்கா பொலிஸ், செஞ்சிலுவைச் சங்கம், சமாதானக் கண்காணிப்புக் குழு இன்னும் வேறு பல மனிதஉரிமை அமைப்புக்களுக்கு எல்லாம் சென்றார்கள். யாழ்ப்பாணத்திலிருந்து நிசோருக்கும் வந்து முறையிட்டார்கள். ஏ–9 வீதி திறந்திருந்த வரை யாழ்ப்பாணக் குடும்பங்கள் நிசோருக்கு வர முடிந்தது. நிசோரும் கிடைத்த முறைப்பாடுகளை அறிக்கைகளாக தொடர்ந்து வெளியிட்டது.

யாழ் தீவகத்தை அண்டிய தீவான புங்குடு தீவில் நடந்த ஒரு பெண்மீதான பாலியல் வல்லுறவும் அப்பெண்ணின் கொலையும்தான் இவ்வாறு நிசோர் வெளியிட்ட முதல் அறிக்கை. இதைத் தொடர்ந்து கொலையும் காணாமற்போனதும் பற்றிய பல அறிக்கைகளை நிசோர் வெளியிட்டது. நேரடிச் சாட்சிகளான பாதிக்கப்பட்ட குடும்ப அங்கத்தவர்களை நேரே கண்டு பேச அப்போது முடிந்தது. லங்கா ராணுவமும் அதனுடன் இயங்கிய துணைக்குழுக்களும் எவ்வாறு இணைந்து கொலைகளையும் ஆட்கடத்தல்களையும் செய்தன என்பதை இக்குடும்ப அங்கத்தவர்கள் தெட்டத்தெளிவாக விபரித்தனர். அக்கட்டத்தில் யாழ்ப்பாணத்தில்

சர்வதேச அமைப்புக்களின் பிரசன்னம் மிகப்பெரிய அளவில் இருந்தது. பாதிக்கப்பட்ட குடும்பங்கள் இச்சர்வதேச அமைப்புக்களுக்கும் சென்று முறையிட்டனர். அப்படி இருந்தும் இக்கொலைகளும் காணாமற் போதல்களும் வெளியுலகத்தில் செய்திகளாக வரவில்லை. 2006ம் ஆண்டு நடுப்பகுதியில் ஏ–9 பாதை மூடப்பட்டபின் வன்னிப் பகுதி தனிமைப்படுத்தப்பட்டுவிட்டது. அடுத்த மூன்று வருடங்களில் சர்வதேச மட்டத்தில் பெரும் செய்திகளாகாமலே தமிழீழத்தின் ஏனைய பகுதிகளில் கொலைகளும் காணாமற் போதல்களும் அதிகபட்சமாக தொடர்ந்து நடந்தேறின.

# ஆவணமாக்கல்

புலத்துத்தமிழரில் ஒருவராக நான் நியூசிலாந்து நாட்டில் தமிழீழ அரசியல் வேலைகளில் ஈடுபட்டபோது அக்காலத்தில் தமிழீழம் பற்றிய ஆவணங்களின் பெரும் பற்றாக்குறையை உணர்ந்திருக்கிறேன். 2009ம் ஆண்டிற்குப் பின்னர் இப்போது இந்நிலை மீண்டும் திரும்பிவிட்டது. நான் நிசோரில் வேலை செய்யத் தொடங்கியதும் போரால் பாதிப்படைந்த பெரும் தொகையான தமிழ் மக்களைச் சந்திக்க முடிந்தது. அவர்களின் அனுபவங்கள் வெளியுலகத்திற்கும் புலத்துத் தமிழருக்கும் தெரியவைப்பதற்காக ஆவணமாக்கப்பட வேண்டும் என்பதை நான் தீவிரமாக உணர்ந்தேன். எழுதவேண்டும் என்ற உந்துதல் எனக்கு அதிகமாகவே இருந்தது. எழுதுவதற்கு ஏராளம் இருந்தன. நிசோரில் ஆரம்பித்த எனது ஆவணமாக்கல் பணிகள் எனது நாலு வருட வன்னிக் காலம் முழுவதுமே தொடர்ந்தது.

தங்கள் மூன்று பிள்ளைகளை ஆகஸ்ட் 1990ல் காணமல்போகக் கொடுத்த நடுத்தரவயதுத் தம்பதிகள் தமது கதையை 2005ம் ஆண்டில் நிசோருக்கு வந்து சொன்னார்கள். மனதைப் பிழியவைக்கும் அந்தப் போர்க்கால அனுபவத்தைத் தட்டில் தந்து என்னை எழுதச்சொன்னது போல் எனக்குப்பட்டது. 15 ஆண்டுகளுக்குப் பின்னும் அப்பெற்றோர் தம் பிள்ளைகள் உயிருடன் இருப்பதாக நம்பினார்கள். அவர்களைத் தேடிக்கண்டுபிடிக்க நிசோரின் உதவியை நாடினார்கள். அச்சம்பவத்தை விசாரணை செய்யும் வேலைத்திட்டத்தை ஆரம்பித்தோம். இச்சம்பவம் யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு அருகே இருந்த சிறுதீவுகளில் நடந்திருந்தது. எமது விசாரணையின் ஆரம்பத்திலேயே அச்சம்பவத்தில் காணமல்போன 70 பேரின் பெயர் பட்டியல் எமக்குக் கிடைத்தது. இவர்கள் காணாமற்போன காலகட்டத்தில் அப்பிரதேசத்திற்குப் பொறுப்பாகவிருந்த லங்கா அரச உத்தியோகஸ்த்தர் அப்பட்டியலை தயாரித்திருந்தார். அவரும் ஒரு தமிழர்தான். எமது விசாரணைகள் தொடர்ந்தபோது அப்பட்டியல் நீண்டது. இவ் வேலைத்திட்டத்திற்குக் கிளிபாதர்தான் என்னுடன் இணைந்து ஆவன செய்தார். பாதிக்கப்பட்ட குடும்பங்கள் என்னுடன்

வந்து பேசுவதற்கு யாழ்ப்பாணத்தின் புறநகர்களில் ஒன்றான நாவாந்துறையில் இருந்த அவருடைய தேவாலயத்தைச் சார்ந்த வீட்டில் ஒழுங்குகள் செய்துதந்தார். இரண்டு தடவைகள் இவ்வகைச் சந்திப்புக்கள் இடம்பெற்றன. மிகப்பழைய டச்சுத் தேவாலயத்தைச் சார்ந்த அவ்வீட்டில் கத்தோலிக்க மக்களுடன் தங்கியிருந்தது ஒரு மறக்கமுடியாத அனுபவம். பாதிக்கப்பட்ட குடும்பங்களுடன் உரையாடியதை இப்போது நினைத்தாலும் கண்கள் கலங்கும்.

2004ல் கரனுடன் சிறுவர் இல்லங்களைத் தரிசித்தபோது என்னுள் மொட்டவிழ்ந்த வளர்ச்சித் தெளிவு வன்னிக்காலம் முழுவதும் தொடர்ந்தது. இக்குடும்பங்களுடன் நடந்த உரையாடல்களும் எனது இத்தெளிவின் அம்சமே. ஒவ்வொரு குடும்பமும் தம் துயர் சூழ்ந்த அனுபவங்களைப் பகிரும்போது பழைய வேதனைகளில் மீண்டும் மூழ்கினார்கள். பலர் ஓலமிட்டு அழுதார்கள். அவர்கள் தங்கள் வேதனை நிறைந்த அனுபவங்களை ஒரு பிரபல அமைப்பைச் சார்ந்தவர்களுடன் பகிரும் போது தமது வேதனைகளுக்குத் தீர்வு தேடித்தருவார்கள் என்ற நம்பிக்கையுடன் மட்டுமே பகிர்கிறார்கள். அவர்களை மீண்டும் அவ்வேதனைகளில் தள்ளுவது நியாயமானதா? உண்மையிலேயே நாங்கள் அவர்களுக்கு உதவிதான் செய்கிறோமா? அத்தகைய அனுபவங்களை ஆவணப்படுத்துவது ஒட்டுமொத்த சமூகத்திற்கு வரலாற்று ரீதியான தேவையாக இருந்தாலும் தனிப்பட்ட – பாதிக்கப்பட்ட – குடும்பங்களுக்கு இதனால் எவ்வித நன்மையும் இருப்பதாகத் தெரியவில்லை. இத்தகைய அரிய அனுபவங்களை எனக்குத் தந்த அக்குடும்பங்களுக்கு நான் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளேன். எனது சக்தி எல்லாம் திரட்டி அவ்வறிக்கையை எழுதுவதற்குப் போட்டேன். மண்டைதீவு–அல்லைப்பிட்டி–மண்கும்பான் எனும் அண்மித்த மூன்று தீவுகளில் ஒருமாத காலத்துக்குள் இக்காணாமற் போதல்கள் இடம்பெற்றதால், அவ்வறிக்கைக்கும் இம் மூன்று தீவுகளின் பெயர்களையும் சுருக்கிப் பெயரிட்டோம்.[4]

கொல்லப்பட்ட அல்லது காணாமற்போனவர்களின் பெற்றோர், மனைவிமார், சகோதரர்கள் பலருடன் நான் வன்னியில் பலமுறை உரையாடியிருக்கிறேன். காணாமற்போனவர்கள் பெரும்பாலும் தங்கள் குடும்பங்களுக்கு வருமானம் ஈட்டி ஆதரவு கொடுத்த இளவயது ஆண்களாகவே இருப்பார்கள். இக் குடும்பங்களும் அநேகமாக வறுமைக்கோட்டில் வாழ்பவர்களாகவே இருந்தார்கள். வருமானம் கொண்டுவரும் ஒரு குடும்ப அங்கத்தவரின் இழப்பு இக்குடும்பங்களால் மிக ஆழமாக உணரப்பட்டது. பல சமயங்களில் காணாமற்போன தனி ஒருவரின் உழைப்பில் மட்டுமே

அக் குடும்பங்கள் வாழ்ந்து வந்தன. இதனால் இக்குடும்பங்கள் பொருளாதார ரீதியாகவும் மிக மோசமான நிலைக்குத் தள்ளப்பட்டனர். சிறுவர் இல்லங்களிலும் பெண்களுக்கான நல்வாழ்வு நிறுவனங்களிலும் பராமரிக்கப்பட்டு வந்தவர்களிடம் பேசும் போதும் இதையே அவதானிக்கக்கூடியதாக இருந்தது. காணாமற் போனவர்களின் குடும்பங்களின் வேதனைக்கு ஒப்பாக வேறெதுவுமில்லை என்றே சொல்லவேண்டும். தம் உறவினர் உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்பது தெரியாத நிலையில் அவர்களின் துக்கத்திற்கு ஆற்றுதலோ முடிவோ கிடைப்பதில்லை. அவர்களின் வேதனையை நானும் உணர்ந்தேன். மிகுதியிருக்கும் என் வாழ்க்கையின் காலத்தை இவர்களின் வேதனைகளை ஆவணப்படுத்துவதிலேயே கழிக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. அவர்களின் வேதனைகளை ஆற்றுவதற்கு இதைவிட வேறெந்த சக்தியும் எனக்கில்லையே! வன்னியில் எனது முக்கியப் பணியும் இதுவே என்று எனக்குத் தோன்றியது.

2004ம் ஆண்டு வடகிழக்கு புள்ளிவிவர மையம் என்ற ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. தமிழீழத்தில் ஏற்பட்ட போர்ப்பாதிப்புகள் பற்றிய புள்ளிவிபரங்களைத் திரட்டும் வேலைத்திட்டம் ஒன்றை யாழ்ப்பாணப் பல்கலைக்கழக ஆசிரியர்களின் உதவியுடன் இவ்வமைப்பு தொடங்கியது. 2004ம் ஆண்டு தமிழீழத்தைத் தாக்கிய ஆழிப் பேரலையின் காரணமாக இவ்வேலைத்திட்டத்தை முழுமையாக நிறைவேற்றமுடியாமல் போய்விட்டது. சேகரிக்கப்பட்ட தரவுகள் தமிழ் மொழியில் இரண்டு தரமான ஆவணங்களாக ஆக்கப்பட்டிருந்தன. இவற்றில் ஒன்று தமிழீழப்பகுதிகளில் உயர்ப்பாதுகாப்பு வலையங்கள் எனும் சாக்கில் லங்கா ராணுவத்தால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்த நிலங்களையும் அதிலிருந்து பலவந்தமாக வெளியேற்றப்பட்ட மக்களையும் பற்றியது. மற்றது ஏறக்குறைய ஐந்து தசாப்தங்களாக லங்கா ராணுவம் செய்த நூற்றுக்கும் மேற்பட்ட தமிழர் படுகொலைகள் பற்றியது.

அவ்விரண்டு ஆவணங்களையும் பார்த்தவுடனேயே இவையிரண்டும் ஆங்கிலத்திலும் வெளிவரவேண்டியவை என்பது எனக்குத் தெரிந்தது. இம் மொழியாக்கத்திற்குப் பாரிய மனிதவளமும் தேவைப்பட்டது. பாதுகாப்பு வலையம் பற்றியது ஒப்பீட்டளவில் குறைந்தஅளவு நேரத்தில் செய்துமுடிக்கக் கூடியதாய் இருந்தது. 2005ம் ஆண்டில் யாழ்ப்பாணத்திலிருந்த பாதுகாப்பு வலையம் பற்றிய தரவுகளை மட்டும் உள்ளடக்கி நிசோர் ஒரு அறிக்கையை[5] வெளியிட்டது. தமிழீழம் முழுவதற்குமான தரவுகளை உள்ளடக்கிய ஆவணம் 2006ம் ஆண்டில் நடைபெற்ற ஜெனீவா பேச்சுவார்த்தையின் போது சமாதானச் செயலகத்தால் சமர்ப்பிக்கப்பட்டது.

உலகத்தின் ஏனைய நாடுகளில் ''பாதுகாப்பு வலையம்'' என்பது இரகசியங்கள் பாதுகாக்கப்படவேண்டிய பிரதேசத்தைக் குறிக்கிறது. அதன் உள்ளே நுழைவோரையும் அதை விட்டு வெளியேறுவோரையும் கடும் சோதனைக்குள்ளாக்க வேண்டியதற்காக இவ்விடங்கள் இத்தகைய பாதுகாப்பு வலையங்களாகப் பிரகடனப் படுத்தப்படுகின்றன. செறிவாக மக்கள் வாழும் இடங்களில் இவை மிகவும் சிறிய இடங்களாகவே உள்ளன. மக்கள் நடமாட்டமில்லாத இடங்களிலேயே பரந்த பாதுகாப்பு வலையங்கள் உள்ளன. ஆனால் தமிழீழப் பகுதிகளிலோ செறிவாக மக்கள்வாழும் இடங்களில் மிகப்பெரிய பிரதேசங்களைப் பாதுகாப்பு வலையங்கள் என்று குறிப்பிடுகிறார்கள். அதிக இடங்களில் பொதுமக்களுக்குச் சொந்தமான பல காணிகள் பலவந்தமாகப் பறிமுதல் செய்யப்பட்டு இத்தகைய போலிப் பாதுகாப்பு வலயங்களாகப் பிரகடனப் படுத்தப்பட்டன. இவையாவும் தமிழர் பிரதேசத்தில் சிங்கள ராணுவம் தங்கி தமிழரை ஒடுக்குவதற்காகவே அமைக்கப்படுகிறது. உண்மையில் ராணுவப் பிரதேசம் என்பதே சரியானது. 2009ம் ஆண்டுக்குப் பின்னும் லங்கா அரசு இத்தகைய ராணுவப் பிரதேசங்களை தொடர்ந்து பிரகடனப்படுத்திய வண்ணம் உள்ளது. தமிழீழத்திலுள்ள இத்தகைய ராணுவப்பிரதேசங்கள் பற்றிய முழுமையான தரவுகள் இனி எப்போது வெளிவருமோ?

வடகிழக்கு புள்ளிவிபர மையம் தயாரித்த இரண்டாவது ஆவணம் 2002ம் ஆண்டு வரை நடந்தேறிய நூற்றுக்கும் மேற்பட்ட பெரியளவிலான தமிழர் படுகொலைகளைப் பற்றிய தொகுப்பு. இதை ஆங்கில மொழியாக்கம் செய்யும் பணியை நான் ஆரம்பித்தேன். 2006ம் ஆண்டு நடுப்பகுதியில் நிசோரை விட்டு வெளியேறிய பின்னரும் இப்பணியை நான் தொடர்ந்தேன். 2007ம் ஆண்டில் இது ஒரு நிசோர் அறிக்கையாக[6] வெளியிடப்பட்டது. 2008ம் ஆண்டில் நான் மீண்டும் நிசோரில் பணியாற்றத் தொடங்கி 2002ம் ஆண்டுக்குப் பின்னரான காலத்தில் நடந்த படுகொலைகளைத் தொகுத்து இன்னுமொரு சிறிய அறிக்கையாக[7] ஜூலை 2008ல் வெளியிட்டோம். அவையிரண்டினதும் தமிழ் மொழியாக்கங்கள் மேலும் பலமாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டு வெளியிடப் படாமலேயே இருந்தது. ஜனவரி 2009ல் தான் விமானக் குண்டுவீச்சுகளுக்கு மத்தியில் இது நிசோரால் வெளியிடப்பட்டது. கிளிபாதரின் இறப்புக்குப்பின் நிசோரின் ஒருங்கிணைப்பாளராக ஆர்வமுடன் பணியாற்றிய ரமணனின் விடாமுயற்சியாலேயே இது சாத்தியமானது என்று சொல்லவேண்டும். 2009 டிசம்பரில் நானும் ரமணனும் இலங்கைத் தீவைவிட்டு வெளியேறிவிட்டோம். இவ்விரண்டு படுகொலை அறிக்கைகளையும் தொகுத்து

புத்தகமாக்கும் வேலையைத் தொடங்கினோம். 2006ம் ஆண்டிலேயே உயிராபத்துக் காரணமாக இலங்கைத் தீவைவிட்டு வெளியேறிய வேறு ஒரு நிசோர் அங்கத்தவரும் எங்களுடன் இணைந்துகொண்டார். வேறு பல புலத்துத் தமிழர்கள் இத்திட்டத்துக்குப் பல உதவிகள் செய்தார்கள். டிசம்பர் 2009ல் தமிழ்நாட்டிலுள்ள மனிதம் என்னும் அமைப்பூடாக இதைத் ''தமிழினப் படுகொலைகள் – 1958–2008'' என்ற தலைப்பில் வெளியிட்டோம். மனிதம் அமைப்பின் வேண்டுகோளுக்கிணங்க 1987–1989 வரை தமிழீழத்தில் தரித்து நின்ற இந்தியப் படைகள் செய்த படுகொலைகளை இப்புத்தகத்திலிருந்து விலக்கினோம். இந்தியப்படையின் படுகொலைகளை ஒரு சிறு புத்தகமாக ஏப்பிரல் 2011ல் டெல்லி தமிழ் மாணவர் அமைப்பு வெளியிட்டது.

2002ம் ஆண்டுக்கு முன் போரால் கொல்லப்பட்டவர்கள் மற்றும் காணாமற்போனோரின் தரவுகளையும் வடகிழக்கு புள்ளிவிபர மையம் சேகரித்திருந்தது. துரதிஷ்டவசமாக இது இப்போது தொலைந்துவிட்டது. தமிழர்களின் இழப்புக்கள் பற்றி இன்றுவரை சேகரித்த வேறெந்த புள்ளிவிபரங்களும் இந்த அளவுக்கு கூட முழுமை வாய்ந்ததல்ல. 2005ம் ஆண்டில் இப்புள்ளிவிபரங்களை வரைபடங்களாகவும் அட்டவணைகளாகவும் தொகுத்து நிசோர் ஒரு அறிக்கை[8] வெளியிட்டது. முதலில் பலர் இதை வரவேற்றாலும் பின்னர் இப்புள்ளிவிபரம் புலத்துத் தமிழரிடையே கடுமையான விமர்சனத்துக்குள்ளாகியது. அவர்களின் குற்றச்சாட்டுக்குக் காரணம் இப்புள்ளிவிபரங்கள் தமிழரின் பாரிய இழப்புக்களை மிகவும் குறைத்து மதிப்பிடுகிறது என்பதேயாகும். இப்புள்ளிவிபரங்கள் முழுமையானவை அல்ல என்று நிசோரின் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தும், அப்புள்ளிவிபரங்கள் ஒரு பெரிய வேலைத்திட்டத்தினூடாக மக்களிடம் நேரே சென்று சேகரிக்கப்பட்டதாக இருந்தும் இப்புள்ளிவிபரங்கள் பற்றிய குற்றச்சாட்டுக்கள் தொடர்ந்தன. இதனால் இதுபற்றிய மேலதிக விளம்பரங்கள் தவிர்க்கப்பட்டன. இப்புள்ளிவிபரங்கள், பெயர்கள் உட்பட எல்லா விவரங்களும் அடங்கிய தொகுப்பு, டிசம்பர் 2008லேயே எனது கைக்குக் கிடைத்தது. இதையும் நிசோரின் இணையத்தில் ஏற்றுவதற்கு முயன்றும் 2009ம் ஆண்டின் போரின் உச்ச நிகழ்வுகள் இதற்கு இடம் கொடுக்கவில்லை.

பொதுமக்களின் போர் இழப்புக்கள் பற்றிய புள்ளிவிவரத்தோடு இரண்டாயிரத்திற்கும் மேலான பாதிக்கப்பட்ட மக்களின் சத்தியக் கடதாசிகளும் சேகரிக்கப்பட்டு இருந்தன. இவை சட்டத்தின் முன் சமர்ப்பிக்கும் வகையில் சேகரிக்கப்பட்டனவா என்பதில்

சந்தேகங்கள் இருந்தன. இருப்பினும் இவற்றை ஆங்கில மொழியாக்கம் செய்து மின்வடிவத்திற்கு மாற்றுவதற்கும் முயற்சிகள் செய்தோம். வளப்பற்றாக்குறையால் இதுவும் சாத்தியப்படவில்லை. இதுவும் இறுதிப்போரோடு தொலைந்துவிட்டது. மண்டைதீவு, அல்லைப்பிட்டி, மண்கும்பான் ஆகிய மூன்று தீவுகளில் 1990ல் இடம்பெற்ற காணாமற் போன சம்பவங்களைப்பற்றிய அறிக்கையை வெளியிட்ட பின், வேறு படுகொலைகள் பற்றிய அறிக்கைகளை வெளியிடுவதற்கு நாங்கள் திட்டமிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது டிசம்பர் 2005ம் வந்து சேர்ந்தது.

அதற்குப் பிறகு கடந்த காலத்தைப்பற்றி எழுதமுடியாத அளவிற்கு நிசோரின் நிகழ்காலம் மோசமானதாக மாறியது. இக்காலத்தில் லங்கா ராணுவத்தால் செய்யப்பட்ட கொலைகளையும் காணாமற்போகச் செய்தல்களையும் பற்றி முறையிட நிசோருக்கு வந்த முறைப்பாட்டாளர்களைப்பற்றி முதலில் விவரித்திருக்கிறேன். ஏழுமாதகாலம் அவ்வாறான முறைப்பாடுகள் வந்தவண்ணம் இருந்தன. அதன்பின்னர் ஏ–9 வீதி மூடப்பட்டுவிட்டது. நிகழ்கால முறைப்பாடுகளை நேரடியாக நிசோருக்கு வந்து சொல்லும் வாய்ப்பை இலங்கைத் தீவு முழுவதிலுமிருந்த தமிழர்கள் இத்துடன் இழந்துவிட்டனர். நிசோரும் கடந்தகாலச் சம்பவங்களைப் பதிவதில் மீண்டும் ஈடுபட்டது. இவ்வகையில் மூன்று படுகொலைகளை ஆராய முற்பட்டோம். இவற்றில் ஒன்று முல்லைத்தீவிலிருந்த பிரமந்தனாறு என்னும் கிராமத்தில் 1985ம் ஆண்டில் நடைபெற்ற படுகொலை. அவ்வறிக்கை[9] நிசோரால் வெளியிடப்பட்டது. கிளிநொச்சியிலுள்ள பன்னங்கண்டி என்னும் கிராமத்தில் இடம்பெற்ற படுகொலை பற்றியும் அதிகமான தரவுகள் சேகரிக்கப்பட்டன. அது அறிக்கையாக வெளியிடப்படவில்லை. அவையெல்லாம் இப்போது தொலைந்துவிட்டன. ஒதியமலை என்னும் கிராமத்தில் நடந்த படுகொலையை ஆவணப்படுத்தும் திட்டமும் தொடங்கப்பட்டது. யாழப்பாணத்திலுள்ள வல்வை என்னும் கிராமத்தில் இந்தியப்படைகள் செய்த படுகொலையைப் பற்றி புலத்துத் தமிழ் இளையோர் ஒருவர் ஒரு அறிக்கை எழுதினார். இப்படுகொலையில் பாதிக்கப்பட்ட ஒருவர் எழுதிய அறிக்கையை ஆதரமாக வைத்து இது எழுதப்பட்டது. இந்தியாவுக்கு எதிராக எதுவும் வெளியிடக்கூடாது என்று சொல்லி விடுதலைப்புலிகள் அவ்வறிக்கையை நிசோர் வெளியிடுவதை தடை செய்தார்கள். அவ்வறிக்கையும் தொலைந்து விட்டது.

மேலே குறிப்பிட்ட பிரமந்தனாறு படுகொலை பற்றிய நிசோரின் அறிக்கையில், கொல்லப்பட்ட ஒருவரின் உறவினரின்

வாக்குமூலம் கவனத்திலெடுக்கப்படவேண்டியது. தனது வாக்குமூலத்தில் லங்கா ராணுவத்துடன் நின்ற கூலிப்படை வீரரான வெள்ளையர் ஒருவரை ''மோசாட்டு'' என்று இவர் குறிப்பிட்டார். மோசாட்டு என்பது தமிழில் இஸ்ரேலின் உளவுத்துறையினரையே குறிக்கும். ஆனால் அவ் உறவினர் வேறு பொருள் கொண்டிருந்தார்.

> *''வந்தவர்களுள் ஒருவர் வெள்ளையர். நடப்பவற்றை எல்லாம் கவனமாக அவதானித்துக் கொண்டிருந்தார். அன்று எங்கள் கிராமத்திலிருந்த பலர் அவரைக் கண்டிருக்கிறார்கள். எமது கிராமத்தவர் அவரை மோசாட்டு என்று அழைத்தார்கள். அதன் அர்த்தம் அப்போது எனக்குத் தெரியவில்லை. பின்னரே அது வெளிநாட்டு வெள்ளையரைக் குறிக்கும் சொல் என்ற அறிந்து கொண்டேன்''.*

நாங்கள் பிரமந்தனாறு அறிக்கை வேலை செய்து கொண்டிருக்கும்போது, பிரித்தானிய நாட்டைச் சேர்ந்த ரிம் ஸ்மித் என்பவர் 2002ம் ஆண்டில் எழுதிய "Reluctant Mercenary"[10] என்னும் நூலைப்பற்றி கேள்விப்பட்டேன். ஒருவகையாக அப்புத்தகமும் கையில் கிட்டியது. ரிம் ஸ்மித் ஒரு உலங்குவானூர்தி ஓட்டுனர். அவரும் அவரைப்போல வேறும் பல வெள்ளையர்களும் அக்காலத்தில் லங்கா ராணுவத்துடன் சேர்ந்து வேலைசெய்ததையும் அவர்களும் லங்கா ராணுவத்தின் பாரிய படுகொலைகளுக்குத் துணைபோனதையும் அவரது நூல் விவரிக்கிறது. அவரைப் பணியில் அமர்த்திய நிறுவனம் தனக்கும் பிரித்தானிய அரசின் உளவுத்துறைக்கும் இடையே காப்பாக விளங்கியதாக அவர் குறிப்பிடுகிறார். தான் ஓட்டிய உலங்குவானூர்தியிலிருந்து சிங்கள விமானப்படை வீரர்கள், ''ஓடுபவர்கள் எல்லாம் கெட்டவர்களே'', என்று சொல்லி ஓடிக்கொண்டிருந்த பெண்களையும் சிறுவர்களையும் சுட்டு வீழ்த்தியதையும் விபரிக்கிறார். அந்நூலில் குறிப்பிடப் பட்டிருந்த விடயங்களும் பிரமந்தனாறு கிராமத்துப் பெண் மோசாட்டு என்ற குறிப்பிட்டதும் மிகவும் பொருந்தியே இருக்கிறது.

ரிம் ஸ்மித் எழுதிய இந்நூல் அவர் எழுதிப் பலவருடங்கள் சென்றும் வெளியிடப்படாமல் இருந்திருக்கிறது. 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் பின்னர்தான் இது வெளியிடப் பட்டிருக்கிறது. இதனால் இந்நூலுக்குரிய பிரபல்யம் இதற்குக் கிடைக்கவில்லை. அக்காலத்தில் தமிழர்களைக் கொல்வதற்கு லங்கா ராணுவத்திற்கு உதவியாக பிரித்தானிய அரசு கூலிப்படைகளை அனுப்பியது என்பதற்கு இதைவிடச் சிறந்த சாட்சி கிடைக்குமென்று எதிர்பார்க்க முடியாது.

*நானும் பங்கெடுத்து வெளியிட்ட அறிக்கைகளில் சில எனது ஆழ்மனதில் பதிந்தவை. அவற்றில் முதன்மையானது மேலே குறிப்பிட்ட யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு அருகிலிருந்த மூன்று தீவுகளிலிருந்து காணாமற் போனோர் பற்றிய அறிக்கை. இதைவிட, போரினால் பாதிக்கப்பட்ட மீனவர் சமூகம் பற்றிய ஓர் அறிக்கை, தமிழீழத்தில் லங்கா அரசால் திட்டமிட்டு ஏற்படுத்திய குடிப்பரம்பல் மாற்றங்கள் பற்றிய அறிக்கை, மலரவன் என்னும் போராளியின் ''போர் உலா'' (தமிழில்: விடியல் பதிப்பகம் வெளியீடு, 2011) என்னும் குறுநாவலின் ஆங்கில மொழியாக்கம், முல்லைத்தீவையும் திருகோணமலையையும் தொடுக்கும் கொக்கிளாய் கொக்குத்தொடுவாய் கருநாட்டுக்கேணி ஆகிய கிராமங்களிலிருந்து தமிழர் வெளியேற்றப்பட்டது பற்றிய அறிக்கை ஆகியனவும் என் மனதில் ஆழமாகப் பதிந்தவை. இதில் கடைசியாக குறிப்பிட்ட அறிக்கைக்காக ஜனவரி 2009 மட்டும் தொடர்ந்து வேலை செய்தோம். இது முற்றுப் பெறாமலே தொலைந்துவிட்டது.*

*இக்காலத்தில் உள்ளூர் ஊடகங்களில் மீனவர் மேல் இடம்பெறும் தாக்குதல்கள் பற்றிய செய்திகள் அடிக்கடி வரும். வன்னி மக்களிடம் சாதாரணமாகப் பேசும்போதுகூடக் கடந்த காலத்தில் கடலில் நடந்த தாக்குதல்கள், காணாமற் போதல்கள், இழந்துவிட்ட மீனவர் வாழ்க்கைமுறைகள் பற்றிய பேச்சுக்கள் வரும். மீனவர் சமூகத்திடையே விடுதலைப்புலிகள் ஆதரவு அதிகமாக இருந்ததா? லங்கா ராணுவத்திற்குக் கடற்புலிகள் மேலிருந்த பயத்தினால் தமிழ் மீனவர்கள் தாக்கப்பட்டார்களா? அல்லது தமிழரிடமிருந்த கடல் வளத்தை அவர்களிடமிருந்து பறிப்பதற்கான ஒரு திட்டமாக மீனவர் தாக்கப்பட்டார்களா? எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. இவை மூன்றுமே காரணங்களாக இருக்கலாம். மீனவர் சமூகம் அதிகமாகப் பாதிக்கப்பட்டது என்பது மட்டும் நிச்சயம். மீனவர் சமூகத்தின் இன்னல்களையும் வேதனைகளையும் கூறும் இதயத்தைப் பிளக்கும் பாடல்களும் வன்னியில் நிறைய இருந்தன. அவற்றில் ஒன்று,*

*வெள்ளி நிலா விளக்கேற்றும் நேரம்*

*கடல் வீசுகின்ற காற்றில் உப்பின் ஈரம்*

*அள்ளி வலை ஏற்றி வள்ளம் போகும்*

*மீன் அள்ளிவர நீண்டநேரம் ஆகும்*

*எங்கள் துயர் தெரியாது என்னவென்று புரியாது*

*இங்கிருந்து பாடுகின்ற எங்கள் குரல் கேட்காது*

*ஊருறங்கும் சாமத்திலே*

யாருமற்ற நேரத்திலே

காரிருட்டில் படகெடுத்துப் போவோம்

நேவி கண்டுவிட்டால் கடலில் நாங்கள் சாவோம்.

பேருமின்றி ஊருமின்றிப் பெற்றவளின் முத்தமின்றி

ஈர உடல் கரையொதுங்கும் காலை

புலி இந்த நிலை மாற்றிடுவான் நாளை

மீனவர்களின் இன்னல்களைப் பற்றிப் பரவலாக வன்னியில் பேசப்பட்டாலும் அது பற்றிய முழுமையான அறிக்கை எதுவுமிருக்கவில்லை. கரனுடன் நான் அதுபற்றிப் பேசினேன். கரனுக்கே உரிய பரபரப்புடனும் உற்சாகத்துடனும் அப்படி ஒரு அறிக்கை[11] தயாரிக்கும் நீண்ட பணியில் இறங்கிவிட்டார். முதலில் இவ்வேலை புலத்திலிருந்து வருகை தந்திருந்த ஒரு தந்தை-மகன் குழுவிடம் அளிக்கப்பட்டது. அது ஒரு தொடக்கமே. அவர்கள் நீண்ட காலம் வன்னியில் இருக்கவில்லை. அவர்களுக்குப் பின் அப்பணியை நானும் கரனும் தொடர்ந்தோம். தமிழீழத்தின் பல பகுதிகளிலிருந்து மீனவர் சங்கங்களைச் சேர்ந்தவர்கள் எம்முடன் பேசுவதற்கு வன்னிக்கு வந்தார்கள். அதை எனக்களித்த சிறப்புரிமையென்றே கருதினேன். வயதான மீனவர்கள் தாம் தொலைத்துவிட்ட வாழ்க்கை முறைகளையும் ஆழ்கடல் மீன்பிடித்தலையும் சொல்லிக் கண்கலங்கினார்கள். மீனவர்களின் நேர்காணலிலே மீண்டும் மீண்டும் ஒரு விடயம் சொல்லப்பட்டது. ஒரு காலத்தில் ஆழ்கடல் மீன்பிடித்தலில் திறமைசாலிகளாக இருந்தவர்கள் தமிழர்களே அல்லாமல் சிங்களவர்கள் அல்ல. காலப்போக்கில் கொஞ்சம் கொஞ்சமாக இந்த நிலை மாற்றமடைந்து தமிழர்களுக்கு ஆழ்கடல் மீன்பிடித்தலுக்குச் செல்ல அனுமதி மறுக்கப்பட்டுவிட்டது.

மீனவப் பெண்களும் பொருளாதாரரீதியாக அத்தொழிலில் சமபங்காற்றினார்கள். பிடித்த மீனைக் கரையில் வைத்து விற்பது, விற்பனையாகாத மீனைப் பதமிடுவது போன்றவற்றில் பெண்களின் பங்கே அதிகம். இதைவிடக் கடலிலிருந்து திரும்பும் கணவனை வரவேற்பதில் பெண்களுக்கு ஒரு பங்குண்டு. மூடியுள்ள ஒரு போத்தல் தேநீருடன் கடற்கரையில் அவர் கணவனை வரவேற்க நிற்பார். ஏற்கனவே தயாரித்து வைத்துள்ள சரக்குகளைக்கொண்டு கடற்கரையிலேயே அமைந்திருக்கும் வாடி எனும் சுவர்களில்லாத சிறு கொட்டிலில் கடலிலிருந்து கொண்டுவந்த மீன்களில் சிறந்த மீன்களைத் தெரிவு செய்து புளியாணம் என்னும் உணவைத் தயாரிப்பார். இதையெல்லாம் விவரிக்கும்போது மீனவர்களின் வாயூறும். லங்கா ராணுவம் இவற்றிற்கெல்லாம் தடை

விதித்திருந்தது. மீனவர்களின் தற்போதைய நிலையைப்பற்றி ஒரு அறிக்கை தயாரிப்பது எனக்கு ஆத்மதிருப்தியை அளிக்கம் என்று நான் நினைப்பதுண்டு.

2007ம் ஆண்டில் லங்கா அரசு விதித்த எரிபொருள் தடையால் வன்னியில் மின்சாரமும் போக்குவரத்து வசதியும் குறைந்த நிலையில், ஒவ்வொரு நாளும் பல மணிநேரங்களை எப்படிப் போக்குவதென்பது பிரச்சினை ஆகியது. சமாதானச் செயலகத்திற்கு அருகே இருந்த நூலகத்திற்கும் விடுதலைப்புலிகளின் 'அறிவமுது' பொத்தக (புத்தக) சாலைக்கும் போவது பொழுதுபோக்காயிற்று. விடுதலைப்புலிகளின் இலக்கியங்கள் பலவற்றைப் படித்தேன். 1990ம் ஆண்டில் மாவீரரான மலரவன் என்ற போராளியின் எழுத்துக்கள் என்னைக் மிகவும் கவர்ந்தன. மலரவனுக்கு இருபது வயதாகும் முன் இரண்டு பரிசில் பெற்ற குறுநாவல்களையும் இரண்டு கவிதைத் தொகுப்புக்களையும் எழுதிவிட்டு மாவீரனானார். மலரவனின் எழுத்துக்கள் சாதாரண மக்களையும் போராளிகளையுமே மையப்படுத்தி எழுதப்பட்டது. விடுதலைப்புலிகள் அமைப்பில் அங்கம் வகித்த சில வருடங்களில் ஒரு சிறு காலத்திற்கு யாழ்ப்பாணம் மாணவர் அமைப்புக்குப் பொறுப்பாளராக அவர் இருந்தார். அந்தக் காலத்தில் ''புயல் பறவை'' என்னும் குறுநாவலை எழுதினார். இக்குறு நாவலில் மையமாக பெண்ணியத்தையும் விடுதலைப்புலிகள் அமைப்புப் பெண்களையும் அவர் கையாண்டிருந்தார். இருபதே வயதான அக்காலத்திய யாழ்ப்பாண ஆண்பிள்ளை இக்கருத்துக்களை கையாண்டிருந்த விதம் என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. அவரின் ''போருலா'' என்னும் ஒரு குறிப்பிட்ட சண்டை பற்றிய குறுநாவலைப் பேப்பரும் பென்சிலும் கொண்டு ஆங்கில மொழியாக்கம் செய்தேன். சிறிதுநேரத்திற்கு மின்சாரம் வரும்போது அதைக் கணனியில் பதித்துக் கொள்வேன். ஒரு பெண் போராளி அதற்கு ஒரு முன் அட்டையும் அந்நாவலில் வரும் இடங்கள் குறித்த வரைபடமும் செய்து தந்தார். அத்துடன் இம்முயற்சி தேங்கி நின்றது. 2010ம் ஆண்டில் தமிழ்நாட்டு நண்பர் ஒருவர் அம்மொழியாக்கத்தை நாவலாக வெளியிட ''பெங்குவின் இந்தியா'' ஏற்றுள்ளதாக அறிவித்தபோது எனக்கு மிகுந்த வியப்புண்டாயிற்று.

அண்மைக் காலங்களில் தமிழீழத்தில் குடிப்பரம்பல் மாற்றங்களைப்பற்றிய கவனயீர்ப்புகள் சிறிதளவு நடந்திருக்கிறது என்று சொல்லலாம். 2007ம் ஆண்டில் லங்கா அரசு திருகோணமலையிலுள்ள சம்பூர் கிராமத்து நிலங்களைத் தமிழ் மக்களிடமிருந்து அபகரித்த பின்னர் இக்கவனயீர்ப்புகள் தொடங்கின. ஆனால் தமிழீழத்தில் ஆறு தசாப்தங்களாக திட்டமிட்ட குடிப்பரம்பல்

மாற்றங்கள் லங்கா அரசால் தொடர்ச்சியாக முன்னெடுத்து வரப்பட்டிருக்கிறது. இருந்தும் இவை ஆழமாக ஆவணமாக்கப் படவில்லை. அதற்கான தரவுகளும் கிடைப்பதரிது. வன்னியில் விபுலேந்திரன் என்பவர் அவ்வகையான ஒரு திட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார் என்று அறிந்தேன். மருத்துவக்கல்லூரியில் தனது படிப்பை இடைநிறுத்தி அவர் விடுதலைப்புலிகளுடன் இணைந்தார். லங்கா அரசு தமிழர் நிலங்களை பறித்தது தொடர்பான வரலாற்றுத் தரவுகளை ஆவணமாக்குவது அவரது வாழ்நாள் குறிக்கோளாக இருந்தது. அவரது தந்தை லங்கா அரசின் திட்டமிட்ட குடிப்பரம்பல் மாற்றங்களால் மிகவும் பாதிக்கப்பட்ட திருகோணமலையில் ஒரு முதுநிலை அரசு ஊழியராக இருந்தவர். எனவே அவருக்கு நிலங்கள் பற்றிய சில தரவுகளைச் சேகரிக்க முடிந்தது. விபுலேந்திரன் தமிழில் ஒரு நூலை எழுதிக்கொண்டிருந்தார். அவர் செய்யும் வேலையை ஆங்கிலத்தில் வெளியிட நான் ஆர்வமாக இருந்தேன். அவருடைய நூல் வெளியாகும் வரை தரவுகளை தர அவர் விரும்பாததும் நியாயமானதே. மேலும் இரண்டு வருடங்களின் பின் 2008ம் ஆண்டு முற்பகுதியில், ''தமிழீழ எல்லைகளை நோக்கி நகருவோம்'' என்ற அவரின் நூல் வெளியிடப்பட்டது. வெளியிடப்பட்ட மறுநாளே நான் அந்நூலையும் வேறு சில சிறிய அறிக்கைகளையும் கொண்டு ஒரு ஆங்கில அறிக்கையைத் தாயாரிக்கத் தொடங்கினேன். இவ்வாங்கில அறிக்கை[12] இவ்விடயம் பற்றி இருந்த ஒரு பெரிய வெற்றிடத்தை சிறிதளவாவது நிரப்பியது என்ற திருப்தி எனக்கிருக்கிறது. இருப்பினும் நான் இங்கு குறிப்பிடும் ஏனைய அறிக்கைகளை தயாரிக்கும் போதிருந்த ஆழ்ந்த திருப்தி இவ்வறிக்கைத் தயாரித்த போது எனக்குக் கிடைக்கவில்லை. ஏனெனில் இதற்காக மக்களிடம் உரையாடலோ அல்லது பெரியளவிலான ஆய்வுகளோ செய்யும் வாய்ப்பு இதில் அமையவில்லை.

2008ம் ஆண்டில் கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர முன்னரே நிசோரிடமிருந்த வளங்களை நல்ல வகையில் உபயோகிப்பதற்கு ஒரு பெரிய வேலைத்திட்டதில் இறங்குவது நல்லது என்று நானும் ரமணனும் முடிவு செய்தோம். திருகோணமலையையும் முல்லைத்தீவையும் இணைக்கும் கொக்கிளாய் கொக்குத்தொடுவான் கருநாட்டுகேணி ஆகிய மூன்று கிராமங்களிலிருந்து 1980களில் தமிழர்கள் வெளியேற்றப்பட்டதை ஆவணமாக்குவது என்று முடிவு செய்தோம். இதுபற்றிய ஆழமான அறிக்கை எதுவும் இருக்கவில்லை. பேபி சுப்ரமணியம் என்றும் பின்னர் இளங்குமரன் என்றும் அழைக்கப்படும் விடுதலைப்புலி மூத்த உறுப்பினர் ஆவணங்களை சேகரித்து வைப்பதில் பேர்போனவர் என்பது பலருக்கும் தெரிந்ததே.

அவரிடம் இக்கிராமப் பிரதேசத்தைப்பற்றிய சில பழைய நூல்கள் இருந்தன. இளங்குமரன் எமக்குத் தந்த ஒரு நூல் 1830ம் ஆண்டுகளில் பிரித்தானியாவைச் சேர்ந்த காலனிய பணியாளர் ஒருவர் அப்பிரதேசத்தைப் பற்றி எழுதியது. அதில் அப்பிரதேசத்தைப் பற்றிய வசீகரமான பல தகவல்கள் இருந்தன. இக்கிராமங்களிலிருந்து வெளியேற்றப்பட்ட மக்கள் பலர் முல்லைத்தீவுப் பகுதிகளில் வசித்து வந்தனர். அவர்களிடமும் ஞாபகங்களும், சில ஆவணங்களும் இருந்தன. எமது வேலைக்கு இம்மக்கள் முழு ஆதரவு தந்தனர். இத்தமிழ் கிராமங்கள் ஒன்றிலிருந்து வெளியேற்றப்பட்ட ஒரு விடுதலைப்புலி உறுப்பினர் இப்பிரதேசத்தின் கூகிள் வரைபடம் ஒன்றைச் செய்து தந்தார். காடு வளர்ந்த தமிழ்க் கிராமங்களையும் அதை அண்டிய நேர்த்தியான விசாலமான தெருக்கள் அமைந்த புதிய சிங்களக் கிராமங்களையும் அவ்வரைபடம் தெளிவாகக் காட்டியது. 1990களில் ஒருதடவை லங்கா ராணுவம் தமிழர்களைத் தம் கிராமத்துக்குச் சென்று பார்வையிட அனுமதித்தபோது தமது பாழடைந்த வீடுகளின் முன் நின்று அக்கிராமத்தவர் எடுத்த சில படங்களும் எமக்குக் கிடைத்தன. அங்கு சிங்களக் குடியேற்றங்கள் பெருமளவில் நடைபெற்றதற்கு முன்னும் பின்னுமான காலத்தில் அப்பிரதேசத்து வாக்காளர் பட்டியல்களையும் இளங்குமரன் எமக்குத் தந்திருந்தார். அவையும் தேர்தல் தொகுதிகள் எவ்வாறு வேண்டுமென்றே மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன என்பதைத் தெளிவாகக் காட்டியது. இவ்வறிக்கையை முழுமை செய்ய நாங்கள் மிகவும் ஆர்வத்துடன் வேலை செய்தோம். இதுவும் 2009ம் ஆண்டுத் தொடக்காலப் பகுதியிலே முடிவுபெறாமல் இருந்த நிலையில் இதற்காகச் செய்யப்பட்டவைகள் எல்லாம் தொலைந்துவிட்டன.

# வன்னி ஊடகங்கள்

நிசோரும் சமாதானச் செயலகமும் எனக்குத் தந்த அனுபவங்களை மேலும் தொடர்ந்து விவரிக்கும் முன் வன்னியில் இயங்கி வந்த ஊடகங்களைப் பற்றிய அறிவு வாசகர்களுக்கு இருப்பது பொருத்தமானது. வன்னி மக்களின் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்திருந்த சடங்குகள் பற்றி ஏற்கனவே சொல்லியிருந்தேன். வன்னி ஊடகங்களும் வன்னி வாழ்க்கையில் முக்கிய பங்கு வகித்தன. விடுதலைப்புலிகளின் ஊடகங்கள் வன்னி எங்கும் வியாபித்திருந்தன. விடுதலைப்புலிகள் நடத்திய ''ஈழநாதம்'' என்ற தினசரியும் புலிகளின் குரல் வானொலியும் நீண்டவரலாறு கொண்டவை. தனியார் தொலைபேசிகளோ, இணைய வசதியோ வேறு எந்தத் தொலைத் தொடர்புகளோ இல்லாத வன்னியில் இவ்விரண்டு ஊடகங்களும் மக்களை இறுக்கமாகப் பிணைத்தன. பொதுஇடங்களில் மக்கள் சந்திக்கும்போது இவ்விரண்டு ஊடகங்களில் வந்த செய்திகளும் அவற்றின் அலசல்களும் அதிகமாக இடம்பெறும்.

ஈழநாதம் விடுதலைப்புலிகளின் அதிகார ஏடாக அல்லாமல் ஒரு பொதுப் பத்திரிகையாகக் கருதப்பட்டாலும், அந்தப் பேப்பர் ஒருபோதும் விடுதலைப்புலிகளை விமர்சித்தது கிடையாது. அது விடுதலைப்புலிகள் ஏடாகவும், அதேநேரத்தில் மக்களிடையே பிரபலமான பத்திரிகையாகவும் இருந்தது. ஈழநாதம் ஒரு காலைத் தினசரிப் பத்திரிகை. இதன் தலைப்புச் செய்திகள் அரசியல் செய்தியாகவோ அல்லது படைத்துறைச் செய்தியாகவோ மட்டும்தான் இருக்கும். இதைத்தவிர வேறெந்த செய்தியும் தலைப்புச் செய்தியாக வந்ததில்லை. இக்காலத்தில் யாழ்ப்பாணம் கொழும்பு ஆகிய இடங்களிலிருந்தும் வேறு பத்திரிகைகள் வன்னிக்கு வந்தன. இருப்பினும் ஈழநாதமே அதிகமானோர் படிக்கும் பத்திரிகையாக இருந்தது. உள்ளூர் செய்திகளை அதிகம் சுமந்து வந்ததும் மற்ற பத்திரிகைகளைவிட மலிவாக இருந்ததுமே இதற்குக் காரணம். வன்னியில் வீடுகளுக்குப் பத்திரிகை விநியோகம் கிடையாது. மக்கள் காலையில் கடைகளின் முன் சைக்கிளை நிறுத்திப் பத்திரிகையை வாங்குவார்கள். கடையின் முன்பே வைத்து ஆவலுடன் பிந்திய (Latest)

அரசியல் அல்லது ராணுவத் தலைப்புச் செய்தியைப் படித்து விட்டே தம் வேலைகளுக்குச் செல்வார்கள்.

2006ம் ஆண்டில் போர் தீவிரமடையும் முன் தலைப்புச் செய்தி உட்பட அநேக செய்திகள் சமாதான நடவடிக்கையைப் பற்றியதாகவே இருந்தன. விடுதலைப்புலிகளுக்கும் சமாதான முன்னெடுப்பாளர்களுக்கும் இடையிலான பேச்சுவார்த்தைகளைப் பற்றியதாகவே அவை இருக்கும். மீதிச் செய்திகள் பொது இடங்களிலுள்ள வசதிகளின் பற்றாக்குறைகள், தெருக்களின் மோசமான நிலைமைகள், தன்னிச்சையாகத் திரியும் கட்டாக்கலி நாய்கள், மாடுகள் ஆகிய மிருகங்களின் தொல்லைகளைப் பற்றியதாக இருந்தன. இப் பத்திரிகையை இக்காலகட்டத்தில் படித்தால் அது மக்களின் குரல் அதிகார மையங்களான, லங்கா அரசின் உள்ளூர் அமைப்புக்கள், விடுதலைப்புலிகளின் அமைப்புகள் ஆகியவற்றுடன் பேசுவது போல இருக்கும். இத்தகைய உள்ளூர் விடயங்களைத் தவிர்த்தால் இப்பேப்பர் முழுக்க முழுக்க அரசியல்–ராணுவப் போராட்டத்தைப் பற்றியதாகவே இருந்தது. வேறெந்த சமூக விடயங்களையும் இப் பத்திரிகை பெரிதாக கையாளவில்லை. ஒரு பெரும் போரின் அழிவிலிருந்து மீண்டு சமாதான நடவடிக்கைகளை உன்னிப்பாக கவனித்து வரும் மக்களின் உள்ளங்களை அப் பத்திரிகை பிரதிபலித்தது.

ஈழநாதத்தில் போரை மையப்படுத்தும் செய்திகள் 2006ம் ஆண்டுக் காலகட்டத்தில் தொடங்கப்பட்டது. சில சந்தர்ப்பங்களில் முக்கியச் செய்திகளை தெரிவிக்க மாலைநேர விசேட பதிப்புகள் வரும். என்னுடைய நான்கு ஆண்டு வன்னி வாழ்க்கையில் ஈழநாதத்தின் மாலை பதிப்பு இரண்டுதடவைகள் வந்தன. விடுதலைப்புலிகளின் விமானம் முதல் முறை கொழும்பிலுள்ள ராணுவ அலுவலகத்தின் மேல் குண்டுகள் போட்ட அன்றும் கரும்புலிகள் அநுராதபுரம் விமானப்படைத் தளத்தைத் தாக்கி முற்றாக அழித்த அன்றும் மாலைப் பதிப்புகள் வெளியிடப்பட்டன. இவ்வெளியீடுகளை வாங்குவதற்குப் பத்திரிகை விற்கும் கடைகளில் மக்கள் கூட்டம் பொங்கி வழியும்.

வெள்ளிக்கிழமைகளில் இப்பத்திரிகையுடன் வெள்ளிநாதம் என்ற ஒரு வாராந்த இணைப்பும் வரும். வெள்ளிநாதத்தில் ஐந்து அல்லது ஆறு முழுப்பக்கக் கட்டுரைகள் இருக்கும். கட்டுரை எழுதும் படைப்பாளிகள் மிகக் குறைவாகவே இருந்ததனால் ஒரு சில படைப்பாளிகளின் வெவ்வேறு ஆக்கங்களே தொடர்ந்து வெளிவந்தன. 2008ம் ஆண்டுக்குப் பின்னர் ''உள்ளிருந்து ஒரு குரல்'' என்ற தலைப்பில் களமுனைகளில் நின்ற போராளிகளின்

எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் வர்ணிக்கும் தொடர்ச்சியான கட்டுரைகள் வெளிவந்தன. இவை மிகவும் பிரபலமானவை.

ஈழநாதத்தில் ஆண்களே அதிகமாகப் பணியாற்றனர். அதில் பெண் ஊடகவியலாளர்கள் மிகக் குறைவு. ஒரு துணிச்சலான பெண் அங்கு பணியாற்றினார். இவர் களமுனைகளில் நின்றும் அறிக்கைகள் எழுதினார். பத்திரிகையில் பிரசுரமான சில சிறந்த நிழற்படங்கள் இவரின் கைவண்ணமாக இருந்தன. ஈழநாதத்துடன் ஒப்பிடும்போது புலிகளின் குரல் வானொலியில் அதிக பெண் ஒலிபரப்பாளர்கள் இருந்தார்கள். இதற்கு வானொலியை நடத்தியவர்களும் பிரசுரிப்பதைவிட ஒலிபரப்புவதில் பெண்கள் திறமைசாலிகள் என்பதும் காரணங்களாக இருக்கலாம்.

ஈழநாதத்தைவிடப் புலிகளின் குரல் மிக அதிகமாகவே மக்களை சென்றடைந்தது. புலிகளின் குரலில் தொடர்ந்து ஒலிபரப்பான புலிப்பாடல் இசையும் இதற்குக் காரணம். இவ்வானொலியைக் கேட்போரை ஊக்குவிப்பதற்குப் புலிகளின் குரல் கேள்வி–பதில் நிகழ்ச்சியை ஒரு உத்தியாகக் கையாண்டது. இவ்வானொலியில் (Regularly) விடுதலைப் போராட்டத்தைப் பற்றிய கேள்விகள் தரப்படும். இவற்றுக்கான பதில்களை நேயர்கள் அவ்வானொலிக்குத் தபால் மூலம் அனுப்பிவைக்க வேண்டும். சரியான விடைகளை அதிகம் அனுப்பியவர்களின் பெயர்கள் வானொலியில் அறிவிக்கப்படும். இப்போட்டிகளில் மிகவும் உற்சாகமாகப் பங்கு பற்றியவர்களில் இளம் பெண் போராளிகள் அதிகம் இருந்தார்கள்.

புலிகளின் குரல் காலைச்செய்தியின் முன், ''மாற்றம்'' என்ற ஐந்து நிமிட நிகழ்ச்சி ஒன்று இக்காலத்தில் இடம்பெற்று வந்தது. 2007ம் ஆண்டில் இந்நிகழ்ச்சி ஆரம்பித்தபோது பெண்களின் முன்னேற்றம் பற்றிய பல கருத்துக்கள் இதில் இடம்பெற்றன. வன்னியில் போர் தீவிரமடையத் தொடங்கிய பின் இந்நிகழ்ச்சியும் போரை ஆதரிக்கவேண்டியதைப் பற்றியே பேசியது. புலிகளின் குரலில் பல சுவையான நிகழ்ச்சிகளும் இடம்பெற்றன. இதில் ஒலிபரப்பான 'பாதை' என்ற தொடர் நாடகம் மக்கள், போராளிகள், இளையோர், முதியோர் என்ற பாகுபாடின்றி அனைவரும் விரும்பிக் கேட்கும் மிகப் பிரபலமடைந்த நிகழ்ச்சியாக இருந்தது. புலத்துத் தமிழரையும் இவ்வானொலி இணையத்தினூடாகச் சென்றடைந்தது.

புலிகளின் குரலைப்பற்றிச் சொல்லும்போது அதில் முதன்மை ஊடகவியலாளராக இருந்த இறைவனைப் பற்றிச் சொல்லாமல் இருக்கமுடியாது. புலிகளின் குரல் வானொலிக்குள் இவர் ஒரு தனி

நிறுவனமாகவே இருந்து மக்களைக் கவர்ந்த பல நிகழ்ச்சிகள் நடத்தினார். வயதான ஆண்கள் பலர் இவரின் நிகழ்ச்சிகளைத் தவறாமல் கேட்பார்கள். ''நாளிதழ் நாளி'' என்ற இலங்கைத்தீவின் தினசரிகளைத் தொகுத்து வழங்கும் விமர்சன நிகழ்ச்சியிலும் இவர் இருந்தார். ஒவ்வொரு நாளும் அன்றைய செய்திகளைத் தொகுத்து வேறு ஒரு நிகழ்ச்சியூடாகவும் வழங்கினார். போரின் இறுதியில் இவருக்கு என்னவாயிற்று என்பது இன்றுவரை தெரியவில்லை.

''தமிழ்த் தேசியத் தொலைக்காட்சி'' என்ற தொலைக்காட்சிச் சேவையும் 2005ம் ஆண்டு தொடங்கப்பட்டது. காணொளி படம்பிடிக்கும் ஒரு பிரிவு விடுதலைப்புலிகள் அமைப்பில் எப்போதும் இருந்து வந்தது. பல போராளிகள் காணொளிப் படப்பிடிப்பிற்கும் கணனியில் போட்டுத் திருத்தம் செய்வதற்கும் பயிற்றுவிக்கப்பட்டிருந்தார்கள். பலர் இதில் மிகத் திறமைசாலிகளாக இருந்தார்கள். களமுனைப் படப்பிடிப்பிற்கும் விடுதலைப்புலிகள் பேர்போனவர்கள். பல மாவீரர்கள் களமுனைப் படப்படிப்பின் போது உயிரிழந்தார்கள். ஒளிவீச்சு என்னும் காணொளித் தொகுப்பு மாதாமாதம் புலத்துத் தமிழருக்காகத் தயாரிக்கப்பட்டு வந்தது. போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் இதைக் கைவிட்டு தொலைக்காட்சிச் சேவையையே நேரடியாக ஒலிபரப்ப முடிந்தது. தேசியத் தொலைக்காட்சி தொடங்குவதற்கு முன்னும் விடுதலைப்புலிகளின் அனைத்துலகப் பிரிவு காணொளிகளைத் தயாரித்து தமிழரின் தொலைக்காட்சிச் சேவைகளில் ஒலிபரப்ப அனுப்பியது. தேசியத் தொலைக்காட்சிச் சேவை புலத்துத் தமிழருக்கு மட்டுமின்றி வன்னி மக்களுக்கும் கிடைத்தது. எத்தனையோ பிரிவுகள் ஒன்றோடொன்று ஒருங்கிணைக்கப்படாமல் பல வளங்களைச் செலவு செய்து காணொளி நிகழ்வுகள் தயாரிக்கிறார்கள் என்று அறிந்தபோது எனக்குப் பிரமிப்பாக இருந்தது. பயிற்றுவிக்கப்பட்ட இப்போராளிகளுக்குப் படம் பிடித்துக் காணொளி நிகழ்வுகள் தயாரிக்கும் சந்தர்ப்பத்தைக் கைவிட மனமில்லைப் போலிருந்தது.

தேசியத் தொலைக்காட்சிச் சேவையால் பாதிப்படைந்தது ஒளிவீச்சுத் தொகுப்பு மட்டுமல்ல. பொதுஇடங்களில் தொலைக்காட்சிப் பெட்டிகள் வைக்கப்பட்டு மக்கள் இரவில் அதன்முன் பார்ப்பதற்குக் கூடினார்கள். இதனால் தெருக்கூத்துக்களும் இதன் பின் நிகழவில்லை. தேசியத் தொலைக்காட்சிச் சேவை இரவில் நான்கு மணித்தியாலங்களே ஒலிபரப்பு செய்தது. அதில் வந்த நிகழ்ச்சிகள் தரமானதாகவே இருந்தன. இருப்பினும் நிகழ்வுகளுக்கிடையில் வரும் இடைவேளைகள் நீண்டதாக இருக்கும். இந்நேரத்தில் போர் சார்ந்த இசைக்காணொளிகளே அந்த

இடைவெளிகளை நிரப்பும். தேசியத் தொலைக்காட்சியில் வந்த சில நிகழ்ச்சிகள் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. இவற்றில் வயதான ஒரு பெண் போராளி நடித்த அரசியல் நையாண்டிகள் பிரபலமானது. 2006ம் ஆண்டில் தமிழ்ச்செல்வனின் தூண்டுதலால் தேசியத் தொலைக்காட்சியில் ஆங்கிலச் செய்திச் சேவை ஆரம்பிக்கப்பட்டது. இச்சேவை பதினைந்து நிமிட செய்தி ஒலிபரப்புடன் நின்றுவிடும். பல்துறைகளில் செயல்திறம் மிக்க ஒருவரான 'இசைப்பிரியா' என்பவர் தேசியத் தொலைக்காட்சியில் பணிபுரிந்தார். அவர் முள்ளி வாய்க்கால் போர் முடிவின்பொழுது லங்கா ராணுவத்தால் பாலியல் வல்லுறவுக்குள்ளாக்கி கொல்லப்பட்டார். அவர் வன்புணர்வின் பின் கொலை செய்யப்பட்ட காணொளிப் படங்கள் நீண்டகாலத்தின் பின் உலகம் எங்கும் வெளியிடப்பட்டது.

ஈழநாதம், புலிகளின் குரல், தேசியத் தொலைக்காட்சி மூன்றும் வன்னி மக்களை விடுதலைப்புலிகள் வட்டத்திற்குள் இழுத்தன. இதற்காக இந்த அளவிற்கு வளங்கள் செலவிடப்பட்டிருக்க வேண்டியதில்லை. மக்கள் ஏற்கனவே விடுதலைப்புலிகளுடன் அவர்களின் ஆதரவாளர்களாகவே இருந்தார்கள். தேசியத் தொலைக்காட்சி வேறு ஒரு நோக்கைக் கொண்டிருந்தது. ஒரு தேசத்தினது தொலைக்காட்சிச் சேவை மக்களுக்குத் தமது தேசம் என்ற உரிமையையும் உணர்வையும் பெருமையுடன் ஊட்டியது. ஒரு தேசியம் ஒரு நாடாகும் மாற்றத்தின் ஒரு படியாக அது இருந்தது. அதே நேரத்தில் ஒளிவீச்சுத் தொகுப்பும் தெருக்கூத்தும் நிரப்பியிருந்த இடத்தை இது புதிய தொழில்நுட்பத்துடன் நிரப்பியது. 'புலிகளின் குரலில்' சமூகப் பார்வையும், 'ஈழநாதத்தில்' அரசியல் பார்வையும் 'தேசியத் தொலைக்காட்சியில்' போர் சார்ந்த பார்வையும் அதிகமாக இருந்தன என்றே சொல்லலாம். தேசியத் தொலைக்காட்சியின் பிறப்போடு போரின் சாத்தியங்களும் சேர்ந்து வளர்ந்தது இதற்குக் காரணமாக இருக்கலாம்.

காலப்போக்கில் இம்மூன்று ஊடகங்களும் லங்கா அரசின் பல விதமான இடையூறுகளுக்கு உள்ளாயின. ஈழநாதம் பத்திரிகை வெளியிடுவதற்குத் தேவையான மை (Printing Ink) கிடைப்பதை லங்கா ராணுவம் தடை செய்தது. தேசியத் தெலைக்காட்சியின் செயற்கோள் வசதிகளை அதன் அமெரிக்கச் சேவையாளர்கள் நிறுத்தினார்கள். இதனால் புலத்துத் தமிழருக்கு இச்சேவையை ஒளிபரப்ப முடியாமல் போயிற்று. இருந்தும் இத்தொலைக்காட்சிச் சேவை தொடர்ந்து ஒளிபரப்புவதில் குறிப்பிடத்தக்க வெற்றியைக் கண்டது. புலிகளின் குரல் ஒலிபரப்புக் கோபுரம் இரண்டு தடவைகள் லங்கா குண்டு விமானங்களால் தாக்கி அழிக்கப்பட்டன. 'புலிகளின் குரல்'

தலைமைச் செயலகம் 2007ம் ஆண்டு மாவீரர் நாளன்று விமானக் குண்டுகளால் தாக்கி அழிக்கப்பட்டது. அன்று பல புலிகளின் குரல் பணியாளர்களும் கொல்லப்பட்டார்கள். இத்தாக்குதல்களின் பின்னரும் புலிகளின் குரல் தடைப்படாமல் தொடர்ந்து இறுதிவரை ஒலிபரப்பியது.

வன்னியிலுள்ள மக்களுக்கு விடுதலைப்புலிகளின் ஊடகங்கள் தான் செய்திகளுக்கு முதன்மையான மூலமாக இருந்தன. இதுவரை விபரித்த மூன்று ஊடகங்களை விட இன்னும் பல சஞ்சிகைகளும் இருந்தன. ''விடுதலைப்புலிகள்'' என்ற இதழ் விடுதலைப்புலிகளின் அதிகார ஏடாகக் கருதப்பட்டது. ''சுதந்திரப் பறவைகள்'' விடுதலைப்புலிகள் மகளிர் அணியின் அதிகார ஏடாகக் கருதப்பட்டது. இதைவிட ''வெளிச்சம்'' என்னும் இதழ் மக்களின் போர் அனுபவங்களைக் கொண்டதாக வெளிவந்தது. வெளிச்சத்தின் இதழ்களில் பல தசாப்தங்களாக நிகழ்ந்த மக்களின் போர் அனுபவங்கள் பதியப்பட்டிருந்தன. ஒருமுறை பல வெளிச்சம் இதழ்கள் அடங்கிய தொகுப்பு ஒன்று என் கைக்கு வந்தது. அதிலிருந்து தமிழருக்கெதிராக முன்னர் நடந்த பல கொடூரங்களைப்பற்றி அறிய முடிந்தது. கொடூரங்களைப் படம்பிடிக்கும் சில தெளிவான ஓவியங்களும் அதிலிருந்தன. அலை என்னும் ஒரு சிறிய வெளியீடும் போராளிகளுக்காக வெளிவந்தது.

இக்காலத்தில் பெருகி வந்த ஊடகங்களின் தேவைகளை நிரப்புவதற்குத் தரமான ஊடகவியலாளர்கள் பலர் தேவைப்பட்டனர். இக்கலையைப் படிப்பதும் ஊக்கப்படுத்தப்பட்டது. ஒரு ஊடகக் கல்லூரியும் தொடங்கப்பட்டது. ஆனால் எழுத்தாளர் பற்றாக்குறை கடுமையாகவே இருந்தது. ஆள் பற்றாக்குறை இருந்தும் குறைந்த வளங்களைக் கொண்டு வன்னி ஊடகங்கள் திறம்படச் செயற்பட்டன. வழமையாக எழுதும் சில எழுத்தாளர்கள் நிறைய எழுதுவதற்கு வற்புறுத்தப்பட்டார்கள். இவர்களும் கடும் உழைப்பால் தொடர்ந்து எழுதினார்கள். எனக்கும் எழுதும்படி வேண்டுதல்கள் வரும். நான் ஒருசிறு அளவுதான் வன்னி ஊடகங்களில் எழுதியிருப்பேன். இருந்தும் இதனால் எனது தமிழ் எழுத்து வல்லமையும் தமிழ்த் தட்டச்சு செய்யும் வல்லமையும் பல மடங்கு பெருகியது.

வன்னி ஊடகங்களில் ''சாதிக் கொடுமை'' பற்றிய எதுவும் நானிருந்த காலத்தில் வரவில்லை. இது ஒரு அழிந்துபோன சமூகக்கொடுமை போலவே ஊடகங்களின் பார்வை இருந்தது. இதுபற்றி பெரிதுபடுத்திப் பேசுவது பின்னோக்கிய செயல்போலவே பார்க்கப்பட்டது. குறிப்பாக பல முதுநிலை விடுதலைப்புலி உறுப்பினர்களும் இளநிலை உறுப்பினர்களும் பல்வேறு சாதிகளைச்

சேர்ந்தவர்களாக இருந்தார்கள். விடுதலைப்புலிகள் இயக்கத்தில் பேசிச் செய்யும் திருமணங்களை விடக் காதல் திருமணங்களே அதிகம் இடம்பெற்றன. இத்திருமணங்களும் சாதியை ஒரு பொருட்டாகக் கணக்கிலெடுக்காமலே நடந்தன. பரந்த வன்னிச் சமூகத்திலும் சாதிக் கருத்துக்கள் அடியோடு அழிக்கப்படாவிட்டாலும் அது குறைந்து வந்தன.

நான் நேரே கண்ட ஒரு சம்பவம் இவ்விடயத்தை தீர்க்கமாக எனக்கு வெளிப்படுத்தியது. வன்னியில் எனக்குச் சொந்தமாகப் போக்குவரத்து வசதி இருக்கவில்லை. ஒரு சிறிதுகாலத்துக்கு ஸ்கூட்டர் பழகி ஓட்டினேன். ஆனால் வன்னியின் ரோட்டுகளில் ஸ்கூட்டரை கையாள்வது கடினமாக இருந்ததால் இதை நிறுத்தி விட்டேன். எனது போக்குவரத்துத் தேவைகளை சமாதானச் செயலகத்தின் வாகனத்திலோ அல்லது போராளிகளின் ஈருருளிகளின் பின்னிருந்தோ தான் நிவர்த்தி செய்து வந்தேன். இதனால் சமாதானச் செயலகத்தின் வாகன ஓட்டுனர்கள் எனக்கு நன்றாகப் பரிச்சயம் ஆனார்கள். இவர்கள் எல்லோரும் விடுதலைப்புலிகள் ஆதரவாளர் குடும்பங்களிலிருந்து வந்த புத்திசாலிகளான பொதுமக்களாகவே இருந்தார்கள். இவர்களுடன் வாகனத்தில் பிரயாணம் செய்யும் போது உரையாடுவது வன்னியைப் பற்றி அறிவதற்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இவர்கள் எச்சாதியினர் என்று சிந்திக்கவே எனக்குத் தோன்றியதில்லை. 2005ம் ஆண்டு தொடக்க காலத்தில் ஏ–9 வீதி திறந்திருந்தது. அப்போது சிலதடவைகள் சமாதானச் செயலகத்தின் வாகனத்தில் யாழ்ப்பாணம் போய் வந்திருக்கிறேன். நான் சொல்ல வரும் சம்பவம் ஒருமுறை சமாதானச் செயலக வாகனம் என்னை யாழ்ப்பாணத்திலிருந்து வன்னிக்குக் கூட்டிச்செல்ல வந்தபோது நடந்தது. வாகனம் யாழ்ப்பாணத்திலிருந்த எனது நண்பரின் வீட்டுக்கு வந்தபோது நான் போவதற்கு ஆயத்தமாகியிருக்கவில்லை. சிறிது நேரம் வீட்டினுள் வந்து காத்திருக்கும்படி ஓட்டுனரைக் கேட்டேன். அவர் அதை மறுத்து வாகனத்திலேயே காத்திருக்க விரும்பியதையும் அவர் மறுக்கும்போது அவருடைய உடல்மொழியையும் அவதானித்த எனக்கு அவருடைய தயக்கத்திற்கான காரணம் புரிந்தது. சாதியைக் கருதி அவ்வீட்டில் உள்ளவர்கள் அவர் உள்ளே வருவதை விரும்ப மாட்டார்கள் என்று அவர் எண்ணினார் போலும். அவர்களுடன் தான் சமமாக பழகுவது சரியானதல்ல என்று அவர் எண்ணியதும் அதற்காக அவர் மறுத்ததும் சாதிப்பழக்க வழக்கங்களுடன் பின்னிய நடைமுறைகள். வன்னியில் மறந்துவிட்ட தனது சாதியைப்பற்றி யாழ்ப்பாணத்தில் நினைக்க அவர் நிர்ப்பந்திக்கப்படுகிறார் என்பது அப்போதுதான் எனக்குப் புரிந்தது. இக்காரணத்தால் வன்னியில்

இவ்விடயம் பேசப்படாமல் இருந்தது ஆச்சரியப்படுவதற்கில்லை. விடுதலைப்புலிகள் அமைப்பில் சாதி எண்ணங்கள் இல்லாதிருந்தது புத்துணர்வு கொடுப்பதாயிருந்தது. விடுதலைப்புலிகள் தமிழீழம் பெற்றுத்தராவிட்டாலும் அவர்கள் அழிக்கப்படாமல் இருந்திருந்தால் அவர்களின் இச்சாதனையே ஒரு சமூக ஒளிவிளக்காக மிளிர்ந்திருக்கும்.

வெளி ஊடகவியலாளர்கள் வன்னிக்கு வருவதையும் லங்கா அரசு கடுமையாகக் கட்டுப்படுத்தி வைத்திருந்தது. விடுதலைப்புலிகளைக் தொடர்ந்து கடுமையாக விமர்சிக்கும் ஊடகவியலாளர்களை விடுதலைப்புலிகளும் அங்கு அனுமதித்து இருக்கமாட்டார்கள். ஆகையால் புலத்துத் தமிழரின் இணைய ஊடகங்கள் வழியாகவும் வன்னியில் சுதந்திரமாக செயல்பட்டு வந்த ஐநா அமைப்புக்களினதும் மற்றைய சர்வதேச அமைப்புக்களினதும் அறிக்கைகள் வழியாகவும் வன்னிச் செய்திகள் வெளியுலகத்தைச் சென்றடைந்தன. புலத்துத் தமிழரின் ஊடகங்கள் அனைத்துலக ரீதியில் விடுதலைப்புலிகள் ஆதரவுத் தளங்கள் என்றே எப்போதும் கணிக்கப்பட்டன. இதனால் அவற்றில் வரும் செய்திகளுக்கு உரிய பெறுமானம் வழங்கப்படுவதில்லை. இத்தகைய தடைகளால் போர்நிறுத்தக் காலத்திலும்கூட வெளியுலகம் வன்னி பற்றிய ஓர் இருட்டடிப்பிலேயே தொடர்ந்து இருந்தது.

# சமாதான முன்னெடுப்பாளர்

எனது நான்கு வருட வன்னி வாழ்க்கை மார்ச் 2005ல் தொடங்கியபோது சமாதான நடவடிக்கைகள் ஓய்ந்து போயிருந்தன. கொழும்பில் அப்போது ஆட்சி செய்தவர்கள் கடும்போக்காளர்கள். போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்ட லங்கா பிரதமரின் கட்சி 2004ம் ஆண்டு நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் தோல்வியடைந்து விட்டது. சமாதான நடவடிக்கைகளுக்கு உயிரூட்ட அனைத்துலக சமூகத்தின் பெருமுயற்சி தொடர்ந்துகொண்டிருந்தது. சுனாமி மீள்கட்டுமான வேலைகளில் ஈடுபடுவதற்கென்று பல சர்வதேச நிறுவனங்கள் வன்னியில் முளைத்த வண்ணம் இருந்தன. ஆய்வாளர்களுக்கும் வன்னிமேலிருந்த ஈர்ப்புத் தொடர்ந்தது. இதனால் பல தரப்பினரும் வன்னிக்குத் தொடர்ச்சியாக வந்து கொண்டிருந்தனர். இவர்களில் அதிகமானோர் மேற்குலகப் பிரதிநிதிகள். வேறு சில இடங்களிலிருந்தும் ஒரு சிலர் வந்தனர். லங்கா அரசின் அதிகாரப்பூர்வப் பிரதிநிதிகள் ஒருமுறையேனும் வன்னிக்கு வரவில்லை. அவர்களுடனான பேச்சுவார்த்தைகள் எல்லாம் இலங்கைத் தீவுக்கு வெளியே வேற்றுநாட்டு நகரங்களிலேயே இடம்பெற்றன. இருப்பினும் சில சிங்களப் பிரதிநிதிகளும் வன்னிக்கு வரவே செய்தார்கள்.

விடுதலைப்புலிகளும் மனித உரிமையை மதிக்கிறார்கள் என்பது பலருக்கும் ஆர்வத்தைத் தூண்டியதால் வன்னிக்கு வருகை தந்தவர்கள் நிசோருக்கும் வரத்தவறுவதில்லை. இதனால் நிசோரில் இவர்களைச் சந்திப்பதிலும் சந்திப்புகளுக்கு ஏற்பாடுகள் செய்வதிலும் எமது நேரம் அதிகம் செலவழிந்தது. நிசோரில் நான் முழுநேரப் பணிசெய்தது ஒரு வருடமே ஆனாலும், தொடர்ச்சியாக வந்தோரில் பலரை சந்திக்கவேண்டி ஏற்பட்டது. சிலசமயங்களில் இச்சந்திப்புகள் கிளிபாதருடன் சேர்ந்ததாக இருக்கும். பல சந்திப்புகளுக்குக் கிளிபாதரால் வரமுடியாமலிருந்தது. ஏனெனில் அக்காலத்தில் அவர் யாழ்ப்பாணத்திலுள்ள நாவாந்துறை தேவாலயத்தின் அருட்தந்தையாகவும் இருந்தார்.

இச்சந்திப்புக்களால் என்ன நன்மைகள் உண்டாயிற்று என்று எனக்குத் தெரியவில்லை. ஆய்வாளர்கள் தம் ஆய்வறிக்கைகளில் நிசோரில் கேட்டவைகள் பற்றிச் சில வரிகள் சொல்லியிருக்கலாம். ஊடகவியலாளர்களும் தாம் நிசோரில் கேட்டவற்றைத் தமது செய்தியறிக்கையில் ஓரிரு வரிகளில் சொல்லியிருக்கலாம். ஆனால் ஐநா, சர்வதேச மன்னிப்புச் சபை, மனித உரிமைக் கண்காணிப்பகம், நோர்வே ஆகியவற்றின் பிரதிநிதிகளுடன் நடந்த கலந்துரையாடல்களும் அவற்றின் விளைவுகளும் தெளிவற்றவையாகவே இருந்தன.

நிசோரின் திறப்புவிழாவுக்குப் பின் இடம்பெற்ற முதல் சந்திப்பு நோர்வே நாட்டின் தூதுவருடனானது. கிளிபாதர் என்னையும் அச்சந்திப்புக்கு வரும்படி கேட்டுக்கொண்டார். அதற்கான காரணத்தையும் அவர் ஒளிவில்லாமல் கூறினார். சந்திப்பில் பேசும் போது தனக்குச் சிந்திக்க அவகாசம் வேண்டும் என்றும், தனது பதற்றத்தைத் தணிப்பதற்கும் இன்னும் ஒருவர் அருகிலிருக்க வேண்டும் என்றும் அவர் சொன்னார். தூதுவரையும் சேர்த்து நாங்கள் மூவருமே அங்கிருந்தோம் என்று நினைக்கிறேன். வழமைபோல உரையாடல் சிறுவர் போராளிகளைப் பற்றியதாகவே இருந்தது. மேற்குநாட்டுப் பிரதிநிதிகளுடன் சந்திக்கும் பொழுதெல்லாம் தென்படும் சூழலே அங்கு அப்போது தென்பட்டது.

கிளிபாதரும் நோர்வே தூதுவரும் உரையாடியதைக் கேட்ட பொழுது கவலை, கோபம் ஆகிய இரண்டு உணர்வுகளும் என்னுள் எழுந்தன. தனது வாழ்க்கையை மிகவும் கீழ்மட்டத்துத் தமிழீழ மக்களுக்காக அர்ப்பணித்த ஒரு கத்தோலிக்க அருட்தந்தை கிளிபாதர். இன்னும் சொல்லப்போனால் அத்தீவிலுள்ள தாழ்த்தப்பட்ட எல்லா மக்களாலும் போற்றப்பட்டவர். லங்கா ராணுவக் காவல் நிலையங்களில் முதுநிலை அதிகாரிகளும் அவரை ஆரத்தழுவுவதை நான் கண்டிருக்கிறேன். நோர்வே தூதுவரின் தனிப்பட்ட குணாதிசயங்கள் எதுவாக இருந்தாலும், அங்கே அவர் அதிக சம்பளம் எடுக்கும் மேற்கு நாடொன்றின் பிரதிநிதியாக, மேற்குநாடுகளின் கருத்துக்களைச் சொல்வதற்கு வந்திருந்தார். கிளிபாதரை ஏன் இது பதற்றமாக்கியது? இவ்வகைச் சந்திப்புக்கள் பலவற்றைப் பின்னர் வன்னியில் அவதானித்த பின் இச்சந்திப்புகளில் இருந்த அதிகாரச் சமமின்மை – அதிகார இடைவெளி – எனக்குத் துல்லியமாகத் தெரிந்தது. இதுவே தமிழீழ மக்களுக்கும் மேற்குலக நாடுகளுக்கும் இடையிலுள்ள அதிகார இடைவெளி. உயர்ந்த மனிதாபிமானக் கருத்துக்கள் இச்சந்திப்புக்களில் கருத்தற்றவை. இச்சந்திப்புக்கள் எல்லாம் அதிகாரப் பாசாங்குகள். தம் கருத்துக்கு ஏற்ற சில சர்வதேசச் சட்ட ஆவணங்களைத் தெரிவு செய்தும் ஏனையவற்றைப்

புறந்தள்ளியும் வன்னிப் பிரதிநிதிகள் மேல் தம் அதிகாரத்தைச் செலுத்த அம்மேற்குலகப் பிரதிநிதிகளால் முடிந்தது.

மனித உரிமைக் கண்காணிப்பகம் ''பீதியில் வாழ்தல்'' என்ற தலைப்பில் விடுதலைப்புலிகள் அமைப்பின் சிறுவர்கள் பற்றிய ஒரு அறிக்கையை 2005ம் ஆண்டு வெளியிட்டது. இதைத் தொடர்ந்து இவ்வறிக்கையை எழுதிய அவ்வமைப்பின் சிறுவர் உரிமைகளுக்கான நிபுணர் 'ஜோ பெக்கர்' என்பவர் வன்னிக்கு வந்தார். இக்காலத்தில் மனித உரிமைக் கண்காணிப்பகத்தின் இணையத்தில் காணப்பட்ட சிறிலங்கா பற்றிய அறிக்கைகள் எல்லாம் விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகளைப் பற்றியதாக மட்டுமே இருந்தது. ஜோ பெக்கர் நிசோருக்கு வந்தபோது, அவரின் அமைப்பின் கருத்துப்படி சிறுவர் போராளிகள்தான் சிறிலங்காவில் நடக்கும் மோசமான மனித உரிமை மீறலா என்று கேட்டோம். அதற்குப் பதிலாக இதுபற்றியே தாங்கள் கவனத்திலெடுக்க முடிவு செய்துள்ளோம் என்றார். சர்வதேச அமைப்புக்கள் பலவும் இதையே தம் கவனத்திலெடுக்க செய்த முடிவு மறுபரிசீலிக்க வேண்டியது என்பதை அவருக்குக் கூறினோம். தமிழீழ மக்கள் இதுபற்றி என்ன நினைக்கிறார்கள் என்று வீதியில் சென்று ஒரு கருத்துக் கணிப்புச் செய்ய வருமாறு அவருக்குச் சவால் விட்டோம். அவர் தான் சந்திப்பிலிருந்து வெளியேறப் போவதாகப் பயமுறுத்தினார். கிளிபாதர் தனது நயமான பேச்சினால் அவரை அமைதியடையச் செய்தார்.

சர்வதேச மன்னிப்புச் சபையின் குழுவொன்று அதன் அக்காலத்திய தலைவரான ஐரீன் கான் என்பவருடன் வன்னிக்கு வந்து, நிசோருக்கும் வந்தது. சர்வதேச மட்டத்தில் முக்கியமான இவ்வமைப்பின் தலைவரே வன்னிக்கு வர நேர்ந்ததன் பின்னணியும் சிந்திக்கப்பட வேண்டியது. நிசோரில் இச்சந்திப்பும் ஏனைய மனித உரிமை மீறல்களைப் புறந்தள்ளிச் சிறுவர் போராளிகளை மையப்படுத்தியதால் விவாதங்கள் சூடேறியது. அப்போது அவர்களின் குழுவிலிருந்த தெற்காசியாவுக்கான பிரதிநிதியான பூர்ணா சென் என்பவர் பேச்சைப் பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள் பக்கம் திருப்பினார். நான் திடீரென பக்கம் மாறி நிசோரின் குழுவிலிருந்த ஆண்களின் கருத்துக்கு எதிராகப் பேச வேண்டியிருந்தது. இவர்கள் தமிழ் கலாச்சாரத்தில் பெண்களின் நிலையைப் புகழ ஆரம்பித்ததாலேயே நான் இவ்வாறு பக்கம் மாற வேண்டியதாயிற்று.

நான் நிசோர் வேலையில் மூழ்கியிருந்த நவம்பர் 2005ல் சட்டத்திற்குப் புறம்பான கொலைகளை ஆராயும் ஐநாவின் சிறப்புப்

பிரதிநிதியான பிலிப் அல்ஸ்ரன் வன்னிக்கும் நிசோருக்கும் வந்தார். அவரின் வருகை பற்றிப் பின்னர் அவர் வெளியிட்ட அறிக்கையை[13] நிசோரில் நாங்கள் கூர்ந்து படித்தோம். கருணா விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து பிரிந்து 18 மாதங்களின் பின்னரே அவர் இலங்கைக்கு வருகை தந்திருந்தும், கருணா லங்கா ராணுவத்துடன் இணைந்து கொலைகளில் ஈடுபடுவதை அவர் சுட்டிக்காட்டத் தவறினார். இக்காலகட்டத்தில் தமிழருக்குக் கருணாவின் பிரிவின் பின்னணி மிகத் துல்லியமாகவே தெரிந்திருந்தது. யாழ்ப்பாணத்தில் செயற்பட்டு வந்த ஈபிடிபி என்னும் ஆயுதக்குழுவும் லங்கா ராணுவத்துடன் இணைந்து கொலைகளில் ஈடுபடுவதைத் தனது அறிக்கையில் சுட்டிக்காட்ட அல்ஸ்ரன் மறுத்திருந்தார். நிசோரில் இருந்த எமக்கு இவ்விரு குழுக்களும் லங்கா ராணுவத்துடன் செயற்படும் குழுக்கள் என்பதில் எதுவித சந்தேகமும் இருக்கவில்லை. அல்ஸ்ரனின் கருத்துக்கள் எமக்கு மிக ஏமாற்றத்தை அளித்தன. அவரின் இக்கருத்துக்கள் லங்கா அரசுக்கு ஆதரவு கொடுக்கும் மேற்குலகத்தின் நோக்கத்தோடு ஒத்திருந்ததை நாம் உணர்ந்தோம்.

நிசோரில் தொலைபேசித் தொடர்பூடாக இணையத்தை வாசிக்கும் வசதி மட்டுமே இருந்தது. ஒரு கிலோமீட்டர் தொலைவிலிருந்த சமாதான செயலகத்திற்கு நான் அடிக்கடி போவேன். அதன் ஊடகப்பிரிவு சில ஆவணப்படங்கள் தயாரிப்பதற்கு உதவி செய்து வந்தேன். சமாதானச் செயலகத்தில் சிலருக்கு முழுநாள் இணையத் தொடர்பு இருப்பதைப் பார்த்து உள்ளூரப் பொறாமைப்படுவேன். இருந்தும் அப்பொழுது செய்து வந்த மனித உரிமை வேலைக்கு முழுநாள் இணையத் தொடர்பு தேவையில்லாததால் இதை நான் கேட்கவில்லை.

சில சமயங்களில் வன்னிப் பத்திரிகையான 'ஈழநாதம்', யாழ்ப்பாணப் பத்திரிகைகளான 'உதயன்', 'ஈழநாடு' ஆகியவற்றில் வரும் சில செய்திகளையும் ஆசிரியர் தலையங்கத்தையும் ஆங்கில மொழியாக்கம் செய்து தரும்படி என்னைச் சமாதானச் செயலகத்தில் கேட்பார்கள். அது சமாதானச் செயலகத்தின் இணையத்தில் சர்வதேசத்தின் பார்வைக்காக ஏற்றப்படும். அவை ஆங்கில ஊடகங்களில் வராத கருத்துக்களாகவும் இருக்கும்.

2006ம் ஆண்டு ஜனவரி மாதம் உதயன் பத்திரிகையில் வந்த ஒரு ஆசிரியர் தலையங்கத்தை மொழியாக்கம் செய்தது எனக்கு நினைவிருக்கிறது. அத்தலையங்கம் தீவின் தெற்கில் இயங்கும் சிங்கள, ஆங்கில ஊடகங்களை விமர்சித்திருந்தது. நாடாளுமன்றத்தில் நடந்த ஒரு சம்பவத்தை அவ்வூடகங்கள் விவரித்ததை மையமாக

வைத்து உதயன் ஆசிரியர் தலையங்கம் தெற்கு ஊடகங்களின் போக்கைக் கண்டித்திருந்தது. எனது மொழியாக்கம் சமாதான செயலகத்தின் இணையத்தில் ஏற்றப்பட்ட போது அது உதயன் ஆசிரியர் தலையங்கம் என்ற குறிப்பு தவறுதலாக விடுபட்டுவிட்டது. சர்வதேச ஊடகங்கள் இவ்விணைய மொழியாக்கத்தை விடுதலைப்புலிகளின் அறிக்கையாக எடுத்து அதில் இருந்த பின்வரும் பகுதியை வைத்து செய்தியறிக்கைகள் எழுதினார்கள். அதில் மீண்டும் போர் தொடங்கவேண்டி வரலாம் என்ற ஒரு கருத்து சொல்லப்பட்டிருந்தது.

> *''தெற்கு ஊடகங்கள் இம்மாதிரியான சிங்கள மேலாதிக்கப் போக்கில் செல்லுமானால் தெற்கிலுள்ளவர்கள் தமிழரின் நியாயமான போராட்டத்தின் காரணங்களை விளங்கிக் கொள்ள மாட்டார்கள். சிங்கள பேரினவாத ஆணவ கருத்துக்களில் மூழ்கியிருக்கும் சிங்களச் சமூகம் தமிழருக்கு ஒரு நியாயமான தீர்வை வழங்குவதற்கு ஒப்பமாட்டார்கள். இதனால் அமைதி வழியில் தீர்வு காண்பது முடியாத காரியமாகிவிடும். தமிழர் தமக்கான தீர்வை மீண்டும் ஆயுத வழியில் தேடுவதற்குத் தள்ளப்படுவார்கள்''.*

மீண்டும் போரை ஆரம்பிப்போம் என்று விடுதலைப்புலிகள் எப்போது சொல்வார்கள் என இருந்த அவா இக்காலத்தில் சர்வதேச ஊடகங்கள் மிகவும் எதிர்நோக்குவதை வெளிப்படையாகக் காணமுடிந்தது. இணையத்திலிருந்த பிழை உடனடியாகத் திருத்தம் செய்யப்பட்டது. இதன் பின் இணையத்தில் இடம்பெறும் நான் எழுதிய செய்திகளில் அரசியல் கூடாது என்பதில் கவனமாக இருந்தேன்.

நான் ஒருபோதும் இணையத்திற்காக அரசியல் செய்திகள் எழுதியதில்லை. ஆனால் 2006ம் ஆண்டு தொடக்கத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக இணையத்தில் ஏற்றும் அரசியல் தவிர்ந்த ஏனைய விடயங்களில் சுதந்திரமாக செயற்படும் தகுதியைப் பெற்றுக் கொண்டேன். இப்போது பின்னோக்கி பார்க்கும்போது இதுபற்றி ஒரு குறிப்பான முடிவு எவரும் எடுத்ததாகவோ, அல்லது நானே இவ்வகையான ஒரு முடிவு எடுத்ததாகவோ இல்லை. சிறப்பான இணைய வசதி என்னைக் கவர்ந்தது என்னவோ உண்மை. தன்பணியைச் சிறப்புறச் செய்யச் சரியானவர்களை அறிந்து அவர்களைக் கவர்ந்திழுக்கும் சமாதானச் செயலகத்தின் பொறுப்பாளர் புலித்தேவனின் வல்லமையும் ஒரு காரணமாக இருக்கலாம். வன்னியில் எனக்குப் பல இளம் போராளிகள்

நண்பர்கள் ஆனார்கள். கரன் எனது முதல் நண்பர். எனது அடுத்த நண்பராகப் புலி என்றழைக்கப்பட்ட புலித்தேவன் இருந்தார்.

சமாதானச் செயலகத்தில் எனது பணி கொஞ்சம் கொஞ்சமாக உருவானதால் நான் சமாதானச் செயலகத்தின் ஒரு அங்கத்தவராக என்னைக் கருதவில்லை. சமாதானச் செயலகத்தின் அங்கத்தவர்களாக இருந்தவர்கள் எல்லோரும் விடுதலைப்புலி உறுப்பினர்கள். அங்கு ஊடகப் பிரிவில் சில பொதுமக்கள் வேலை செய்தார்கள். இதைவிட வேறு சில வேலைகளையும் பொதுமக்கள் செய்தார்கள். ஆனால் சமாதானச் செயலக மையத்தில் பொதுமக்கள் பணிபுரியவில்லை. புலத்துத் தமிழர் ஒருவர் ஓராண்டு மட்டும் பணி செய்தார். ஏனைய புலத்துத் தமிழர்கள் வந்து சில வாரங்கள் மட்டும் தங்கிவிட்டுத் திரும்பிப் போய்விடுவார்கள். போர்நிறுத்த ஒப்பந்தத்தை மேற்பார்வையிட அமைக்கப்பட்டிருந்த கண்காணிப்புக் குழுவினர் மட்டும் என்னையும் ஒரு சமாதானச் செயலக அங்கத்தவர் என்று கணித்தார்கள். முதலில் எனக்கு இது சிறிதளவு சங்கடத்தை ஏற்படுத்தினாலும், செய்துவந்த பணி எனக்கு விருப்பமாக இருந்ததால் பணியைத் தொடர்ந்தேன். ஆகவே மே 2006ல் நிசோரில் எனது பணியை நிறுத்திவிட்டுச் சமாதானச் செயலகத்தில் முழுநேரப் பணி செய்யத் தொடங்கினேன். ஏப்பிரல் 2008ல் கிளிபாதர் கொல்லப்பட்ட பின்னர் நிசோரின் தேவை அதிகமாக இருந்ததால் மீண்டும் அங்கும் பணியாற்றினேன்.

சமாதானச் செயலகத்தில் முழுநேரப் பணிசெய்யத் தொடங்கிய பின்னரே, கண்காணிப்புக் குழுவினரின் அறிமுகம் கிடைத்தது. கண்காணிப்புக் குழுவினருக்கு விடுதலைப்புலிகளின் தொடர்பகமாக இருந்தது சமாதானச் செயலகம். அவர்கள் ஒவ்வொரு நாளும் ஒரு தடவையாவது அங்கே வருவார்கள். போர்நிறுத்த ஒப்பந்த மீறல்களைக் கணக்கெடுக்கும் கண்காணிப்புக்குழுவின் ஒழுங்குமுறை பற்றி அதன்பின்னரே நான் விரிவாக அறிந்தேன். இவ் ஒழுங்குமுறையின்படி எவரும் ஒருதரப்புக்கு எதிராகக் கண்காணிப்புக்குழுவிடம் முறைப்பாடு கொடுக்கலாம். இதற்காக கண்காணிப்புக்குழுவின் பிரிவுகள் தமிழீழம் எங்கும் ஏழு இடங்களில் அமைக்கப்பட்டிருந்தன. கிளிநொச்சி தவிர்ந்த ஏனைய ஆறு இடங்களிலும் கண்காணிப்புக்குழு ஒரு உள்ளூர்க்குழு ஒன்றை அமைத்தது. இந்தக் குழுவில் அவ்விடத்தில் பணியாற்றிய கண்காணிப்புக் குழுவினரும், விடுதலைப்புலிகள் முன்மொழிவு செய்த இரண்டு பொதுமக்களும், லங்கா அரசு முன்மொழிவு செய்த இரண்டு பொதுமக்களும் இருப்பார்கள். அங்கு கிடைத்த முறைப்பாடுகளை இவ்உள்ளூர்க்குழு ஆராய்ந்து முடிவு வழங்கும்.

தமிழீழம் முழுவதும் நடந்த போர்நிறுத்த ஒப்பந்தமீறல்களின் புள்ளிவிபரங்களை ஒவ்வொரு வாரமும் கண்காணிப்புக்குழு வெளியிடும்.

இவ்வொப்பந்த மீறல் கணிப்புமுறை அமுல்படுத்தியபொழுது இது நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டிருந்தாலும், காலப்போக்கில் இது ஒரு கேலிக்கூத்தாக மாறிவிட்டது. தவறு கண்காணிப்புக் குழுவினுடையது மட்டும் அல்ல. லங்கா ராணுவம் மிகப் புத்திசாலித்தனமாக இதை தனக்குச் சாதகமாகக் கையாண்டது. அதேநேரத்தில் விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகம் லங்கா ராணுவத்தின் தந்திரத்திற்கு ஈடாகச் செயற்படவில்லை. இன்னுமொரு சமாதானச் செயலக உறுப்பினரின் உதவியுடன், நான் லங்கா ராணுவத்தின் செயற்பாடுகளுக்கு ஈடுகொடுக்கக்கூடியவாறு செயற்படுவது என்று முடிவு செய்தேன். லங்கா ராணுவத்தின் பல ஒப்பந்தமீறல்கள் கடலிலே நிகழ்ந்து கொண்டிருந்தன. அங்கு மீனவர்கள் தொடர்ச்சியாகத் தாக்கப்பட்டு வந்தார்கள். இவற்றைத் தொகுத்து ஏராளமான முறையீட்டுக் கடிதங்களைக் கண்காணிப்புக் குழுவுக்கு அனுப்பினோம். இதைத்தொடர்ந்து ஒப்பந்த மீறல்களைக் கணிப்பிடும் முறை யதார்த்தத்தைப் பிரதிபலிக்கவில்லை என்று கண்காணிப்புக்குழு அதை நிறுத்திவிட்டது.

சமாதானகாலத்தில் இடம்பெற்ற இவ்வாறான சமநிலையற்ற சர்வதேசச் செயற்பாடுகள் பலவற்றைக் குறிப்பிடலாம். ஒப்பந்தமீறல் கணிப்புமுறையானது யதார்த்தத்தைப் பிரதிபலிக்காமலே 2002ம் ஆண்டிலிருந்து 2006ம் ஆண்டு நடுப்பகுதி வரை அமுலிலிருந்தது. அது லங்கா அரசுக்குச் சாதகமாக இருக்கும் வரைக்கும் அதை நிறுத்த வேண்டுமென்ற எண்ணம் கண்காணிப்புக் குழுவுக்கு வரவில்லை. அது லங்கா அரசுக்குப் பாதகமாக மாறும்போதுதான் அது நிறுத்தப்பட்டது. இதேபோல், போர்நிறுத்த ஒப்பந்தத்தின்படி கொழும்பிலும் கிளிநொச்சியிலும் இரண்டு கண்காணிப்புக்குழு மையங்கள் இயங்கவேண்டும். ஆனால் கிளிநொச்சி மையம் கொழும்பு மையத்தின் கிளையாகவே இயங்கியது. கண்காணிப்புக்குழுவின் தலைவர் அதிகமாகக் கொழும்பிலேயே தங்கினார். கிளிநொச்சி வருவதும் மிகக் குறைவு. வந்தாலும் இரண்டு மூன்று நாட்களில் திரும்பிவிடுவார். இதனாலும் சில தொடர்பாடல் குழப்பங்கள் ஏற்பட்டன. எனினும் சமாதானச் செயலகத்திற்கும் கிளிநொச்சிக் கண்காணிப்புக்குழு பிரிவிற்கும் சிறந்த உறவு இருந்தது. 2006ம் ஆண்டின் பிற்பகுதியிலிருந்து லங்கா ராணுவத்தின் எரிபொருள் தடைகளால் சமாதானச் செயலகத்தில் மின்சாரம் தடைப்பட்டது. அந்நேரங்களில் கண்காணிப்புக்குழுவின் கிளிநொச்சி அலுவலகத்தின்

இணைய வசதிகளை சமாதானச் செயலகப் பணியாளர்கள் சென்று உபயோகிப்பார்கள்.

நான் வன்னியில் பங்குபற்றிய அதிகாரபூர்வச் சந்திப்புகள் எல்லாம் சிறுவர் போராளிகளைப் பற்றியவை. இதை நான் பின்னர் விவரிக்கிறேன். சமாதானச் செயலகத்தில் பணியாற்றிய காலத்தில் மேற்குநாட்டு பிரதிநிதிகளுடன் நடந்த பல சந்திப்புகளைப் பக்கத்து அறையிலிருந்து என்னால் கேட்கக்கூடியதாக இருந்தது. இச்சந்திப்புகளைத் தமிழ்ச்செல்வன் 2006ம் ஆண்டின் பிற்பகுதியில் வேறுஇடத்திற்கு மாற்றிவிட்டார். இதனால் இவ்வகைச் சந்தர்ப்பத்தை இழந்துவிட்டேன். இச்சந்திப்புக்களின் உரையாடல்கள் என்னை மிகக் குழப்பத்துக்கு உள்ளாகியது. இம்மட்ட அரசியல் சந்திப்புக்களில் எனக்கு முன்னனுபவம் எதுவும் கிடையாது. இச்சந்திப்புக்களில் கருத்துவேறுபாடுகள் குறைக்கப்படுவதையோ ஒத்திசைவு ஏற்படுவதையோ நான் காணவில்லை. ஒரு தரப்பு மற்றதரப்பின் தலைக்குமேலாக பேசினார்கள். இவ்வகை அரசியல் சந்திப்புகள் எப்போதுமே இப்படித்தான் இருக்குமோ? அல்லது இது கலாச்சார வேறுபாடுகளால் ஏற்பட்ட தொடர்பாடல் பிரச்சினையின் விளைவோ? அப்படியாயின் மேற்குநாட்டவருடனான அரசியல் சந்திப்புக்கள் எல்லாமே அர்த்தமற்றவைகள்தானா? அல்லது இது குறிப்பாக வன்னிக்கு மட்டும் உரியதா? அதாவது சந்திப்பு நடத்திய இருதரப்பினரும் முடிவுகள் எடுக்கும் அதிகாரம் இல்லாதவர்களாக இருந்ததனால் இச்சந்திப்புக்கள் மற்றத் தரப்பின் கருத்துக்களை அறிந்துகொள்ளும் ஒரு வாய்ப்பாக மட்டுமே பயன் படுத்தப்பட்டதா? இதுவும் வேறு பல அரசியல் சந்திப்புக்களுக்கும் பொருந்துமல்லவா?

வன்னியில் நான் அவதானித்த சந்திப்புகளுக்கு எல்லாம் பொதுவான ஒன்றை என்னால் அடையாளம் காணமுடிந்தது. வருகை தந்திருப்போர் எப்போதும் ஏதாவது ஒரு ஆவணத்தை அல்லது சாசனத்தை முன்வைத்து அதற்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து, அதை விட்டு விலகாமல் பேசுவார்கள். அப்படி விலகினால், மீண்டும் மீண்டும் பேச்சை அதன்மேல் திருப்புவதிலேயே கண்ணாக இருப்பார்கள். அவர்கள் முன்வைப்பது போர்நிறுத்த ஒப்பந்தமாகவோ, ஒரு ஜெனீவா சாசனமாகவோ, சிறுவர் போராளிகள் சார்ந்த ஒரு சாசனமாவோ இதுபோல் வேறு ஏதாவது ஒரு சாசனமாகவோ இருக்கும். தமிழ்ச்செல்வனும் அவரது மொழிபெயர்ப்பாளரும் தமிழருக்கெதிராக இழைக்கப்பட்டுவரும் கொடுமைகளின் நீண்ட சரித்திரத்தைச் சொல்லி வருகை தந்திருப்போரின் பொறுமையைச் சோதிப்பார்கள். வருகை தந்திருப்போருக்கும் தமிழர் அடிப்படைப் பிரச்சினை பற்றிய

ஆழமான அறிவு இருக்காது. நோர்வே நாட்டவர்கள் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருந்தார்கள். இருந்தாலும் இருதரப்பினருக்கும் இடையே இருந்த இடைவெளி ஒருபோதும் குறுகியதில்லை.

இச்சந்திப்புக்கள் எல்லாம் சக்தியை விரயம் செய்யும் ஒரு பெரிய நாடகமாகவே நடந்தேறின. வருகை தருவோர் உலங்குவானூர்தியில் வந்து கிளிநொச்சியில் அல்லது வவுனியாவில் இறங்குவார்கள். அவர்கள் வவுனியாவில் வந்து இறங்கினால் சில முக்கிய விடுதலைப்புலி உறுப்பினர்கள் ஒரு பெரிய வாகனத் தொடரணியுடன் அவர்களை விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பகுதியின் எல்லையிலிருக்கும் புளியங்குளத்தில் சந்தித்துக் கிளிநொச்சிக்கு அழைத்து வருவார்கள். இச்சந்திப்பைச் செய்தியாக்குவதற்காக ஒரு பெரும் ஊடகவியலாளர் கூட்டம் முன்னரே கொழும்பிலிருந்து வந்து தங்கியிருப்பார்கள். சந்திப்பு மணிக்கணக்கில் தொடரும்போது வந்திருந்த ஊடகவியலாளர் கூட்டமும் வன்னி ஊடகவியலாளர் கூட்டமும் சமாதானச் செயலகத்திற்கு வெளியே பரந்திருந்த மாமர நிழல்களின் கீழ் வட்டமேசை வடிவில் உட்கார்ந்து சமாதானச் செயலகத்தின் வரவேற்புபசாரங்களை ஏற்றுக்கொண்டு அரட்டை அடிப்பார்கள். சந்திப்பு முடிந்ததும், சந்திக்க வந்திருந்தோர் மாமரங்களின் கீழ் நின்று கொண்டே ஊடகவியலாளருடன் ஓரிரு நிமிடங்கள் பேசிவிட்டுச் சென்றுவிடுவார்கள். மணிக்கணக்காகக் காத்திருந்த ஊடகப்பரிவாரத்திற்கு அவர்கள் ஒருபோதுமே ஆழமான நேர்காணலுக்குச் சந்தர்ப்பம் வழங்கியதில்லை. ஆனால் தமிழ்ச்செல்வனோ ஊடகப்பரிவாரத்தைச் சமாதானச் செயலக ஊடகப்பிரிவுக்கு அழைத்துச்சென்று சந்திப்புப்பற்றிய ஒரு நீண்ட உரையையும் ஆற்றி நேர்காணலையும் கொடுப்பார். இவர் சொன்னது எதுவும் வன்னி ஊடகங்களைத்தவிர வேறெந்த ஊடகங்களிலும் வெளிவர மாட்டாது. இதற்கு விதிவிலக்காக இருந்தது ஒன்று மட்டுமே. தமிழ்ச்செல்வன், ‘‘பதிலுக்குக் கொழும்பு தாக்கப்படும்....’’ என்ற பொருள்பட ஏதாவது சொன்னால் அது மட்டும் பெரிய தலைப்புச் செய்தியாக வெளியூடகங்களில் இடம் பெறும். இரு ஊடகப்பிரிவுகளுக்கும் இடையில் வேறுபாடுகள் இன்னும் அதிகரிக்க முடியாது என்னுமளவிற்கு வேறுபாடுகள் இருந்தன.

ஒரு தரப்பு நீதி கேட்டுப் பேசும். மறுதரப்பு சாசனங்களை தூக்கிப்பிடித்துப் பேசும். ஒருதரப்பு ஊடகங்களிடம் கொடுமைகளை எடுத்துக்கூறும். ஊடகங்களோ எதிர்த்தரப்பு தாக்குதல் பற்றிச்

சொல்லாதா என்று மட்டுமே காதைக் கூர்மையாக வைத்திருக்கும். நீதியைத் துண்டுதுண்டாக்கி ஒவ்வொரு துண்டையும் வெவ்வேறு சாசனத்துக்குள் அடக்கும் இக்கலாச்சாரத்தை ஒரு இந்திய ஆய்வாளர் ''மேற்கு – ஞானம்'' என்று விவரித்தார். இவையெல்லாம் முடிந்த பின் தமிழ்ச்செல்வனின் ஊடகச் சந்திப்பை ஆங்கில மொழியாக்கம் செய்து இணையத்தில் ஏற்றுவதற்காக என்னிடம் தரப்படும் போது எனக்கு விரக்தி ஏற்படும்.

2006ம் ஆண்டு ஜெனீவாவில் இடம்பெற்ற இரண்டு பேச்சு வார்த்தைகளுக்காகவும் சமாதானச் செயலகம் தயாரித்த ஆவணங்கள் உருவாக்கத்தில் நான் பெரிய பங்காற்றினேன். சமாதானச் செயலக உறுப்பினர்களுடன் சேர்ந்து நீண்டநேரங்கள் இடைவிடாது தொடர்ந்து வேலை செய்து ஆவணங்களைத் தயாரித்தோம். மனித உரிமை, ராணுவ வலையங்கள், துணைக்குழுக்கள், சிறுவர்கள், பெண்கள், ஒப்பந்தமீறல்கள் என்ற தலைப்புக்களில் பல ஆவணங்களைப் பேச்சுவார்த்தையின் போது சமர்ப்பிப்பதற்காகத் தயாரித்தோம். அவற்றில் துணைக்குழுக்கள் பற்றிய ஆவணம் பேச்சு வார்த்தையின்போது ஊடகங்களில் பிரபலமாக அடிபட்டது. இதில் அடங்கிய தரவுகள் அனைத்தையும் விடுதலைப்புலிகளின் படைத்துறைப் பேச்சாளர் மார்சல் என்றும் அழைக்கப்பட்ட இளந்திரையன் பல்வேறு புலனாய்வுப் பிரிவுகளிடமிருந்து சேகரித்து எமக்குத் தந்தார். ஏனைய ஆவணங்களிலிருந்த விபரங்கள் சமாதானச் செயலக உறுப்பினர்களால் தொகுக்கப்பட்டன. அவ்வாவணங்களில் ஒப்பந்தமீறல்கள் பற்றிய ஆவணமே தமிழ்ச்செல்வனின் தூண்டுதலினால் பலதடவை மீள்திருத்தங்களுக்கு உள்ளாகியது. இவ் ஆவணம் தமிழ்ச்செல்வனுக்கு ஒருபோதும் திருப்தி தருவதாக அமையவில்லை. சொல்லப்போனால் இக்காலத்தில் வன்னிக்குள்ளேயும் வெளியேயும் பலர் போர்நிறுத்த ஒப்பந்தத்திலிருந்த ஒவ்வொரு உறுப்புரையையும் விரிவாக அலசி போர்நிறுத்த மீறல்களை யார் அதிகம் செய்தார்கள் என்று முடிவு கூறும் பல கட்டுரைகளை எழுதினார்கள். மேலே நான் முன்னர் விவரித்த கண்காணிப்புக்குழுவின் ஒப்பந்தமீறல்களைக் கணிக்கும் முறையே இக்கட்டுரைகளின் அடித்தளமாக இருக்கும். இன்று வரையும் யார் அதிகமான போர்நிறுத்த ஒப்பந்தமீறல்கள் செய்தார்கள் என்பது பற்றிய ஒப்புதல் இல்லை. இருதரப்பும் ஏராளமான போர்நிறுத்த ஒப்பந்தமீறல்களைச் செய்துள்ளார்கள் என்பதே உண்மை. இதைச் சமாதான முன்னெடுப்பாளர்கள் உரியகாலத்தில் சுட்டிக்காட்டி நிலைமையைச் சீராக்க முற்படவில்லை. நிலைமை சீர்கெட்டுப்

போவதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்துவிட்டார்கள் என்பதையும் வேறு ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டி இருக்கிறார்கள்.

தமிழ்ச்செல்வனுக்கும் சமாதான செயலகத்துக்குமான கடிதங்கள் ஆவணங்கள் ஆகியனவற்றை மொழிமாற்றும் பணிகளை நான் செய்துவந்த நாட்களில் இரண்டுமுறை எனது பணி சர்ச்சைக்குள்ளானது. எனக்கு முன்னர் இப்பணியை யார்யார் செய்தார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவர்களில் ஒருவர் பேச்சுவார்த்தைகளின்போது தமிழ்ச்செல்வனின் மொழிபெயர்ப்பாளராக இருந்தவர்.

ஒரு கடிதம் கண்காணிப்புக்குழுத் தலைவருக்குப் புலித்தேவன் எழுதியது. இக்காலத்தில் கண்காணிப்புக் குழுவினர் லங்காக் கடற்படையின் படகுகளில் ஏறிக் சுற்றுக்காவல் பணியாற்றினர். அவ்வகையான ஏற்பாடு கடற்புலிகளின் படகுகளுக்கு இருக்கவில்லை. கடற்புலிகள் கடலில் செல்வதற்கான தேவைகளை நிர்ணயிக்கும் உறுப்புரைகளைப் போர்நிறுத்த ஒப்பந்தம் உள்ளடக்கவில்லை. இதனால் சமாதான கால ஆரம்பத்தில் பல பாரிய சம்பவங்கள் கடலில் இடம்பெற்றன. இச்சம்பவங்கள் சிலவற்றில் கடற்புலிகள் சிலர் தற்கொலையும் செய்துள்ளனர். இதைத்தொடர்ந்து அப்போதிருந்த கண்காணிப்புக்குழுத் தலைவர், இதைத் தவிர்க்கத் தேவையான சில மாற்றங்களைப் போர்நிறுத்த ஒப்பந்தத்தில் சேர்க்க முயன்றபோது அவரை லங்கா அரசு வெளியேற்றி வேறு ஒரு தலைவரை நியமிக்குமாறு செய்தது[14]. விடுதலைப்புலிகளின் கடற் போக்குவரத்துத் தேவைகள் பிரச்சினைகள் தீர்க்கப்படாமலே தொடர்ந்தன. இருந்தும் இதன் பின் பாரிய சம்பவங்கள் சில காலத்திற்கு நடக்கவில்லை. லங்கா கடற்படையினர் தமிழ் மீனவர்களுக்குக் கொடுக்கும் தொல்லைகள் அதிகரித்தவண்ணமே இருந்தன. 2006ம் ஆண்டில் இந்தத் தொல்லைகள் மீனவர்கள் காணாமற்போகும் அளவுக்கு மோசமாயின.

இதற்கு ஒரு முடிவுகட்டுவது என்று விடுதலைப்புலிகள் தீர்மானித்திருக்கவேண்டும். அதன் முதற்கட்டமாக கண்காணிப்புக் குழுவினர் லங்கா கடற்படையின் படகுகளில் ஏறுவதை நிறுத்தத் தீர்மானித்திருக்கிறார்கள். கண்காணிப்புக்குழுவினர் லங்காக் கடற்படைப் படகுகளில் ஏறுவதை நிறுத்தக்கோரிக் கண்காணிப்புக்குழு தலைவருக்குப் புலித்தேவனால் முதலில் ஒரு கடிதம் அனுப்பப்பட்டது. ஆனால், கண்காணிப்புக்குழுவினர் லங்காக் கடற்படைப் படகுகளில் பயணம் செய்வதை நிறுத்தமுடியாது என்றும் அது தொடரும் என்றும் கண்காணிப்புக்குழுத் தலைவரின் பதில் உடனே வந்தது. ஓரிரு

நாட்களுக்குப் பின் புலித்தேவன் மிகவேகமாக எனது மேசைக்கு வந்து கண்காணிப்புக்குழுத் தலைவருக்கு இரண்டாவது கடிதம் எழுதும்படி கேட்டார். அக்கடிதம் கடுமையான தொனியில் இருக்கவேண்டும் என்பது அவர் கருத்து. இவ்விரண்டாவது கடிதத்தில் இதுவே கடைசி எச்சரிக்கை என்று எழுதப்பட்டது. இக்கடிதம் எழுதும்படி என்னைப் புலித்தேவன் கேட்ட அதேநேரத்தில் கடற்புலிகள் லங்கா படகுத் தொடரணி ஒன்றைத் தாக்குவதற்காகப் போய்க்கொண்டிருந்தார்கள் என்று நினைக்கிறேன். புலித்தேவன் கேட்ட அக்கடிதம் இத்தாக்குதலின் பின்விளைவுகளைச் சமாளிப்பதற்காக எழுதப்பட்டதாக இருக்கலாம். லங்கா கடற்படை தமிழ் மீனவர்களைத் தாக்கிக்கொண்டிருந்த காலத்தில் கூட அவர்களுக்குக் காவல் வழங்கிய கண்காணிப்புக்குழுவினர் அத்தகைய காவலை புலிகளின் படகுகளுக்கு வழங்கவில்லை என்பதே அவர்களின் வாதமாக இருந்தது. இக்கடிதத்தில் கையாளப்பட்ட கடும் வார்த்தைகள் மேற்குலக வட்டாரங்களில் கடுப்பை ஏற்படுத்தியிருக்க வேண்டும். விடுதலைப்புலிகளை ஐரோப்பிய ஒன்றியம் 2006ல் தடைசெய்ததற்கான இரு காரணங்களில் இக்கடிதமும் ஒன்று என்று அதன்பின் கண்காணிப்புக்குழுவினர் ஒருவர் விடுதலைப்புலி உறுப்பினர் ஒருவருக்குச் சொல்லியிருந்தார். இரண்டாவது காரணம் 2005ம் ஆண்டில் நடந்த வெளிவிவகார அமைச்சர் லக்சுமண் கதிர்காமரின் கொலை என்றும் அவர் சொன்னாராம்.

சில வாரங்களின் பின், ஜுலை 2006ல் விடுதலைப்புலிகளின் சமாதானப் பேச்சுவார்த்தைக் குழுவினர் நோர்வே நாட்டின் ஒஸ்லோ நகரத்திற்குச் சென்றிருந்தார்கள். அக்காலத்தில் கடற்புலிகளுடன் நெருங்கிய தொடர்புள்ள ஒரு உறுப்பினர் அக்கடல் தாக்குதலின் போது நடந்ததை எனக்கு விளக்கினார். லங்காக் கடற்படையினர் யாழ்ப்பாணத்திலிருந்து தீவின் தெற்குப்பகுதிக்கு அவர்களின் விடுமுறைக்காக ஒரு பெரிய கப்பலில் சென்றுகொண்டிருந்தார்கள். இதற்குப் பாதுகாப்பாக ஒரு கண்காணிப்புக்குழு உறுப்பினருடன் லங்காக் கடற்படையின் ஒரு பாதுகாப்புப் படகும் சென்றது. விடுதலைப்புலிகள் இதன் மேல் தொடுத்த தாக்குதலில் சில லங்கா கடற்படையினர் கொல்லப்பட்டனர். அங்கிருந்த ஒரு கண்காணிப்புக்குழு உறுப்பினரும் ஆபத்துக்குள்ளானார். இதை விபரித்து இருபக்க அறிக்கை ஒன்றைத் தயாரித்து ஒஸ்லோவுக்கு அனுப்பினோம்.

நான் முன்னர் குறிப்பிட்ட மற்றைய சர்ச்சைக்குரிய ஆவணம் தமிழ்ச்செல்வனுக்காக நான் மொழியாக்கம் செய்தது. சர்வதேச

ஊடகவியலாளருக்குத் தமிழ்ச்செல்வன் மின்னஞ்சலூடாக கொடுத்த நேர்காணல். வேறு நாடொன்றில் செப்டம்பர் 2006ல் இடம்பெறவிருந்த சமாதான நடவடிக்கைகள் பற்றிய டோக்கியோ கூட்டுத்தலைமையின் கூட்டம் ஒன்றுடன் பொருந்துமாறு இந்நேர்காணலைத் தமிழ்ச்செல்வன் அளித்திருந்தார். தமிழில் எனக்குத் தரப்பட்ட தமிழ்ச்செல்வனின் பதில்கள் அன்றைய பிரச்சினைகளைக் கோடிட்டுக் காட்டியிருந்தது. டோக்கியோ கூட்டுத் தலைமையின் கூட்டத்தின் ஊடகச் செய்திகளில் இந்நேர்காணலும் இடம்பெற வேண்டுமென்றே அது தயாரிக்கப்பட்டது. நான் அதன் மொழியாக்கம் செய்துகொண்டிருந்தபோது புலித்தேவன் திடீரென வந்து விடுதலைப்புலிகள் பேச்சுவார்த்தைக்கு ஆயத்தமாக இருக்கிறார்கள் என்பதையும் கடைசியில் சேர்க்கும்படி கூறினார். 2006 பெப்பிரவரியில் இடம்பெற்ற முதலாவது ஜெனீவா பேச்சு வார்த்தைக்குப் பின் இச்சம்பவம் இடம்பெறுகிறது. அக்கட்டத்தில் டோக்கியோ கூட்டுத்தலைமையின் அழுத்தங்கள் இருந்தாலும் இன்னுமொரு பேச்சுவார்த்தை இடம்பெறுமென்ற எதிர்பார்ப்பு எவருக்கும் இருக்கவில்லை. இந்நேர்காணல் அனுப்பப்பட்டு புலித்தேவன் எதிர்பார்த்த மாதிரியே அவ்வரியும் ஊடகங்களின் கவனத்தை ஈர்த்துக்கொண்டது. தனது நேர்காணலில் தான் எதிர்பாராத இவ்வரியைக் கண்டு தமிழ்ச்செல்வன் கடுங்கோபத்துடன் சமாதானச் செயலகத்திற்கு வந்தார். புலித்தேவனும் நானும் அவரின் கோபத்திற்குப் பதில்சொல்ல வேண்டியவர்களானோம். அன்றிரவு நாங்கள் எல்லோரும் வீடு சென்றபின், புலித்தேவன் எனக்கு மிகவும் விருப்பமான நாவற்பழங்களுடன் என்னைப் பார்க்க வந்தார். நாவற் பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு பலவற்றைப் பற்றிப் பேசினோம். தமிழ்ச்செல்வனின் கோபத்திற்கு என்னையும் ஆளாக்கிவிட்டோம் என்று புலித்தேவன் மிக வருத்தப்பட்டார். சிலநாட்களுக்குப் பின் அத்திறமையான ஊடகச் சாதனைக்காகத் தமிழ்ச்செல்வன் தன்னைப் பாராட்டினார் என்று புலித்தேவன் எனக்குச் சொன்னார். இதன் பின்னரே அக்டோபர் 2006ல் ஜெனீவா பேச்சுவார்த்தை இடம்பெற்றது. இதுவே இருதரப்பினருக்கும் இடையே நடந்த இறுதிப் பேச்சுவார்த்தையாகவும் இருந்தது.

சமாதான நடவடிக்கை என்னும் அந்நாடகத்தில் வெளிப் பார்வையாளராக நானும் சில காலம் இருந்தேன். சிலசமயங்களில் அதன் புறநடவடிக்கைகளில் பங்கெடுத்துச் சில சர்ச்சைக்குரிய சம்பவங்களுக்குள்ளேயும் இழுக்கப்பட்டேன்.

இப்பகுதியை எனக்கு மிகவும் விருப்பமானதும் தனித்துவமான சுவையுடையதுமான நாவற்பழத்தைப்பற்றிய ஒரு சிறு

குறிப்புடன் முடிக்கிறேன். இப்பழத்தைப் பற்றிப் பல சிறு வயது நினைவுகள் என்னுள் நிறைந்திருக்கின்றன. நான் சிறு பிள்ளையாக யாழ்ப்பாணத்தில் வளர்ந்த காலத்தில் எனது படுக்கை அறைக்கு வெளியே, யன்னலுக்கு அருகில் ஒரு நாவல் மரம் நின்றது. எனது சிறு வயதில் அம்மரம் எனக்குப் பல வகையான அனுபவங்களை அளித்தது. அப்பழங்களின் சுவையும், அதன் பொந்திலிருந்து வெளிவரும் சாரைப்பாம்பைக் கண்டவுடன் வரும் பயமும், இரவில் அம்மரத்திலிருந்து இறங்கி வந்து யன்னலூடாக எட்டிப்பார்க்கும் பேய்கள் தரும் பயமும் இம்மரம் எனக்குத் தந்த அனுபவங்கள். நாவல் பழம் மீது எனக்கு இருந்த அவாவைச் சமாதான செயலகத்தில் பலரும் அறிந்திருந்தார்கள். தமிழ்ச்செல்வனும் அவரது குழுவுக்கு மிகவும் விரும்பிய இடமான பூநகரியின் அதிசுவையான நாவற் பழங்களை கிடைக்கும்போதெல்லாம் எனக்கு அனுப்புவார். இப்பொழுதும் அச்சுவையை நினைக்கும்போது எனக்கு வாயூறும். அவர் இறந்த அன்று தொகையாக மக்கள் கூடியிருந்த அவரின் வீட்டுக்குச் சென்றேன். அங்கிருந்தவர்கள் என்னைக் கண்டதும் நேற்றுத்தான் உங்களுக்கு நாவற்பழம் அனுப்பும்படி சொன்னார் அன்ரி என்று சொல்லிக் கதறினார்கள்.

# சிறுவர் போராளிகள்

1980களில் விடுதலைப்புலிகள் அவர்களின் சீருடை அணிந்த ஏழு வயதுச் சிறுவர்களின் படத்தைப் பத்திரிகைகளில் வெளியிட்டதாக மூத்த உறுப்பினர்கள் எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். இவ்வகைப் படங்கள் பொதுமக்களிடையே அமைப்பைப் பற்றிய எண்ணத்தை மேம்படுத்தும் என்ற எண்ணமே அன்று நிலவியது. கவனிக்கப்படாது விடுபட்ட சிறுவர்களை எடுத்து அவர்களுக்குக் கல்வி கொடுத்து அவர்களைச் சமூகம் மதிக்கும் ஒரு போராளி ஆக்குவதை ஒரு நல்ல காரியமாகவே விடுதலைப்புலிகள் அக்காலத்தில் நோக்கினர். காலப்போக்கில் இது சீர்குலைந்து சிறுவர்களையும் பரப்புரையின் ஊடாகப் படையில் இணைக்கும் பழக்கமாக மாறியது. இவ்வாறு இணைக்கப்பட்ட பலரை விடுதலைப்புலிகள் இயக்கத்தில் பல நிலைகளில் நான் சந்தித்திருக்கிறேன். சமாதானச் செயலகத்தில் பணியாற்றிய பவன் இவர்களில் ஒருவர். பவன் 1993ம் ஆண்டு தன் 14ம் வயதில் அமைப்பில் இணைந்தார். 1995ம் ஆண்டு ஒரு சண்டையில் ஒரு காலை இழந்து பின்னர் ஆறு வருடங்கள் ஆங்கிலமும் கணினிக் கல்வியும் படித்துச் சமாதானச் செயலகத்தின் ஒரு முக்கிய உறுப்பினராகப் பணியாற்றினார்.

விடுதலைப்புலிகளின் இச்சிறுவர் போராளிகளை இணைக்கும் கலாச்சாரம் 1980களில் உருவாகி வளர்ந்தது. இக்காலத்தில் சிறுவர் போராளிகள் பற்றிய சர்வதேச சாசனமாக ஜெனீவா சாசனம் மட்டுமே இருந்தது. இதில் படையில் இணைக்கப்படுவோரின் வயது 15க்கு மேலிருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. சிறுவர் போராளிகள் பற்றிய ஐநா சாசனங்களோ ஐநா திட்டங்களோ ஐநா நடவடிக்கைகளோ எதுவும் 1980களில் இருக்கவில்லை. ஐநாவின் சிறுவர் உரிமை பற்றிய சாசனம் 1987ம் ஆண்டிலேயே பிரகடனப்படுத்தப்பட்டது. அந்தச் சாசனத்திலும் படையில் இணைக்கப்படுவோர் 15 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்றே சொல்லப்பட்டுள்ளது. விடுதலைப்புலிகளின் வளர்ச்சியோடிணைந்த சிறுவர் போராளிகள் என்னும் விடயம்,

அதுபற்றிய சர்வதேச சாசனங்களோ அக்கறைகளோ இல்லாத ஒரு காலத்தைச் சேர்ந்தது என்பதே இங்கு கவனத்தில் எடுக்கப்பட வேண்டியது. 1990களின் பிற்பகுதியிலேயே ஐநாவும் ஏனைய சர்வதேச அமைப்புக்களும் சிறுவர் போராளிகள் என்னும் விடயத்தை ஒரு பெரும் பிரச்சாரமாகக் கையெடுத்தன. 1998ம் ஆண்டில் இதுசார்ந்த ஐநாவின் விசேட தூதுவர், ஒல்லாறா ஒட்டன்னுனூ, வன்னிக்கு வந்தபோது 17 வயதுக்குக் குறைந்த சிறுவர்களை இணைப்பதில்லை என்று விடுதலைப்புலிகளிடம் இருந்து ஒரு உறுதிமொழி பெற்றார் என்று ஐநா சொல்கிறது. ஆனால், தாம் அவ்வாறு ஒரு உறுதிமொழி கொடுக்கவில்லை என்பது விடுதலைப்புலிகளின் நிலைப்பாடாக இருந்தது. இத்துடனேயே சர்வதேசமட்டத்தில் ‘விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள்’ என்ற ஒரு பிரச்சனை உருவாகிறது.

இருவேறு தசாப்தங்களில் உருவான இவ்விரு வளர்ச்சியின் முரண்பாடே விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் என்ற பிரச்சினை. ஒரு பக்கம் 1980களில் விடுதலைப்புலிகளின் அமைப்பினுள் நிலைபெற்றுவிட்ட சிறுவர் போராளிகளை இணைக்கும் கலாச்சாரம். மறுபக்கம் 1990களில் ஆரம்பித்த சிறுவர் போராளிகளை இணைப்பதற்கெதிரான சர்வதேச பிரச்சாரம். விடுதலைப்புலிகள் அமைப்பினுள் இன்றுள்ள பல முதுநிலை உறுப்பினர்களும் சிறுவர் போராளிகளாகவே இணைந்தவர்கள்தாம். இதனால் இவர்களுக்குச் சிறுவர் போராளிகளை இணைப்பது ஒரு மனித உரிமை மீறலாகப்படவில்லை. ஒரு சம்பவம் இதை எனக்கு மிகத்தெளிவாகக் காட்டியது. விடுதலைப்புலிகளின் மகளிர் படையணிகளின் முதுநிலைத் தளபதிகளாக துர்க்காவும், விதுசாவும் இருந்தனர். இவர்களுடன் இருந்து உரையாடும் சந்தர்ப்பம் எனக்கு ஒருமுறையே கிடைத்தது. நான் சிறுவர் போராளிகள் சார்ந்த வேலைத்திட்டத்தில் ஈடுபட்டிருக்கிறேன் என்று அவர்கள் அறிந்தபோது மிகவும் புண்பட்ட குரலில் மிக விரக்தியோடு 17 வயதுக்குக் குறைந்தவர்களை எல்லாம் விடுவிக்குமாறு தமக்குக் கட்டளை வந்திருப்பதாக சொல்லிக் கவலைப்பட்டார்கள். இம்முதுநிலைத் தளபதிகள் சிறுவர் போராளிகளைப் பற்றிய சர்வதேச பிரச்சாரம் தமக்கெதிராகப் பழிவாங்கும் நோக்குடன் செய்யப்படுகிறது என்றே கணிப்பிட்டார்கள். இப்பிரச்சாரத்தைச் சமாளிக்கும் உத்திகளைத் தேடினார்களே அல்லாமல் சிறுவர் போராளிகளை சேர்க்கக்கூடாது என்ற கொள்கைஉறுதி அவர்களிடம் இல்லை. விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசம் வெளியுலகத்திற்கு மூடப்பட்டிருந்ததும் இதைச் சமாளிக்க ஓரளவு உதவியது எனலாம்.

விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் பற்றிய சர்வதேச பிரச்சாரம் புலத்துத் தமிழர்களுக்குக் குழப்பத்தையும் கலக்கத்தையும் ஏற்படுத்தியது. சர்வதேசச் சமூகமும் ஏனைய சிறுவர் உரிமைகளை அசட்டை செய்துவிட்டு இதை மட்டும் மிக மூர்க்கமாக முன்னெடுத்தார்கள். விடுதலைப்புலிகளை மோசமானவர்களாகக் காட்டுவதற்காகவே அவர்கள் இதைப் பூதாகரமாக்குகிறார்கள் என்று புலத்துத் தமிழர்கள் எண்ணினார்கள். அவர்கள் சர்வதேசச் சமூகத்தின் மேல் குற்றம்சாட்டினார்கள். நான் வன்னிக்குச் சென்ற போது சிறுவர் போராளிகள் என்பதைப் பற்றி அங்கு வரும் புலத்துத் தமிழரால் அதிகம் அலசப்பட்டாலும் எனக்கு இது ஒரு புரியாத புதிராகவே இருந்தது. 2005ம் ஆண்டு எனக்குத் தெரிந்திருந்த சில உறுப்பினர்களுடன் இதுபற்றிப் பேசியபோது சிறுவர் போராளிகள் இணைவதற்கான மூன்று வகையான காரணங்கள் எனக்குத் தென்பட்டன. இவை பொருளாதாரம், போர் அழிவுகள், விடுதலைப்புலிக் கலாச்சாரம் ஆகியன. சிறுவர் போராளிகள் பிரச்சாரத்தில் சர்வதேச முன்னெடுப்பாளர்களாகச் செயற்பட்ட யூனிசெப் உட்பட்ட அனைத்து அமைப்புக்களுக்கும் சிறுவர் போராளிகளை உருவாக்கும் இந்த விசைகள் முக்கியமானவையாகப் படவில்லை. கிரேசா மசேல் என்பவர் 1996 ஆண்டில் எழுதிய அறிக்கையே முதலில் சிறுவர் போராளிகள் என்னும் சமூக பிரச்சனைக்கும் சமூகத்தில் இதை உருவாக்கும் ஏனைய அழுத்தங்களுக்கும் உள்ள தொடர்பைக் கோடிட்டுக் காட்டியது. ஆனால் சர்வதேச சமூகம் இவற்றைப் புறந்தள்ளிவிட்டு 18 வயதுக்குக் குறைந்தவர்களை இணைப்பதே மனிதாபிமானத்திற்கு எதிரான பெரிய குற்றம் என்னும் கணக்கில் பிரச்சாரத்தை முன்னெடுத்தது. பிற்காலத்தில் ஒரு ஐநா பணியாளர் தனிப்பட என்னிடம் ''சிறுவர் போராளிகள் என்பது கவர்ச்சியான ஒன்று'' என்று வர்ணித்தபோது சர்வதேச மட்டத்தில் இதற்கிருந்த கவர்ச்சி பற்றிய ஒரு தெளிவு எனக்குண்டாயிற்று.

போர்நிறுத்த ஒப்பந்தத்திற்குப் பின் சிறுவர் போராளிகளை இணைப்பதை நிறுத்துமாறு சர்வதேசத்திடமிருந்து விடுதலைப் புலிகளுக்குக் கடும் அழுத்தங்கள் வந்தன. தாம் இதை நிறுத்திவிட்டதாக விடுதலைப்புலிகள் சொல்லி வந்தார்கள். தாம் இவ்வழக்கத்தை நிறுத்திவிட்டோம் என்பதற்கு ஆதாரமாக, விடுதலைப்புலிகளும் இடையிடையே சிறுவர் போராளிகளை விடுவித்தார்கள். முதலில் 2003ம் ஆண்டின் யூனிசெப் நிறுவனத்தினுடன் இணைந்த செயற்திட்டத்தினூடாகவும் பின்னர் நிசோரினூடாகவும் விடுவித்தார்கள். ஐநா பாதுகாப்புச் சபையின் ஒரு

திட்டத்தினூடாக சிறீலங்காவில் சிறுவர் போராளிகள் இணைக்கப்படுவதைக் கண்காணிக்க அமர்த்தப்பட்ட யூனிசெப் நிறுவனம் மென்மேலும் சிறுவர்கள் இணைக்கப்படுகிறார்கள் என்ற தரவுகளை வெளியிட்ட வண்ணம் இருந்தனர். தமிழ் ஆதரவாளர்களுக்கு இது குழப்பத்தையும் விசனத்தையும் ஏற்படுத்தியது. தமிழீழத்தில் யூனிசெப்பின் பணிபற்றி நன்கு அறிந்த சிறுவர்களின் பெற்றோரும் சிறுவர்கள் இணைக்கப்படுவதைப் பற்றித் தொடர்ச்சியாக யூனிசெப்புக்கு அறிவித்து வந்தார்கள்.

போர்நிறுத்தக் கண்காணிப்புக்குழு வந்திறங்கியதும் சிறுவர் போராளிகள் என்னும் விடயத்தில் வேறொரு பரிமாணமும் சேர்ந்து கொண்டது. கண்காணிப்புக்குழு சிறுவர்கள் இணைக்கப்படுவதை ஒரு போர்நிறுத்த மீறலாகவும் கணிப்பிட ஆரம்பித்தது. விடுதலைப்புலிகளுக்கு எதிராகப் பட்டியலிடப்பட்ட போர்நிறுத்த மீறல்களில் ஒரு பெரிய விகிதாசாரம் சிறுவர் போராளிகளின் இணைப்பாகவே இருந்தது. இதை ஒரு போர்நிறுத்த மீறலாகக் கணிப்பது பற்றிய விவாதம் நீண்டகாலத்துக்குத் தொடர்ந்தது. இப்போது சிறுவர் போராளிகள் என்பது விடுதலைப்புலிகளுக்கு மிகப்பெரிய முக்கியத்துவம் உள்ளதாக மாற்றப்பட்டுவிட்டது.

நிசோரும் சிறுவர் போராளி இணைப்புப் பற்றிய முறைப்பாடுகளைக் குடும்பங்களிடமிருந்து பெற்று அவற்றைத் தீர்க்க முனைந்தது. நிசோரின் முயற்சி 50 சதவீத வெற்றியையே கண்டது. இது ஏன் என்பது எனக்கு அப்போது விளங்கவில்லை. வன்னிக்குப் புதியவரான எனக்கு இதன் பின்னணியிலுள்ள காரணங்களை அறியும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. சிறுவர் போராளிகளின் கதைகளை அவர்களின் வாய்மொழி மூலமாக வெளியிட்டால் வெளியுலகத்திற்கு உண்மைநிலை தெரியவரும் என்று நிசோரில் சிலர் கருதினார்கள். இதை ஒரு திட்டமாகச் செயற்படுத்தும் முன்னரே நான் நிசோரை விட்டு விலகிவிட்டேன். இப்போது சிந்தித்தால் இம்முயற்சியும் வீணானதாகவே இருந்திருக்கும் என்று தோன்றுகிறது. ஏனெனில் இதைப்பற்றிய சர்வதேசத்தின் நிலைப்பாடு எவ்வளவு கடுமையானது என்று பின்னர் என்னால் விரிவாக அறியமுடிந்தது.

நிசோரில், சிறுவர் போராளிகள் விடுவிப்பு கிளிபாதரின் கண்காணிப்பில் நடந்தது. நானும் இச்செயற்பாட்டை அவதானித்தேன். சிறுவர் இல்லங்களில் கண்டறிந்த நிலைமையும் நிசோரில் சிறுவர் விடுவிப்பின் போது கண்டறிந்தவையும் ஒத்திருந்தன. விடுவிக்கப்பட்ட அநேகமான சிறுவர்கள் போரினால்

மிகவும் பாதிக்கப்பட்ட குடும்பங்களிலிருந்தே வந்திருந்தனர். இருந்தாலும் சிறுவர் போராளிகள் பற்றிய முழுமையான விளக்கம் எனக்கில்லை என்பதும், இது சிக்கலான ஒன்று என்பதும் எனக்குப் புரியத் தொடங்கியது. தனியார் வீடுகளில் வேலைக்கு அமர்த்தப்பட்ட சிறுவர்கள் அங்கிருந்து ஓடிச்சென்று அமைப்பில் இணைந்தபின் விடுவிக்கப்பட்டார்கள். வசதியான குடும்பங்களிலிருந்து ஓடிச்சென்று நாட்டுக்காகப் போராட வேண்டும் என்று சொல்லி அமைப்பில் இணைந்த பதின்பருவப் பெண்களும் விடுவிக்கப்பட்டார்கள். அப்பெண்கள் ஏதோ ஒன்றிலிருந்து தப்பியே அமைப்பை நோக்கி ஓடுகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. அமைப்பில் ஓடிச்சென்று இணைந்துவிட்ட தம் பிள்ளைகளுக்காக அழுத பெற்றோர் பிள்ளைகளை அமைப்பிடம் தள்ளிய காரணங்களைத் தெரியாமல் இருந்தனர்.

நிசோரில் இருந்த இக்காலத்தில் சிறுவர்களைப் பற்றிக் கலந்துரையாடுவதற்குத் தமிழ்ச்செல்வனால் கூட்டப்பட்ட முதல் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். சிறுவர் சார்ந்த வேலைகள் செய்யும் வேறு பல பொதுமக்களும் வந்திருந்தனர். சிறுவர் பாதுகாப்பு ஆணையம் ஒன்றைத் தொடங்குவதற்கான முதற்கூட்டமாக இது கருதப்பட்டது. இதற்கு மேல் அக்காலத்தில் இவ்வாணையம் பற்றிய நடைமுறைகள் எதுவும் நடக்கவில்லை. ஆனால் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைவதற்கு 17 வயதாகி இருக்கவேண்டும் என்ற கொள்கையை அவர்கள் உண்மையாக அமுல்படுத்த விளைகிறார்கள் என்பதை நான் தமிழ்ச்செல்வனிடமிருந்து நேரடியாகக் கேட்டறிந்து கொண்டேன். அப்படியாயின் இது ஏன் சரியாக அமுல்படுத்தப்படவில்லை என்பது பற்றிய குழப்பம் எனக்கு மேலும் அதிகரித்தது.

நிசோரிலிருந்து விலகிச் சமாதானச் செயலகத்தில் பணியாற்ற ஆரம்பித்த பின்னரே பல விடுதலைப்புலி உறுப்பினர்கள் கருத்துக்களை நேரடியாகக் கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தால் நிலைமை பற்றிய தெளிவு உருவாகத் தொடங்கியது. உறுப்பினர்களுக்கு இது பற்றிய ஈடுபாடும் கடப்பாடும் அசமந்தமாகவே இருந்தது. சிறுவர் போராளிகள் என்னும் இக்கருத்து அவர்களுக்கு அர்த்தமற்றதாகத் தோன்றியது. இது அவ்வமைப்பில் ஊறிய ஒரு தசாப்தகால, 2001ம் ஆண்டுக்கு முற்பட்ட கலாச்சாரத்திலிருந்து பிறக்கிறது என்பதும் எனக்குத் தெளிவாயிற்று. ஐநாவின் சிறுவர் உரிமைகளுக்கான சாசனத்திற்கு மேலதிகமாக சேர்க்கப்பட்ட இணைப்பில் அரசுசார்பற்ற ஆயுதக்குழுக்கள் மட்டும் 18 வயதிற்கு மேற்பட்டவர்களையே தமது அமைப்பில் சேர்க்கலாம்

என்ற விதி 2001ம் ஆண்டிலேயே முதன்முதலில் சேர்க்கப்பட்டது. விடுதலைப்புலிகள் அமைப்பின் சிறுவர் போராளிகள் என்னும் அத்தியாயத்தில் உள்ள இப்பாரிய உண்மை எல்லோராலும் மறக்கப்பட்டுவிட்டது.

விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் பற்றி இதுவரை சொல்லப்படாத சில முக்கியமான கருத்துக்களைக் கூற என்னால் முடியும் என்பதை 2006ம் ஆண்டு நடுப்பகுதியில் அறிந்தேன். அவை விடுதலைப்புலிகளாலேயே சொல்லப்படுவது நல்லது என்று கருதினேன். விடுதலைப்புலிகளின் அறிக்கை[15] போல் ஒரு அறிக்கை தயாரித்தேன். இதை விடுதலைப்புலிகள் வெளியிடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கவில்லை. எனக்கு வியப்பளிக்கும் வகையில் தமிழ்ச்செல்வனுக்கு அவ்வறிக்கை மிகவும் பிடித்திருந்தது. எழுத்து நடையில் சில மாற்றங்களுடன் அது ஆகஸ்ட் 2006ல் வெளியிடப்பட்டது.

சிறுவர் போராளிகள் பற்றிய விடுதலைப்புலிகள் மேலான அழுத்தங்கள் உச்சக்கட்டத்திற்குப் போயின. இருந்தும் அதை நிறுத்துவதற்கான முழுவேகச் செயற்பாடு 2006ம் ஆண்டின் இறுதியில் ஐநா செயலாளரின் விசேட பிரதிநிதியாக ‘அலன் ரொக்’ என்பவர் வன்னிக்கு வந்துபோன பின்னரே தொடங்கியது. அவரின் வருகையின் போது புலித்தேவன் என்னிடம் வந்து சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தின் அலன் ரொக்கினுடனான சந்திப்புக்கு நான் தலைமை தாங்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இதன்பின்னரே நான் சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தின் சார்பில் விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் விடுவிக்கும் செயற்பாட்டைக் கண்காணிக்கும் வேலையை ஆரம்பித்தேன்.

அலன் ரொக்கின் வருகையின் பின் சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தைப் பலப்படுத்துவதற்குத் தமிழ்ச்செல்வன் முயற்சித்தார். இதற்கான ஒரு சாசனத்தையும் உருவாக்கி அதன் அங்கத்துவத்தையும் பெரிதாக்க விரும்பினார். இவ்வமைப்புக்கு வேண்டிய ஆதாரங்களை விடுதலைப்புலிகள் கொடுக்கவேண்டும் என்று யூனிசெப்பும் வலியுறுத்தியது. ஆனால் இம்முயற்சிகள் எதுவும் பெரிதாக வெற்றியளிக்கவில்லை. சிறுவர் பாதுகாப்பு ஆணையம் சிறுவர் போராளிகள் சார்ந்தவற்றுக்கு அப்பால் எதையும் செய்யவில்லை.

சிறுவர் பாதுகாப்பு ஆணையத்திற்குப் பொறுப்பை ஏற்கும்படி புலித்தேவன் என்னைக் கேட்டபின், விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் பற்றிய மெத்தனப் போக்கிற்கு என்னால் உடந்தையாக இருக்கமுடியாது என்பது எனக்குத் தெரியும். அமைப்பின் முக்கிய தலைவர்களுக்கும் அது தெரிந்திருக்கும். இப்பணியில், இதற்காக

அமர்த்தப்பட்ட விடுதலைப்புலிகளின் பொறுப்பாளர் ஒருவருடன் இணைந்து வேலை செய்தேன். இவரின் அலுவலகமும் சமாதானச் செயலகத்திற்கு அடுத்தே இருந்தது. ஒரு வருடத்திற்கும் மேலாக ஒவ்வொரு வாரமும் தொடர்ச்சியாக சிறுவர் போராளிகளை நிறுத்தும் வேலையின் முன்னேற்றங்கள் பற்றி யூனிசெப்புடன் கலந்துரையாடினோம்.

விடுதலைப்புலிகள் யூனிசெப் ஆகிய இருதரப்பினரோடும் எனக்கு முரண்பாடுகள் தோன்றின. சில சந்தர்ப்பங்களில் நியாயமற்றவை என்று எனக்குத் தோன்றியவற்றை அவர்கள் புரிந்து கொள்ளாததால் வாய்விட்டு அழுதேன். ஒருதடவை யூனிசெப்பின் ''பணிப்பாணை'' மனப்பாங்கு சிறுவர்களின், முக்கியமாகப் பெண்களின், யதார்த்த நிலைமையைப் புறக்கணிக்க விழைந்தபோது அழுதேன். மற்றொரு முறை விடுதலைப்புலிகள் எனது ''அதிகாரத்தைப்'' புறக்கணித்துச் சில நடவடிக்கைகள் எடுத்ததால் அழுதேன். 2007ம் ஆண்டு முழுவதும், விடுதலைப்புலிகள் மீண்டும் பழைய மெத்தனப்போக்கிற்குத் திரும்பிப்போகவிடாமல் தடுப்பதே, என்னை முழுமையாக ஆட்கொண்ட ஒரு பணியாக இருந்தது.

சிறுவர் போராளிகளை இணைத்ததற்காக விடுதலைப்புலிகள் அமைப்பின் நடுத்தரப் பொறுப்பாளர்கள் தண்டிக்கப்பட்டார்கள் என்று முதன்முதலில் நான் கேள்விப்பட்ட போது அமைப்பு தன் மெத்தனப்போக்கைக் கைவிட்டு விட்டது என்பதற்கான முதல் ஆதாரமாக இதை எடுத்துக்கொண்டேன். அவர்களுக்குச் சமையலறைத் தண்டனையே கொடுக்கப்பட்டது. இது இளநிலைப் போராளிகளுக்குக் கொடுக்கப்படும் பொதுவான தண்டனை. நடுநிலைப் போராளிகளுக்கு இந்தத் தண்டனை கொடுக்கப்படும் போது இது பெரிதாகப் பேசப்பட்டது. தனது பொறுப்பின் கீழ் பணியாற்றும் போராளிகள் 17 வயதிற்கு ஒருமாதம் குறைந்த ஒருவரை அமைப்பில் இணைத்தாலும் தனது அடிவயிறு பயத்தினால் கலங்குகிறது என்று மகளிர் அணியின் முதுநிலைப் பொறுப்பாளர் ஒருவர் என்னிடம் சொன்னார்.

2006ம் ஆண்டின் இறுதியிலிருந்து 2007ம் ஆண்டு முழுவதும் விடுதலைப்புலிகள் 1990ம் ஆண்டுக்கு முன் பிறந்தவர்களையே அமைப்பில் இணைத்தார்கள். இது 17 வயதுக்கு மேற்பட்டவர்களை மட்டுமே இணைப்பதாக இருந்தது. இக்கொள்கை அமுல்படுத்தப்பட்ட காலத்திலேயே நான் சிறுவர்களை விடுவிக்கும் திட்டத்தைக் கண்காணிக்கத் தொடங்கினேன். இக்கொள்கையை விடுதலைப்புலிகள் தீவிரமாக அமுல்படுத்துகிறார்கள் என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. யூனிசெப் அமைப்பு இக்காலத்தில்

17 வயதில் இணைக்கப்பட்டவர்களையும் சிறுவர் போராளிகள் என்றே கணிப்பிட்டு அறிக்கை விடுத்தது.

தமிழ்ச்செல்வன் இக்கொள்கையில் உறுதியாக இருந்தார். இக்கொள்கையிலிருந்து விலகிய சந்தர்ப்பங்களை அவருக்குத் தெரிவிக்க எனக்குப் பல வழிகள் இருந்தன. விடுவிக்கப்பட வேண்டியவர்களினதும், புதிதாகச் சேர்க்கப்பட்ட சிறுவர்களினதும் புள்ளிவிபரங்களை அவரிடம் தொடர்ச்சியாகக் கொடுத்து வந்தேன். புதுப்பிக்கப்பட்ட இத்தகைய புள்ளிவிபரங்கள் இதற்குமுன் அவருக்குத் தொடர்ச்சியாக கொடுக்கப்படவில்லை. அவர் கொள்கையைத் தீவிரமாக அமுல்படுத்துவதற்கு இதுவும் உதவியது. அடிக்கடி சம்பந்தப்பட்டோரைக் கூட்டி இக்கொள்கையை நடைமுறைப்படுத்துவதில் இருந்த தாமதத்தைப்பற்றிய தன் அதிருப்தியை வெளியிட்டு வந்தார். 17 வயதிற்குக் குறைவானவர்கள் அமைப்பில் இணைக்கப்பட்டால், அவர்களின் குடும்பங்கள் முன்வந்து தம்மிடம் முறையிடும்படி சிறுவர் பாதுகாப்பு ஆணையம் ஈழநாதம் பத்திரிகையின் முன்பக்கத்தில் பெரிய அறிக்கையை வெளியிட்டது. இது மக்களுக்குப் பரவலாகத் தெரிய வந்தது. சிறுவர் போராளிகள் சார்ந்த விடுதலைப்புலிகளின் கலாச்சாரமும் கொஞ்சம் கொஞ்சமாக மாறத்தொடங்கியது. தம் அமைப்பு பல சமூக வேலைகளையும் செய்வதால் 17 வயதானோரை இணைப்பதற்குத் தமக்கு உரிமை உண்டென்ற ஒரு நிலைப்பாட்டை விடுதலைப்புலிகள் எடுக்க முயற்சித்தார்கள். ஆனால் சர்வதேசத்தின் கடுமையான நிலைப்பாட்டால் 2008ம் ஆண்டு ஆரம்பத்தில் இணைப்போரின் வயதை 18 ஆகவே மாற்றினார்கள்.

இத்திட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் பல யதார்த்தமான தடங்கல்கள் ஏற்பட்டன. ஆனால் யூனிசெப்பும் சர்வதேச ஊடகங்களும் இவ்வுண்மைகளையும் அமைப்பினுள் நடந்தேறிக் கொண்டிருந்த தீவிரமான வேலைத்திட்டங்களையும் புறந்தள்ளவிட்டு ‘விடுதலைப்புலிகள் சிறுவர்களை இணைக்கிறார்கள்’ என்று தொடர்ச்சியாகப் பிரச்சாரம் செய்தன. விடுதலைப்புலிகள் முன்னர் கொடுத்த வாக்கைக் காப்பாற்றவில்லை என்பதே தம் போக்கின் கடுமைக்குக் காரணம் என்று அவர்கள் சொன்னார்கள். அத்தகைய வாக்கு தாம் கொடுக்கவில்லை என்பது விடுதலைப்புலிகளின் வாதமாக இருந்தது.

அமைப்பினுள் சிறுவர் போராளிகளை இணைப்பதில்லை என்ற கொள்கையை நடைமுறைப்படுத்த இரண்டு வகையான வேலைத்திட்டங்கள் தேவைப்பட்டன. ஒன்று சிறுவர்களைப் புதிதாக இணைப்பதை நிறுத்துவது. மற்றது ஏற்கனவே இணைக்கப்பட்டோரை விடுவிப்பது. புதிதாக இணைப்பதை நிறுத்துவதற்குத் தான் பொறுப்பு

என்று தமிழ்ச்செல்வன் எனக்குச் சொன்னார். இதில் அவர் முழுவெற்றியும் கண்டார். இதை முழுமையாக செய்து முடிக்க 'அலன் ரொக்கின்' வருகைக்குப் பின்னும் சில மாதங்கள் எடுத்தன. அமைப்பில் இருந்த சிறுவர்களை விடுவிக்கும் செயற்பாடுகளைச் செய்து முடிப்பதற்கு மேலும் சிறிது காலமும் களங்களும் தேவைப்பட்டன. விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டிலிருந்த வன்னியிலேயே முதலில் இதற்கு வெற்றி கிட்டியது.

விடுதலைப்புலிகள் அமைப்பிலிருக்கும் சிறுவர் போராளிகள் பற்றிய பட்டியலில் மட்டக்களப்பு அம்பாறை மாவட்டத்தைச் சேர்ந்த மிகவும் வயது குறைந்த பல சிறுவர்களின் பெயர்கள் இருந்தன. அவர்களை இறுதியில் செஞ்சோலை, அறிவுச்சோலை என்ற இரண்டு சிறுவர் இல்லங்களில் கண்டுபிடித்தோம். 2004ம் ஆண்டு சுனாமியைத் தொடர்ந்து மட்டக்களப்பில் செஞ்சோலை சிறுவர் இல்லத்தின் ஒரு கிளை ஆரம்பிக்கப்பட்டது. இவ்விரு மாவட்டங்களிலும் பராமரிப்புக் கிடைக்காத சிறுவர்களை விடுதலைப்புலிகள் இச் செஞ்சோலைக் கிளையில் இணைத்தார்கள். பின்னர் விடுதலைப்புலிகள் மட்டக்களப்பைக் கைவிட்டபோது இச்சிறுவர்கள் வன்னிச் செஞ்சோலைக்கு மாற்றப்பட்டார்கள். இச்சிறுவர்களை இவர்களின் பெற்றோரிடம் இணைக்கும்வரை தம் சிறுவர் போராளிகள் பட்டியலிலிருந்து நீக்குவதற்கு யூனிசெப் அமைப்பு மறுத்தது. ஆனால் யூனிசெப் அமைப்பாலோ அல்லது செஞ்சிலுவைச் சங்கத்தாலோ இச்சிறுவர்களை அவர்களின் பெற்றோருடன் இணைக்க முடியவில்லை. சில சிறுவர்களின் குடும்பங்களையே இவ்வமைப்புக்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. சுனாமி அழிவிற்குப் பின் சில குடும்பங்கள் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. குடும்பங்களால் கண்டுபிடிக்கப்பட்ட சிறுவர்களைக்கூட கிழக்கிற்கு அழைத்துச்செல்ல லங்கா அரசு அனுமதி கொடுக்கவில்லை. இதனால் விடுதலைப்புலிகளின் கடும் முயற்சிக்குப் பின்னரும் யூனிசெப்பின் பட்டியலின்படி ''விடுதலைப்புலிகள் அமைப்பில் இருந்த மிகவும் வயது குறைந்த சிறுமிக்கு 7 வயது''. இவரைச் செஞ்சோலை சிறுவர் இல்லத்தில் எனக்கு நன்றாகவே தெரியும். 2007ம் ஆண்டில் கூடச் சர்வதேச ஊடகங்கள் யூனிசெப்பின் கூற்றாக ''இவ்வுண்மையை'' வெளியிட்டன. இதுபற்றி லங்காவிற்கான யூனிசெப்பின் தலைவருக்கு நான் எதிர்ப்புத் தெரிவித்த பின்னர் அக்கேள்வியை ஊடகங்கள் கேட்கும் போது தங்களால் வேறு பதில் கொடுக்க முடியாது என்றார். ''இவ்வுண்மையின்'' பின்னணி யூனிசெப்பிற்கு நன்றாகத் தெரிந்திருந்தும் இக்கவர்ச்சியான செய்தியை வெளியிடுவதைத் தடுக்க அவர்களால் முடியவில்லை.

இதுபோலவே இன்னும் பல பொய்யான சர்வதேச ஊடகச் செய்திகள், சிறுவர் போராளிகள் பற்றிய ஒருபக்கச் சார்பான ஆரோக்கியமற்ற கவர்ச்சியை, மக்களை ஈர்த்துத் திசைதிருப்பும் தன்மையை தெளிவாக எடுத்துக்காட்டின. அவற்றில் சிலவற்றை சொல்வது இங்கு பொருத்தமானது. மூளை வளர்ச்சி சிறிது குன்றிய 9 வயதுச் சிறுமி ஒருத்தி தன் வீட்டில் துன்புறுத்தப்பட்டிருக்கிறாள். அவள் சென்ற பாடசாலையின் ஆசிரியர்கள் இச்சிறுமியின் பிரச்சினையை அவதானித்தனர். ஒருநாள் இரவு இச்சிறுமி வீடு திரும்பாமல் தனது வகுப்பறையிலேயே தங்கிவிட்டாள். அப்பிரதேசத்தின் விடுதலைப்புலிகள் பொறுப்பாளர் சிறுமியை ஒரு சிறுவர் இல்லத்தில் தங்க வைத்தார். சிறுமியின் குடும்பத்தினர் எவரோ இதுபற்றி யூனிசெப்பிடம் முறையிட்டனர். சிறுமியின் பின்னணி எதையும் விசாரிக்காமல் அவளும் யூனிசெப்பின் 'சிறுவர் போராளி' பட்டியலில் இணைக்கப்பட்டாள். இச்சிறுமிக்குப் பாதுகாப்பான குடும்பச் சூழல் இல்லாததால் இறுதி வரையும் இச்சிறுவர் இல்லத்திலேயே அவள் பராமரிக்கப்பட்டாள். எமது கடும் முயற்சியின் பின்னரே இச்சிறுமியை யூனிசெப்பினர் தமது பட்டியலில் இருந்து எடுத்தனர்.

விடுதலைப்புலிகளின் நிதித்துறைப் பிரிவில் ஒரு 17 வயது வாகன ஓட்டுனர் பணியாற்றினார். இவர் 2007 ஆண்டில் லங்கா ராணுவத்தின் ஒரு கிளைமோர் தாக்குதலில் கொல்லப்பட்டார். இவரை கொல்லப்பட்ட சிறுவர் போராளி என்று யூனிசெப் அறிக்கை விட்டது. சாவுக்குப் பின் அவரின் குடும்பத்தை நான் சென்று சந்தித்தேன். குடும்பத்தில் இவரே மூத்த பிள்ளை. தாயுடன் பல தம்பி தங்கைகளையும் கொண்ட அக்குடும்பத்துக்கு வருமானம் ஈட்டும் ஒரே நபர். அவரின் குடும்பத்துக்கு விடுதலைப்புலிகளிடமிருந்து தொடர்ந்து கொடுப்பனவு செல்வதற்காக என்றே அவரைப் பணியிலிருக்கும் போது கொல்லப்பட்ட ஒரு துணைப்படை வீரர் என்று அறிவித்தனர். இந்த அறிவிப்பை மட்டும் வைத்துக்கொண்டு, இதன் பின்னணியை அறியாமல் – அறிய விரும்பாமல் – யூனிசெப் அவரை கொல்லப்பட்ட ஒரு 'சிறுவர் போராளி' என்றே அறிக்கை விட்டனர். இதுபற்றிய ஒரு விரிவான அறிக்கையை சமாதானச் செயலகத்தின் இணையத்தில் நாங்கள் வெளியிட்டோம்.

இதே ஏப்பிரல் 2007ல், விடுதலைப்புலிகள் மட்டக்களப்பில் பல சிறுவர் போராளிகளை இதற்கு முதல் மாதத்தில் இணைத்ததாக அசோசியேற்றட் பிரஸ் எனும் சர்வதேச ஊடகம் யூனிசெப்பை மேற்கோள்காட்டி செய்தி வெளியிட்டனர். இந்நாட்களில் யூனிசெப் ஒவ்வொரு வாரமும் அதற்கு முதல் வாரத்தில் இணைக்கப்பட்ட

சிறுவர் போராளிகளின் பட்டியலை எனது பெயருக்கு அனுப்பி வந்தனர். அசோசியேற்றட் பிரஸ் குறிப்பிட்ட அம்மாதத்தில் மட்டக்களப்பில் எந்தவொரு சிறுவர் போராளிகளும் இணைக்கப்பட்டதாக எனக்கு யூனிசெப் அறிவிக்கவில்லை. அசோசியேற்றட் பிரஸ் யூனிசெப்பின் பெயரைப் பொய்யாகக் குறிப்பிட்டிருக்க வேண்டும். அல்லது யூனிசெப் பொய் சொல்லி இருக்கவேண்டும். இதுபற்றியும் ஒரு விரிவான அறிக்கையைச் சமாதானச் செயலகத்தின் இணையத்தில் வெளியிட்டோம்.

சிறுவர் போராளிகள் அமைப்பிலிருப்பதை நிறுத்துவதற்கு விடுதலைப்புலிகள் தீவிரமாக வேலைசெய்து முழு வெற்றியும் கண்ட காலமான 2007 ஆண்டுப் பிற்பகுதியில் நியூசிலாந்து ஹேரால்ட் என்ற பத்திரிகையில் ஒரு மோசமான கட்டுரை வெளிவந்தது. யதார்த்தத்திற்குப் புறம்பான இக்கட்டுரையை நியூசிலாந்து யூனிசெப் அமைப்பு வெளியிட்டது. இதைப் பற்றி யூனிசெப்பிடம் கேள்விகள் கேட்டேன். அவர்கள் அந்த அமைப்பிற்கும் தமக்கும் தொடர்பில்லை என்பது போல் பேசினார்கள். வளர்ச்சி அடைந்த நாடுகளில் உள்ள யூனிசெப் அமைப்புக்கள் நிதி திரட்டுவதற்காகவே உருவாக்கப்பட்டன என்றும் அவர்கள் சுதந்திரமாக செயற்படுபவர்கள் என்றும் கூறினார்கள். சிறுவர் போராளிகள் என்னும் கவர்ச்சியான விடயம் நிதி திரட்டலுக்கு எவ்வளவு தூரம் உதவுகிறது என்பது அப்போது எனக்குப் புரிந்தது.

2007ம் ஆண்டின் முடிவில் அமைப்பில் இணைவதற்கான வயது 18 ஆக மாற்றப்பட்டு விட்டது. யூனிசெப்பும் சர்வதேச ஊடகமும் விருப்பமின்றி விடுதலைப்புலிகளின் மாற்றத்தை ஏற்கத்தொடங்கினர். சமாதானச் செயலகத்தின் இணையத்தில் யூனிசெப்பின் சிறுவர் போராளிகள் பட்டியலை மறுதலித்து உண்மையான நிலவரத்தை அட்டவணையிட்டுத் தொடர்ச்சியாக அறிக்கைகள் எழுதினேன். விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் என்ற குற்றச்சாட்டுக்கு யூனிசெப்பின் பட்டியலே சர்வதேசத்தின் ஆதாரமாக இருந்து வந்தது. இதை மறுதலித்து இறுதியாக நான் எழுதிய பட்டியலைக் கீழே காணலாம்.

எனது கருத்தின்படி சிறுவர் போராளிகளை அமைப்பில் இல்லாமல் செய்யும் வேலைத்திட்டத்தை முன்னின்று செயற்படுத்தியவர் தமிழ்ச்செல்வனே. அவரே குடும்பத்துக்கு ஒருவரை இணைக்கும் திட்டத்தையும் செயற்படுத்தினார். அமைப்புக்கு ஆட்சேர்க்கும் நடவடிக்கைகள் முழுவதையும் தனது கட்டுப்பாட்டிற்குள், அதாவது அரசியல்துறையின் கையில், வைத்திருந்தார். நவம்பர் 2007ல் அவர் கொல்லப்பட்ட பின்னர்

விடுதலைப்புலிகளின் ஏனைய துறைகளிலிருப்பவர்களும் சிறுவர்களை இணைக்கிறார்கள் என்ற முறைப்பாடுகள் சில வந்தன. அது எமக்குப் பெரிய தலையிடியாக இருந்தது. ஏனெனில் முன்போல் இணைத்தவர்களைஅடையாளப்படுத்தவும் இணைக்கப்பட்டவர்களை விடுவிக்கவும் இருந்த அரசியல்துறை சார்ந்த வழிகள் இப்போது போதாமல் இருந்தன. 2008ம் ஆண்டின் இறுதியில் யூனிசெப் உட்பட்ட ஐநா அமைப்புக்களும் ஏனைய சர்வதேச நிறுவனங்களும் வன்னியிலிருந்து பின்வாங்கியபோது விடுதலைப்புலி உறுப்பினர்கள் மிகவும் ஆத்திரமடைந்தார்கள். யூனிசெப்பின் சிறுவர் போராளிகளை நிறுத்தும் செயற்பாட்டைப் பற்றிய கடுமையான விமர்சனங்களும் அதை எதிர்க்கும் மனப்பாங்கும் மேலோங்கியது. வன்னியிலுள்ள அத்தனை சிறுவர்களையும் ஒரு இனப்படுகொலைக்குள் கைகழுவி விட்டுப் பின்வாங்கும் இவர்கள் எதற்காக சிறுவர் போராளிகளைப்பற்றி அத்தனை கரிசனை காட்டினார்கள் என்ற வாதம் மீண்டும் மீண்டும் வைக்கப்பட்டது. இதற்கெதிராக நாங்கள் வாதாடினோம். புதிய அரசியல்துறைப் பொறுப்பாளர் நடேசனும் எங்களுக்கு ஆதரவு தந்தார். சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தின் சிறுவர் போராளிகள் சார்ந்த வேலைகள் யூனிசெப்பின் பின்வாங்கலுக்குப் பின்னும் தொடர்ந்தன. தொடர்ச்சியான குண்டுவீச்சுக்கள் எமது வேலைக்குத் தடங்கலாக இருந்தது. கிளிநொச்சி இடப்பெயர்வின் பின் என்னால் இவ்வேலைத் திட்டத்தில் பங்கெடுக்க முடியவில்லை. எனக்குத் தெரிந்தமட்டில் இதன்பின் சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தின் வேலைகள் மிகவும் பலவீனமடைந்துவிட்டன.

சிறுவர் பாதுகாப்பு மையத்தில் எனக்குக் கிடைத்த அனுபவங்கள் மிகவும் பெறுமதியானவை. ஆட்சேர்ப்புப் பற்றி விடுதலைப்புலி உறுப்பினர்களுடன் ஆழமாகக் கலந்துரையாடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. சிறுவர் போராளிகளாக இணைந்தவர்களின் குடும்பங்களைச் சந்தித்து அவர்களின் பின்னணியையும் என்னால் அறிய முடிந்தது. சர்வதேசத்தின் சிறுவர் போராளிகள் என்ற தனிவிடய பிரச்சாரத்தின் நியாய அநியாயங்கள் பற்றியும் என்னால் ஆழமாக அறிய முடிந்தது. தனிவிடய பிரச்சாரம் மனித வாழ்க்கையின் ஒன்றோடொன்று இணைந்த பிரச்சினைகளையும் சிக்கல்களையும் புறம்தள்ளி ஒரு விடயத்தை மட்டும் பெரிதுபடுத்திப் பிரசாரம் செய்வதாகும். அதனால் கிடைக்கக் கூடிய வெற்றி பற்றியும் அது ஏற்படுத்தும் சிக்கல்கள் பற்றியும் என்னால் அறிய முடிந்தது. இவை ஒரு சாராரின் நியாயமற்ற சுயநல தேவைகளைப் பூர்த்தி செய்ய ஏதுவாக இருப்பதையும் என்னால் அறிய முடிந்தது.

| Snapshot of UNICEF underage database as at end of May 2008 of recruitment prior to 2008 | Amparai | Batticaloa | Jaffna | Trinco | Vanni | Vavuniya | Total |
|---|---|---|---|---|---|---|---|
| Totals: | 20 | 53 | 6 | 14 | 17 | 15 | 125 |
| Category-1 Based on information provided by UNICEF in the past, CPA speculates that these 27 children, who were released prior to 2008, were not verified due to prevailing security concerns for UNICEF staff and displacement of the families concerned. | 1 | 1 | 1 | 1 | 15 | 8 | 27 |
| Category-2 These 6 children who have always been cared for in the children's home continue to be in the UNICEF database and they too face the same plight as those in category-3. | 5 | 1 | | | | | 6 |
| Category-3: Another 27 children have been identified by the CPA but remain in the UNICEF list because of the prevailing situation is preventing them from being united with their families despite the efforts being made by the ICRC and UNICEF. | 6 | 17 | 2 | 2 | | | 27 |
| Category-4 includes two persons who are indeed older than the age given by UNICEF. | | | | | 2 | | 2 |
| Category-5: There remain a further 63 children whom CPA has not traced within the LTTE. UNICEF has not provided CPA with the additional information that was sought to trace these children. 53 of these children are from the eastern districts of Amparai, Batticaloa and Trincomalee. CPA strongly suspects that a large percentage of these 63 children are indeed not with the LTTE. | 8 | 34 | 3 | 11 | | 7 | 63 |
| Category-6: No advocacy cases: In addition to the above five categories, UNICEF numbers also include few cases of underage recruitment whose families allegedly do not want advocacy with the LTTE. This number presently stands at 7. | | | | | | | |

# சமூக நீதி விவாதங்கள்

**ச**மூக நீதியைத் தழுவிய விவாதங்களில் விடுதலைப்புலிகள் தொடர்ந்து ஈடுபட்டு வந்ததில் ஆச்சரியம் எதுவுமில்லை. இவர்களின் விவாதங்கள் உலகில் பொதுவாகக் காணப்படும் கோட்பாடுகள் பற்றிய விவாதங்களாக மட்டுமில்லாமல் உடனடியாக நடைமுறைப்படுத்துவதற்கான கொள்கைகள் பற்றியதாகவும் இருந்தன. இக்காரணத்தால் தீவிரமாகவும் ஆர்வத்துடனும் இவ்விவாதங்களில் இவர்கள் பங்குபற்றினர். விடுதலைப்புலிகளின் ஒரு பிரிவு தேசத்திற்கான சட்டங்களைச் சீர்செய்வதிலும், புதிய சட்டங்களை ஆக்குவதிலும் தொடர்ச்சியாக ஈடுபட்டு வந்தது இவ்விவாதங்களுக்கு மேலும் மெருகூட்டின. வல்லமையான பல சட்ட நிபுணர்களைத் தமிழர் சமூகம் கொண்டிருந்தாலும் வன்னியிலிருந்த சட்ட நிபுணர்கள் அனுபவம் குறைந்தவர்களாவே இருந்தனர். இருந்தும் இச்சமூகமும் அதன் அரசும் எளிமையானதாகவும் விவாதங்கள் சீரிய நோக்குடையனவாகவும் இருந்ததால் காத்திரமானதாகவே இருந்தன. சில உறுப்பினர்கள் இவ்விவாதங்களில் அதிகமான ஆர்வத்துடன் ஈடுபட்டார்கள் எனலாம். சிறுவர் போராளிகள், ஊடகச் சுதந்திரம், கிரிக்கெட், பெண்ணுரிமை, வீட்டுவேலைப் பளுவைப் பிரித்தல், குழந்தைகளுக்குத் தமிழ் பெயரிடுதல், மரபார்ந்த உடைகள், மொழியாக்க நுட்பங்கள், செய்தித் திரிபாக்கல், கட்டாய ஆட்சேர்ப்பு, சட்டத்தில் பெண்கள் பாதுகாப்புப் போன்ற பல விவாதங்களை இக்காலத்தில் நான் கேட்டிருக்கிறேன். சிலவற்றில் பங்குபற்றியும் இருக்கிறேன். சிறுவர் போராளிகள் பற்றியும் பெண்கள் பற்றியும் தனியாக வேறு இடங்களில் விவரிக்கிறேன். ஏனையவற்றை இங்கு பார்க்கலாம்.

நிசோரில் பணியாற்றியபோது பொதுமக்களின் சுமைகளையும் பாதிப்புக்களையும் பற்றி அறியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நிசோரின் பணியாளர்கள் 20க்கும் 30க்கும் இடைப்பட்ட வயதினராய் அச்சூழலிலேயே வளர்ந்தவர்களாய் இருந்தனர். இச்சூழல் அவர்களின் வளர்ச்சியை மட்டுப்படுத்தியிருந்தாலும் அவர்கள்

ஆற்றல் உள்ளவர்களாகவும் சமூகத்தில் நிசோரின் பங்கு பற்றிய தெளிவு உள்ளவர்களாகவும் இருந்தனர். அவர்கள் தீவிரமான விவாதங்களில் ஈடுபட்டதை நான் காணவில்லை. சமூகத் தலைவர்களைக் கொண்ட ஒரு செயற்குழு நிசோருக்கு இருந்தது. இதன் உறுப்பினர்கள் தமிழீழத்தின் பல பாகங்களிலும் இருந்ததால் இச்செயற்குழு சில தடவைகளே ஒன்று கூடியது. இவையும் 2006ம் ஆண்டில் ஏ–9 வீதி மூடிய பின்னர் இடம்பெறவில்லை. இச்செயற்குழுவும் தீவிரமாக விவாதங்களில் ஈடுபடவில்லை. நான் சமாதானச் செயலகத்தில் பணிசெய்ய ஆரம்பித்த பின்னரே விடுதலைப்புலி உறுப்பினர்களுடன் கலந்துரையாடும் சந்தர்ப்பங்கள் அதிகம் கிடைத்தன. சமாதானச் செயலகத்தில் பணியாற்றிய விடுதலைப்புலி உறுப்பினர்களும், அங்கு தொடர்ச்சியாக வந்து சென்ற விடுதலைப்புலி உறுப்பினர்களும் பொதுவாக வாசிப்பில் ஆர்வமுள்ளவர்களாகவும் ஆங்கில அறிவுள்ளவர்களாகவும் இருந்ததை நான் அவதானித்திருக்கிறேன்.

விடுதலைப்புலி உறுப்பினர்கள் மிகவும் விருப்பமாக ஈடுபடும் ஒரு பொழுதுபோக்கைப் பற்றி இங்கு குறிப்பிட வேண்டும். இது ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொருந்தும். தமது கடந்தகாலப் போராட்ட நினைவுகளை மீட்டெடுத்து அதை நகைச்சுவையுடன் சக உறுப்பினர்களோடு பகிர்ந்து கொள்வதில் இவர்கள் மிக ஆர்வமுள்ளவர்களாக இருந்தனர். இதில் பல மணித்தியாலங்களையும் செலவு செய்தனர். இவர்களின் சிரிப்புக் கலந்த இவ்வுரையாடல்களைக் காண்பவர்களுக்கு இவர்கள்தான் உலகத்திலேயே மிகவும் மகிழ்ச்சியானவர்கள் என்று எண்ணத் தோன்றும். மாவீரராகிவிட்ட தம் நண்பர்கள், கடந்தகால கள மோதல்கள், லங்கா ராணுவத்திடம் பிடிபடாமல் தப்பி வந்த அனுபவங்கள், பொறுப்பாளர்களால் கொடுக்கப்பட்ட தண்டணைகள் எல்லாம் நகைச்சுவையுடன் நினைவுகூறப்படும். இவர்களின் சிரிப்புக் கலந்த உரையாடல்களைக் கேட்டுவிட்டு நோர்வே நாட்டைச் சேர்ந்த கண்காணிப்புக்குழு உறுப்பினர் ஒருவர் மொழி புரியாமல் ‘‘விடுதலைப்போராளிகளாக இருந்தும் இவர்கள் எவ்வளவு நேரத்தை சிரித்துப் பேசுவதிலேயே போக்குகிறார்கள்’’ என்று வியந்தார். வேதனை நிறைந்த எத்தனையோ வடுக்களைச் மனதில் சுமந்துகொண்டிருக்கும் இவர்களுக்கு இத்தகைய கலந்துரையாடல் ஒரு மருந்தாக அமைந்தது போலும்.

2007ம் ஆண்டு உலகக் கிரிக்கெட் போட்டியின் இறுதியாட்டத்தில் லங்கா இடம்பெற்றிருந்தது. சமாதானச் செயலகத்தில் இது சில விவாதங்களுக்குப் பொருளாக இருந்தது. சில

விடுதலைப்புலி உறுப்பினர்கள் உட்படப் பல தமிழர்களுக்கு இப்போட்டியில் இருந்த ஆர்வத்தை அவதானித்த சர்வதேச ஊடகவியலாளர்கள் இன ஒருமைக்குக் கிரிக்கெட் வழிவகுக்கலாம் என்னும் தொனியில் கிரிக்கட் செய்திகளை வெளியிட்டனர். இதையே தான் சுனாமியின் பின்னரும் இவர்கள் சொன்னார்கள் என்று எங்களில் பலர் நக்கலாகவே பேசினோம். சில விடுதலைப்புலி உறுப்பினர்கள் தாம் லங்கா கிரிக்கெட் அணியை ஆதரிப்பதில் தவறில்லை என்ற விசித்திரமான கருத்தை வெளியிட்டனர். அரசியலும் விளையாட்டுப் போட்டிகளும் கலக்கக் கூடாது என்றும் சொன்னார்கள். 1980களின் ஆரம்பத்தில் நியூசிலாந்து நாட்டில் இக்கருத்துத் தீவிரமாக விவாதிக்கப்பட்டது. அக்காலத்தில் தென்னாப்பிரிக்கா நாட்டில் இனஒதுக்கீட்டை அடிப்படையாகக் கொண்ட ஒரு ஆட்சியை வெள்ளையர்கள் நடத்தி வந்தார்கள். இந்நாட்டின் ரக்பி காற்பந்தாட்ட விளையாட்டுக் குழு ஸ்பிரிங்பொக்ஸ் என்று அழைக்கப்பட்டது. இனஒதுக்கீட்டை அடிப்படையாகக் கொண்ட தென்னாப்பிரிக்க நாட்டுஅரசின் பிரதிநிதியாக வரும் இக்குழு நியூசிலாந்துக்குப் போட்டிகளில் பங்குபற்ற வருவது பற்றிய விவாதம் அக்காலத்தில் உலகம் முழுவதும் பரவியது. அப்போதும் அரசியலும் விளையாட்டுப் போட்டிகளும் கலக்கக்கூடாது என்ற விவாதமே ஒருதரப்பினரின் மேலோங்கிய கருத்தாக இருந்தது. உலகளாவிய இவ்விவாதத்தின் பலனாக இக்கருத்து உடைக்கப்பட்டுத் தென்னாப்பிரிக்க நாட்டின் விளையாட்டுக் குழுக்கள் உலக மட்டத்தில் பங்குபற்றுவது தடைசெய்யப்பட்டது. இத்தடையும் இனவெறி அரசை அகற்றி சுதந்திர தென்னாபிரிக்காவின் விடியலுக்கு முக்கியக் காரணமாக அமைந்தது. அரசியலும் விளையாட்டும் கலக்கக் கூடாது என்ற கருத்தை முன் வைத்த விடுதலைப்புலி உறுப்பினர்களுக்கு இதெல்லாம் தெரிந்திருக்கவில்லை. இருந்தும் அமைப்பிலிருந்த எனக்குத் தெரிந்த ஒட்டுமொத்தப் பெண்களும் பெரும்பாலான ஆண்களும் லங்கா கிரிக்கெட் குழுவை ஆதரிக்கவில்லை. இருந்தும் லங்கா கிரிக்கெட் குழுவை ஆதரித்த உறுப்பினர்கள் அமைப்பின் மிக விசுவாசமான உறுப்பினர்களாகவும் இருந்தது எனக்கும் வேறு பலருக்கும் புதிராக இருந்தது. இன்றும் கூட தமிழ் ஆண்கள் மத்தியில் இப்புதிரான தமிழீழ ஆதரவும், லங்கா கிரிக்கெட் குழு ஆதரவும் கொண்ட மனநிலை தொடர்கிறது.

விடுதலைப்புலிகளின் ராணுவப் பேச்சாளராக இருந்த மார்சலுக்குக் கிரிகெட் விவாதம் ஒரு கவனிக்கவேண்டிய கருத்தாகவே படவில்லை. 2006ம் ஆண்டில் அவர் ராணுவப் பேச்சாளராக நியமிக்கப்பட்டபோது அவரின் கடமைகளைச்

செய்வதற்கு அவருக்குச் சமாதானச் செயலகத்தில் ஒரு அறை ஒதுக்கப்பட்டது. இளந்திரையன் எனப்படும் மார்சல் புத்திக்கூர்மையும் புதியன சிந்திக்கும் வல்லமையும் உள்ளவர். எப்போதும் புதிய கருத்துக்களை முன்வைப்பார். போர் உச்சமடைந்து நம்பிக்கைகள் குறைந்த 2008ம் ஆண்டிலும் கூட அல்லலுறும் மக்களுக்கு உதவக்கூடிய புதிய திட்டங்களைப் பற்றிப் பேசினார். எரிபொருட் தடையால் அவதியுற்றுக்கொண்டிருந்த வன்னியில் சிறியளவில் எரிபொருள் உற்பத்தி செய்வது பற்றிய யதார்த்தமான திட்டங்களைச் செயற்படுத்த முயற்சித்தார். எப்போதுமே மார்சல் தன் சக்தியையும் நேரத்தையும் பல்வேறு திட்டங்களுக்கு பகிர்ந்து செலவு செய்வதால் திட்டங்களைச் செயற்படுத்தி முடிவுக்குக் கொண்டுவர தவறி விடுவார். ஒருவேளை ஆற்றலுள்ள உதவியாளர்கள் இருந்திருந்தால் தனது திட்டங்களை அவர் முடிவுக்குக் கொண்டு வந்திருக்கலாம். மார்சல் மட்டக்களப்பைச் சேர்ந்தவர். சென் மைக்கல் கல்லூரியில் உயர்தர வகுப்பு வரை படித்த பின்னர் அமைப்பில் சேர்ந்தவர். சிறு வயதில் தங்கள் குடும்ப நிலத்தில் தான் செய்த கடும் உழைப்பைப் பற்றி நிறையவே பேசுவார். சுற்றுச்சூழலையும் அதில் வாழ்ந்த விலங்குகளையும் பற்றி ஆழமான அறிவுள்ளவர். அவர் எனக்குச் சொல்லிய ஒரு கருத்தை நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். 1980–90களில் புலிகள் அமைப்பில் இணைந்தவர்கள் அவரவர் குடும்பத்தில் பொறுப்புமிக்க பிள்ளைகள் என்பதை அவர் அவதானித்திருந்தார். நானும் இதை அவதானித்தேன். மார்சல் பலவிதமான திறமைகள் உடையவர். கொழும்பில் ஒரு ஹோட்டலில் மதுபானம் வழங்கும் சர்வராக வேலை செய்திருக்கிறார். தன் குடும்பக் காணியில் கயிற்று வளையம் கொண்டு மாடுகளைப் பிடிக்கும் வேலை செய்திருக்கிறார். விடுதலைப்புலிகள் அமைப்பில் ஆங்கில நூல்களை தமிழ் மொழியாக்கம் செய்திருக்கிறார். மட்டக்களப்பு அரசியல்துறைப் பொறுப்பாளராக இருந்திருக்கிறார். இறுதியில் ராணுவப் பேச்சாளராக இருந்தார். அவரின் எழுத்து நடை சுவாரசியமாகவும் நுட்பமானதாகவும் இருந்தது. ஆனால் தொடர்ந்து முயற்சி மேற்கொள்ளாமல் இருந்ததால் அவர் அதிகம் எழுதவில்லை.

நான் தலைவராகச் செயற்பட்ட சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தில் மார்சலும் இருந்தார். சிறுவர் போராளிகள் பற்றி யூனிசெப்புடன் நடந்த பல சந்திப்புகளில் என்னுடன் அவரும் கலந்து கொண்டார். யதார்த்தத்தைப் புறக்கணித்த யூனிசெப்பின் சிறுவர் போராளிகள் பற்றிய தீவிரமான பிரச்சாரத்தைத் தோலுரித்துக் காட்டும் எண்ணத்துடன் அவர் யூனிசெப்பிடம் வேறு இரு கோரிக்கைகளை

விடுத்தார். லங்காவின் குண்டுவீச்சுக்களால் பாடசாலை மாணவர்கள் பீதியிலிருந்த காலம். குண்டுவீச்சுக்கள் பாடசாலை நேரத்தில் தவிர்க்கப்பட வேண்டும் என்பதும், பாடசாலைக் கூரைகளில் அவற்றைக் குண்டு விமானங்களுக்குத் தெளிவாக அடையாளப் படுத்துவதற்குக் குறியீடுகள் தீட்டவேண்டும் என்பதும் அவர் முன்வைத்த கோரிக்கைகள். அவரின் இரண்டாவது கோரிக்கை ஓரளவு செயற்படுத்தப்பட்டது. முதலாவது கோரிக்கை கைகூடவில்லை.

மார்சலுடன் ஒப்பிடும்போது சமாதானச் செயலகத்தின் தலைவர் புலித்தேவன் முற்றிலும் வேறுவிதமான பண்பியல்புகள் கொண்டவர். எப்போதும் பலத்த சிரிப்புடன் குதுகலமாக இருக்கும் அவரின் பண்பு அவருக்கென்றே தனியான ஒரு செயல்நலத்தைக் கொடுத்தது. இப்பண்பால் அவர் சமாதானத் தொடக்க காலத்தில் கொழும்பில் பல நண்பர்களைச் சேகரித்துக் கொண்டார். வேறுயாரும் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் அவர் ஒரு சிறந்த நிர்வாகி என்றே நான் நினைக்கிறேன். நான் அதிகம் பழகிய பெருபான்மையான உறுப்பினர்களைப் போலல்லாமல் அவர் தனது 20 வயதைத் தாண்டிய பின்னரே அமைப்பில் இணைந்தார். அதற்கு முன் யாழ்ப்பாணம் பல்கலைக்கழகத்தில் இளநிலைப் பட்டத்திற்குக் கணிதம் படித்துக்கொண்டிருந்தார். பட்டம் பெறாமலேயே அமைப்பில் இணைந்தார். அவருடன் ஆரம்பப் பயிற்சி முகாமில் இருந்த வேறொரு போராளி எனக்குச் சொன்னது நினைவுக்கு வருகிறது. அந்த ஆரம்பப் பயிற்சி முகாமிலிருந்த ஏனைய புதிய போராளிகளைவிடப் புலித்தேவன் வயதில் கூடியவராக இருந்தார். இதனால் ஏனைய புதிய போராளிகள் இந்த வயதானவர் இங்கு என்ன செய்கிறார் என்று பேசிக்கொண்டார்களாம். தமிழீழம் கட்டாயம் கைகூடும் என்ற நம்பிக்கையும் அதற்கான ஈடுபாடும் ஏனைய போராளிகளைவிடப் புலித்தேவனுக்கு அதிகம் இருந்தது. கொள்கைரீதியாகப் புலித்தேவன் பெண்சமத்துவத்தை மனப்பூர்வமாக ஆதரித்தார். அலுவலகங்களில் பெண்களுக்கு ஏற்படும் சங்கடங்களை இலகுவாகப் புரிந்துகொண்டார். பொதுவேலைகளில் பெண்கள் பங்குபற்றுவதற்குத் தடையாக இருக்கும் வீட்டுவேலைப் பளுவைக் குறைப்பதற்கான திட்டங்கள் பற்றி என்னுடன் பல தடவைகள் உரையாடி இருக்கிறார். ஒவ்வொரு வீட்டுக்கும் தனிச்சமையலுக்குப் பதிலாக பொதுச்சமையல் செய்வது என்பது அவர் முன்வைத்த யோசனைகளில் ஒன்று. அமைப்பின் நடைமுறைகளில் பெண்களையும் ஆண்களையும் பிரித்துச் செயற்படுவது பெண்களின் வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதாக அவர் கருதினார். மார்சல்,

புலித்தேவன் இருவருமே பெண்சமத்துவத்தில் ஈடுபாடுள்ளவர்களாக இருந்தார்கள். தமது சொந்த வாழ்க்கையில் இதைக் கடைப்பிடிப்பதற்கு அவர்களின் கடுமையான வேலைப்பளு தடையாக இருந்தது. இவர்களின் வீடுகளுக்குப் பல தடவைகள் நான் சென்றிருக்கிறேன். அக்குடும்பங்கள் அன்பும் குதூகலமும் நிறைந்தவையாகத் தெரிந்தன.

2006ம் ஆண்டின் நடுப்பகுதியின் பின்னர் சமாதானச் செயலக உறுப்பினர்களுக்கு வாரம்தோறும் மொழிபெயர்க்கும் வேலை இருந்தது. அந்தந்த வார ஆங்கிலப் பத்திரிகைகளில் வெளிவந்த சமாதானச் செயற்பாடுகள் பற்றிய கட்டுரைகளைத் தமிழ் மொழியாக்கம் செய்வதே இப்பணி. மார்சலின் மொழியாக்க அனுபவத்திலும் அறிவிலும் இருந்து வெளிப்படும் பல தகவல்கள் சமாதானச் செயலகத்தில் சுவாரஸ்யமான பல கருத்தாடல்களுக்கு வித்தாக இருக்கும். மார்சல் தனது திறமைகளை முழுமையாகப் பாவிக்கவில்லை என்ற அபிப்பிராயம் சிலரிடம் இருந்தது. ஆனால் அவரின் பரந்த அனுபவமும் அவரின் மட்டக்களப்புப் பின்னணியும் கூடிய கலந்துரையாடல்கள் எனக்கு எப்போதும் சுவராஸ்யமானதாகவே இருந்தன. நான் அவரை மார்ச் 2009ல் இறுதியாகச் சந்தித்தேன். சீறிச்செல்லும் செல்வீச்சுக்களுக்குக் காது கொடுத்துக் கொண்டு பொழுதைப்போக்கிய எமது கூடாரத்திற்கு வந்திருந்த அவர் வாசிப்பதற்குச் சில புத்தகங்களை எனக்குத் தர விரும்பினர். நான் ஐசிஆர்சி கப்பலில் போக முடிவு செய்துவிட்டேன் என்று அவரிடம் சொன்னபோது அவரின் முகத்தில் தொனித்த ஏமாற்றம் என்னுள் குற்றஉணர்ச்சியை உண்டாக்கியது. போரின் முடிவில் லங்கா ராணுவத்தால் தொலைக்கப்பட்ட நூற்றுக்கணக்கானோரில் மார்சலும் ஒருவர்.

தமிழேந்தி அப்பா என்று மரியாதையோடும் அன்போடும் அழைக்கப்பட்ட 60 வயதிற்கும் மேற்பட்ட ஒரு மூத்த உறுப்பினர் அவரது தூயதமிழ் இயக்க ஆர்வத்திற்காக வன்னியில் பேர்போனவர். நவீன தொழில்நுட்பச் சொற்களுக்குத் தூயதமிழ் சொற்கள் உருவாக்கும் அவரின் முயற்சி பற்றிச் சில நகைச்சுவைத் துணுக்குகள் வன்னியில் உலவின. தமிழேந்தி அப்பாவின் இம்முயற்சியின் ஒரு அம்சமாகக் குழந்தைகளுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டவேண்டும் என்றும் ஊக்கப்படுத்தினார். தமிழ் பெயர் சூட்டும் பெற்றோருக்கு வெகுமானம் வழங்குவதாகவும் அறிவித்தார். கொஞ்சம் வளர்ந்த சிறுவர்களின் பெயர்களையும் தமிழ் பெயராக மாற்றினால் வெகுமானம் கொடுப்பதாகவும் அறிவித்தார். மாவீரர்களின் பெயர்களைப் பிள்ளைகளுக்குச் சூட்டுவது வன்னியில் பொதுவான

ஒரு வழக்கமாக இருந்தது. பல மாவீரர்களின் பெயர்கள் தமிழ்ப் பெயர்கள் அல்ல. உதாரணமாக மில்டன், கஸ்ரோ, சார்ல்ஸ், அந்தனி, போன்றவை மாவீரர்களின் பெயர்கள். இதனால் தமிழேந்தி அப்பாவின் தமிழ் பெயர் இயக்கம் சில பெற்றோரைக் கோபத்திற்குள்ளாக்கியதும், வன்னியில் விவாதங்கள் தொடர்ந்ததும் ஆச்சரியமில்லை. அவரின் தூயதமிழ் இயக்கம் வன்னிப் பொதுமக்களையும் சென்றடைந்திருந்தது. தமிழீழத்தின் ஏனைய பகுதிகளைவிட வன்னி மக்கள் தூயதமிழில் பேசினர். நான் வன்னிக்கு வெளியே இருந்த எனது உறவினர்களையும் நண்பர்களையும் சந்தித்தபோதெல்லாம் வன்னிச் சகவாசத்தால் வந்த எனது தூயதமிழைப் பற்றி அவர்கள் குறிப்பிட்டார்கள். தமிழேந்தி அப்பாவின் தூயதமிழ் இயக்கம் அவ்வளவு தூரம் முன்னேறியிருந்தது. அவரின் வேண்டுகோளின்படி 60 வயதிலும் அவர் களமுனைக்குச் சென்றார். 2009 ஆண்டில் முள்ளிவாய்க்காலில் எறிகணைத் தாக்குதலில் அவர் மாவீரரானார்.

பிரபாகரனின் மகள் துவாரகாவுக்கும் அப்போது காவல்துறைப் பொறுப்பாளராக இருந்த நடேசனின் மகள் பிரியதர்சினிக்கும் ஆங்கிலம் சொல்லிக் கொடுக்கும்படி 2006ம் ஆண்டின் நடுப்பகுதியில் என்னைக் கேட்டார்கள். பாடங்கள் இரவில் நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகிலேயே நடந்தது. இது ஒருவருக்கும் தெரியாமல் இருப்பதற்காகச் சில முன்னெச்சரிக்கைகள் எடுக்கப்பட்டன. சில சமயங்களில் துவாரகாவின் தாயார் மதிவதனியும் வகுப்புக்களில் கலந்து கொள்வார். துவாரகா மிகவும் புத்திசாலியான பெண். பிரியதர்சினி மிகவும் அமைதியானவர். துவாரகா பல வேறுபட்ட விடயங்களைப் பற்றிப் பேசுவதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். இதனால் வகுப்பில் ஆங்கிலம் கற்றது மிகக்குறைவே. தமிழரிடையே நிலவும் மூடநம்பிக்கைகள் துவாரகாவுக்கு மர்மமாகத் தோன்றியது. பாதுகாப்பிற்காகத் தனிமைப்படுத்தப்பட்ட துவாரகாவின் வளர்ப்பைப் பற்றியும் எமது உரையாடல்களின்போது அறிந்துகொண்டேன். ஏனைய பிள்ளைகளுக்குச் சாதாரணமாக கிடைக்கும் சந்தர்ப்பங்கள் இவருக்குக் கிடைக்கவில்லை. உதாரணமாக குழுவாக விளையாடும் அனுபவங்கள் இவருக்கு வாழ்க்கையில் கிடைக்கவேயில்லை. இதுபற்றி ஆர்வமாக கேட்டறிந்தார். துவாரகாவும் பிரியதர்சினியும் மே 2009க்குப் பின்னர் காணவில்லை.

2006ம் ஆண்டு முழுவதும் ஒட்டுமொத்த அரசியல்துறை உறுப்பினர்களும் 'எரிமலை சந்திப்பு' என்று சொல்லி எங்கோ ஓரிடத்தில் பல தடவைகள் கூடினார்கள். இக்கூட்டங்களில்

தமிழ்ச்செல்வன் உரையாற்றுவார். அநேகமாக இவை ஆட்சேர்ப்புச் சம்பந்தமாக இருக்கும். இந்தக்காலத்தில் எனக்குத் தெரிந்த பல அரசியல்துறை உறுப்பினர்கள் 'பரப்புரை' கடமைகளில் ஈடுபட்டிருந்தார்கள். ஆட்சேர்ப்புக் கடமை என்பதையே அழகாகப் 'பரப்புரை' என்கிறார்கள் என்றும் அறிந்துகொண்டேன். இக்காலத்தில் சமாதானச் செயலகத்திலும் 'பரப்புரை' அனுபவங்களைப் பற்றிய உரையாடல்கள் அடிக்கடி இடம்பெறும். அக்காலத்தில் இக்கடமை என்பது தெருக்களில் நின்று இளையோருடன் பேசி அவர்களை அமைப்பில் சேரும்படி ஊக்குவிப்பதாகவே இருந்தது. உறுப்பினர்களின் அனுபவங்களை நான் கேட்டதிலிருந்து சமாதானத்திற்குப் பழக்கப்பட்ட இளையோருக்கு அமைப்பில் சேரும் எண்ணங்கள் தோன்றவில்லை என்றும் போர் ஆரம்பித்தால் தாங்களும் வந்து இணைந்து கொள்வதாக இளையோர்கள் சொன்னார்கள் என்றும் அறிந்து கொண்டேன். இக்காலத்தில் வன்னி ஊடகங்களிலும் ஆட்சேர்ப்புச் சார்ந்த செய்திகள் நிறைய வந்துகொண்டிருந்தன. விரும்பிச் சேர்ந்த இளையோரின் படங்களுடன் செய்திகள் வரும். சிலசமயம் அதிகத் தொகையாக சேர்ந்த இளையோர் முதியோர் பற்றிய செய்திகளும் வரும். அநேகமாக இது முதியோராகவே இருந்தது. ஆட்சேர்ப்புத் திட்டம் போதிய வெற்றி அளிக்காததால் 2006ம் ஆண்டின் நடுப்பகுதியில் குடும்பத்துக்கு ஒருவர் என்ற விடுதலைப்புலிகளின் நீண்டகாலக் கொள்கை தீவிரமாக அமுல்படுத்தப்பட்டது.

கட்டாய ஆட்சேர்ப்பு ஆரம்பித்த பின்னர் உரையாடல்களும் விவாதங்களும் மாறின. முதலில் சிறுவர்களும் திருமணமான பெண்களும் ஆண்களும் குடும்பத்துக்கு ஒருவர் என்ற கட்டாய ஆட்சேர்ப்பிலிருந்து விலக்கப்பட்டார்கள். இவ்வமுலாக்கத்தில் பல தனித்துவமான சந்தர்ப்பங்களில் விதிவிலக்குகள் அளிக்கவேண்டிய நிலையும் ஏற்பட்டது. இவையெல்லாம் தீவிரமாக விவாதிக்கப்படும். ஐநா ஊழியர்களுக்கும் அவர்களின் குடும்பத்தினருக்கும் விதிவிலக்கு, வன்னியில் இயங்கிய ஏனைய சர்வதேச அமைப்புக்களின் பணியாளர்களுக்கு விதிவிலக்கு, மருத்துவ ஊழியர்களுக்கு விதிவிலக்கு என்றெல்லாம் விவாதிக்கப்பட்டது. ஐநா ஊழியருக்கு மட்டும் விதிவிலக்கு அளிக்கப்பட்டது. ஆனால் ஐநா ஊழியரின் குடும்பத்தினருக்கு விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. ஏனைய சர்வதேச அமைப்புக்களும் தம் பணியாளருக்கு விதிவிலக்குக் கோரும் முயற்சியில் தோல்வி கண்டன.

குடும்பத்துக்கு ஒருவர் என்ற கட்டாய ஆட்சேர்ப்பு ஒட்டுமொத்த சமுதாயத்திலும் பெரிய அலைகளை உண்டாக்கியது.

பல விடுதலைப்புலி உறுப்பினருக்கும் இக்கடமை மன உளைச்சலை ஏற்படுத்தியது. இது எல்லோரையும் வெகுவாகப் பாதித்தது. எனது சொந்த உணர்வுகளும் சங்கடம் அளித்தது. ஏனெனில் எனது இரு பிள்ளைகளும் இக்கட்டாய ஆட்சேர்ப்புப் பிடியிலிருந்து விலகி வெளிநாட்டில் வாழ்ந்துகொண்டிருந்தனர். பல பெற்றோர்கள் தம் பிள்ளைகளை இப்பிடியிலிருந்து தப்பிக்க வைப்பதற்கான போராட்டத்தை நடத்திக்கொண்டிருந்தார்கள். அநேகம்பேர் கட்டாய ஆட்சேர்ப்புச் செய்யும் விடுதலைப் போராட்ட அமைப்புக்கு ஆதரவு அளிப்பதா? கூடாதா? என்ற உளப்போராட்டத்தை நடத்திக் கொண்டிருந்தனர். பெற்றோர் தம் பிள்ளைகளைத் தப்பிக்கவைப்பதற்காக எடுத்த உத்திகளும் தம் கொள்கையைச் சமூகமாக அமுல்படுத்த விடுதலைப்புலிகள் எடுத்த நடவடிக்கைகளும் பற்றித் தனியாக ஒரு புத்தகமே எழுதலாம். விடுதலைப்புலிகளின் நடவடிக்கைகள் பற்றிய சில செய்திகள் அக்காலத்தில் வெளிவந்தன. ஆனால் பெற்றோரின் உத்திகள் பற்றிய செய்திகள் ஒன்றுமே வெளிவரவில்லை.

கட்டாய ஆட்சேர்ப்புக் கொள்கை சமூகமட்டத்தில் பல முரண்பாடுகளைக் கொண்டுவந்தது. சில பெற்றோர் பல்வேறு காரணங்களுக்காகத் தமது மூத்தபிள்ளைக்குப் பதிலாக வயது குறைந்த இளைய பிள்ளையை இணைக்கும்படி கேட்டனர். ஆரம்பத்தில் திருமணமானவர்கள்கட்டாயஆட்சேர்ப்பிலிருந்துதவிர்க்கப்பட்டார்கள். இதனால் பல அவசர இளவயதுத் திருமணங்கள் நடைபெறத் தொடங்கின. இதனால், 2006ல் ஒரு குறிப்பிட்ட திகதிக்குப் பின்னர் விடுதலைப்புலிகளின் அனுமதியின்றித் திருமணமானோரும் இணைக்கப்பட்டனர். கட்டாய ஆட்சேர்ப்புப் பற்றிய வேறுஒரு கணிப்பீடும் நான் அக்காலத்தில் கேள்விப்பட்டேன். குறிப்பான கணக்கு இப்போது நினைவில்லை. ஒரு பெரிய விகிதாசாரம் வன்னிக் குடும்பங்கள் ஏற்கனவே போராளி அல்லது மாவீரர் குடும்பங்களாக இருந்ததால் இக்கொள்கையைப் பெருந்தொகையான வன்னி மக்கள் ஆதரிப்பார்கள் என்ற கணிப்பிலேயே இக்கொள்கை அமுலாக்கப்பட்டது. இக்கொள்கையை விடுதலைப்புலிகள் சமத்துவமாகவே அமுல்படுத்துகிறார்கள் என்ற உண்மையையும் ஏற்றுக்கொண்ட சமூகம் கொஞ்சம் கொஞ்சமாக இக்கொள்கையையும் ஏற்கத் தொடங்கியது. 2007ம் ஆண்டின் முடிவில் இக்கொள்கை அமுலாக்கமும் ஏறக்குறைய முடிவுக்கு வந்தது. சிறுவர் போராளியாக இணைந்த தனது பிள்ளையை விடுவிக்க வந்த ஒரு தாயார் ''ஒவ்வொரு குடும்பமும் நாட்டுக்காக ஒரு பிள்ளையை கொடுக்கத்தானே வேண்டும்'' என்று சொன்னபோது எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.

கட்டாய ஆட்சேர்ப்புச் சர்வதேச சாசனங்களுக்குள் இன்றுவரை சேர்க்கப்படாவிட்டாலும் இதன் பின்னுள்ள நீதி என்பது தெளிவற்றதாகவே உள்ளது. கட்டாய ஆட்சேர்ப்புப் பற்றிய நியாயப்பாடுகளில் எல்லோரும் ஒன்றை வைத்து ஆறுதலடைந்தார்கள். இரண்டாம் உலக யுத்தத்தின்போது மேற்குலக நாடுகள் தம் பாதுகாப்பிற்காகக் கட்டாய ஆட்சேர்ப்புச் செய்தது தார்மீகம் என்றால் இப்போது தமிழர்களின் தற்காப்பு அதைவிட பலமடங்கு முக்கியமாக இருந்தது என்ற முடிவே எல்லோருக்கும் ஆறுதல் கொடுத்தது.

# வன்னியில் பெண்விடுதலை

இளம் தமிழ்ப் பெண்கள் பலர் படைத்துறைப் பிரிவில் பெண்களின் பங்கு மேன்மைமிக்கதாக கற்பனை செய்கின்றனர். விடுதலைப்புலிகளின் இலக்கியங்களும் அமைப்பிலிருக்கும் பெண்களை இம்மாதிரித்தான் சித்தரித்தன. ஆயுதப்பயிற்சியும் களப் பங்களிப்பும் பல கலாச்சாரக் களைகளை விட்டெறிய பெண்களுக்கு உதவியது உண்மையே. ஆதிக்கக் கலாச்சாரத்திற்கு அடங்கிய பெண் உடல் மொழியைத் திண்மையானதாக மாற்றுவதற்கு பயிற்சி மிகவும் உதவியது. அவர்களின் போர்க் களச்சாதனைகள் பொதுமக்கள் பார்வையில் அவர்களை விடுதலைப்புலி ஆண்களின் தரத்துக்கு உயர்த்தியது. பொதுப் பெண்களுக்குக் கிட்டாத சுதந்திரமாகப் பொது வாழ்வில் இயங்கும் வாய்ப்பும் இவர்களுக்குக் கிடைத்தது. விடுதலைப்புலிப் பெண்கள் பொதுப் பெண்களைவிட வித்தியாசமானவர்களே. ஆனால் விடுதலைப்புலிப் பெண்களில் ஏற்பட்ட மாற்றங்கள் அமைப்பிற்கு அப்பால் உள்ள பெண்களையும் ஓரளவு சென்றடையவே செய்தன. வன்னிக்கு வெளியே தமிழ் சமூகத்தில் காணப்படாத படைத்துறை அல்லாத சமூகம் சார்ந்த பல மாற்றங்கள் வன்னியில் காணப்பட்டன. இதையே இங்கு நான் விவரிக்க விளைகிறேன்.

நான் முதன்முதலில் வன்னியில் தொண்டராகப் பணியாற்ற நினைத்தபோது பெண்கள் சார்ந்த ஏதாவது வேலையில் ஈடுபடவே விரும்பினேன். இத்தகைய வேலைக்குள் எவ்வாறு இறங்கலாம் என்பது பற்றி எவ்வித திட்டமும் என்னிடம் இல்லை. ஏனெனில் வன்னியில் பெண்கள் சார்ந்த வேலையில் ஈடுபட்டிருந்த எவரையும் எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. நான் முதலில் நிசோரிலும் பின்னர் சமாதானச் செயலகத்திலும் வேலை செய்த காலத்தில் தொடர்ச்சியாக இதுபற்றிய சிந்தனையிலும் தேடுதலிலும் இருந்தேன். இவ் ஆர்வத்தை நான் புலித்தேவனுக்குச் சொன்னபோது அவர் எப்போதும் எனக்கு ஒரே பதிலைச் சொல்லி வந்தார். நான் பெண்கள் சார்ந்த வேலைத்திட்டங்கள் செய்வதற்குச் சமாதானச் செயலக வளங்களை சுதந்திரமாக உபயோகிக்கலாம் என்பதே அவரின் பதிலாக இருந்தது. பிரச்சினை என்னவென்றால் 2008ம் ஆண்டு பிற்பகுதி வரையும் இத்தகைய வேலையில் ஈடுபடுவதற்கு எனக்கு

நேரம் கிடைக்கவில்லை. எனது நேரம் முழுவதும் அப்போது ஆவணங்கள் தயாரிப்பதிலேயே செலவாகியது. இருப்பினும் இத்தாமதம் ஒருவிதத்தில் நிலமையை முழுமையாக அறிந்து கொள்வதற்கு வாய்ப்பாக இருந்தது.

அக்காலத்தில் பெரும் ஆரவாரத்துடன் நடைபெற்ற சமாதானப் பேச்சுக்களில் பெண்களின் பங்கேற்பு இல்லை என்பதை அருகிலிருந்து என்னால் அவதானிக்க முடிந்தது. இது இருதரப்புக்குமே பொருந்தும். இருப்பினும் வெளியுலகப் பார்வைக்காகப் பேச்சுவார்த்தை அணிகளில் பெண்களைச் சேர்த்துக் கொண்டனர் என்பதும் உண்மை. இதற்கு விதிவிலக்காக இருந்தது விடுதலைப்புலிகளின் மனித உரிமைப் பேச்சாளராக இருந்த செல்வி மட்டுமே. அவர்கூட பேச்சாளராக மட்டுமே இருந்தார்.

பெண் போராளிகளுக்கிடையே நிலவிய உறவுகள், பெண் போராளிகளின் ஆண் போராளிகளுடனான உறவுகள், அவர்களின் சமூகத்துடனான உறவுகள், பெண் போராளிகளின் பெண்கள் சார்ந்த நிலைப்பாடுகள் எல்லாவற்றையும் உன்னிப்பாக அவதானிக்க எனக்கு அவகாசம் கிடைத்தது. பெண்கள் சார்ந்த திட்டங்களை முன்னெடுத்த நிறுவனங்கள் பற்றியும் அறிந்துகொண்டேன். தனிப்பட்ட உரையாடல்களிலும் நான் ஈடுபட்ட வேலைத்திட்டங்களிலும் வேலைத்தளங்களில் எதிர்கொண்ட பல பிரச்சினைகளிலும் பெண்கள் சார்ந்த பல பிரச்சினைகளைச் சந்தித்தேன். நான் வன்னிக்கு வருமுன் பெண்விடுதலை சார்ந்த பல முன்னேற்றங்களை அங்கு எதிர்பார்த்து வந்திருந்தேன். நான் எதிர்பார்த்ததை ஆரம்பத்தில் என்னால் காணமுடியாததால் ஏமாற்றமடைந்தேன். மேற்குலக பெண்விடுதலைக் கருத்துக்களூடாக வன்னியை எடைபோட முனைந்ததே எனது ஏமாற்றத்தின் காரணம் என்பதை நான் காலப்போக்கில் அறிந்துகொண்டேன்.

வன்னி வீதிகளில் போக்குவரத்து உச்ச நேரங்களில் வேலைக்காகச் செல்லும் பெண்களின் தொகையை அவதானித்தால் தீவின் ஏனைய பகுதிகளைவிட வன்னியில் அதிக விகிதாசாரப் பெண்கள் வேலைக்குப் போகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. சிவில் உடையில் மோட்டார் சைக்கிள் ஓடும் பெண்களும் தீவின் ஏனைய பகுதிகளைவிட வன்னி வீதிகளில் அதிகம் காணப்பட்டார்கள். பெண் போராளிகளும், பொதுப் பெண்களும் வீடுகளுக்கு வெளியே பொதுப்பணிகளில் அதிகம் காணப்பட்டார்கள். தெருக்களிலும் விடுதலைப்புலிகளின் நிறுவனங்களிலும் இது பார்வைக்கே வெளிப்படையாகத் தெரிந்தது. இதுவே வன்னியின் பெண்கள் மேம்பாட்டிற்கான முக்கிய அறிகுறி.

விடுதலைப்புலிகள் அரசியல்துறை மகளிர் பிரிவின் கீழ் பல நிறுவனங்கள் பெண்கள் மேம்பாட்டிற்காகவே உழைத்து வந்தன. இவற்றில் சிறப்பாக குறிப்பிடவேண்டியவை பெண்கள் ஆய்வு மையமும் பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையமுமாகும். பெண்கள் ஆய்வுமையம் ''நாற்று'' எனும் ஒரு சஞ்சிகையை வெளியிட்டு வந்தது. இதில் சில சிறப்பான கட்டுரைகள் வந்தன. இருப்பினும் இதன் வாசகர் தொகை குறைவாகவே இருந்தது. பெண்கள் ஆய்வுமையமும் இக்காலத்தில் மக்களின் மனதில் குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பிடித்திருக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் போரின் தாக்கத்தால் பெருகி வந்த அபலைப் பெண்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் பணிகள் செய்த பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையமோ மிகப் பெரிய வளர்ச்சியை அடைந்திருந்தது.

பொதுமக்களைப் பணியாளர்களாகக் கொண்டிருந்த விடுதலைப்புலிகளின் நீதிநிர்வாகத்திலும் அதனோடு சேர்ந்த காவல்துறையிலும் ஏறத்தாழ ஐம்பது விகிதாசாரம் பெண்களே பணியாற்றினர். இதுவே ஒரு பெரும்சாதனை எனலாம். நீதிநிர்வாகத்தால் நிலைநாட்டப்பட்ட சட்டங்களிலும் தீவின் ஏனைய பகுதிகளில் இருந்த மரபார்ந்த சட்டங்களில் காணப்படாத வகையில் பால்சமத்துவம் பேணப்பட்டது. பெண்கள் நலனைப் பாதுகாப்பதற்காக இயற்றப்பட்ட சில சட்டங்கள் மிகவும் மேம்பட்டிருந்தது. இவற்றில் திருமணம் செய்வதாக சொல்லி ஆண்களால் ஏமாற்றப்படும் பெண்களைப் பாதுகாக்க இயற்றப்பட்ட சில சிறப்புச்சட்டங்களைக் குறிப்பிட வேண்டும். வன்னிக் காலத்தில் இவ்வாறான சிறப்புச் சட்டங்களுக்கு எதிராக விடுதலைப்புலிப் பெண்கள் வாதாடியதை நான் கேட்டிருக்கிறேன். பெண்களுக்குத் தனித்துவமான பாதுகாப்புத் தேவையில்லை என்றும் இருபாலாருக்கும் சமமான சட்டங்களே தேவையென்றும் அவர்கள் வாதாடினார்கள். இதுவும் பெண்ணியம் சார்ந்த விழிப்புணர்வைக் குறிப்பதாகவே நான் நினைக்கிறேன்.

விடுதலைப்புலிப் பெண்கள், அமைப்பில் பணியாற்றிய அமைப்பு சாராத பொதுப் பெண்கள், தனியாக தொழில் செய்யும் பெண்கள் ஆகிய மூன்று வகையான பெண்களும் பல்வேறு விடுதலைப்புலி நிறுவனங்களுடன் இணைக்கப்பட்டனர். இவ்வாறு பல தரப்புப் பெண்களும் இணைந்து பணியாற்றியதால் ஒரு தனித்துவமான பெண்கள் கலாச்சாரத்துக்கு இது வழிவகுத்தது. இவ்வாறு தொடர்புபடுத்தப்பட்ட பெண்கள் ஊடாக உதவி தேவைப்படும் பெண்களை அடையாளம் காண முடிந்தது. அடையாளப்படுத்தப்பட்டவர்கள் பெண்களுக்காக இயங்கிய

நிறுவனங்களில் உதவிபெறுமாறு வழிகாட்டப்பட்டனர். இதுவே – அதாவது அபலைகள் என்று எவருமில்லாத சமூகத்தை உருவாக்கியதே – இப்பெண்கள் கலாச்சாரத்தின் சிறப்பம்சமாகும். இது அல்லலுறும் மக்களிடையே உருவாகக்கூடிய தனித்துவமான ஒரு பெண்ணியம். இப்பெண்கள் கலாச்சாரத்தை மருத்துவ நிறுவனம், நலன்புரி மையங்கள், அபிவிருத்தி–வங்கி, பொலிஸ், சட்டம், ஊடகம் எனப்பல விடுதலைப்புலி நிறுவனங்கள் தாங்கிப் பிடித்தன. ஆரம்பத்தில் வன்னியின் பெண்கள் சார்ந்த நிலை பற்றி எனக்கு இருந்த ஏமாற்றம், இப்பெண்கள் கலாச்சாரத்தைச் சிறிது சிறிதாக நான் அறிய துவங்கிய பின்னர் பெரும்வியப்பாக மாறியது.

## ''ஏன் இணைந்தேன்''

போரால் பாதிக்கப்பட்டுத் தம் குடும்பங்களின் ஆதரவை இழந்த பல பெண்களை எனது வன்னித் தொண்டர் பணிகளின் போது சந்தித்திருக்கிறேன். அவர்களில் இளவயதினர் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைப்பதற்குப் பிரதானமான வகையினர் என்றே எண்ணத் தோன்றும். இது ஒரளவு உண்மையேயானாலும் அமைப்பில் பெண்கள் இணைந்ததற்குப் பல காரணிகள் இருந்தன. பல்வேறு வயதிலும் பல்வேறு ஆண்டுகளாகவும் விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்த, எனக்கு நன்றாகப் பழக்கமான பெண்களிடம் நான் இதே கேள்வியைக் கேட்டேன். அவர்கள் சொன்ன காரணங்களை ஏறக்குறைய எட்டு வகையினங்களாகப் பிரிக்கலாம்.

**தமக்கு நெருங்கியவர்களைக் கொன்ற லங்கா ராணுவத்தைப் பழிவாங்குவதற்கு:** தமக்கு வேண்டியவர் ஒருவர் பாதிக்கப் பட்டதற்காகப் பெண்கள் அமைப்பில் இணைந்தனர். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கு முன்னரான ஐந்து தசாப்தங்களில் 40,000 மேற்பட்ட தமிழ்ப் பொதுமக்கள் லங்கா ராணுவத்தாலும் சிங்களக் காடையர்களாலும் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இவ்வகையாகக் கொல்லப்பட்ட, காணாமற்போகச் செய்யப்பட்டோரின் குடும்பங்களின் தொகைக்கும் அக்குடும்பங்களிலுள்ள இளம்பெண்களின் தொகைக்கும் வன்னியில் குறைவில்லை. அமைப்பிலிருந்த பெண்கள் தாம் இணைவதற்கான காரணமாக அதிகமாகக் குறிப்பிட்டது இதுவாகவே இருந்தது. தம் குடும்பத்துக்குத் தீங்கு விளைவித்தோரை பழிவாங்கும் வேகம் இவர்களிடையே காணப்பட்டது.

**பாலியல் வன்முறைகளுக்கு ஆளாகாமல் தப்பிப்பதற்கு:** 80களிலும் 90களிலும் லங்கா ராணுவத்தாலும் இந்திய ராணுவத்தாலும் தமிழீழத்தில் பாலியல் வன்முறைகள் மிகப் பரவலாக நடந்தது.

ராணுவச் சோதனைச்சாவடிகள் பாடசாலைகளுக்கு அருகே அமைக்கப்பட்டதால் இவ்விடங்களில் பாடசாலை மாணவிகள் லங்கா ராணுவத்தால் அதிக பாலியல் தொல்லைகளுக்கு ஆளாகினர். மாணவிகளைப் பாடசாலைக்குள் நுழையுமுன் உடற்பரிசோதனை என்னும் சாக்கில் இவ்வாறு துன்புறத்திய பின்னரே பாடசாலைக்குள் ராணுவத்தினர் செல்ல அனுமதித்தனர். மாதவிடாய் காலங்களில் தாம் அணியும் உறையை ஆண் ராணுவத்தினர் தொட்டுப் பரிசோதித்ததாகப் பல மாணவிகள் முறையிட்டிருக்கிறார்கள். இத்தகைய வன்முறைகளால் ஆத்திரமடைந்த பல பெண்கள் அமைப்பிலிணைந்தனர். அமைப்பிலிணைவதால் அவர்கள் பாதிப்பிலிருந்து தம்மை பாதுகாத்துக்கொண்டவர்களாகவும் அதற்கு அப்பால் சக்தி பெற்றவர்களாக மாறுகின்றனர். விடுதலைப்புலிகள் அமைப்பில் பெண்களுக்குத் துளியேனும் இத்தகைய தொல்லைகள் இல்லாதிருந்தது அமைப்பில் இணைவதற்கு மேலதிக தூண்டுதலாக இருந்தது.

***இடப்பெயர்வும் பாடசாலைகள் ஒழுங்கற்றமையும்:*** பெருமளவிலான இடப்பெயர்வுகளும் தொடர்ந்த நெருக்கமான பொதுக்கட்டிட அகதி வாழ்க்கையும் இளம்பெண்களின் வாழ்வைக் குலைத்தன. தொடர்ந்த குண்டுவீச்சுக்களும் எறிகணைத் தாக்குதல்களும் பாடசாலைகளை சிதைத்தன. இவையாவும் மாணவிகள் அமைப்பிலிணைவதற்குத் தூண்டுதலாக இருந்தன. அமைப்பிலிணைவதால் சீரற்ற அவர்களின் வாழ்க்கையில் நோக்கமும் ஒழுங்கும் உண்டாயிற்று.

***முதுநிலை விடுதலைப்புலிப் பெண்களின் முன்னுதாரணம்:*** ஒரு காலத்தில் தமிழ் சமூகத்தில் இளம்பெண்கள் சுதந்திரமாகத் தன்னிச்சையாக நடமாட முடியாது. இளம்பெண்களுக்குக் கால்சட்டை அணிவதற்கு பெரும்பாலும் அனுமதி கிடையாது. பெண் விடுதலைப்புலிகளின் தற்துணிவும், அழகிய சீருடையும் இளம் பெண்களுக்குத் தாமும் அவ்வாறு இருக்கவேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டியது. விடுதலைப்புலி உறுப்பினர்கள் மக்களுடன் நெருக்கமாகப் பழகினார்கள். வீடுகளுக்குச் சென்று உண்பார்கள். தேவைப்படும்போது மக்களுக்கு உதவினார்கள். இதனால் பெண் போராளிகள் பொதுப் பெண்களுடன் நெருக்கமாகப் பழகினார்கள். இதுவே தாமும் அவர்களைப்போல் இருக்கவேண்டும் என்ற ஆர்வத்தைப் பிற இளம்பெண்களிடம் தூண்டியது.

***வறுமை, வீட்டுவேலைப்பளு, கற்றலின்மை:*** போரின் பாதிப்பால் மீண்டும் மீண்டும் தொடர்ந்த இடப்பெயர்வுகள் மக்களை மோசமான வறுமை நிலைக்குத் தள்ளியது. லங்கா அரசு விதித்த பொருளாதாரத் தடைகள் இவ்வறுமை நிலையை மேலும் மோசமாக்கின. மிக

மோசமாகப் பாதிக்கப்பட்ட குடும்பங்களில் இளம்பெண்களின் கல்விக்கே முதல் இடையூறு வரும். இவ் இளம்பெண்களின் தாய்மார் கூலிவேலைக்குப் போகவேண்டிய கட்டாய நிலை வரும்போது இவர்களே வீட்டுவேலைகளைக் கவனிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இவ்வாறு பாதிக்கப்பட்ட இளம்பெண்கள் இதை எதிர்த்து விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைந்தார்கள்.

***விடுதலைப்புலிகளின் பரப்புரை:*** விடுதலைப்புலிகள் தொடர்ச்சியாக அரசியல் விழிப்புணர்வுக் கல்வியை மக்களிடையே பரப்பி வந்தார்கள். இதுவும் இளம் ஆண்களும் பெண்களும் அமைப்பில் இணைவதற்கு அடிகோலின.

***சமூக எதிர்பார்ப்புகளுக்கு அடங்காமை:*** தமிழ்ச் சமூகத்தில் திருமணங்கள் பெற்றோரால் ஒழுங்கு செய்யப்படுவதும் சீதனம் கொடுப்பதும் பொதுவான ஒன்று. சீதனம் என்னும் இழிவு நிலையிலிருந்து தப்புவதற்கு இளம்பெண்கள் விரும்பினாலும் அவர்களுக்கு இதற்கான வழிகள் தமிழ்ச் சமூகத்தில் கிடையாது. விடுதலைப்புலிகள் அமைப்பென்று ஒன்று இல்லாவிட்டால் இவ்வாறு தப்பவிரும்பும் பெண்களுக்குச் சமூகத்தை எதிர்க்க வேறு வழிகள் இல்லை. இவ்வாறு சிந்திக்கும் பெண்களுக்கும் விடுதலைப்புலிகள் அமைப்பு கவர்ச்சியான ஒரு அம்சமாகத் தோன்றியது. விடுதலைப்புலிகளின் பெண்கள் சார்ந்த கொள்கையும் அவர்களின் சீதன ஒழிப்புத் திட்டமும் இக்கவர்ச்சியை அதிகரித்தது.

***குடும்பங்களில் பாலியல் வன்முறைகள்:*** பல இளம்பெண்கள் தத்தம் குடும்பங்களில் அவர்கள் எதிர்நோக்கிய பாலியல் சார்ந்த துஷ்பிரயோகங்களிலிருந்து தப்புவதற்கும் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைந்தனர். தமிழ்ச் சமூகத்திலும் சரி ஒட்டுமொத்த தெற்காசிய சமூகத்திலும் சரி இவ்வாறான குடும்பத் துஷ்பிரயோகங்களை நல்லுணர்வுடன் கையாளுவதற்கான வழிவகைகள் கிடையாது. இவை பேசப்படாதவையாகவே உள்ளன. விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைவதால் குற்றவாளியை அம்பலப்படுத்தாமல் இத்தகைய துஷ்பிரயோகங்களிலிருந்து இளம் பெண்களால் தப்ப முடிந்தது.

## விடுதலைப்புலிகள் மகளிர் பிரிவின் கட்டமைப்பு

தமிழர் ஆயுதப் போராட்ட ஆரம்பகாலத்திலிருந்தே உணவு வழங்குதல் மருத்துவ உதவி போன்றவற்றின் ஊடாக பெண்கள் போராட்டத்திற்குப் பங்களித்திருக்கின்றனர். 1980களில் ''சுதந்திரப்பறவைகள்'' என்ற மகளிர் அமைப்பு விடுதலைப்புலிகளின்

ஒரு நிறுவனமாக உருவாக்கப்பட்டது. அதே பெயரில் ஒரு சஞ்சிகையும் ஆரம்பிக்கப்பட்டது. பெண்கள் விடுதலைப்புலிகள் அமைப்பில் ஆயுதமேந்தும் உறுப்பினர்களாக இணையத் தொடங்கிய பின்னர் சுதந்திரப்பறவைகள் என்று ஓர் அமைப்பு இல்லாமல் போய்விட்டது. ஆனால் இப்பெயரைத் தாங்கிய சஞ்சிகை இறுதிவரையும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தது. வன்னியில் இச்சஞ்சிகையின் உத்வேகம் தணிந்தே இருந்தது.

விடுதலைப்புலி அமைப்பினுள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனிப் பிரிவுகள் இருந்தன. இருப்பினும் அரசியல் ராணுவம் ஆகிய இருதள வேலைத்திட்டங்களிலும் அவர்கள் ஒன்று சேர்ந்து பல மட்டங்களில் இயங்கினர். ஆண் – பெண் தனித்தனிப் பிரிவுகளாக இயங்கியது பெண்களின் வளர்ச்சிக்கு உதவும், உதவாது என்று இரண்டுவிதமான கருத்தோட்டங்கள் வன்னியில் நிலவின. பெண்களுக்குத் தனிப்பாடசாலைகள் ராணுவத்தில் தனிப்பிரிவு என்ற கருத்து ஒழுக்கக் கட்டுப்பாடுகளுக்கும் உதவுகிறது. ஆண்களிடம் உள்ள அறிவையும் திறமையையும் பெண்களும் பெற்றுக்கொள்ள சேர்ந்திருப்பதுதான் சிறந்தது என்பது ஒரு தரப்பு வாதம். வன்னியில் இவ்விரண்டு கருத்துக்களுக்கும் இடையேயான இழுவைகள் கொஞ்சம் கொஞ்சமாக மட்டுப்படுத்தப்பட்டு ஆண்களும் பெண்களும் மேன்மேலும் பல வேலைத்திட்டங்களில் ஒன்றாகச் சேர்ந்து இயங்கத் தொடங்கியிருந்தார்கள்.

பெரும்பாலான பெண் உறுப்பினர்கள் ஒரு பெண் பொறுப்பாளரின் கீழேயே இயங்கினார்கள். இவ்வாறு பெண்கள் மட்டுமே அடங்கிய அடுக்கதிகாரம் இறுதி மேல்மட்டத்தில் ஓர் ஆண் பொறுப்பாளரில் முடியும். பெண்கள் ராணுவப்பிரிவுகளில் அடுக்கதிகார உச்சத்திலிருந்த தலைவர் பிரபாகரனாகவே இருப்பார். அரசியல்துறை மகளிர் பிரிவின் உயர் மட்டத்தலைவர் வரையிலும் பெண்கள் மட்டுமே இருப்பார்கள். இம் மகளிர் பிரிவுப் பொறுப்பாளர் மட்டும் அரசியல்துறைப் பொறுப்பாளரான ஆண்களின் கீழ் இயங்குவார்.

இதைத்தவிர பெண்களை மட்டும் கொண்ட வேறு ஒரு குழு சம அந்தஸ்தில் இயங்கியது. வெவ்வேறு பிரிவுகளில் பொறுப்பாளர் மட்டத்திலிருந்த 20 பெண்கள் கொண்ட இக்குழு பெண்கள் சார்ந்த விடயங்களைக் கலந்தாலோசிப்பதற்காகப் பிரபாகரனைத் தொடர்ச்சியாகச் சந்தித்து வந்தது. பெண் பொறுப்பாளர்களுக்கு இருந்த இவ்வாய்ப்பை ஒரு சிறப்பான சலுகையாகவே நோக்கினர். அதேயளவு மட்டத்திலிருந்த பல ஆண் பொறுப்பாளர்களுக்கு இவ்வாறு பிரபாகரனைத் தொடர்ச்சியாகச் சந்தித்துக் கலந்துரையாடும்

வாய்ப்புக்கள் இருக்கவில்லை. தமக்குக் கிடைத்த இவ்வாய்ப்பைப் பெண்களின் நிலையை மேம்படுத்துவதற்காகப் பெண் பொறுப்பாளர்கள் முறையாகக் கையாளவில்லை என்று புலித்தேவன் அடிக்கடி என்னிடம் குறைப்பட்டுக் கொண்டார். பிரபாகரனைச் சந்தித்து வந்த அரசியல்துறையில் இருந்த சில பெண் பொறுப்பாளர்களிடம் பெண்கள் சார்ந்த சில விடயங்களைப் பிரபாகரனுடன்[16] பேசித் தீர்வு காணும்படி நானும் கேட்டிருந்தேன். இப்பொறுப்பாளர்கள் இத்தகைய விடயங்களில் உறுதியாக நிற்பதற்குத் தயங்கியதை என்னாலும் அவதானிக்க முடிந்தது.

விடுதலைப்புலிகளின் பல அமைப்புகளிலும் பெண் உறுப்பினர்கள் ஒரு ஆண் பொறுப்பாளரின் கீழ் பணி செய்தனர். படைத்துறை சாராத மற்ற பிரிவுகளிலேயே இவ்வாறான கட்டமைப்பு இருந்தது. இவ்வாறு ஒரு ஆண் பொறுப்பாளரின் கீழ் வேலை செய்த பெண் உறுப்பினர்களுக்கு இரண்டு நேரடிப் பொறுப்பாளர்களிடம் பணியாற்ற வேண்டிய இக்கட்டான நிலை ஏற்பட்டது. இக்கட்டமைப்புகளில் பணிசார்ந்த விடயங்களில் ஆண் பொறுப்பாளரின் கட்டளையையும் ஒழுக்கம் சார்ந்த விடயங்களில் பெண் பொறுப்பாளர் விதிக்கும் விதிகளையும் பெண் உறுப்பினர்கள் ஏற்று நடந்தார்கள். இரண்டு நேரடிப் பொறுப்பாளர்களின் கீழ் பணியாற்றியது சிலசமயங்களில் பிரச்சினைக்கு உரியதாக இருந்தது. இதேபோல் ஆண் உறுப்பினர்கள் பெண் பொறுப்பாளர்களின் கீழ் பணியாற்றுவதும் பொதுவாகவே இருந்து வந்தது.

## ஆற்றல்வளம் குன்றியது ஏன்?

விடுதலைப்புலி அமைப்பினுள் மூன்று தசாப்தங்களாகப் பெண்கள் மேம்பாடு சார்ந்த வேலைத்திட்டங்கள் முன்னெடுக்கப்பட்டு வந்தன. யாழ்ப்பாணத்தில் புலிகள் அமைப்பின் கைகள் ஓங்கியிருந்த காலமான 1980களின் பிற்பகுதியிலும் 1990களின் முற்பகுதியிலுமே அமைப்பின் பெண்கள் சார்ந்த கொள்கைகளும் திட்டங்களும் வடிவம் பெறத்தொடங்கின. சீதனப் பழக்கத்தை ஒழிப்பதற்கு மிகப்பெரும் வேலைத்திட்டம் ஒன்று இக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அமைப்பிலிருந்த பெண் உறுப்பினர்கள் இத்திட்டத்தை முன்னின்று செயற்படுத்தினர். சீதனப் பழக்கத்தின் வேர்கள் பற்றிய அடேல் பாலசிங்கத்தின் ''உடையாத சங்கிலி'' என்ற ஓர் சமூக ஆய்வு நூலும் இக்காலத்தில் விடுதலைப்புலிகளால் வெளியிடப்பட்டது. 1996ம் ஆண்டு யாழ்ப்பாணத்திலிருந்து இடம்பெற்ற பிரமாண்டமான இடப்பெயர்விற்குப் பின்னர், யாழ்ப்பாணத்தின் செறிவான புத்திஜீவிகளுடனான தொடர்பு

விடுதலைப்புலிகளுக்கு குறைந்தது. வன்னியில் பெண்கள் சார்ந்த திட்டங்கள் பலவீனமடைந்ததற்கு இதுவும் ஒரு காரணம் என்பது என் கருத்து.

எனது வன்னிக் காலத்தில் நான் அவதானித்த வேறு ஒரு விடயமும் விடுதலைப்புலி உறுப்பினர்களின் ஒட்டுமொத்தத் திறனின் நலிவுக்குக் காரணம் என்று கருதுகிறேன். அதி திறமையுள்ள பணியாளர்களைப் பொன்னுக்கும் மேலாகக் கருதுவது இன்றைய வியாபார நிறுவனங்களின் தன்மை. சமத்துவத்தை வலியுறுத்தும் எண்ணத்துடன் விடுதலைப்புலிகள் அமைப்பினுள் இக்கருத்து உதாசீனம் செய்யப்பட்டு எல்லோருமே போர்க்களத்துக்கு அனுப்பப்பட்டார்கள். விடுதலைப்புலி அமைப்பினுள் இருந்த பல அதி திறமையான உறுப்பினர்கள் மிக இளவயதிலேயே இவ்வாறு களத்தில் கொல்லப்பட்டார்கள். பெண் உறுப்பினர்களிடையே இதை மிகத் தெளிவாக என்னால் அவதானிக்க முடிந்தது. பெண்கள் மேம்பாட்டிற்காக அதிதிறமையாக உழைக்கக் கூடிய தலைமைத்துவம் வாய்ந்த பெண் உறுப்பினர்கள் களத்தில் கொல்லப்பட்டார்கள். இத்தகைய அறிவும், திறமையும், தலைமைத்துவமும் கூடியவர்களின் இழப்பை ஈடுசெய்வது எளிதல்ல என்பது வியாபார நிறுவனங்களுக்காகப் பணியாளர்களை வேட்டையாடுபவர்களுக்கு நன்றாகத் தெரிந்த விடயம். அத்தகைய திறமைகள் கொண்ட பாரதி, வானதி என்ற இரு விடுதலைப்புலிகளின் பெண் உறுப்பினர்கள் 1990களில் கொல்லப்பட்டார்கள்.

## ஒரு நுண்படிவத்தில்

பொதுப் பெண்களின் உடையைப்பற்றி வன்னியில் தொடர்ச்சியான ஒரு விவாதம் இடம்பெற்று வந்தது. இவ்விவாதத்தில் நானும் பல தடவைகள் பங்கு ஏற்றிருக்கிறேன். இக்கருத்து விவாதம் ஒரு அற்பமான விடயமானாலும் வன்னியில் பெண்விடுதலை எனும் கருத்துடன் இயங்கிய பல அம்சங்களை இவ்விவாதம் படம்பிடித்துக் காட்டுகிறது.

விடுதலைப்புலிப் பெண் உறுப்பினர்களின் கறுப்புக் கால்சட்டையும், மெல்லிய நிறத்தில் தளர்ச்சியாக இருக்கும் மேல்சட்டையும் இடுப்பில் அணியும் பெல்டும் கண்ணுக்கு உடனே புலப்படும் பெண்விடுதலை பற்றிய ஒரு காட்சியாக அமைந்திருந்தது. இதேபோலவே பெண் காவல்துறைப் பணியாளர்களின் சீருடையும் அமைந்திருந்தது. வெளியிலிருந்து வருகை தந்த பலர் உலகின் இப்பகுதியில் பெண்களின் இத்தகைய முற்போக்கான உடைகளைக்

கண்டு பெருமைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் விடுதலைப்புலி அமைப்பில் பணியாற்றிய பொதுப் பெண்கள் சேலையை சீருடையாக அணிய நிர்ப்பந்தித்த முறை வன்னியில் பெண் அடக்குமுறையின் சின்னமாக விளங்கியது. விடுதலைப்புலிகளின் நிறுவனங்களில் பணியாற்றிய ஆயிரக்கணக்கான பொதுப் பெண்கள் (குடிமைத்துறை) சீருடையாகச் சேலை அணியுமாறு நிர்ப்பந்திக்கப் பட்டார்கள். இவ்விருவிதமான சீருடை மாறுபாடு அவதானிப்போரின் கவனத்தை ஈர்த்திருக்கும். விடுதலைப்புலிப் பெண் உறுப்பினர்கள் கால்சட்டையும், சேட்டும் அணியும்போது பொதுப் பெண்கள் சேலை அணிய நிர்ப்பந்திக்கப்பட்டது அதிர்ச்சியைக் கொடுப்பதாக இருந்தது.

பல இளம்பெண்கள் தாம் விடுதலைப்புலி நிறுவனங்களில் வேலை செய்வதை விரும்பாததற்கு இச்சீருடை விதியே காரணம் என்று எனக்குச் சொல்லி இருக்கிறார்கள். ஒட்டுமொத்தப் பெண்களுமே இச்சீருடை விதியை எதிர்த்தார்கள். விடுதலைப்புலிப் பெண் உறுப்பினர்கள் வெளிப்படையாகவே தமது எதிர்ப்பைத் தெரிவித்தார்கள்.

இச்சீருடை விவாதம் விடுதலைப்புலி அமைப்பினுள் பெண் விடுதலையின் நுண்படிவமாக பார்ப்பதற்கு இன்னுமொரு அம்சத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். பெண்கள் விடுதலைப்புலிகள் அமைப்பில் ஆயுதம் தாங்கும் உறுப்பினர்களாக இணையத் தொடங்கியதைப்பற்றி பல மூத்தபெண் உறுப்பினர்கள் ஒரு கதையை மீண்டும் மீண்டும் சொல்லக் கேட்டிருக்கிறேன். பல ஆண் பொறுப்பாளர்கள் இதை எதிர்த்தார்கள் எனவும் ஆனால் பிராபாகரன் அதையும் மீறி இதை அமுல்படுத்தினார் எனவும் சொல்வார்கள். இதுபோலவே பெண் உறுப்பினர்களின் கால்சட்டை மேல்சட்டை சீருடையைச் சமூகம் ஏற்காது என்று காரணம் காட்டி ஆண் பொறுப்பாளர்கள் எதிர்த்தார்கள் என்றும் அதைமீறி பிரபாகரன் இதை அமுல்படுத்தினார் எனவும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

வன்னியில் பெண்களின் சீருடை பற்றிய பல்விதமான கருத்தோட்டங்கள் பெண் விடுதலைபற்றிய நிலைப்பாட்டைத் துல்லியமாகப் படம்பிடிக்கிறது என்பது எனது கருத்து. விடுதலைப்புலிப் பெண் உறுப்பினர்களும் அதிகமான பொதுப் பெண்களும் பெண்விடுதலை பற்றிய விழிப்புணர்வு உள்ளவர்களாகக் காணப்பட்டனர். பிரபாகரனும் இதுபற்றிய அடிப்படைத் தெளிவு உள்ளவராக இருந்தார். ஆனால் ஏனைய ஆண் பொறுப்பாளர்கள் இதுபற்றிய புரிதல்களில் பின்தங்கியவர்களாகவே இருந்தனர். பிரபாகரனும்கூட ஆண் பொறுப்பாளர்களின் பிற்போக்கான இந்நிலைபற்றிக் குறைப்பட்டிருக்கிறாராம். அவர்கள்

தான் கொடுக்கும் ஏனைய பொறுப்புக்களைத் தனது எதிர்பார்ப்புக்கும் மேலாக திறம்பட செய்தாலும், பெண்கள் மேம்பாடு சார்ந்த திட்டங்களில் அவர்களின் வேலைகள் ஏமாற்றமளிக்கிறது என்று சொல்வாராம். ஆண் பொறுப்பாளர்கள் எல்லோருமே பெண்விடுதலை பற்றிய விளக்கமற்றவர்களாக இருந்தனர் என்றும் சொல்வதற்கில்லை. பெண்விடுதலை பற்றிய தெளிவுகொண்ட விடுதலைப்புலி ஆண் பொறுப்பாளர்கள் சிலரையும் நான் வன்னியில் சந்தித்திருக்கிறேன்.

## வன்னியில் தொடர்ந்த முயற்சிகள்

2008ம் ஆண்டில் தமிழ்ச்செல்வனின் கொலைக்குப் பின்னர் காவல்துறைப் பொறுப்பை எடுத்துக்கொண்ட இளங்கோ இத்துறையில் அமுல்படுத்திய பெண்கள் நலன் சார்ந்த திட்டங்கள் பல எனக்குப் பெரும் ஆச்சரியத்தைக் கொடுத்தன. பெண் காவல்துறையினருக்குப் பெண்கள் பற்றிய விசேட பயிற்சிகளைக் கொடுக்க இவர் வழிவகுத்தார். காவல்துறையில் பணியாற்றிய அநேகமான பெண்கள் இளவயதினராகவும் காவல்துறைப்பயிற்சி குறைவாகவும் இருந்ததால் இப்பெண்கள் சார்ந்த பயிற்சி அவர்களுக்குப் புது அறிவையும் கொடுத்தது. ஆனால் இளங்கோவின் இத்திட்டம் முழுமைபெறுவதற்கு முன்னர் 2008 இல் பல இடப்பெயர்வுகள் ஆரம்பித்து விட்டதால் அதற்கான பலன்களை அடையமுடியவில்லை. இளங்கோவின் இத்திட்டத்தில் பங்குபெற என்னையும் கேட்டிருந்ததால் அவருடன் நெருங்கி உரையாட எனக்கு வாய்ப்பும் கிடைத்தது. பெண்கள் மேம்பாடு பற்றிய அவரின் ஆழமான அறிவும், அதற்கு அவர் கொடுத்த முன்னுரிமையும் பெரு மகிழ்ச்சியைக் கொடுத்தது. இதற்கு முன்னரும் தான் பெண்கள் மேம்பாடு பற்றிய நாடகங்கள் தயாரித்ததாகவும் அவர் எனக்குச் சொன்னார். வன்னியில் பெண் உறுப்பினர்கள் பெண்கள் மேம்பாட்டிற்காகக் கடுமையாக உழைக்கத் தவறிவிட்டார்கள் என்ற தனது விரக்தியையும் எனக்குத் தெரிவித்தார். போரின் இறுதிக்கட்டத்தில் இளங்கோவும் லங்கா ராணுவத்தால் கொல்லப்பட்டார் அல்லது காணடிக்கப்பட்டார்.

எனது வன்னிக்காலத்தில் எல்லா வயது ஆண் பெண் சிறுவர்களுக்கும் கராத்தே பயிற்சித் திட்டங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டன. வன்னி முழுவதையும் உள்ளடக்கிய கராத்தே போட்டிகள் நடத்தப்பட்டு இப்பயிற்சிக்கு ஊக்கம் அளிக்கப்பட்டது. பெண் சிறுமிகள் கராத்தே பயிற்சி எடுப்பதென்பது ஒரு புரட்சிகரமான

முயற்சி. இதுவும் பெண்கள் வளர்ச்சிக்குப் பல வழிகளில் உதவியது. சொல்லப்போனால் கடுமையான உடற்பயிற்சி எடுத்த எல்லா விடுதலைப்புலி பெண் உறுப்பினர்களையும் இவர்கள் சீருடையில்லாமல் சிவில் உடையில் இருக்கும்போதும் தெரிந்து கொள்ளலாம். இவர்களின் தோள்கள் பயிற்சி எடுக்காத பெண்களின் தோள்களைவிட கொஞ்சம் விரிந்திருக்கும். இவர்களின் இயல்பு ''நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையுடனும்'' இருக்கும். இதை நான் மட்டுமல்ல வன்னிக்குப் பெண் போராளிகளைப் பற்றிய ஆய்வுக்காக வந்த மேற்குலக ஆய்வாளர்கள் உட்பட பலரும் அவதானித்திருக்கிறார்கள். இம்மாற்றங்கள் பொதுப் பெண்களையும் கொஞ்சம் கொஞ்சமாக சென்றடையத் தொடங்கியிருந்தன. பொதுப் பெண்களின் கராத்தே பயிற்சியும் இம்மாற்றத்திற்கு உதவியது.

## திருமணமான விடுதலைப்புலித் தம்பதிகள்

விடுதலைப்புலி உறுப்பினர்களிடையே நிலவிய தாம்பத்திய உறவுகள் பொதுவாகத் தமிழ்ச் சமூகத்தில் நான் அவதானித்த தம்பத்திய உறவுகளை விட மிக ஆரோக்கியமானதாக எனக்குப்பட்டது. அவர்களின் ஆரோக்கியமான உறவுகளுக்குப் பல காரணங்களை என்னால் ஊகிக்க முடிந்தது. மனைவி–கணவன் இருவருமே தமது பணிகளூடாக வீட்டுக்கு வெளியே பொது விடயங்களில் ஆழமாக ஈடுபட்டதால் மனநிறைவடைந்தனர். இதனால் அவர்களின் உறவிலே ஏற்படக்கூடிய அதிருப்திகள் பெரிதாக்கப்படவில்லை. ஆண் விடுதலைப்புலி உறுப்பினர்கள் பெண்களுக்கு, குறிப்பாக உறுப்பினராக இருந்த பெண்களுக்கு, அளித்த மதிப்பும் தமிழ்ச் சமூகத்தில் பொது ஆண் மக்கள் பெண்களுக்கு அளிக்கும் மதிப்பைவிட மிக அதிகமாகவே இருந்தது. இம் மதிப்பு பெண் உறுப்பினர்கள் ஆற்றிய பணிகளினூடாக அவர்கள் பெற்றதாகும். இதன் மறுபக்கம் பெண்களும் தம் கணவரின் வன்முறைப் பயமின்றித் தமது கருத்துக்களைப் பகிர்ந்துகொள்ளக் கூடியதாக இருந்தது அவர்களின் மனநலனுக்கு உதவியது.

போர் காரணமாக வன்னியில் பெருமளவான இளவயது விதவைகள் இருந்ததால் மீள் திருமணங்கள், பொது மக்களிடையேயும் அமைப்பின் உறுப்பினர்களிடையேயும், வன்னியில் அதிகமாக நடந்தன. சில விடுதலைப்புலி ஆண்கள் மாவீரர்களின் விதவைகள் என்ற காரணத்திற்காகவே திருமணம் செய்தனர். இவ்வாறு மாவீரரின் விதவைகளைத் திருமணம் செய்து மகிழ்வுடன் உள்ள பல தம்பதிகளை நான் சந்தித்திருக்கிறேன்.

## எனது பங்கு

எனது முதல் மூன்று வருட வன்னி காலத்தில் அங்கு நிலவிய பெண்கள் சார்ந்த விடயங்களைப் பற்றிய எனது நோக்கு விரிவிடைந்தது. அங்கிருந்த பல பெண்களின் மோசமான நிலையையும் அதேநேரத்தில் பெண்களின் மேம்பாட்டிற்காக சிறப்பான ஆற்றல் வன்னியில் செலவிடப்படுவதையும் என்னால் அவதானிக்க முடிந்தது. இங்கு காணப்பட்ட இவ்வாற்றல் வளத்துடன் என்னையும் இணைத்துச் செயற்பட விரும்பினேன். 2008ம் ஆண்டிலேயே சமாதானச் செயலகத்திலும் பின்னர் நிசோரிலும் எனது பணிகள் குறைந்து வந்ததால் பெண்கள் சார்ந்த வேலைகளில் ஈடுபட எனக்கு நேரம் கிடைத்தது. உருவாகிக்கொண்டு வந்த பெரும் அழிவுதான் எனக்குக் கிடைத்த எனது சமாதானப் பணி நேரத்தைக் குறைத்தது என்று பின்னணி முழுமையாக உணராமல், நீண்ட காலமாக நான் செய்ய விரும்பிய பெண்கள் சார்ந்த திட்டச் செயல்பாடுகளை ஆர்வத்துடன் ஆரம்பித்தேன். எவ்வகையான திட்டத்தைத் தொடங்கலாம் என்ற சில தடுமாற்றங்களுக்குப் பின்னர் குடும்ப வன்முறை பற்றிய திட்டங்களே அக்கட்டத்தில் பொருத்தமானதாகப்பட்டது. பெண்கள் சார்ந்த வேலைகளில் ஈடுபட்டிருந்த சில பெண் விடுதலைப்புலி உறுப்பினர்களையும், சில பொதுப் பெண்களையும், பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தில் கூட்டி இதுபற்றி ஆலோசித்தோம். இக்கூட்டங்களிலும் நான் முன்னர் குறிப்பிட்ட ஆற்றல்வளம் தெளிவாக வெளிப்பட்டது. குறிப்பாக அக்கூட்டத்திலிருந்த திருமணமான ஒரு பொதுப் பெண்ணிடம் பெண்கள் மேம்பாடு சார்ந்த விழிப்புணர்வும் தலைமைத்துவ ஆற்றலும் தெளிவாகத் தெரிந்தது. இது எனக்கு கூடுதலான நம்பிக்கையை ஊட்டியது. விடுதலைப்புலி அமைப்பின் பெண் சமத்துவம் பற்றிய கோட்பாடு ஓரளவுக்குப் பொதுச் சமூகத்தையும் அடைந்துள்ளது என்ற எண்ணத்தை உறுதிப்படுத்தியது.

எமது வேலைத்திட்டம் முழுமையாக இருக்கவேண்டும் என்ற எனது ஆர்வத்தில் குடும்ப வன்முறை பற்றிய ஒரு ஆழமான சுற்றாய்வு (Survey) முதலில் செய்யவேண்டும் என்று நான் முன்மொழிந்து சுற்றாய்வுக்கான கேள்வித்தாளையும் உருவாக்கினேன். பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையம் முப்பது பேர் கொண்ட பெண்கள் குழு ஒன்றை வீடுவீடாகச் சென்று இச்சுற்றாய்வு செய்வதற்குத் தேர்ந்தெடுத்தது. சுற்றாய்வுக்கான கேள்வித்தாளை எவ்வாறு நிரப்புவது என்பது பற்றிய ஒரு கிழமை நீடித்த ஒரு பயிற்சியையும் கொடுத்தார்கள். இச்சுற்றாய்வு ஒரு பெரிய தோல்வியைக் கண்டது.

இதற்கான பழியை யார் மேல் சுமத்துவது என்று எனக்குத் தெரியவில்லை. இத்தோல்வியால் நான் பெரும் ஏமாற்றம் அடைந்தேன். பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் பொறுப்பாளர் கலைமகள் அப்போது ஒரு பெரும் உதவியைச் செய்தார். பல வருடங்களாக அந்நிறுவனத்திடம் உதவி தேடிவந்த பெண்களைப் பற்றிய தரவுகளைத் தொகுத்துப் புள்ளிவிபரமாகத் தந்தார்.

கலைமகளை இங்கு வாசகர்களுக்கு அறிமுகம் செய்ய வேண்டும். இவர் பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் பொறுப்பாளர். இவரின் குடும்பம் யாழ்ப்பாணத்தில் வசித்து வந்தது. இவரின் தாயார் இவருக்கு ஒன்பது வயதாக இருக்கும்போது இறந்து விட தந்தையார் வேறு திருமணம் செய்துகொண்டார். கலைமகளும், அவரது தங்கையும் கிளிநொச்சியில் ஒரு கிறிஸ்தவ அமைப்பினால் நடத்தப்பட்டு வந்த கருணா இல்லம் எனப்படும் ஒரு சிறுவர் இல்லத்தில் விடப்பட்டார்கள். இவரின் தங்கை அங்கிருந்து ஓடிச்சென்று விடுதலைப்புலி அமைப்பில் இணைந்துகொண்டார். தங்கையை அமைப்பிலிருந்து விடுவிப்பதற்காகக் கலைமகள் மதில் ஏறிக்குதித்து வந்து அமைப்பில் இணைந்துகொண்டு பின்னர் தனது தங்கையை விடுவித்தார். 1990களில் மட்டக்களப்புக் போர்க்களங்களில் இவரும் பங்காற்றினார். அக்காலத்தில் இவர் இறந்துவிட்டதாக நினைத்து ஏனைய உடல்களுடன் இவரது உடலும் போடப்பட்டது. வேறு ஒரு போராளி இவரின் உடலில் சிறு அசைவுகளைக் கண்டபின் இவரை ஏனைய உடல்களிலிருந்து மீட்டார். பின்னரும் ஜெயசிக்குரு சண்டைக் களத்தில் வயிற்றில் பெரிய காயமடைந்தார். இதனால் இவருக்குக் குழந்தைகள் பெற முடியாமல் போனது.

ஒரு காலத்தில் அநேகமாக ஆண் உறுப்பினர்கள் மட்டுமே வகிக்கும் கோட்டப் பொறுப்பாளர் பதவி கிளிநொச்சிக் கோட்டத்தில் கலைமகளுக்குக் கொடுக்கப்பட்டது. இது இவரது நிருவாகத் திறமையைக் குறிக்கும். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கு முன்னர் இவர் பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் பொறுப்பாளராக்கப்பட்டார். தன் நிர்வாகத் திறமையால் இதை மிக உச்சமான வளர்ச்சிக்குக் கொண்டு சென்றார். சக போராளி ஒருவரை விரும்பித் திருமணம் செய்துகொண்ட இவர் ஒரு கைவிடப்பட்ட பெண் குழந்தையை சுவீகாரம் எடுத்துக்கொண்டார். 2009ம் ஆண்டு மார்ச் மாதத்தில் நான் அவரை இறுதியாகக் கண்டேன். அப்போதும் ஊக்கம் குறையாமல் பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தில் அடைக்கலம் தேடிவந்த நிர்கதியான பெண்கள்,

சிறுவர்களோடு தனது மூன்று வயதுக் குழந்தையுடன் இருந்தார். சில நாட்களுக்கு முன்பு பெற்றோர்களை எறிகணைத் தாக்குதலில் இழந்த சகோதரர்களான நான்கு சிறுவர்களை அப்போது அவர் எனக்கு அறிமுகப்படுத்தினார்.

இறுதிப்போரின் முள்ளிவாய்காலிலிருந்து வெளியேறிய ஏனைய பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையப் பணியாளர்களுடன் நான் பேசியிருக்கிறேன். கலைமகளும், கணவரும், குழந்தையும், பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் துணைப்பொறுப்பாளரான கௌரியும், அவர் கணவரும் ஏனைய மையப் பணியாளர்கள் பயனாளிகளுடன் முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறினார்கள். இவர்களில் கலைமகள் மற்றும் கௌரி குடும்பத்துடன் ஏனைய விடுதலைப்புலி உறுப்பினர்களும் லங்கா ராணுவத்தால் பிரித்துத் தடுக்கப்பட்டார்கள். முள்ளிவாய்காலிலிருந்து வெளியேறிய பின் லங்கா ராணுவத்தால் தடுக்கப்பட்டு காணாமற்போன நூற்றுக்கணக்கானோரில் கலைமகள் மற்றும் கௌரி குடும்பங்களும் அடங்குவர். கலைமகளின் மூன்று வயதுக் குழந்தை தணிகைச்செல்வியும் கூட காணாமற் போனவர்தான்.

பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் தங்கும் விடுதியில் நான் வசித்து வந்ததால் அங்கு வரும் பல பொதுப் பெண்களையும் பெண் விடுதலைப்புலி உறுப்பினர்களையும் சந்தித்திருக்கிறேன். இங்கு அடிக்கடி வருபவர்களில் வரதா என்ற உறுப்பினரும் ஒருவர். இவர் படைத்துறையைச் சேர்ந்தவர். கலைமகளைப் பார்ப்பதற்காக அங்கு வருவார். வரதாவும் கலைமகளின் குழந்தை தணிகையும் விளையாடும் காட்சி இப்போது நினைத்தாலும் என் கண்முன்னே நிழலாடும். குழந்தையோடு குழந்தையைப்போல் எவ்வித செயற்கைத் தன்மையும் இல்லாமல் உரக்கச் சிரித்து இருவரும் விளையாடுவார்கள். விடுதலைப்புலிகள் அமைப்பில் பெண்கள் படைத்துறைப் பிரிவுகள் இரண்டு இருந்தன. இவையிரண்டும் இரு பெண் மாவீரர்களின் பெயர்களைத் தாங்கி ‘சோதியா படையணி’, ‘மாலதி படையணி’ என்று அழைக்கப்பட்டன. வரதா சோதியா படையணியைச் சேர்ந்தவர். தணிகையும் வரதாவும் அடிக்கடி விளையாடும் ஒரு விளையாட்டு இவ்விரு பெண்கள் படைத்துறைப் பிரிவுகளைப் பற்றியது. தணிகையைப் பார்த்து வரதா ‘‘நீங்கள் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்?’’ என்று ஒரு கேள்வி கேட்பார். குழந்தை தணிகையின் பதில் இரு பிரிவுகளில் ஒன்றாக மாறி மாறி வரும். தணிகை வரதாவின் பிரிவைச் சொல்லாமல் மற்றயதைச் சொல்லும்போது வரதாவின் பலத்தக்

கூச்சலும் அத்துடன் சேர்ந்த குழந்தையின் பலத்த சிரிப்பும் பார்ப்பவர்களுக்குக் கண்ணிறைந்த காட்சியாக இருக்கும். 2008ம் ஆண்டுப் பிற்பகுதியில் வரதா களத்தில் தலையில் காயப்பட்டார். அப்போதும் கலைமகள் இவரைப் பராமரித்தார். வரதாவை நான் இறுதியாக 2009ம் ஆண்டு மார்ச் மாதத்தில் மாத்தளனில் கண்டேன். வரதா இறுதிச் சண்டையின் போது கொல்லப்பட்டார்.

பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் உதவியை நாடிய பெண்கள் எதிர்கொண்ட குடும்ப வன்முறை பற்றிய புள்ளி விபரத்தைக் கலைமகள் தொகுத்துத் தந்தார். இணையத்தில் காணக்கூடிய குடும்ப வன்முறை பற்றிய வேறு புள்ளிவிபரங்களுடன் இதை ஒப்பிட்டுப் பார்த்தேன். லங்காவிலும், இந்தியாவிலும் காணப்பட்ட குடும்ப வன்முறை வன்னியிலும் அடர்ந்து காணப்படுவது தெரிந்தது. இங்கிலாந்தின் குடும்ப வன்முறை பற்றிய ஒரு கையேட்டிலும் கூட 30 வீதம் குடும்பங்களில் வன்முறை காணப்படுவதாகக் குறிப்பிட்டிருந்தது. கலைமகள் தந்த புள்ளி விபரங்களும் இதையே காட்டின. குடும்ப வன்முறைக்கு மதுவே காரணம் என்ற ஒரு கருத்து வன்னியில் பரவலாகக் காணப்பட்டது. கலைமகளின் புள்ளிவிபரங்களும் 60 வீதமான குடும்ப வன்முறைகளுக்கு மதுவே காரணமாக இருப்பதைக் காட்டின. நான் அறிந்துகொண்ட, சேகரித்த, படித்த விடயங்களைத் தொகுத்து ஒரு நீண்டகட்டுரையைத் தமிழில் எழுதினேன். எமது குழுவின் மேலதிக நடவடிக்கைக்காக முடிவெடுப்பதற்கு இதைக் கலைமகளிடம் கொடுத்தேன். எமது அடுத்த சந்திப்பின்போது வன்னியில் வாராந்தம் வெளிவந்த வெள்ளிநாதம் பத்திரிகையில் குடும்ப வன்முறை சார்ந்த உண்மைக் கதைகளை எழுதுவது என்று முடிவு செய்தோம்.

எமது குழுவில் இருந்த அனைத்துப் பெண்களும், பெண்கள் சார்ந்த வேலைத்திட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இவர்கள் எல்லோரிடமும் அவ்வகையான உண்மைக் கதைகள் பல இருந்தன. இவர்கள் தமக்குத் தெரிந்த கதைகளைக் கையால் எழுதி என்னிடம் தந்தார்கள். இதை நான் கணனியில் ஏற்றி வடிவமைத்தேன். வெள்ளிநாதம் பத்திரிகை ஆசிரியரிடமிருந்து இத்திட்டதிற்கு எதிர்ப்பு வருமென்று நாங்கள் ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. இரண்டு மூத்த பெண் விடுதலைப்புலி உறுப்பினர்கள் வெள்ளிநாதம் ஆசிரியரைச் சந்தித்து நாம் சமர்ப்பித்த கதைகளைப் பிரசுரிக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். இதுவும் பயனளிக்கவில்லை. வெள்ளிநாதம் பத்திரிகையில் ஒருபக்கம் பெண்கள் சார்ந்த விடயங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்தும் ஆசிரியர் இக்கதைகளை வெளியிட மறுத்தது எமக்கு அதிர்ச்சியளித்தது. அக்காலப்

போர்ச்சூழலில் இவ்வகையான ஆக்கங்களுக்கு இடமில்லை என்பதே ஆசிரியரின் கருத்தாக இருந்தது.

பின்னர் எமது குழு வன்னியில் ஒரு விளம்பரத்தட்டிப் பிரச்சாரம் செய்வதென்று முடிவு செய்தது. விளம்பரத்தட்டிகளுக்கென குடும்ப வன்முறைக் காட்சிகளை நடித்துப் படம்பிடிப்பதில் பல மணித்தியாலங்கள் செலவு செய்தோம். வன்னியில் இயங்கிய ஒக்ஸ்பாம் எனும் சர்வதேச நிறுவனம் விளம்பரத்தட்டிகளைச் செய்து தருவதாகச் சொன்னது. அவர்களிடம் இதற்காக நாம் செய்த ஆக்கங்களும் கையளிக்கப்பட்டது. இவற்றை வீதியோரங்களில் நிறுவுவதற்கான அனுமதி எடுக்கும் வேலையையும் குழுவில் சிலர் தொடங்கியிருந்தனர். இக்கட்டத்தில் நாங்கள் கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர்ந்தோம். வன்னியில் பெண்கள் சார்ந்த வேலைத் திட்டங்கள் செய்ய நான் எடுத்த முயற்சிகளும் கண்ட கனவுகளும் இத்துடன் முடிவுக்கு வந்தது.

# வன்னிச் சமூகம்

எனது வன்னிக்காலத்தின் சிறப்பான அனுபவங்களைப் பற்றிய விவரிப்பு கடைசி அத்தியாயத்துடன் நிறைவுறுகிறது. இருப்பினும் இதுவரை இங்கு சொல்லப்படாத வன்னிச் சமூகம் பற்றிய மேலதிகமான ஒரு விவரிப்பையும் வாசகர்களுக்குத் தர விரும்புகிறேன். இவ்வத்தியாயமும் அடுத்த அத்தியாயமும் வன்னியைப்பற்றிய இவ்வகையான ஒரு பெருநோக்காக அமைகிறது.

வன்னி மக்கள் பரம்பல் கூட சுவாரசியமானதுதான். பல சந்ததிகளாக வன்னியிலேயே வாழ்ந்த ஒரு பகுதியினர் சிறுபான்மையினராக இருந்தார்கள். வேறு ஒரு பகுதியினர் மூன்று நான்கு சந்ததிகளாக அங்கு வாழ்ந்தவர்கள். 1950களில் லங்கா அரசு விவசாயத்தை வளர்க்கும் நோக்கத்துடன் காட்டுக்காணியைப் பிரித்துப் பொதுமக்களுக்குக் கொடுத்தது. மக்கள் காட்டை அழித்து அதை விவசாய நிலமாக்கி அதில் வரும் வருமானத்தில் வாழ்ந்து வந்தார்கள். அத்துடன் வன்முறைகளால் விரட்டப்பட்ட மலையகத்தைச் சேர்ந்த இந்திய வம்சாவழி தமிழர்களும் வன்னியில் தஞ்சம் அடைந்து அங்கு சில சந்ததிகளாக வாழ்ந்து வந்தார்கள். 1995ம் ஆண்டில் லங்கா ராணுவம் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றியபோது யாழ்ப்பாணத்திலிருந்து ஒட்டுமொத்தமாக வெளியேறியவர்கள் ஒரு பெரிய தொகையினராக வன்னியில் இருந்தார்கள். இதுபோலவே தமிழீழத்தின் ஏனைய பகுதிகளிலிருந்து வன்முறையால் விரட்டப்பட்ட தமிழர்களும் அங்கு தஞ்சம் அடைந்திருந்தனர். லங்கா ராணுவத்தின் வன்முறைகளால் மிகவும் பாதிக்கப்பட்ட ஆனால் வெளி நாடுகளுக்குத் தப்பிச்செல்ல வழியில்லாத ஒரு தொகை மக்கள் விடுதலைப்புலிகளின் வன்னியில் தஞ்சம் அடைந்திருந்தனர். லங்கா ராணுவத்தின் அடக்குமுறைகளை அனுபவித்த இம்மக்கள் பரம்பல் ஒரு சீரிய சமூகப் பரிசோதனைக்களமாக இருந்தது. இம்மக்களிடையே பரந்து விரிந்த விடுதலைப்புலிகளின் செயற்பாடுகளினால் போராட்ட குணம்கொண்ட இச்சமூகம் சில தனித்துவமான கூறுகளைக் கொண்டிருந்தது.

போரினால் ஏற்பட்ட உடல், மன வடுக்கள் வன்னி மக்களிடையே வியாபித்திருந்தது. வன்னியில் கொஞ்சநேரம் இருந்து

எவரிடம் உரையாடினாலும் அவர்களின் முந்திய போர்க்கால அவலங்கள் அவ்வுரையாடலில் வெளிப்படும். 2002ம் ஆண்டுக்கு முன்பே வன்னியில் ஒவ்வொருவரும் தம் இதயத்தில் இத்தகைய வடுக்களைச் சுமந்துகொண்டிருந்தனர். இத்தகைய மக்களே 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் பின்னர் வன்னியை நம்பிக்கையுடன் அபிவிருத்தி செய்தனர். 2004ம் ஆண்டு டிசம்பர் சுனாமிக்குப் பின்னர் வன்னிக்கு ஏராளமான சர்வதேச நிறுவனங்கள் உதவிசெய்வதற்கு வந்திறங்கின. இந்நிறுவனங்களில் பணியாற்றத் தொகையாக வந்த வெளிநாட்டவர்கள் இம்மக்களின் மனோதிடத்தை, மீண்டும் மீண்டும் அவலங்களை எதிர்கொண்ட இவர்களின் மனஉறுதியைக் கண்டு வியந்திருக்கின்றனர். இதற்கு விடுதலைப்புலிகள் மட்டும் காரணம் அல்ல. தமிழ் கலாச்சாரமும் இம்மக்களின் தாங்கும் சக்திக்குக் காரணமாக இருந்தது. தமிழ் கலாச்சாரத்தின் பல அம்சங்கள் மக்களுக்கு இத்தகைய தாங்கு சக்தியைக் கொடுத்தன.

தமிழ் கலாச்சாரத்தில் உறவினரும், அயலவரும் குடும்பங்களின் துக்கத்திலும் மகிழ்வுகளிலும் நெருக்கமாகப் பங்கேற்பார்கள். இதனால் குடும்ப ரகசியங்கள் என்பவை மிகவும் அரிது. இப்பங்கேற்புக்களில் பொதுவாக உணவுப் பகிர்வு இடம்பெறும். அவலங்களின்போது எல்லோரும் கூடி ஓலமிட்டழுவதும் மக்களின் பிணைப்பை இறுக்கமாக்குகிறது. குழந்தைகள் ஒரு சூழலின் பொதுவான பொறுப்பென்பதும் இப்பிணைப்பை இறுக்குகிறது. ஆக மீண்டும் மீண்டும் நேர்ந்த அவலங்களுக்கு முகம் கொடுத்த மக்களின் பிணைப்பை மேலும் இறுக்கமாக்க தமிழ் கலாச்சாரத்தின் பல அம்சங்களும் உதவின. இத்தகைய பிணைப்பே மக்களின் தாங்கு சக்திக்கும், நம்பிக்கைக்கும் வழிகோலின.

## பொதுமக்களின் சமயங்கள்

வன்னிப் பொதுமக்களில் அதிகமானோர் சைவம் அல்லது கத்தோலிக்க மதத்தை பின்பற்றினர். உலகில் எங்கும் நிலவுவது போலவே இங்கும் சாதாரண மக்கள் சமயத்தில் பக்தியுடையவர்களாக இருந்தனர். யாழ்ப்பாணத்து மக்களைவிட வன்னி மக்கள் ஒருபடி மேலாகவே சமய பக்தி கொண்டிருந்தனர் என்று சொல்லலாம். கோவில் திருவிழாக்களில் இது வெளிப்படையாகத் தெரியும். அப்போது பலவிதமான காவடிகளை மக்கள் எடுப்பார்கள். இதன்போது உடலின் பலபாகங்களிலும் வேல் போன்ற ஊசிகள்

குத்திக்கொள்வார்கள். அருகிவந்த இவ்வழக்கங்கள், போரினால் ஏற்பட்ட அவலங்களைத் தாங்குவதற்காக மீண்டும் வளர்ந்தன என்றும் ஆய்வாளர்கள் கூறுவார்கள். உண்மையில் யாழ்ப்பாணத்தில் 1960களில் முற்றாக அருகிவிட்ட இவ்வழக்கங்களும் பின்னர் மீண்டும் வளரத்தொடங்கியுள்ளன. 21 நாட்கள் இரவில் மட்டும் பாலும் பழமும் உண்ணும் கௌரிவிரதம் எனும் விரதத்தை வன்னிப் பெண்கள் பரவலாகப் பின்பற்றினர். இவ்விரதத்தைக் கடைப்பிடித்தோர் மேல் கையில் ஒரு நூலைப் பெருமையுடன் எவர் கண்ணிலும் படும்படியாக அணிவார்கள். இதற்கான கலாச்சாரக் கருத்துச் சமயத்தையும் தாண்டி வன்னியில் பரந்திருந்த போராட்டக் கலாச்சாரத்தையும் வெளிப்படுத்துவதாக இருந்தது என்று நான் கருதுகிறேன்.

தமிழர் போராட்டம் ஆய்வுக்கு உட்படுத்தும்போது அதில் கத்தோலிக்கக் குருமார்கள் போராட்டத்திற்கு ஆற்றிய பங்கும் ஆய்வுக்கு உட்படுத்தவேண்டியவற்றில் ஒன்று. போராட்டத்தின் பிற்காலத்தில் இப்பங்கேற்பில் பிளவுகள் ஏற்பட்டாலும் ஆரம்ப காலத்தில் இவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. இது கௌதமாலா போன்ற மத்தியஅமெரிக்க நாடுகளில் நடந்தேறிய போராட்டத்திற்குக் கத்தோலிக்கக் குருமார் காட்டிய ஆதரவுடன் ஒப்பிடக்கூடியது. இரண்டுமே பிற்காலத்திய விடுதலை இறையியல் கருத்துக்களில் ஊறியவை. இதைவிடத் தமிழீழத்தில் கடற்தொழில் செய்பவர்களும் அநேகமானோர் கத்தோலிக்கச் சமயத்தைச் சேர்ந்தவர்கள். விடுதலைப்புலிகளின் கடல் சார்ந்த ஆளுமை மீனவர் சமூகத்திற்கூடாகக் கத்தோலிக்கச் சமயத்திற்கும் போராட்டத்திற்குமான நெருக்கத்திற்கு உரமூட்டியிருக்கலாம். முல்லைத்தீவில் மக்களிடையே மிகவும் பிரபலமான ஒரு குழந்தை–யேசு கோவில்–தேவாலயம் இருந்தது. இதன் தோற்றமும் சடங்குகளும் சைவ–கத்தோலிக்க வழக்கங்களின் கலப்பாக இருந்தது. வன்னியில் சைவ–கத்தோலிக்க மதங்களின் கலப்புக் கவனத்தை ஈர்க்கும் ஒரு சுவையான விடயம். இது விடுதலைப்புலிகள் உறுப்பினர் – ஆதரவாளர் பரம்பலினதும், போராட்ட நோக்கினதும் விளைவாக உருவானது என்பது எனது கருத்து.

முல்லைத்தீவிலுள்ள வற்றாப்பளை அம்மன் கோவிலில் வருடாந்தம் மே மாதத்தில் வரும் பொங்கல் நாள் வன்னியில் மிகவும் முக்கியமான ஒரு நாள். போக்குவரத்துத் தடையில்லாத காலத்தில் தமிழீழம் முழுவதிலும் இருந்து பெரும் மக்கள் கூட்டம் இதற்காக முல்லைத்தீவிற்கு வருவார்கள். இக்கோவிலின் சடங்குகள் மிகப்

பழமையான கண்ணகி வழிபாட்டுடன் தொடர்புடையதும் இவ்விடத்திற்கே தனித்துவமானதும் ஆகும். 2006ம் ஆண்டுக்குப் பின்னர் போர் உச்சமடைந்து வன்னி தனிமையாக்கப்பட்டப் பின்னரும் இப்பொங்கல் நாள் மட்டும் வன்னிக்கே உரித்தான ஒரேயொரு சமயம் சார்ந்த விடுதலை நாளாகக் கடைப்பிடிக்கப்பட்டது.

## விடுதலைபுலிகளுக்குச் சமயம் இல்லை

விடுதலைப்புலி உறுப்பினர்கள் பொதுமக்களிலிருந்து மிகவும் மாறுபட்டவர்களாகச் சமயத்தைக் கடைப்பிடிப்பதில்லை. இவர்களின் சமூக வாழ்க்கையை நோக்கும் போது இவர்கள் திருமணமானவரா இல்லையா என்பதைக் கொண்டு இவர்களை இரு பெரும் பிரிவினராக பார்க்கவேண்டும். திருமணமாகாத உறுப்பினர்கள் குழுக்களாக தமக்கென நியமிக்கப்பட்ட ஒரு குழுப் பொறுப்பாளருடன் தனித்துவமாக வாழ்வார்கள். இக்குழுக்களின் தொகை தேவைக்கேற்ப மாறுபடும். இவர்களின் தேவைகள் அனைத்தையும் அமைப்பு கவனித்துக்கொள்ளும். இவர்களின் நேரம் முழுவதும் தமக்கென ஒதுக்கப்பட்ட வேலைகளை நிறைவேற்றுவதிலேயே கழியும். இவர்களுக்கு வேலையும் சக போராளிகளுடன் சிரித்துப் பேசி மகிழ்வதும் தான் சமூக வாழ்க்கை. சமயத்தைக் கடைப்பிடிப்பதற்கு இவர்கள் விரும்பினாலும் இவர்கள் வாழ்க்கையில் இடமில்லை. ஆனால் மனதில் தத்தம் சமய நம்பிக்கைகளை வைத்திருப்பதற்கு அமைப்பு எதிர்ப்போ கருத்து மாற்றமோ செய்யவில்லை.

ஒரு குறிப்பிட்ட வருடங்கள் அமைப்பில் சேவை ஆற்றிய பின்னர் உறுப்பினர்களுக்குத் திருமணம் செய்ய அனுமதி கிடைக்கும். தாம் விரும்பிய துணையை தேர்ந்தெடுக்க இவர்களுக்குச் சுதந்திரம் உண்டு. பொதுஇடங்களில் தாம் விரும்பியவரை சந்தித்து உரையாடுவதற்கும் இவர்களுக்குச் சுதந்திரம் உண்டு. ஆனால் தனிமையில் சந்திப்பதற்கு இவர்களுக்கு இடமோ காலமோ கிடைக்காது. தாம் ஒருவரைத் திருமணம் செய்வதற்கு முடிவெடுத்து விட்டால் அமைப்பிடம் இருந்து இதற்கான அனுமதியை பெற வேண்டும். அவ்வாறான அனுமதியை குறிப்பிட்ட வருட சேவைகளுக்கு முன்னமே பெற்றுக் கொள்ளலாம். இத்தகைய அனுமதியைப் பெற்ற பின் இருவரையும் பற்றிப் பொதுவாக எல்லோருக்குமே தெரிய வரும். இது ஒரு நிரந்த முடிவென்றே அமைப்புக் கருதும். இதை முறிப்பது என்றாலும் அமைப்பூடாக

அனுமதி பெற வேண்டும். திருமணம் செய்த உறுப்பினர்கள் சமூகத்திலே பொதுமக்களைப் போலவே வாழ்வார்கள். அவர்களின் ஏனைய குடும்பத்தவரும் இவர்களுடன் வாழலாம். இவர்களும் பொதுவாழ்க்கையில் சமய சார்பற்றவர்களாவே வாழ்வார்கள். இருப்பினும் தமது தனிவாழ்க்கையில் சமய நம்பிக்கைகளைப் பின்பற்றுவதற்கு இவர்களுக்குத் தடை இல்லை.

## மாவீரர்களின் நினைவு

மாவீரர்களின் நினைவு உறுப்பினர்களின் உள்ளத்திலும் அவர்களின் வாழ்க்கையிலும் வியாபித்திருந்தது. மாவீரர்களின் இறப்பைக் குறிப்பதற்கு ''வீரமரணம்'' என்ற ஒரு தனி சொற்பதம் இருந்தது. பொதுவாக எல்லோரும் பேச்சுமொழியில் ''வீரச்சா'' என்று சொல்வார்கள். இறந்துவிட்டார் அல்லது கொல்லப்பட்டார் என்று உறுப்பினர்களின் இறப்பை ஒருபோதும் குறிப்பிட மாட்டார்கள். வீரமரணம் அடைந்தவர்களின் உடல் அவர்களுக்கென்றே ஒதுக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட புதைகுழியில் அடக்கம் செய்யப்படும். மாவீரர்களின் புதைகுழிகள் உள்ள இடத்தைக் குறிப்பதற்கும் ''மாவீரர் துயிலும் இல்லம்'' என்ற ஒரு தனி வார்த்தை உண்டு. பத்திற்கும் மேற்பட்ட இத்தகைய துயிலும் இல்லங்கள் தமிழீழம் முழுவதிலும் உள்ளன. எல்லோரும் இவ்விடங்களைக் குறிக்கும் போது இது அமைந்திருக்கும் ஊரின் பெயரையும் முன் சொல்லி சுருக்கமாக துயிலும் இல்லம் என்று குறிப்பார்கள். மாவீரர்கள் அடக்கம் செய்வதைக் குறிக்கவும் ''விதைத்தல்'' என்ற வார்த்தை பிரயோகிக்கப்பட்டது. மாவீரர்களை விதைத்து மேலும் மேலும் புதியவர்கள் முளைப்பார்கள் என்பது இவ்வார்த்தையின் அர்த்தம். உயிருடன் இருக்கும் உறுப்பினர்கள் ''போராளி'' என்று குறிக்கப்படுவார்கள். போராளி, வீரமரணம், மாவீரர், விதைத்தல், துயிலும் இல்லம் என்ற ஐந்து சொற்பதங்களும் பொது வழக்கத்திலிருந்தன. இவை உருவாக்கிய ஒரு தனித்துவமான கலாச்சாரம் உறுப்பினர்கள் பொதுமக்கள் எல்லோரது வாழ்க்கையிலும் ஊறிப்போயிருந்தது. மாவீரர் படங்கள் எல்லோரது வீடுகளிலும் தொங்கியிருக்கும்.

துயிலும் இல்லங்கள் பார்ப்போரின் மனதை அள்ளும் காட்சிகளாக விளங்கின. வன்னியில் இவை மக்களின் மனதில் உணர்ச்சிகளைத் தூண்டுபவைகளாக இருந்தன. இவற்றைத் தாண்டிச் செல்லும்போது கோவில்களையோ தேவாலயங்களையோ தாண்டும் போது கொடுக்கும் மதிப்பை மக்கள் இதற்கும் கொடுத்தார்கள். இங்கு துயிலும் மாவீரர்களின் பெற்றோருக்கும் குடும்பத்தவருக்கும்

இத்துயிலும் இல்லங்கள் ஆழமான தாக்கத்தைக் கொண்டிருந்தன. தமது சிறுபிள்ளைகளை இங்கு அழைத்துச்சென்று கல்லறைகள் இடையே அவர்களை விளையாட விட்ட இளம் தாய்மார் அவ்வனுபவம் தம் உள்ளத்தை அமைதியுறச் செய்வதாகக் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். மாவீரர்களுக்கு மக்களிடையே ஒரு ஆழ்ந்த மதிப்பும், நன்றிக்கடனும் இருந்தது என்பதையே இது காட்டுகிறது.

விடுதலைப்புலிச் சமூகத்திடையே காணப்பட்ட மற்றொரு ஆழமான மதிப்பையும் குறிப்பிட வேண்டும். இதுதான் நீண்டகால சேவையாற்றிய மூத்த உறுப்பினர்களுக்கு ஏனைய உறுப்பினர் கொடுக்கும் மதிப்பு. பிரபாகரனைத் தவிர வேறும் சில மூத்த உறுப்பினர்கள் இத்தகைய மதிப்பைப் பெற்றிருந்தார்கள். 2006ம் ஆண்டு காலகட்டத்தில் பிரகேடியர் பால்ராஜ் ஒருதடவை சமாதானச் செயலகத்திற்கு வந்தார். அப்போதுதான் நான் அவரை ஒரேயொரு முறை கண்டேன். சமாதானச் செயலகத்திலிருந்த விடுதலைப்புலி உறுப்பினர்கள் அப்போது அவருக்குக் கொடுத்த மதிப்பைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். இத்தகைய ஆழ்ந்த மதிப்புக் கலந்த அன்பை இத்தகையோரின் இறப்பின்போது இன்னும் வெளிப்படையாகக் காணமுடிந்தது. அவ்விதத்தில் பால்ராஜினதும், தமிழ்ச்செல்வனினதும் இறப்புக்கள் என் நினைவில் மேலோங்கி நிற்கின்றன.

## பொதுமக்கள் மத்தியில் விடுதலைப்புலிகளின் பிரிவுகள்

2006ம் ஆண்டு காலகட்டத்தில் விடுதலைப்புலிகளின் வெவ்வேறு நிறுவனங்களை அவை எவ்வாறு அமைப்பின் பிரிவுகளுக்குள் அடங்குகின்றன என்று வரைவுபடுத்திச் சமாதானச் செயலகத்தின் இணையத்தில் போடுவதற்கான முயற்சிகளைச் செய்தோம். பாதுகாப்புக் காரணங்களைக் கருதி இம்முயற்சி நிறுத்தப்பட்டது.



இம்முயற்சியினூடாக நான் அறிந்துகொண்டதையும் நான் அவதானித்தவைகளையும் வைத்து உருவாக்கிய ஒரு செப்பமற்ற வரைவை படத்தில் காணலாம். ஒவ்வொரு பிரிவின் கீழும் பல உப அமைப்புக்கள் இருந்தன. இவற்றில் அரசியல்துறையின் கீழ் இயங்கிய உபஅமைப்புக்கள் பொதுமக்கள் மத்தியில் அதிகமாக காணப்பட்டன. அரசியல்துறையின் கீழ் இயங்கிய அமைப்புக்களில் குறிப்பிடக்கூடியவையாக, ஆதரவற்ற சிறுவர், பெண்கள், வயோதிபர்களுக்காக நடத்தப்பட்ட நலன்புரி மையங்கள், ஊடக அமைப்புக்கள், நீதி நிர்வாகம், சுகாதார–வைத்திய சேவைகள், பொருளாதார உதவிசெய்யும் அமைப்பு, விளையாட்டு அமைப்பு, கல்விசார் அமைப்பு மற்றும் கலாச்சார அமைப்பு ஆகியன விளங்கின. காவல்துறை ஒரு தனிப் பிரிவாகவே இயங்கியது. இந்நூலில் நான் விபரிக்கும் எனது அனுபவங்கள் எல்லாம் அரசியல்துறைப் பிரிவின் கீழ் இயங்கிய அமைப்புக்களை மையப்படுத்தியதுதான்.

அரசியல்துறைக்கு அடுத்ததாக நிதித்துறை நிறுவனங்கள் மக்கள் மத்தியில் அதிகமாகக் காணப்பட்டன. பல உணவுக் கடைகளையும் மளிகைக் கடைகளையும் நிதித்துறை இயக்கி வந்தது. இதைவிடச் சில உற்பத்திச் சாலைகளையும் நடத்தி வந்தது. கடைகள், உற்பத்தி நிறுவனங்கள், போக்குவரத்து நிறுவனங்கள், தோட்டச் செய்கை, வங்கி ஆகிய பலவிதமான நிதித்துறைச் செயற்பாடுகள் பெரும் தொகையான பொதுமக்களுக்கு வேலைவாய்ப்பையும் கொடுத்தது. இச்செயற்பாடுகள் விடுதலைப்புலிகளுக்குத் தந்த வருமானம் மக்களுக்கும் உறுப்பினருக்கும் பல சேவைகளைக் கொடுத்ததுமல்லாமல் அமைப்பின் கீழ் செயற்பட்ட நடைமுறை அரசை இயக்குவதற்கும் பயன்பட்டது. நிதித்துறைச் செயற்பாடுகளூடாக பெறப்பட்ட வருமானத்தின் அளவு பற்றிய விபரம் எதுவும் எனக்குத் தெரியவில்லை.

அனைத்துலகத் தொடர்பகமும் வன்னியில் இருந்தது. ஆனால் வன்னி மக்களுக்கு இதன் செயற்பாடுகள் எவ்வித தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. வெளிநாட்டிலிருந்து அவர்களின் உறவினர் அல்லது நண்பர்கள் வந்தால் மட்டுமே இதன் செயற்பாடுகள் வன்னி மக்களுக்குத் தெரிய வரும். புலத்துத் தமிழர் வன்னிக்கு வந்தால் இவ்வமைப்புடன் தொடர்புகொள்வதைத் தவிர்க்க இயலாது. விடுதலைப்புலிகளின் அதிகார எல்லையைத் தாண்டும்போது இவர்களை நேர்கண்டு இவர்களுக்கு வன்னியை விட்டு வெளியேற பாஸ் கொடுக்கப்படும். முள்ளிவாய்க்கால் அழிவிற்குப் பின்பு வெளிநாடுகளில் தஞ்சம் அடைந்த முன்னாள் உறுப்பினர்கள் சிலர்

விடுதலைப்புலிகள் எனும் அமைப்பு தொடர்ச்சியாக இருப்பது போன்ற ஒரு தோற்றத்தைத் தர விளைகிறார்கள். பல கோணங்களிலும் இது ஒரு நலிந்த செயற்பாடுதான் என்பது எனது கருத்து. வன்னியில் விடுதலைப்புலிகள் தம் செயற்பாடுகள் ஊடாக வெளிப்படுத்திய கருப்பொருள் வெளிநாடுகளில் இயங்கக்கூடிய ஒரு அமைப்பிடம் இருக்கமுடியாது.

அரசியல்துறை, நிதித்துறை மற்றும் அனைத்துலகத் தொடர்பகம் என்பன பொதுமக்கள் மத்தியில் இயங்கிய பொது அமைப்புகள் போல தோற்றமளித்தன. ஆனால் ஏனைய இரு துறைகளான படைத்துறை, புலனாய்வுத்துறை ஆகியன பற்றி இவ்வாறு சொல்ல இயலாது. பொதுமக்கள் மத்தியில் இவற்றின் செயற்பாடுகள் மிகக் குறைவாகவே இருந்தது. எனக்கு யூனிசெப்பின் வெளிநாட்டு பணியாளர் ஒருவரே தமது அலுவலகத்திற்குப் பக்கத்தில் ஒரு புலனாய்வுத்துறைக் குழுவின் தங்குமிடம் இருப்பதாகச் சொன்னார். இத்தகைய தங்குமிடங்கள் பொதுமக்கள் மத்தியில் சிதறிக்கிடந்தாலும் அவற்றின் தலையீடு பொதுமக்களால் அதிகம் உணரப்படவில்லை. எனக்குத் தெரிந்த மட்டில் படைத்துறையின் தங்குமிடங்கள் இவ்வாறு பொதுமக்கள் மத்தியில் சிதறிக்கிடக்கவில்லை. விடுதலைப்புலிகளின் படைத்துறை மையங்கள் யாவும் பொதுஇடங்களிலிருந்து மிகவும் விலகியே இருந்ததாக எனக்குப்பட்டது. இவ்வாறான படைத்துறையின் ஒதுங்கல் எப்போதுமே இப்படி இருந்திருக்காவிட்டாலும் வன்னியில் படைத்துறை தம் பாதுகாப்புப் பற்றிய அதிக அக்கறையுடன் ஒதுங்கியதாகத் தெரிகிறது.

படைபலம் இல்லாமல் தன்னாட்சியைப் பாதுகாக்க முடியாது எனும் விடுதலைப்புலிகளின் நிலைப்பாட்டுக்கு ஏற்றதாக உறுப்பினர்கள் அனைவருக்கும் படைத்துறைப் பயிற்சி அளிக்கப்பட்டது. அவர்களில் பெரும்பாலானோர் பின்னர் களத்தில் போரிடவும் அழைக்கப்பட்டார்கள். விடுதலைப்புலி உறுப்பினர்களின் ஒருங்கிணைவு, அமைப்பின் பிரிவுகளையும் தாண்டியிருந்தது. ஒரே படிநிலையில் உள்ள உறுப்பினர்கள் சமத்துவமாகப் பழகினார்கள். சொல்லப்போனால் மூத்த உறுப்பினர் சிலரைத்தவிர ஏனையவர்கள் எல்லோருமே சேர்ந்து சிரித்துப் பேசிப் பழகினார்கள். ஆண்–பெண் உறுப்பினர்களும் ஓரளவு சேர்ந்து பழகினாலும் இருபாலருக்கும் இடையேயான சிரித்துப் பேசுதல் குறிப்பிட்ட வரையறைக்குக் கட்டுப்பட்டே இருந்தது. இருபாலரும் பழகும்போது அங்கு சிரிப்பும் நகைச்சுவையும் நிரம்பியிருக்கும். நான் உறுப்பினர்களின்

நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்ததால் அருகில் இருக்கும் போதும் அவர்களின் உரையாடல்கள் தடையின்றி தொடர்ந்தது போல் எனக்குப்பட்டது. என்றாலும் அவர்களின் உரையாடலில் நான் கலக்க முயன்றால் அது அவர்களின் உரையாடலில் தடங்கலை ஏற்படுத்தியதாகவே நான் உணர்ந்திருக்கிறேன்.

வன்னியில் 2006ம் ஆண்டுக்குப் பின்னர் போர் தீவிரமடையத் தொடங்கியதைத் தொடர்ந்து படைத்துறை பற்றிய கருத்துக்களும் செய்திகளும் அதிகரித்ததில் ஆச்சரியமில்லை. களமுனைகளில் உயிரிழப்புக்கள் அதிகரித்ததும் படைத்துறைக்கு ஆட்சேர்ப்புத் தீவிரமடைந்ததும் இக்காலத்தில் இடம்பெற்றன. புதிதாக இணைக்கப்பட்ட ஒரு தொகுதியினரின் பயிற்சி முடிந்ததும் அவர்களுக்கு ஒரு சிறு விழா நடக்கும். இதற்குப் பெற்றோர் உறவினர் நண்பர்களும் அழைக்கப்படுவார்கள். எனக்குத் தெரிந்த அரசியல்துறை உறுப்பினர்கள் தமக்குத் தெரிந்தவர்கள் பயிற்சி முடித்து வெளியேறும் இவ்வகை விழாக்களுக்கு அடிக்கடி செல்வார்கள். சிலசமயங்களில் என்னையும் அழைத்தார்கள். அக்கட்டத்தில் இதற்குச் செல்ல எனக்கு ஆர்வமில்லாததால் செல்லவில்லை. இப்போது நினைத்தால் சென்றிருக்கலாம் என்ற வருத்தம் உண்டு. பெண்கள் படைத்துறைப் பயிற்சிக்கும் ஒருமுறை என்னை அழைத்தார்கள். இதற்கும் அக்காலத்தில் ஆர்வமில்லாததால் செல்லவில்லை. படைத்துறை பற்றிய எனது ஆர்வமின்மையால் கரும்புலிகளைச்[17] சந்திக்கவோ அவர்களுடன் உரையாடவோ எனக்கு அதிக சந்தர்ப்பங்கள் கிடைக்கவில்லை.

## விடுதலைப்புலிகள்–பொதுமக்கள் பிணைப்பு

விடுதலைப்புலிகளுக்கும் வன்னியில் வாழ்ந்த பொதுமக்களுக்குமான பிணைப்புப் பன்முகம் கொண்டது. இதனால் ஒருமித்த கருத்து உருவாகி சமூக வெளியில் இருதரப்புக்குமான வேறுபாடுகள் படிப்படியாகக் குறைந்துகொண்டே போயின. தம் விடுதலைக்காக போராடுவோர் என்ற உணர்வுபூர்வமான உறவொன்று எப்போதுமே பொதுமக்கள் மத்தியில் இருந்து வந்தது. பல தசாப்தங்களாக நீடித்த போராட்டத்தின் கால இடைவெளியில் இவ்வடிப்படை உணர்வுக்கும் அப்பால் பலவிதமான தொடர்புகளும் இருதரப்புக்கும் இடையில் உருவாகியிருந்தன. எனது வன்னிக்காலத்தில் அங்கு விடுதலைப்புலி உறுப்பினர்களாக இருந்தவர்கள் பொதுமக்கள் தொகையின் ஒரு சிறு விகிதாசாரமே ஆனாலும் போராளிகளாக இருந்து பின்னர் பல்வேறு

காரணங்களுக்காக விலகியவர்களையும் மாவீரர்களையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஏறக்குறைய 50,000 பேர்கள் வரை முன்னாள் அல்லது இன்னாள் உறுப்பினர்களாக இருந்திருக்கிறார்கள். இவ்விரு பிரிவினரின் குடும்பங்களும் பெரும்பகுதியினர் வன்னியில் வாழ்ந்தார்கள். வன்னிச் சமூகத்தின் வர்ணங்களில் இவ்விடயம் மேலோங்கி நின்று, ஒட்டுமொத்த இச்சமூகத்திற்கும் விடுதலைப்புலிகள் சார்பான ஒரு தன்மையைக் கொடுத்தது. பொது மக்களுக்கு வேலைவாய்ப்புக் கொடுக்கும் ஒரு பெரும் அமைப்பாகவும் விடுதலைப்புலி அமைப்பு விளங்கியது. இதுவும் பொதுமக்களை அமைப்பின் வட்டத்துக்கு உள்ளிளுத்தது. திருமணமான விடுதலைப்புலிகளின் குடும்பத்தினர் அதிகமாக பொதுமக்கள் மத்தியில் வாழ்ந்தார்கள். இவர்களின் பிள்ளைகளில் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லும் வயதினரும் அதிகம் இருந்தனர். இதுவும் விடுதலைப்புலிகளுக்கும் பொதுமக்களுக்குமான தொடர்பை மேலும் நெருக்கமடையச் செய்தது.

இவ்வாறு இறுகியிருந்த பிணைப்பை விடுதலைப்புலிகளின் செயற்பாடுகள் சில கசப்பாக்கியும் வந்தன. இத்தகைய கசப்பூட்டும் செயற்பாடுகளில் முக்கியமானதாக விடுதலைப்புலிகளின் ஆட்சேர்ப்பு நடவடிக்கைகள் அமைந்திருந்தன. இக்காலத்தில் பொதுமக்களிடையே இயங்கிய சில விடுதலைப்புலிகள் நிறுவனங்களின் நிர்வாகத் திறமையின்மையும் பொதுமக்களின் விமர்சனங்களுக்கு உள்ளானது. இந்நிர்வாகத் திறனின்மைக்கு அக்காலத்தில் வன்னியில் விடுதலைப்புலிகளிடையே அதிகமாகவும் நிலவிய மனிதவளப் பற்றாக்குறையே காரணம் என்று நான் நினைக்கிறேன். பொதுமக்களுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையேயான உறவின் நெருக்கம் அருகிவருவதாக மக்களும், உறுப்பினரும் சொல்வதை நான் பலதடவைகள் கேட்டிருக்கிறேன்.

பொதுமக்களிடையே வாழ்ந்த திருமணமான விடுதலைப்புலி குடும்பங்களுக்கும், பொதுமக்களுக்கும் ஒரு இடைவெளி இருக்கத்தான் செய்தது. ஏனையோர், அயலவரும் கூட, விடுதலைப்புலிகள் குடும்பத்திலிருந்து ஒரு மரியாதையான தூரத்தைப் பேணியே வந்தனர். இத்தகைய இடைவெளிக்கும் பல கலாச்சாரக் காரணிகள் இருந்தன. விடுதலைப்புலிக் குடும்பங்கள் சாதிபற்றிய எண்ணங்கள் எதுவும் இன்றி வாழ்ந்தார்கள். உறுப்பினர்களிடையே ஏராளமான கலப்புத் திருமணங்கள் இவை கலப்புத் திருமணம் என்ற உணர்வுகள் கூட இல்லாமல் நடந்தன. இதையும்விட குடும்பங்களாக வாழ்ந்த விடுதலைப்புலிப் பெண் உறுப்பினர்கள் அமைப்பில் பழகிக்கொண்டே சில பழக்க

வழக்கங்கள் பொதுமக்கள் மத்தியில் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. உதாரணமாக பொதுஇடங்களில் தம் கருத்துக்களை உறுதியாக வெளிப்படுத்தும் பழக்கத்தைச் சொல்லலாம். இவையெல்லாம் விடுதலைப்புலிக் குடும்பங்களுக்கும் பொதுமக்களுக்கும் மத்தியில் காணப்பட்ட மதிப்புக் கலந்த இடைவெளிக்கான காரணங்கள். இருந்தும் விடுதலைப்புலிகளுடன் நெருங்கிய தொடர்புள்ள ஏனைய குடும்பங்கள் விடுதலைப்புலிக் குடும்பங்களுடன் நெருக்கமாகவே பழகினர். இதனால் இவ்வகையான இடைவெளியும் படிப்படியாகக் குறைந்து வந்தது.

## வெளி அமைப்புக்கள்




போர்நிறுத்த ஒப்பந்தமும், அதைத் தொடர்ந்து சமாதான நடவடிக்கைகளும் 2004ம் ஆண்டின் சுனாமி அழிவின் பின்னர் உதவி செய்ய வந்த அமைப்புகளுமாக வன்னியில் சமாதான கண்காணிப்புக்குழு, ஐநா அமைப்புக்கள், சர்வதேச உதவி நிறுவனங்கள் என வெளிநாட்டு நிறுவனங்கள் இயங்கின. இவையும் பொதுமக்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்கவும் வன்னிப் பொருளாதார நிதி உட்செலுத்தவும் செய்தன. இதையும் விட லங்கா அரச நிறுவனங்களும் பல வன்னியில் இயங்கின. இது அரசல்லாத அமைப்புக்களின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கும் ஏனைய இடங்களில்

அதிகம் காணப்படாத ஒரு விடயம். இவ்வாறு லங்கா அரசின் அமைப்புக்கள் விடுதலைப்புலிகள் கட்டுபாட்டிற்குள்ளும் இயங்கியமை இரண்டு தசாப்தங்களாக தொடர்ந்து வந்திருக்கிறது. லங்கா அரச அமைப்புக்களும் மக்களுக்கு வேலைவாய்ப்புக்கள் கொடுத்தன. இவ்வாறு வன்னியில் லங்கா அரச நிறுவனங்களில் பணிபுரிந்தோர் யாவரும் தமிழர்களே. இவர்களும் விடுதலைப் போராட்டத்துடன் தம்மை அடையாளப்படுத்தவே செய்தனர். சர்வதேச அமைப்புக்களில் வேலை செய்த வன்னி மக்கள் லங்கா அரச நிறுவனங்களில் வேலை செய்தோரைவிட இரண்டு மடங்கு ஊதியம் பெற்றனர். அதேநேரத்தில் லங்கா அரசு ஊழியர்கள் விடுதலைப்புலிகள் அமைப்பில் பணிசெய்தோரைவிட அதிகமான ஊதியம் பெற்றனர். இவற்றிற்கும் மேலாக பெரும் அளவிலான வன்னி மக்கள் விவசாயம் கடல்தொழில் என்பன போன்ற சொந்தத் தொழில் செய்பவர்களாகவே இருந்தனர்.

ஒவ்வொரு லங்கா அரச நிறுவனமும் அதற்கான ஒரு விடுதலைப்புலிகள் நிறுவனத்துடன் இணைந்து செயல்பட்டன. இவை லங்கா அரச நிறுவனங்களுடன் நெருக்கமான தொடர்புகளைப் பேணி வந்தன. இத்தகைய தொடர்புகளின் தன்மை நிறுவனங்களுக்கேற்ப மாறி இருக்கும். இருந்தாலும் ஒவ்வொரு லங்கா நிறுவனமும் அதன் மறுபடிவ விடுதலைப்புலி நிறுவனத்துடன் சேர்ந்தே இயங்கின. இவைகளில் வைத்தியப்பிரிவு மிகவும் நெருக்கமாக வேலை செய்தது. இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். வன்னியில் லங்கா அரசின் வைத்திய நிறுவனத்தில் வைத்தியர் பற்றாக்குறை அதிகம் இருந்து வந்தது. அதேநேரத்தில் விடுதலைப்புலிகளின் வைத்தியசேவை நிறுவனத்தில் பயிற்சி பெற்ற வைத்தியர்கள் இருந்தனர். இவர்களும் பல்கலைக்கழகங்களில் படித்து வைத்தியர்களாகப் பட்டம் பெற்றிருந்தனர். இவர்கள் லங்கா அரசின் பிரிவில் இருந்த பற்றாக்குறையை நிவர்த்தி செய்தனர். லங்கா அரசின் வைத்தியர்களும், விடுதலைப்புலிகள் வைத்திய நிறுவனத்தின் வைத்தியர்களும் தமிழ்ச்செல்வனின் சுகாதாரம் சார்ந்த கூட்டங்களுக்குச் செல்வதை நான் கண்டிருக்கிறேன். வைத்திய சேவைகளுக்கு எல்லாவிதமான மக்களும் செல்லவேண்டி வருவதாலும் லங்கா அரசின் வைத்திய சேவைக்கும், விடுதலைப்புலிகளின் வைத்திய சேவைக்கும் இடையே தெளிவான பிரிவு இல்லாமல் போயிருக்கலாம்.

வைத்தியச் சேவையுடன் ஒப்பிடும்போது இரண்டு தரப்பினுடைய கல்விச்சேவைகளும் அதிகமாக இணைந்து செயற்படவில்லை. ஆரம்பத்திலிருந்தே விடுதலைப்புலிகள் தமது

கல்விச் சேவையை வளர்க்க முயலவில்லை. லங்கா அரசின் கல்விச் சேவை நிறுவனத்தைப் பிரதிபலித்த விடுதலைப்புலிகளின் கல்விசேவை நிறுவனம் செய்த ஒரு வேலைத்திட்டத்தை இங்கு குறிப்பிட வேண்டும். லங்கா அரசின் சரித்திரப் பாடப்புத்தகங்களில் காணப்பட்ட பிழைகளை திருத்தும் நோக்கத்துடன் விடுதலைப்புலிகளின் கல்விப் பிரிவு சில சரித்திரப் பாடப்புத்தகங்களை அச்சிட்டுப் பள்ளிக்கூடங்களில் இவற்றையும் சேர்ப்பதற்கு முயன்றது. எனது கணிப்பில் இம்முயற்சி பெரிய வெற்றியீட்டவில்லை. விடுதலைப்புலிகளின் கல்விச்சேவை வேறு சில தனிப்பட்ட சேவைகளை வறுமைக்கோட்டின் கீழ் வாழ்ந்த மாணவர்களுக்கு அளித்தது. விடுதலைப்புலிகளின் முக்கிய தினங்களை நினைவு கூர்வது, போராட்ட ஊர்வலங்கள் நடத்துவது போன்ற சில பொதுநிகழ்வுகளுக்குப் பள்ளிக்கூடங்களையும் இணைப்பதற்கு இக்கல்விச்சேவை நிறுவனமே தொடர்பிடமாக இருந்தது.

இதுபோலவே ஏனைய லங்கா அரச நிறுவனங்களான விவசாயத் திணைக்களம், தெருக்கள் அபிவிருத்தி நிறுவனம், மாவட்டச் செயலகம் போன்றவற்றுடனும் அதற்கென தெரிவு செய்யப்பட்ட விடுதலைப்புலி நிறுவனம் தொடர்புகளை வைத்திருந்தது. இத்தகைய விடுதலைப்புலி நிறுவனங்களின் பொறுப்பாளர்களும் அதன் மறுபடிவமான லங்கா அரச நிறுவனங்களின் தலைமையும் நெருக்கமான தொடர்புகளைப் பேணின. சிலசமயங்களில் வன்னியில் இயங்கிய லங்கா அரச நிறுவனத்தின் தலைமை அதன் மறுபடிவ விடுதலைப்புலி அமைப்பின் பொறுப்பாளர்களிடமிருந்து கட்டளைகளை ஏற்று நடைமுறைப்படுத்தவேண்டி இருக்கும். போரிடும் இரண்டு தரப்புகளின் ஆணைகளை ஏற்று நடக்கவேண்டிய சங்கடம் லங்கா அரச நிறுவன தலைமைகளுக்கு இருந்தாலும் இவர்கள் இதை திருப்தியாகவே செய்து வந்தார்கள். இந்த லங்கா அரச நிறுவனங்களில் பணிபுரியும் ஏனையோருக்கு இந்தச் சங்கடங்கள் இருக்காது. ஏனெனில் அவர்கள் தம் தலைமையின் கட்டளைகளை மட்டுமே ஏற்று நடக்கவேண்டி இருந்தது.

சர்வதேச அமைப்புக்களுக்கும் போராடும் இரண்டு தரப்புகளின் ஆணைகளையும் சமாளிக்கவேண்டிய சங்கடம் இருந்தாலும் அவர்களின் பணியாணை அவர்களின் வேலைத்திட்டங்களில் இருதரப்பும் அதிகம் தலையிட முடியாதவாறு பாதுகாப்புக் கொடுத்தது. சர்வதேச அமைப்புக்களை விடுதலைப்புலிகள் மதித்து நடந்தாலும் எப்போதுமே

இவ்வமைப்புக்கள் பற்றியும் அவர்களின் நோக்கம் வேலைத்திட்டம் என்பன பற்றியும் சந்தேகத்துடனேயே பார்த்தார்கள். விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் பற்றி யூனிசெப், ஐசிஆர்சி, கண்காணிப்புக்குழு ஆகிய மூன்று அமைப்புக்கள் சேர்ந்து முன்னெடுத்த மிகக்கடுமையான நடவடிக்கை விடுதலைப் புலிகளுக்குத் தொடர்ச்சியான உறுத்தலாக இருந்து வந்தது. வன்னியில் புள்ளிவிபரங்கள் சேகரிக்க இவ் அமைப்புக்கள் முயன்றாலும் இதை விடுதலைப்புலிகள் சந்தேகத்துடனேயே நோக்கினார்கள். இத்தகைய புள்ளிவிபரங்கள் தமக்கு எதிராகப் பிரச்சாரம் செய்வதற்காகச் சர்வதேச அளவில் உபயோகிக்கப்படும் என்ற சந்தேகமே இதற்குக் காரணம் என்று நான் நினைக்கிறேன். சர்வதேச அமைப்புக்களுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையே இருந்த தொடர்பாடல்களும் மொழி மற்றும் கலாச்சார வேறுபாடல்களால் மட்டுப்படுத்தப்பட்டே இருந்தன. எனக்குத் தெரிந்தமட்டில் அரசியல்துறைப் பொறுப்பாளர் மற்றும் சமாதானச் செயலகம் தவிர்ந்த ஏனைய விடுதலைப்புலி நிறுவனங்களுடன் சர்வதேச அமைப்பு அமர்த்திய மொழிபெயர்ப்பாளர்களே தொடர்பாடல்களைச் செய்தார்கள். இதனால் இத்தொடர்பாடல்கள் விடுதலைப்புலிகளுக்குச் சாதகமாக இடம்பெறவில்லை என்பது எனது அவதானிப்பு. விடுதலைப்புலிகளின் கருத்துக்களைச் சர்வதேச பணியாளர்களுக்கு முறையாக வெளிப்படுத்த பொருத்தமான வழிகள் இருக்கவில்லை என்றே நான் நினைக்கிறேன்.

விடுதலைப்புலிகளின் அரசியல்துறையின் சில நிறுவனங்கள் லங்கா அரசிடமிருந்தும் சர்வதேச அமைப்புக்களிடமிருந்தும் குறிப்பிட்ட வேலைத்திட்டங்களுக்கென நிதிகளைப் பெற்றன. இத்தகைய நிறுவனங்களில் பணிசெய்வோரில் அதிகமானோர் பொதுமக்களாகவே இருப்பார்கள். இதன் பொறுப்பாளர் ஒரு விடுதலைப்புலி உறுப்பினராக இருப்பார். அத்தகைய நிறுவனங்கள் ஒரு பொதுமக்கள் நிறுவனம் போலவே செயல்படும். இங்கு பணியாற்றியோருக்கு இதற்கும் விடுதலைப்புலிகளுக்கும் இருந்த தொடர்பு பற்றித் தெரிந்திருக்கும். இதன் பயனாளிகளுக்கும் ஏனையோருக்கும் இவ்விடயம் தெரிந்திருக்காது, தெரிந்திருக்க வேண்டிய தேவையும் இருக்காது. இவ்வகையான இரண்டு நிறுவனங்களுடன் நான் வேலைகள் செய்திருக்கிறேன். ஒன்று பெண்கள் அபிவிருத்தி புனர்வாழ்வு மையம். மற்றது சுகாதாரக் காப்பு மையம். அவற்றிற்கு விடுதலைப்புலி உறுப்பினர்கள் பொறுப்பாக இருந்ததால் இவை சீராக ஊழலின்றி இயங்கின என்பதும் அது

மெய்யாகவே சேவைமனப்பாங்குடன் இயங்கியது என்பதும் தெளிவாகத் தெரிந்தது. இந்நிறுவனங்கள் விடுதலைப்புலிகளால் இயக்கப்படுகின்றன என்று வெளிப்படையாக அறிவித்தால் மதிப்பீட்டைக் குறைத்துவிடும் என்பதாலேயே வெளிப்படையாக அறிவிப்பது தவிர்க்கப்பட்டது. விடுதலைப்புலிகள் மீது சர்வதேசத்தினதும் லங்கா அரசினதும் கடும் விமர்சனங்களே அதற்கு முக்கியக்காரணம்.

தமிழர் புனர்வாழ்வுக் கழகமும் இவ்வாறாக வன்னியில் இயங்கி வந்த ஒரு நிறுவனம். பொது மக்களுக்கான பலவகையான அபிவிருத்தித் திட்டங்களை இந்நிறுவனம் நடைமுறைப்படுத்தி வந்தது. தமது திட்டங்களுக்குப் புலம் பெயர்ந்து தமிழர் மத்தியில் நிதி சேகரிக்கும் ஒரு பெரிய திட்டமும் இதற்கு இருந்தது. வன்னியில் இயங்கிய பல சர்வதேச அரசசார்பற்ற நிறுவனங்கள் தமிழர் புனர்வாழ்வுக் கழகத்தைத் தமது உள்ளூர் பங்காளியாக ஏற்றிருந்தனர். 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் பின்னர் தமிழர் புனர்வாழ்வுக் கழகம் கொழும்பிலும் ஒரு அலுவலகத்தை அமைத்தது. 2007ம் ஆண்டில் தமிழர் புனர்வாழ்வுக் கழகம் விடுதலைப்புலிகளின் பயங்கரவாத நடவடிக்கைகளுக்கு நிதி வழங்குவதாக குற்றம்சாட்டப்பட்டுப் பல மேற்குலக நாடுகளில் இந்நிறுவனம் தடைசெய்யப்பட்டது.

தமிழர் புனர்வாழ்வுக் கழகத்தின் நிதி பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் நான் இணைந்து வேலை செய்த மேற்கூறிய இரண்டு நிறுவனங்களும் தாம் சேகரித்த நிதியைப் பொதுமக்களின் தேவைகளுக்கே பயன்படுத்தின என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. உண்மையில் இதுபற்றிய சந்தேகம் அக்காலத்தில் எனக்கும் தோன்றியதால் பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் பொறுப்பாளருடன் அவ்வமைப்பின் நிதி பற்றி ஆழமாக உரையாடியிருக்கிறேன். அவரின் சொற்களுக்கிடையில் அவர் நிதி பற்றி மறைக்க விழையும் விடயங்கள் இருக்கிறதா என்று ஊகிக்கவும் முயன்றிருக்கிறேன். நான் அப்படி எதையும் காணமுடியவில்லை. பொதுவாக விடுதலைப்புலிகள் தாம் பொதுமக்களுக்காகச் செய்யும் சேவைகளை அவை விடுதலைப்புலிகளால் செய்யப்படுகிறது என்று விளம்பரப்படுத்தவே விரும்புவார்கள். அவர்களின் சில அமைப்புக்களுக்கு அவர்கள் பொதுமக்கள் அமைப்பு என்ற வர்ணம் பூசியதற்குக் காரணம் இவற்றிற்குச் சர்வதேச அமைப்புக்களும் லங்கா அரச அமைப்புக்களும் நிதிஉதவி செய்யவேண்டும் என்பதற்காகத் தான்.

# ஒப்பந்தகால வளர்ச்சி

நோர்வேயின் துணையுடன் 2002ம் ஆண்டு கைச்சாத்தான ஒப்பந்தத்தின் பின்னர் வன்னியில் துரிதகதியில் பலவிதமான அபிவிருத்திகள் இடம்பெற்றன. 1996ம் ஆண்டில் ஒட்டுமொத்த யாழ் மக்கள் அங்கிருந்து வெளியேறி வன்னியை வந்தடைந்தபோது வன்னிப்பகுதி லங்கா அரசின் கடுமையான பொருளாதாரத் தடைகளை எதிர் கொண்டது. 2002ம் ஆண்டு ஒப்பந்தத்தைத் தொடர்ந்து வன்னியூடாக யாழ்ப்பாணம் வரை சென்ற ஏ–9 பாதை திறக்கப்பட்டது. தமிழ் மக்களும் தடைசெய்யப்பட்ட பொருட்களும் திறக்கப்பட்ட ஏ–9 பாதையூடாக பெரும்தொகையாக செல்ல முடிந்தது. ஏ9–பாதையின் திறப்பும், சர்வதேசத்தின் அபிவிருத்திக்கான நிதியுதவியும், புலம்பெயர்ந்த தமிழரின் நிதியும் சேர்ந்து வன்னியின் அபிவிருத்திக்கு ஊக்கமளித்தன. இக்காலத்தில் வன்னிக்கு வருகை தந்தோரை இத்தகைய ஒரு காட்சியே வரவேற்றது. எனது வன்னிக்கால ஆரம்பத்தில் வன்னி மக்கள் சமாதானத்தில் நம்பிக்கை உள்ளவர்களாகவே தெரிந்தார்கள். துரிதகதியில் நடைபெற்ற அபிவிருத்திகளும் வன்னியின் முகத்தை வேகமாக மாற்றிக்கொண்டு தான் வந்தன.

**கல்வி:** முந்தைய போர்ச்சூழலில் ஏராளமான சிறுவர்கள் பள்ளிக்கூடத்திற்குச் செல்லாமல் இருந்தார்கள். ஒப்பந்தத்தின் பின்னர் சிறுவர்கள் எல்லோரையும் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பும் ஒரு பெரும் வேலைத்திட்டம் முன்னெடுக்கப்பட்டது. பள்ளிகூடக் கல்வியை முடித்துக்கொண்ட இளையோருக்காக பல தொழில்சார் கல்வி நிறுவனங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இவற்றில் கணனிக்கல்விக்கான நிறுவனங்களை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். வன்னி–ரெக் எனப்படும் கணனிக்கல்வி நிறுவனமும் அதனோடு இணைந்த பல்வேறு கணனிக்கல்வி நிறுவனங்களும் புலம்பெயர்ந்த தமிழரின் நிதியுதவியுடன் ஆரம்பிக்கப்பட்டன. இதைவிட அறிவியல் நகரம் எனப்பெயரிடப்பட்டு கல்விக்காகவென கிளிநொச்சியில் ஒதுக்கப்பட்ட ஓரிடத்தில் மேலும் பல கல்விநிறுவனங்களின் கட்டட வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன. இங்கு நிறுவப்பட்ட அல்லது

நிறுவப்படவிருந்தவற்றில் சுகாதார ஊழியர்களுக்கான ஒரு கல்வி நிறுவனம், மொழிகள், குறிப்பாக ஆங்கிலம், பயிற்றுவிப்பதற்கான நிறுவனம் ஆகியன குறிப்பிடத்தக்கவை. இத்துடன் போரினால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கெனவும் பலம் குன்றிய சிறுமிகளுக்கெனவும் இங்கு நிறுவனங்கள் அமைக்கப்பட்டன.

***சுகாதாரம்:*** லங்கா அரசின் சுகாதார சேவைகளால் எட்டமுடியாத தொலைவிலுள்ள மக்களின் சுகாதாரத் தேவைகளை விடுதலைப்புலிகளின் திலீபன் மருத்துவ சேவை நீண்டகாலமாகக் கவனித்து வந்தது. ஒப்பந்தத்திற்குப் பின்னர் சுகாதாரக் காப்பு மையம் என்ற ஓர் அமைப்பும் உருவாக்கப்பட்டு பரந்துபட்ட சுகாதார வேலைத்திட்டங்களை முன்னெடுத்தது. இதையும்விட கிளிநொச்சியிலும் முல்லைத்தீவிலும் கிளைகள் கொண்டு இயங்கிய பொன்னம்பலம் வைத்தியசாலையும் தனது வைத்தியத்திற்கான வளங்களை அதிகரித்துக்கொண்டது. போர்க்காலத்தில் அழிக்கப்பட்ட பல வைத்தியசாலைகள் மீள்கட்டுமானம் செய்யப்பட்டன. புலம்பெயர்ந்த தமிழர் சமூகத்திலிருந்து வைத்திய நிபுணர்கள் வன்னிக்கு வந்து இலவசமாக விசேட வைத்தியங்கள் அளித்து வந்தார்கள்.

***மாற்று வலுவுள்ளோர் சேவை:*** மாற்று திறனாளர்கள் வன்னிச் சமூகத்தில் சுமூகமாகக் கலந்து இயங்கியது கவனத்தையீர்க்கும் ஒரு அம்சமாகும். அவர்கள் வன்னியில் பல வேலைகளில் மனோதிடத்துடனும் ஆச்சரியப்படத்தக்க திறத்துடனும் ஈடுபடுவதைக் காணமுடிந்தது. ஒரு கை மட்டும் உள்ளவர்கள் ஈருருளிகளில் பின்னால் பெரும் பாரத்தையும் ஏற்றிக்கொண்டு லாவகமாக ஓட்டுவார்கள். உடன் சேர்ந்து வேலை செய்பவர்களுக்கு ஒருகாலில்லை என்பதுகூட பலகாலத்துக்குத் தெரியாமல் இருக்கும். தமக்கு இத்தகைய பாதிப்புகள் இருப்பதை அவர்கள் ஒரு பொருட்டாகப் பேசாமல் இயங்குவார்கள். வன்னியில் மாற்றுவலு என்பது இயற்கையானதாக தாற்றப்பட்டுவிட்டது. அவர்களுக்கான செயற்கை அங்கங்களைப் பொருத்தும் சேவைகளைக் கொடுக்க வெண்புறா என்ற ஒரே ஒரு நிறுவனம் இயங்கியது. இதுவும் ஒப்பந்தத்திற்குப் பின்னர் புதுத் தொழில்நுட்பங்களை தன் வசப்படுத்தி வேலைகளை விருத்தி செய்தது. ''இன்னாருக்கு உடம்பில் செல் (எறிகணை) துண்டு உண்டு'' என்று சொல்வது முள்ளிவாய்க்கால் அழிவிற்கு முன்னரே வன்னியில் பொதுவாகக் கேட்கப்படும் வார்த்தைகள். வன்னியில் பலர் இவ்வாறு எறிகணைத் துண்டுகளைத் தம் உடம்பில் தாங்கி இதனால் பலவிதமான வேதனைகளை அனுபவித்து வந்தார்கள். வன்னிக்கு வருகை தந்த

வைத்திய நிபுணர்களும் தம்மால் ஆனவரை மிகவும் வேதனை கொடுக்கும் எறிகணைத் துண்டுகளை மக்களின் உடல்களிலிருந்து அகற்றினார்கள்.

***நலன்புரி சேவைகள்:*** சிறுவர் இல்லங்களிலிருந்து ஊர்வளர்ச்சித் திட்டங்கள் வரை ஏராளமான நலன்புரி திட்டங்களை நடத்திவந்த தமிழர் புனர்வாழ்வுக் கழகம் ஒப்பந்தத்திற்குப் பின்னர் மேலும் வளர்ந்தது. தமிழர் புனர்வாழ்வுக் கழகத்தின் சேவைகளைக் குறைநிரப்புவது போல் பெண்களை மட்டும் மையம் கொண்டு இயங்கிய பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையமும் அதன் சேவைகளை பெருக்கியது. சிறுவர் இல்லங்களைத் தவிர வேறு பல நலன்புரி இல்லங்கள் பொதுமக்களுக்கும் வலம்குறைந்த போராளிகளுக்குமாக இயங்கி வந்தன. ஆதரவற்ற வயோதிகர்களுக்காக, குறிப்பாக மாவீரர் பெற்றோர்களுக்காக, அன்புச்சோலை எனும் ஒரு வயோதிபர் இல்லம் இக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. சக்கரக் கதிரையில் முடக்கப்பட்ட பெண் போராளிகளுக்கென மயூரி இல்லம் இருந்தது. காயப்பட்ட போராளிகளை அவர்களின் சக்திக்கேற்ற வெவ்வேறு துறைகளில் பயிற்றுவிற்பதற்கென நவமறிவுக்கூடம் என்னும் நிறுவனம் இயங்கியது. இவை யாவும் அவற்றின் வசதிகளை மேம்படுத்திக் கொண்டன.

***நீதிமன்றம்:*** ஒப்பந்தத்திற்கு முந்திய காலத்திலேயே விடுதலைப்புலிகளின் நிர்வாகத்தில் அவர்கள் இயற்றிய சட்டங்கள், சட்டவாளர்களைப் பயிற்றுவதற்கு ஒரு சட்டக் கல்லூரி, நீதி மன்றங்கள், காவல்துறை, கைதிகளை திருத்தும் நிறுவனம் என்பனவெல்லாம் இயங்கி வந்தன. இந்நிறுவனங்களில் பல பொதுமக்களும் பணியாற்றி வந்தனர். நீதிநிர்வாகத்தின் கீழ் இயங்கிய ஒரு பிரிவு புதுச்சட்டங்களை வகுப்பதிலும் ஈடுபட்டிருந்தது. ஒப்பந்தத்திற்குப் பின்னர் இரண்டு பிரபல சட்டங்களை இப்பிரிவு உருவாக்கியது. இவை காணி பற்றியதும் கட்டாய சேவை செய்வதற்கான வயது உட்பட்ட பல விதிகளைப் பற்றியதும் ஆகும்.

***சிறுவர் பராமரிப்பு:*** ''தளிர்'' என்றழைக்கப்பட்ட பகல்நேரச் சிறுவர் பராமரிப்பு இடங்கள் விடுதலைப்புலி குடும்பங்களின் குழந்தைகளின் பகல்நேரப் பராமரிப்புக்காக வன்னியில் பல இடங்களில் இயங்கி வந்தன. இவையும் ஒப்பந்த காலத்தில் வளர்ச்சியடைந்தன. இச்சேவை இலவசமாக வழங்கப்பட்டது. தீவிலேயே சிறந்த பகல்நேரக் குழந்தை பராமரிப்பு இடமாகவும் இது இருந்திருக்கும் என்று நான் நினைக்கிறேன். இங்கு பராமரிப்பாளர் –குழந்தைகள் விகிதாசாரம் மிக அதிகமாகவே இருந்தது. அதிகமான

பராமரிப்பாளர்கள் இதற்கான பயிற்சி பெற்றவர்களாக இல்லாவிட்டாலும் முதிர்ச்சியுள்ள பெண் உறுப்பினர்களின் கண்காணிப்பிலேயே பணிசெய்தார்கள். விடுதலைப்புலி பெண் உறுப்பினர்கள் அனைவருக்கும் குழந்தைப் பேற்றுக்குப் பின்னர் கடமைகளிலிருந்து ஒரு வருடம் லீவு கிடைக்கும். இதன் பின்னர் பகல்நேரத்தில் குழந்தைகளை தளிர் பராமரிப்பு இடங்களில் விட்டுவிட்டு தமது கடமைகளுக்கு அவர்கள் திரும்பவேண்டும். திருமணமான பெண்களைக் களமுனைக் கடமைகளுக்கு விடுதலைப்புலிகள் அனுப்பவில்லை.

***மனித உரிமை – சுற்றுச்சூழல்:*** மனித உரிமை அமைப்பான நிசோரும், சுற்றுச்சூழல் பாதுகாப்புக்கான ஓர் அமைப்பும் இக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

***சிறுவர் பூங்கா:*** சந்திரன் பூங்கா என்றழைக்கப்பட்ட பல மிருகங்களையும் பறவைகளையும் கொண்ட சிறுவர் விளையாட்டுப் பூங்கா ஒன்று கிளிநொச்சியில் திறக்கப்பட்டது. வன்னியெங்கும் இருந்து இதற்கென சிறுவர்களை அழைத்து வருவார்கள். சிறுவர்கள் வளர்ந்தவர்கள் எல்லோருமே இதை மிகவும் விரும்பி அனுபவித்தார்கள். இப்பூங்காவிற்கு வெளியே வீதியின் இருமருங்கும் சிறுவிற்பனையாளர்கள் பலவிதமான பொருட்களை விற்பதற்காக பரப்பி வைத்திருப்பார்கள். இதனால் இவ்விடம் எப்போதும் திருவிழாக்கோலம் கொண்டிருக்கும். இங்கிருந்த மிருகங்களுள் முதலைகள் மிகவும் பிரபலம். பின்னர் லங்கா ராணுவம் இதையும்கூட அழித்துவிட்டது.

***பொத்தகசாலை–நூல்நிலையம்:*** அறிவமுது எனும் பெயருடன் பல பொத்தகசாலைகளை விடுதலைப்புலிகளின் ஒரு பிரிவினர் நடத்தினர். இவற்றில் சிறுவர்களுக்கான பாடப் புத்தகங்களிலிருந்து பெரியவர்களுக்கான சிறந்த பல தமிழ்மொழிப் புத்தகங்கள் வரை விற்பனை செய்யப்பட்டது. இக்கடையில் வாங்கிய பல தமிழ்மொழிப் புத்தகங்களைப் படித்து நானும் எனது அறிவை பலதுறைகளில் வளர்த்துக்கொண்டேன். இதையும்விட பல சிறிய நூல்நிலையங்கள் வன்னியெங்கும் பரவியிருந்தது. இந்நூல் நிலையங்களில் விடுதலைப்புலிகளின் இலக்கியங்கள் முழுமையாகக் கிடைக்கப்பெற்றன. விடுதலைப்புலி இலக்கியங்களில் கவிதைகளே பெரும்பான்மையாக இருந்தன. அடுத்துச் சிறுகதைகளும் குறுநாவல்களும் எழுதப்பட்டன. பெண் உறுப்பினர்களும் விடுதலைப்புலி இலக்கியத்திற்கு அதிகம் பங்களித்திருக்கிறார்கள். இவர்களின் எழுத்துக்களில் பிரபாகரனை அதிகம் புகழ்ந்திருப்பதைக் காணலாம். இதற்கான காரணங்களை முன்னர் நான்

விளக்கியிருக்கிறேன். ஒப்பந்த காலத்தில் புத்தக வெளியீடுகளும் குறுந்தட்டு வெளியீடுகளும் வன்னியில் அடிக்கடி நிகழும். குறுந்தட்டுக்கள் அதிகமாக ஒரு களவெற்றியை ஒட்டிய அல்லது பிரபல மாவீரரின் வீரமரணத்தை ஒட்டிய பாடல்களைக் கொண்டிருக்கும்.

**கடைகள்:** பாண்டியன் எனும் பெயரில் விடுதலைப்புலிகளின் நிதித்துறை நடத்திய சாப்பாட்டுக் கடைகள் வன்னியில் பிரபலமாக இருந்தன. மக்களும், போராளிகளும் வெளியே உணவருந்தும் கலாச்சாரத்தை அக்கடைகள் உருவாக்கியன. பாண்டியன் கடைகளை விட வேறு சிலவும் உணவுக்கடைகளையும் நிதித்துறை நடத்தி வந்தது. இக்கடைகளூடாக நிதித்துறைக்கும் அதிக வருமானம் கிடைத்திருக்கும். இதையும்விட மளிகைக் கடைகளையும் பொது மக்களும் நிதித்துறையும் நடத்தின. விடுதலைப்புலி உறுப்பினர்கள் மது அருந்துவதை அமைப்புத் தடை செய்தது. ஆனால் நிதித்துறை மது உற்பத்தியையும் மது விற்பனைக் கடைகளையும் பொதுமக்களுக்காக நடத்தி வந்தது. இக்கடைகளூடாக நிதித்துறைக்கும் அதிக வருமானம் கிடைத்திருக்கும். இருப்பினும் தனியார் கடைகள் இங்கு தடை செய்யப்படவில்லை. இவ்வகையான சில தனியார் கடைகளும் சிறப்பாக இயங்கின. இத்தனியார் கடைகளிடமும் நிதித்துறை வரிகள் வசூலித்து வந்தது. இதையும் விட நிதித்துறை பல உலர் உணவுப் பொருட்கள், நெகிழிப் பொருட்கள் தயாரிப்பிலும் ஈடுபட்டது. அவையெல்லாம் பொதுமக்களுக்கு அதிக வேலைவாய்ப்புக்களையும் கொடுத்து வந்தன.

**வழங்கல்:** வாழை உட்பட பல தோட்டங்களையும் கோழிப்பண்ணைகளையும் நிதித்துறை பராமரித்து வந்தது. இவற்றிலிருந்து பெறப்படுவன எல்லாம் உறுப்பினர்களின் உணவுத் தேவைக்கே போயிருக்கும் என்று நினைக்கிறேன். விடுதலைப்புலிகள் அமைப்பின் ஒட்டுமொத்த உறுப்பினர்களும் ''வழங்கல்'' என்ற ஒரு விநியோக ஒழுங்குக்குள் வந்தார்கள். உறுப்பினர்களின் உடை, உணவு, சுகாதாரம் போன்ற தேவைகள் முழுக்க இவ் வழங்கல் விநியோகத்தினால் பூர்த்தி செய்யப்படும். வழங்கல் முறையின் நாளாந்தச் செயற்பாடாக உறுப்பினர்களின் மதிய உணவு அவர்களின் வேலைத் தளங்களுக்கு வரும். நானும் வழங்கல் உணவைச் சமாதானச் செயலகத்தில் சாப்பிட்டிருக்கிறேன். அது சத்துள்ளதாகவும் சுவையாகவும் இருந்தது.

**தமிழீழ வங்கி:** இவ்வங்கியை விடுதலைப்புலிகள் 1994ம் ஆண்டில் அவர்கள் யாழ்ப்பாணத்தைத் தம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்த காலத்திலேயே ஆரம்பித்துவிட்டனர். வன்னியில் அவ்வங்கியின்

கிளைகள் பல இருந்தன. பெரும்பாலான பொதுமக்களும் இவ்வங்கியிலேயே தமது பணத்தை போட்டு வைத்தனர். ஒப்பந்தத்திற்குப் பின்னர் புலம்பெயர் தமிழரும் வன்னியின் வளர்ச்சிக்காக இவ்வங்கியில் சேமிப்புப் போடுமாறு ஊக்குவிக்கப்பட்டனர். 2008ம் ஆண்டில் கிளிநொச்சியில் இதன் அதி கவர்ச்சியான தலைமையக கட்டிடம் திறக்கப்பட்டது.

**நுண்கலைக்கல்வி:** முழுநேரமாகவும் பள்ளிக்கூடம் முடிந்த பின்னரும் கற்பிக்கும் நுண்கலைக் கல்லூரியின் இரண்டு கிளைகள் இக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. தமிழ்நாட்டிலிருந்து ஓவியம், சிற்பம், சினிமா போன்ற துறைகளின் கலைஞர்கள் வன்னிக்கு வந்து மாணவர்களுக்கு இக்கலைகளைக் கற்பித்தார்கள். தமிழ்த் தேசியத் தொலைக்காட்சி சேவை அக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டு நாளாந்தம் மூன்று நான்கு மணித்தியாலங்கள் ஒளிபரப்புச் செய்தது. வீடியோ எடுக்கும் கலையை விடுதலைப்புலிகள் ஒரு தசாப்தத்திற்கும் மேலாக வளர்த்து வந்தார்கள். இதனால் அவர்களிடம் இக்கலைத் தேர்ச்சி மட்டுமல்லாமல் ஏராளமான வரலாற்று ஆவணப்படங்களும் இருந்தன. தமிழ்த் தேசிய தொலைக்காட்சிப் பிரிவு இவ்வாவணப்படங்களை தொகுத்து வைக்கும் திட்டத்தையும் இக்காலத்தில் ஆரம்பித்தது. இத் தொலைக்காட்சி சேவையின் ஆரம்பத்துடன் வன்னியில் இக்கலை மேலும் பல வளர்ச்சிகளைக் கண்டது. ஒப்பந்தத்துக்கு முன்பே விடுதலைப்புலிகள் சில சிறந்த முழுநீள சினிமாக்களை உருவாக்கியிருந்தார்கள். பின்னரும் பல முழுநீளப் படங்கள் உருவாக்கும் முயற்சிகள் தொடர்ந்தன. இம்முயற்சியில் அவர்களின் இறுதி வெளிப்பாடே 2007ம் ஆண்டில் அநுராதபுத்தில் லங்கா வான்படை தளத்தின் மீதான இருபத்தொரு கரும்புலிகளின் தாக்குதலைப்பற்றிய ''எல்லாளன்'' என்னும் திரைப்படம். முள்ளிவாய்கால் அழிவுக் கட்டத்தில் இத்திரைப்படம் முடிவுபெறாமலே இருந்தது. அதன் பின்னரே அது முழுமையாக்கி வெளியிடப்பட்டது.

***உடற்பயிற்சி:*** கராத்தே பயிற்சி எப்போதுமே விடுதலைப்புலிகள் மத்தியில் பரவலாகவும் பிரபலமாகவும் இருந்தது. ஒப்பந்த காலத்தில் ஒவ்வொரு பாடசாலை மாணவருக்கும் கராத்தே பழகுவதற்கான வசதிகள் கொடுக்கப்பட வேண்டும் என்ற திட்டம் முன்னெடுக்கப்பட்டது. வன்னிபூராவும் கராத்தே போட்டிகள் இருபாலருக்கும் பல வயதினருக்கும் நடத்தப்பட்டது. இது ஒரு புதுமையான விரும்பத்தக்க முயற்சி. இது தொடர்ந்திருந்தால் இதனால் அதிக பயன் பெறுபவர்கள் பெண்களாகவே இருந்திருப்பர்.

***ஆவணமாக்கல்:*** ஆவணகாப்பகம் என்ற ஒரு நிறுவனத்திற்கு யோகி யோகரட்ணம் பொறுப்பாக இருந்தார். படைத்துறை வரலாற்றை ஆவணப்படுத்துவதில் இந்நிறுவனம் ஈடுபட்டிருந்தது. யோகி யோகரட்ணமும் இறுதி யுத்தத்தின் பின்னர் லங்கா ராணுவத்தால் கைது செய்யப்பட்டு காணாமற்போகச் செய்யப்பட்டவர்களில் ஒருவர். மாவீரர் காப்பகம் என்ற நிறுவனம் மாவீரர்களைப் பற்றிய தரவுகளைக் காப்பதுடன் துயிலும் இல்லங்களையும் பராமரித்து வந்தது. ஏராளமான விலைமதிக்கமுடியாத நூல்கள் பல வன்னியில் பரவலாக பல நிறுவனங்களில் சிதறிக் கிடந்தன. சமாதான செயலகத்திலும் ஒரு நூல்நிலையத்தில் இத்தகைய நூல்கள் பல இருந்தன. வடகிழக்கு புள்ளிவிபர மையம் எனும் அமைப்பும் பல புள்ளிவிபரங்களை சேகரித்து வைத்திருந்தது.

***பொதுமக்கள் போக்குவரத்து:*** வன்னியில் பொதுமக்களுக்கான ஒரேஒரு பஸ் போக்குவரத்து வசதியும் நிதித்துறையினாலேயே நடத்தப்பட்டது. மிக நேர்த்தியாகவும் பொதுமக்களுக்குக் கட்டுப்படியான விலையிலும் நடத்தப்பட்டது. ஒப்பந்தத்திற்கு முன்னர் தனியார் மினிபஸ் போக்குவரத்துச் சேவையையும் வன்னியில் இருந்தது. அக்காலத்தில் தொண்ணூறு வீதமான சேவை இவர்களாலேயே வழங்கப்பட்டது. ஏ–9 பாதை திறந்த பின்னர் மினிபஸ் ஓட்டுனர்கள் பல வீதி விபத்துக்களில் சம்பந்தப்பட்டார்கள். இவ்விபத்துக்களால் பலர் இறந்தார்கள். இதன் பின்னரே தனியார் போக்குவரத்துச் சேவைகள் நிறுத்தப்பட்டு, நிதித்துறை மட்டுமே இச்சேவையைத் தொடர்ந்தது.

***வாகனப் போக்குவரத்து:*** வன்னி வீதிகளில் காணப்பட்ட வாகனங்கள் அங்கு செயற்பட்ட சர்வதேச நிறுவனங்களின் வாகனங்களாகவோ அல்லது விடுதலைப்புலிகளின் வாகனங்களாகவோதான் இருக்கும். தெற்கே கொழும்பு போன்ற இடங்களிலிருந்து யாழ்ப்பாணத்திற்கு நேரே செல்லும் வாகனங்களும் அங்காங்கே காணப்படும். ஒப்பந்தத்திற்குப் பின்னர் பொதுமக்களினதும், விடுதலைப்புலிகளினதும் ஏராளமான ஈருருளிகள் வன்னி வீதிகளில் காணப்பட்டன. இவற்றைவிட வன்னி வீதிகளை மாடுகளும் ஆடுகளும் நாய்களும் சுதந்திரமாக தமதாக்கின. இவற்றில் முக்கியமாக மாடுகள் வீதிகளில் பெரும் ஆபத்தாக விளங்கின. ஓரிரண்டு மாடுகளும் மேய்ப்புக்காக செல்லும் தொகையான மாட்டுக்கூட்டங்களும் வீதிகளை பெரும்பாலும் ஆட்கொண்டன. மழைக்காலத்தில் வீதிகளின் நடுப்பகுதியே மாடுகளுக்கு வாய்த்த காய்ந்த நிலமாக இருந்தது. அக்காலத்தில் வாகனங்களும் நடுத்தெருவில் படுத்துக்கிடக்கும் மாடுகளைச் சுற்றியே செல்லும். இம்மாடுகள் வன்னிப்

பொருளாதாரத்தின் முக்கிய அம்சமாகையால் இவற்றைத் தடுக்க எம்முயற்சியும் எடுக்கப்படவில்லை. 2006ம் ஆண்டிற்குப் பின்னர்தான் அவ்வாறு வீதிகளில் கிடந்த மாடுகளை பறிமுதல் செய்யும் முயற்சிகள் எடுக்கப்பட்டது.

தமிழீழ போக்குவரத்துக் காவல்துறை வீதிகளில் வாகனங்களின் வேகத்தைக் கட்டுப்படுத்த எடுத்த நடவடிக்கைகள் ஒப்பந்தகால ஆரம்பத்தில் எல்லோராலும் அதிகம் பேசப்பட்ட ஒன்றாக இருந்தது. ஒப்பந்தத்துக்கு முந்திய காலத்தில் வீதிகளில் மிகவும் குறைவான வாகனங்களுக்குப் பழக்கப்பட்டவர்களுக்கு வீதிகளின் பாதுகாப்புப் பற்றி நினைவுபடுத்த வேண்டியிருந்தது. ஏ–9 பாதை திறந்த ஆரம்பகாலத்தில் ஏராளமான வீதி விபத்துக்கள் ஏற்பட்டன. நடந்து செல்பவர்கள் கூட வீதிகளின் நடுவில் நடக்காமல் ஓரத்தில் நடப்பதற்கு மீண்டும் பழகவேண்டியவர்களாக இருந்தார்கள். விடுதலைப்புலி வாகன ஓட்டுனர்களும் சரி, ஏ–9 பாதையூடாக தொடர்ந்து வாகனங்களை ஓட்டியவர்களும் சரி வீதியின் வேகத்தடை தமக்கில்லை என்பது போல வாகனங்களை ஓட்டினார்கள். ஒப்பந்தத்திற்கு முந்திய காலத்தில் அதிவேகமாக வாகனங்களை ஓட்டிப் பழக்கப்பட்ட விடுதலைப்புலி உறுப்பினர்கள் வேகத்தைக் கட்டுப்படுத்தமுடியாமல் திணறினார்கள். ஏ–9 பாதையூடாக நேரே ஓட்டியவர்கள் தம்மை ஒருவரும் அப்பகுதியில் தடுக்கமுடியாது என்ற கர்வத்தில் வேகமாக ஓட்டினார்கள். இவர்களுக்கெல்லாம் தமிழீழ போக்குவரத்துக் காவல்துறை கடும்நடவடிக்கை எடுத்தது. காலப்போக்கில் வீதிகளில் வேகமும் விபத்துக்களும் குறைந்து வருவதை அவதானிக்க முடிந்தது.

தமிழீழ போக்குவரத்துக் காவல்துறையைப் பற்றி வன்னியில் எல்லோரும் கேட்டுச்சிரித்த கதை ஒன்று. ஆமையும் முயலும் ஓட்டப் பந்தயம் ஓடின. வழியில் வீதியின் வேகத் தடையை தாண்டியதற்காக தமிழீழ போக்குவரத்துக் காவல்துறை முயலைக் கைது செய்தது. ஆமை மெதுவாகச் சென்று பந்தயத்தில் வெற்றியடைந்தது.

2006ம் ஆண்டு நடுப்பகுதியில் லங்கா அரசு பழைய பொருளாதாரத் தடைகளை மீண்டும் திணித்த பின்னர் இவ்வாறான அபிவிருத்திகளின் வேகம் குறைந்துகொண்டே போனது.

# முள்ளிவாய்க்காலை நோக்கி..

இதுவரை நான் இங்கு எழுதியதெல்லாம் இந்நூலின் தலைப்பில் நான் குறிப்பிட்ட எனது நாட்டில் ''துளிநேரம்'' என்பது பற்றியதே. எதைப்பற்றி இதுவரை விபரித்தேனோ அதன் அழிவு பற்றியே இப்போது எழுத இருக்கிறேன். இவ் அழிவை அனுபவிக்காத வாசகர்களுக்குத் தமது நாடு முழுமையாக – அதன் கட்டுமானங்கள், அதன் அரச நிறுவனங்கள், அதன் மக்கள் – அழிக்கப்படுவதைக் கற்பனை செய்து பார்க்க முடியுமா? இவ்வகையாக ஒரு நாடு ஒட்டுமொத்தமாக அழிக்கப்பட்டது முன்னர் நிகழ்ந்திருக்கிறதா? எனது நாட்டின் அழிவை உலகம் இப்படி நோக்காததற்கு ஒரே ஒரு காரணம், எனது நாடு என்ற உணர்வு அதன் மக்களின் மனதில் மட்டுமே ஆழமாக வேரூன்றியது. ஆனால் உலகத்தால் அதுவரை அங்கீகரிக்கப் படவில்லை என்பது மட்டுமே.

வன்னியில் வாழ்ந்த மக்களைப் போலவே உலகம் முழுக்க பரந்து வாழும் கோடிக்கணக்கான தமிழர்களைப் போலவே நானும் இவ்வேதனையை அனுபவித்தேன். நான் நேரே கண்டவற்றை மட்டுமே இங்கு விபரிக்க விளைகிறேன். ஆகவே பிரமாண்டமான ஒரு மனித போராட்டத்தில் மனித அழிவில் நான் கண்ட ஒரு சிறு படமே இது. வன்னியில் அக்காலத்தில் வாழ்ந்த நாங்கள் எவரும் வரவிருக்கும் பேரழிவைப்பற்றிச் சிந்திக்கவோ கற்பனை செய்யவோ முடியாதவர்களாவே இருந்தோம். இவ்வளவு பரந்து விரிந்த ஒரு கட்டுமானம் முற்று முழுதாக அழிக்கப்படும் என்று நம்ப முடியாதவர்களாக இருந்தோம். விடுதலைப்புலிகள் மேலும் மேலும் இடங்களை இழந்துகொண்டு போனபோதும் வன்னியில் அடிக்கடி சொல்லப்பட்ட வார்த்தைகள், ''லங்கா ராணுவம் தனது கால்களை அகல விரிக்கிறது. விரைவில் தன் அழிவைத் தேடிக்கொள்ளும்'' என்பதுவே. எம்மில் அதிகம் பேர் இதை நம்ப விரும்பினோம். நம்பினோம். அதைவிட வேறெந்த முடிவும் எம்மால் கற்பனை செய்து பார்க்கவும் இயலவில்லை. உலாப்போவது போல் மக்கள் சிரித்த முகத்துடன் இடம்பெயருவதை முதன்முதலில் நான் பார்த்தபோது எனது உள்ளம் பதைத்தது. என்னைப்போல் அல்லாமல் இவர்கள்

எல்லாம் 2002ம் ஆண்டுக்கு முந்திய காலப்பகுதியில் பல தடவைகள் இடம்பெயர்ந்திருக்கிறார்கள். அதனால் எந்த இடப்பெயர்வையும் துச்சமாகத் தாங்கிக்கொள்ளும் உறுதி அவர்களிடம் இருந்தது. 2009ம் ஆண்டுத் தொடக்கத்திற்கு முன்னர் லங்கா ராணுவத்தின் எறிகணைகள் எட்டக்கூடிய தூரத்தில் இருந்து விலகி விலகி மக்கள் தொடர்ந்து இடம்பெயர்ந்துகொண்டே இருந்ததால் இறப்புக்களும் மட்டுப்படுத்தப்பட்டிருந்தது. இதுவும் மக்களின் உறுதிக்குக் காரணம். ஜனவரி 2009லும் ஒரு நாள் இணையச் செய்திகளை வாசித்த புலித்தேவன் லங்கா வெற்றி பெற்றுவிட்டது என்று இறுமாப்புக் கொள்கிறது என்று என்னிடம் சொன்னார். விடுதலைப்புலிகளை விட ஏனையவர்கள் எல்லோரும் அதையேதான் எண்ணுகிறார்கள் என்று நான் பதிலளித்தபோது வன்னியை விட்டு வெளியேற எனக்கு விருப்பமா என்று மட்டுமே கேட்டார். வன்னிக்கு வரவிருந்த பேரழிவு 2006ம் ஆண்டு நடுப்பகுதியில் இருந்து ஆரம்பிக்கிறது. தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் இடம்பெற்ற அழிவுகள் மோசமாகிக்கொண்டே போயின.

## 2005

2005ம் ஆண்டு பிறக்க முன்னரே இரண்டு அதிர்ச்சிகள் வன்னிக்கு நேர்ந்துவிட்டது. விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து மட்டக்களப்பைச் சேர்ந்த கருணா ஏப்பிரல் 2004ல் விலகியதும் அவ்வாண்டு இறுதியில் வந்த சுனாமிப் பேரழிவும்தான் அவை. 2005ம் ஆண்டு விடியும்போது இவ்விரண்டு அதிர்ச்சிகளும் ஓரளவு விலகி மக்கள் சுனாமி மீள்கட்டுமானம் பற்றிய நம்பிக்கையுடன் இருந்தார்கள். நோர்வேயின் உதவியுடன் சுனாமிக்குப் பின்னரான மீள்கட்டுமானத்திற்காக இருதரப்பாரும் வேறொரு ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டனர். வன்னியில் இது ஒரு புதிய நம்பிக்கையை வளர்த்தது. சமாதானப் பேச்சுவார்த்தைகளில் முன்னேற்றம் ஏற்படவில்லை என்ற விரக்தியைத் தள்ளிவிட்டு சுனாமி மீள்கட்டுமானம் பற்றியே எல்லோரும் பேசினார்கள். இக்காலத்தில் அரசியல்துறை மகளிர் பிரிவு கூட்டிய ஒரு பெரிய கூட்டத்தில் நானும் இருந்தேன். சுனாமி மீள்கட்டுமான நிதியைக் கொண்டு பெண்களின் நலனுக்கான ஒரு பெரிய திட்டம் நிறைவேற்ற அங்கு கலந்துரையாடப்பட்டது. பெண்கள் தமக்குத் தேவையான பல சேவைகளை ஒரே இடத்தில் பெறக்கூடிய மையங்களை வன்னியில் பரவலாக நிறுவுவதே இத்திட்டத்தின் முக்கிய அம்சம் ஆகும். மிகவும் எழுச்சியூட்டும் திட்டமாக அது எனக்குத் தோன்றியது. சுனாமி

மீள்கட்டுமான ஒப்பந்தம் 2005 ஜூன் மாதத்தில் கைச்சாத்திடப்பட்டது. ஆனால் உடனடியாகவே இது லங்கா சட்டத்தின் கீழ் செல்லுபடியாகாது என்று வழக்குப் போடப்பட்டு இவ்வொப்பந்த அமுலாக்கலை காலவரையின்றி நீதிமன்றம் தள்ளி வைத்தது. இவ்வொப்பந்தத்தின் தோல்வி, சமாதானத்தின் மீதிருந்த நம்பிக்கையை தமிழர்களிடையே முற்றுமுழுதாக உடைத்தது.

கருணாவின் துரோகத்தையும் பாதையில் ஒரு தடைக்கல்லாக வன்னி அமைப்பு கடந்துவிட்டது போலவே அக்காலத்தில் எனக்குத் தோன்றியது. கருணா விலகியதைத் தொடர்ந்து மட்டக்களப்பில் வன்முறைகள் அதிகரிக்கத் தொடங்கியன. பல முக்கிய பிரமுகர்கள் மட்டக்களப்பில் கொலை செய்யப்பட்டார்கள். ஊடகவியலாளர் ஐயாதுரை நடேசன், நிசோரின் உறுப்பினர் ஜோசப் பரராஜசிங்கம், சந்திரநேரு அவருடன் மட்டக்களப்பு அரசில்துறை பொறுப்பாளர் கௌசல்யன் ஆகியோர் 2005ம் ஆண்டு கொலை செய்யப்பட்டார்கள். பிரபல எழுத்தாளரான தராக்கி என்ற பெயரும் கொண்ட சிவராம் அக்காலத்தில் மட்டக்களப்பில் தாக்கப்பட்டு காயமடைந்தார். பின்னர் ஏப்பிரல் 2005ல் கொழும்பில் வைத்து இவர் கொல்லப்பட்டார். ஆகஸ்ட் 2005ல் நடந்த வெளியுறவு அமைச்சர் கதிர்காமரின் கொலையே 2002ம் ஆண்டு ஒப்பந்தத்திற்குப் பின்னரான காலத்தில், விடுதலைப்புலிகள் மேல் சுமத்தப்பட்ட முதலாவது முக்கியப் பிரமுகர் கொலையாகும். இதைத் தொடர்ந்து நவம்பர் 2005ல் வரவிருந்த ஜனாதிபதி தேர்தலை தமிழர்கள் புறக்கணிக்க வேண்டுமென்ற கருத்தை விடுதலைப்புலிகள் நேரடியாகச் சொல்லாமல் மறைமுகமாகச் சொன்னார்கள். தமிழர்களின் தேர்தல் புறக்கணிப்பால் போர் உத்வேகம் கொண்ட ஜனாதிபதி தெரிவு செய்யப்பட்டார்.

## 2006

அதிகரிக்கும் வெள்ளைவான் கடத்தல்களுடனேயே 2006ம் ஆண்டு பிறந்தது. யாழ்ப்பாணத்தில் நடந்த இக்கடத்தல்களைப் பற்றி கிளிநொச்சியில் இருந்த நிசோருக்கு வந்து பாதிக்கப்பட்ட குடும்பத்தினர் முறையிட்டனர். பல நிசோர் அறிக்கைகள்[18] இத்தகைய குடும்பங்களுடன் நேரே பேசியதன் விளைவாக என்னால் எழுதப்பட்டன. இக்காலத்தில் நிசோரில் நாங்கள் சந்தித்த குடும்பங்களுடனான நேர்முகங்களை வைத்து ''வெள்ளைவான்'' எனும் ஒரு ஆவணப்படத்தையும்[19] தயாரித்தோம்.

இச்சூழலிலேயே பெப்பிரவரி 2006ல் ஜெனிவாவில் பேச்சு வார்த்தைகள் வைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. இப்பேச்சு வார்த்தையின் போது வன்முறைகள் சட்டெனக் குறைந்ததை சமாதான முன்னெடுப்பாளர்களும் சுட்டிக்காட்டினார்கள். இருதரப்பாலும் வன்முறைகளைக் கட்டுப்படுத்த முடியும் என்பதை இது தெளிவாகக் காட்டியது. பேச்சுவார்த்தை பெரும் ஏமாற்றமாக முடிந்தது. வன்னிக்குத் திரும்பிய விடுதலைப்புலிகளின் பேச்சுவார்த்தைக் குழு கொழும்பு விமானநிலையத்தில் அவமதிக்கப்பட்டார்கள். இருதரப்பு வன்முறைகளும் மீண்டும் அதிகரிக்க ஆகஸ்ட் 2006ம் வந்து சேர்ந்தது.

யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலும் துணைப்படைக் கொலைக்குழுக்களின் வெறியாட்டம் உச்சத்தை அடைந்தது. நாளாந்தம் பல கொலைகள் சர்வ சாதாரணமாக இடம்பெற்றன. அதே காலத்தில் நூறு பொதுமக்களை காவுகொண்ட மூன்று தாக்குதல்களுக்கு விடுதலைப்புலிகள் குற்றம் சுமத்தப்பட்டார்கள். அதில் மிகப் பெரியதான தாக்குதல் கெபிற்றிக்கொலாவ என்னும் இடத்தில் ஒரு பஸ்ஸின் மேலான கிளைமோர் தாக்குதல். இதில் 68 பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். எனக்குத் தெரிந்த விடுதலைப்புலி உறுப்பினர்களுக்கும் இச்செய்திகள் என்னைப் போல ஊடகங்களுடாகவே தெரிய வந்தன.

ஆகஸ்ட் 2006 வரைக்கும் வன்முறைகள் கிளிநொச்சியிலிருந்து அதிகதூரத்திலேயே நடைபெற்றன. ஆகஸ்ட் மாதத்தில் 54 இளம் மாணவிகளைக் காவுகொண்ட செஞ்சோலை வளாகத்தின் மேலான குண்டுத் தாக்குதலுடன் சிறிலங்கா ராணுவ வன்முறை வன்னிக்கு நடுவே வந்து சேர்ந்தது. இம் மாணவிகளின் படுகொலை வன்னி மக்களிடையே ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியது. பொது உரையாடல்களில் அடிக்கடி சொல்லப்படும் விடயமாக இந்நிகழ்வு மாறியது. இத்தாக்குதலில் கொல்லப்பட்ட காயப்பட்ட 200க்கும் மேற்பட்ட மாணவிகளின் உறவினர்களைக்கூட இந்நிகழ்வினூடாக குறிக்கும் பழக்கத்தை நான் அவதானித்தேன். பாதிக்கப்பட்ட மாணவிகள் எவரையும் இந்நிகழ்விற்கு முன்னர் எனக்குத் தெரியாது. ஆனால் நிகழ்விற்குப் பின்னர் பலரைச் சந்தித்திருக்கிறேன். செஞ்சோலை வளாகத்தின் மேல் எனக்கும் ஒரு விசேட உறவு இருந்தது. 2002ம் ஆண்டு எனது முதல் வன்னி வருகையின்போது இவ்வளாகத்திலேயே நான் செஞ்சோலை சிறுமிகள், ஜனனி ஆகியோருடன் தங்கியிருந்தேன். இவ்வளாகத்திற்குச் செஞ்சோலை என்ற பெயர் உண்டானதன் காரணமும் இங்கு இச்சிறுவர் இல்லம் ஒரு காலத்தில் இயங்கியதே. ஆனால் இக்குண்டுத் தாக்குதலின்போது இங்கே சிறுவர் இல்லம் இயங்கவில்லை. இக்காலத்தில் செஞ்சோலை சிறுவர் இல்லம் கிளிநொச்சிக்கு மாற்றப்பட்டு

விட்டது. இவ்வளாகம் செஞ்சோலை சிறுவர் இல்லத்தின் சேமிப்பிடமாக மட்டுமே இருந்தது. குண்டுத் தாக்குதலின்போது இவ்வளாகத்திலும், வேறு சில இடங்களிலும் மூத்த பாடசாலை மாணவ மாணவியருக்கு முதலுதவிப் பட்டறைகள் இடம்பெற்றுக் கொண்டிருந்தன. விடுதலைப்புலிகளும் பாடசாலைகளும் சேர்ந்தே இப்பட்டறைகளை நடத்தினார்கள். இப்பட்டறைகளில் நூற்றுக்கணக்கான மாணவர்கள் பங்கு பற்றியதால் இது பரவலாக எல்லோருக்கும் தெரிந்த விடயமே. இதுபற்றிய ரகசியங்கள் எதுவும் கிடையாது. இவ்விடத்தில் குண்டு போடப்பட்டபோது இவ்விடயங்கள் எல்லாவற்றையும் தெரிந்தே தாக்குதல் நடத்தப்பட்டிருக்கிறது.

உண்மையில் இத்தாக்குதலுக்குப் பின்னால் ஒரு ராணுவ நோக்கம் இருந்தது. இப்பட்டறைகள் ஆரம்பிப்பதற்கு முன், பல வாரங்களாகப், பாடசாலை ஆரம்பிக்கும் நேரத்திற்கு முன், மூத்த மாணவர்களுக்கு விடுதலைப்புலிகளால் உடற்பயிற்சிகள் கொடுக்கப்பட்டன. மூத்த மாணவர்களை அமைப்பில் இணைவதற்கு ஊக்குவிப்பதே இதன் நோக்கமாக இருந்தது. பின்னர் இடம்பெற்ற பட்டறைகளில் பங்கு பற்றிய மாணவர்கள் உற்சாகத்துடனும் விடுதலைப்புலிகளுடன் நட்புறவு கொண்டவர்களாகவும் பழகினார்கள். இப்பட்டறைகள் முறையாகப் பூர்த்தியடைந்திருந்தால் ஏராளமான மூத்த மாணவர்கள் அமைப்பில் இணைந்திருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. இத்தகைய ஒரு விளைவை நிறுத்தவே செஞ்சோலை வளாகக் குண்டுத் தாக்குதல் நடத்தப்பட்டது. எதிர்பார்த்தது போலவே நடைபெற்றுக்கொண்டிருந்த பட்டறைகள் எல்லாம் குண்டுத்தாக்குதலுடன் நிறுத்தப்பட்டன. இத்தாக்குதலால் ஏற்பட்ட உளத்தாக்கங்கள் மாணவர்களை விடுதலைப்புலி களிடமிருந்து அந்நியப்படுத்தியது. இப்பட்டறைகள் முழுமையாக நடைபெற்றிருந்தால் விடுதலைப்புலிகள் அமுலாக்கிய கட்டாய ஆட்சேர்ப்பு நடைமுறையும் தேவைப்பட்டிருக்காது என்று வன்னியில் பலர் நம்பினார்கள்.

ஆகஸ்ட் 2006 தமிழர்களுக்குப் பல பின்னடைவுகளைக் கொண்டு வந்தது. இதே மாதத்தில் திருகோணமலையில் தமிழ் விவசாயிகள் தமக்குள்ள பிரச்சினைகள் பற்றிய கவனயீர்ப்புக்காக மாவிலாறு மதகு வாயிலை அடைத்தார்கள். இதைச் சாக்காக வைத்து லங்கா ராணுவம் ஒரு நேரடி மோதலை ஆரம்பித்தது. கண்காணிப்புக்குழுவின் தலையீட்டினால் இம்மதகு வாயில் திறந்த பின்னரும் இங்கு போர் தொடர்ந்தது. இங்கு ஆரம்பித்த மோதல் 2006ம் ஆண்டு முடிவில் வாகரையில் விடுதலைப்புலிகளின்

பின்வாங்கலுடன் முடிவுக்கு வந்தது. இம்மாதத்திலேயே பிரஞ்சு நாட்டைச் சேர்ந்த பட்டினிக்கு எதிரான அக்சன் கொன்றிலா பெய்ம் (Action Contre La Faim) எனும் அமைப்பில் பணியாற்றிய பதின்நான்கு தமிழர்கள் திருகோணமலையில் அவர்களின் அலுவலகத்தில் வைத்து சுட்டுக் கொல்லப்பட்டார்கள். 2006ம் ஆண்டு இறுதியில் வாகரையில் முடிவுற்ற இப்போரில் 200க்கும் மேற்பட்ட சிறுவர்கள் உட்பட்ட தமிழ் பொதுமக்கள் லங்கா ராணுவத்தின் எறிகணை மற்றும் குண்டுத் தாக்குதல்களில் உயிரிழந்தார்கள். சமாதானச் செயலகத்தில் இருந்த நாங்கள் இப்போரை மிகவும் உன்னிப்பாக கவனித்தோம். பொதுமக்கள் இறப்புப் பற்றியும், உணவுத்தடை பற்றியும் இணையத்தில் தொடர்ச்சியாக அறிக்கையிட்டு வந்தோம். லங்கா ராணுவத்தின் கைகளில் அகப்பட விரும்பாத பொதுமக்களை எறிகணைத் தாக்குதல்கள் மூலம் மந்தைகள் போலக் கூட்டி அவர்கள் மேல் உணவுத்தடை போட்டுப் பின்னர் கடும் தாக்குதல் மூலம் அவர்களைக் கொன்று குவித்தும் கொடுமை தாங்காமல் அவர்களை அவ்விடத்திலிருந்து வெளியேறச் செய்ததும் வாகரையில் இடம் பெற்றது. இதுவே 2007ம் ஆண்டு தொடக்கம் முள்ளிவாய்க்கால் வரை வன்னியிலும் நடந்தது.

வாகரைப் போரின் முடிவிற்குப் பின்னர் பல விடுதலைப்புலி உறுப்பினர்கள் அங்கிருந்து வன்னிக்கு நடந்து வந்தார்கள். வழியிலும் சிலர் கொல்லப்பட்டார்கள். வன்னிக்கு வந்து சேர்ந்தவர்களில் திருகோணமலை அரசியல்துறைப் பொறுப்பாளராக இருந்த எழிலன் குறிப்பிடத்தக்கவர். இவரை 2007க்குப் பின்னர் நான் கிளிநொச்சியில் நன்றாக அறிந்திருக்கிறேன். எழிலன் ஆழ்ந்த சிந்தனையுள்ளவர். ஊடகங்களைப் பற்றிப் புரிந்துகொண்டவர். ஊடகங்களின் ஒரு பக்கசார்பைத் திருத்தும் முயற்சிக்கான வழிகளைப் பற்றிச் சொல்லுவார். போரின் இறுதியில் லங்கா ராணுவத்தால் கைது செய்யப்பட்டுக் காணாமற்போன நூற்றுக்கணக்கானவர்களில் இவரும் ஒருவர்.

வாகரைப் போர் ஆரம்பித்த அதே மாதத்தில் வடக்கேயும் முகமாலையில் ஒரு போர் மூண்டது. இங்கும் விடுதலைப்புலிகள் பின்னடைவையே கண்டார்கள். இப்போர் வாகரைப் போர் போலப் பெரிதாகாவிட்டாலும் யாழ்தீவகத்தை அண்டி இருந்த அல்லைப்பிட்டி என்னும் தீவில் லங்கா ராணுவத்தின் எறிகணைத் தாக்குதல்களில் பல தமிழர்கள் கொல்லப்பட்டார்கள். அல்லைப்பிட்டி தேவாலயத்தின் அருட்தந்தை ஜிம் பிறவுன் காயப்பட்டவர்களை யாழ் வைத்தியசாலைக்கு அகற்ற முற்பட்ட முயற்சியும் லங்கா ராணுவத்தால் தடுக்கப்பட்டது. அதே மாதத்தில் காணாமற்போனவர்களில் அவரும் ஒருவர். வன்னியிலும் லங்கா

ராணுவத்தின் ஒரு கிளைமோர் தாக்குதலில் அம்புலன்ஸ் வாகனத்தில் சென்றுகொண்டிருந்த ஒரு டாக்டரும் மருத்துவ பணியாளரும் மூன்று பொதுமக்களும் கொல்லப்பட்டனர்.

இதே ஆகஸ்ட் மாதத்தில் லங்காவின் சமாதானச் செயலகத்தைச் சேர்ந்த கேதீஸ் லோகநாதன் கொழும்பில் வைத்துச் சுட்டுக் கொல்லப்பட்டார். இக்கொலைக்கு விடுதலைப்புலிகளே பொறுப்பு என்று ஊடகங்களில் சொல்லப்பட்டது.

2006ம் ஆண்டில் இத்தகைய கொடிய நிகழ்வுகளின் சூழலிலேயே இரண்டு ஜெனீவா பேச்சுவார்த்தைகள் லங்கா அரசுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையே இடம்பெற்றன. இரண்டாவது பேச்சுவார்த்தை அக்டோபர் மாதத்தில் இடம்பெற்றது. இப்பேச்சுவார்த்தை வன்னியில் ஒரு பொருட்டாகவே எடுக்கப்படவில்லை. அதுவரை பேச்சுவார்த்தைகளுக்குத் தலைமை தாங்கிய அன்ரன் பாலசிங்கம் உடல்நலம் குன்றிய நிலையில் இப்பேச்சுவார்த்தைக்குப் போகவில்லை. தமிழ்ச்செல்வனே இதற்குத் தலைமை தாங்கினார். ஆகஸ்ட் மாதத்தில் மூடப்பட்ட ஏ–9 பாதை ஒப்பந்தத்தின் பிரகாரம் மீண்டும் திறக்கப்படவேண்டும் என்பதையே பேச்சுவார்த்தையின் போது விடுதலைப்புலிகள் வலியுறுத்தினார்கள். சமாதான முன்னெடுப்பாளர்கள் அடுத்த பேச்சுவார்த்தைக்கான திகதியைக் குறிப்பதற்கு மிகவும் முயன்றார்கள். ஏ–9 பாதை திறக்காமல் ஒப்பந்தத்தை ஒட்டிய பேச்சுவார்த்தை நடத்தமுடியாது என்பது விடுதலைப்புலிகளின் நிலைப்பாடாக இருந்தது. லங்கா அரசு ஏ–9 பாதையைத் திறப்பதற்குச் சம்மதிக்கவில்லை. இதனால் அக்டோபர் 2006ல் நடந்த பேச்சுவார்த்தையே இறுதிப் பேச்சு வார்த்தையாக இருந்தது. வன்னிக்குத் திரும்பிய தமிழ்ச்செல்வன் இப்பேச்சுவார்த்தையைப் பற்றி எல்லோரிடமும் உற்சாகத்துடன் விவரித்தார். எப்போதும் போலவே அவர் நம்பிக்கை நிறைந்தவராகக் காணப்பட்டார்.

2006ம் ஆண்டு டிசம்பரில் அன்ரன் பாலசிங்கத்தின் இறப்பு அவர் மேல் விடுதலைப்புலி உறுப்பினர்களுக்கு இருந்த ஆழமான அன்பை வெளிக்கொண்டு வந்தது. அவரை நான் ஒருபோதும் சந்திக்காவிட்டாலும் அவர் மேல் உறுப்பினர்கள் கொண்டிருந்த அன்பினூடாக அவரைப்பற்றி அதிகம் அறிந்துகொண்டேன்.

## 2007

வன்னியில் 2007ம் ஆண்டு பற்றிய எடுப்பான நினைவுகளாக லங்கா அரசின் தடையால் ஏற்பட்ட எரிபொருள் தட்டுப்பாடும் தமிழ்ச்செல்வனின் கொலையும் நினைவில் வருகின்றன. வன்னி

வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் எரிபொருளின் தட்டுப்பாடு தாக்கத்தை உண்டாக்கியது. எனது வேலைகளின் பல பக்கங்களும் இதனால் பாதிக்கப்பட்டன. சிறுவர் போராளிகள் விடுவிப்புத் திட்டத்தில் பொதுமக்கள் வீடுகளுக்குச் சென்று உறுதிப்படுத்த வேண்டிய தேவைகள் இருந்தன. எரிபொருள் தட்டுப்பாடு இதற்குப் பெரும் தடையாக இருந்தது. யூனிசெப்பும் களமுனை அண்டிய பிரதேசங்களுக்குப் போய் விடுவிப்பை உறுதிசெய்ய முடியாது என்ற நிலைப்பாட்டை எடுத்தனர். இதனால் விடுவிக்கப்பட்ட சிறுவர்களும் அவர்களின் பட்டியலில் நீண்டகாலம் இருந்தார்கள். சமாதானச் செயலக இணையத்தளத்தில் பொதுமக்கள் மீதான லங்கா ராணுவத்தின் தாக்குதல்களைப் பற்றிய செய்திகள் போடுவதிலும் எரிபொருள் பிரச்சினையால் தாமதங்கள் ஏற்பட்டன. இதனால் தமிழ்ச்செல்வனுக்கும் சமாதானச் செயலக ஊடகப் பிரிவிற்கும் அடிக்கடி சர்ச்சைகள் வரும். செய்திகள் போடுவதில் உள்ள தாமதத்திற்கு எரிபொருள் தட்டுப்பாடு என்ற காரணத்தை தமிழ்ச்செல்வன் ஏற்றுக்கொள்ள மறுத்தார்.

இக்காலத்தில் வன்னி வீதிகளில் பொதுவாகக் காணப்பட்ட ஒரு காட்சி அரசுக்கு எதிரான மக்களின் போராட்ட உறுதியை வெளிப்படுத்தியது. தமிழர்களின் வேதனையில் ஆனந்தம் கொள்ளும் லங்கா அரசு வன்னி மீதான அதன் எரிபொருள் தடையை இறுக்கிக்கொண்டே போனது. வன்னியில் ஈருருளிகளே அப்போது அதிகமாகப் பயன்படுத்தப்பட்ட வாகனம். பெற்றோல் தடையினால் அதன் விலை ஏறிக்கொண்டே போக மக்கள் தம் ஈருருளிகளை விலை குறைவாக இருந்த மண்ணெண்ணையில் ஓடுவதற்கான சில மாற்றங்களைச் செய்தார்கள். இம்மாற்றத்திற்கான தொழில்நுட்பம் இதேபோன்ற முந்தைய பல போராட்ட கால எரிபொருள் தடைகளால் முழுமையாக்கப்பட்டிருந்தது. ஈருருளி இயந்திரத்தின் கார்புரேட்டருக்கு ஒரு சிறிய குழாய் தொடுக்கப்பட்டு அதன் மறுமுனை வெளியே தொங்கும். ஈருருளியுடன் மிகவும் அரிதான பெற்றோலை ஒரு சிறு குப்பியில் கொஞ்சம் கொண்டு திரிவார்கள். ஈருருளியைத் துவக்குதவற்கு இதில் ஒரு துளியை இக்குழாய்யூடாக விடுவார்கள். ஓட்டுனர் பின்னர் இக்குழாயூடாக ஆக்சிசின் அதிகம் கொடுப்பதற்காக ஊதுவார். ஈருருளி ஓடிக்கொண்டிருக்கும்போதும் அடிக்கடி இக்குழாயூடாக ஓட்டுனர் ஊதிக்கொண்டே இருப்பார். அவர்களின் சுவாசப்பையில் எத்தகைய பாதிப்பை இது ஏற்படுத்தியிருக்கும்?

இவ்வாண்டில் குண்டுத் தாக்குதல்களில் பொதுமக்கள் கொல்லப்படுவது சாதாரண நிகழ்வாகிவிட்டது. 2007ம் ஆண்டு பிறந்தவுடனேயே, ஒப்பந்த காலத்திற்குள் வன்னியில் பொது

மக்களின் மீது நடத்தப்பட்ட இரண்டாவது பெரியதாக்குதல் அது. படகுத்துறை என்ற ஒரு சிறிய கிராமத்தின் மேல் போடப்பட்ட குண்டுத் தாக்குதலில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஐந்து குழந்தைகள் உட்பட்ட பதினைந்து பேர் கொல்லப்பட்டார்கள். தாக்குதலிலிருந்து தப்பிய இக்குடும்பத்து உறுப்பினர்களை நான் நேரே சந்தித்து அதன் அடிப்படையில் ''கிபிர் உணவு''[20] என்ற ஒரு ஆவணப்படத்தைத் தயாரிக்க உதவி செய்தேன். இத்தாக்குதலைத் தொடர்ந்து லங்காவில் விடுதலைப்புலிகள் மேல் சுமத்தப்பட்ட பொதுமக்கள் மீதான தாக்குதல்கள் இரண்டு நடந்தன. நித்தம்புவ, பெரியல என்னும் இடங்களில் இடம்பெற்ற அத்தாக்குதல்களில் 22 பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். லங்கா ராணுவத்தால் இயக்கப்பட்ட துணைக்குழுக்கள் தமிழீழத்தில் நடத்திய கொலைகள் – காணாமற்போதல்கள் ஆகியனவற்றால் இவ்வாண்டு நனைந்து தோய்ந்தது. ஆயிரத்திற்கும் மேற்பட்ட இவ்வகை நிகழ்வுகளைச் சமாதானச் செயலகத்தில் நாங்கள் பதிவு செய்தோம்.

லங்காவிலும், தமிழீழத்திலும் இடம்பெற்ற படுகொலைகளை உன்னிப்புடன் அவதானித்து வந்த எமக்கு இவற்றைச் சர்வதேச ஊடகங்கள் வெளியிட்ட முறையில் காணப்பட்ட ஒவ்வாமை தெட்டத்தெளிவாகத் தெரிந்தது. இதற்கு மாற்றாகத்தான் விடுதலைப்புலிகள் ஒரு மனித உரிமைப் பேச்சாளரை 2007ம் ஆண்டு நியமித்தார்கள். ஆனால் இதனால் செய்திகளில் காணப்பட்ட ஒவ்வாமையில் மாற்றங்கள் ஏற்படவில்லை. இந்த ஒவ்வாமையைச் சொம்ஸ்கி–கேர்மன் மொழிந்த பிரச்சார உருப்படிவதின்[21] வடிகட்டிகள் ஊடாக விளங்கிக்கொள்ள முற்படுவது உபயோகமானது. ஊடக உடைமை, விளம்பரதாரரின் செல்வாக்கு மற்றும் செய்தி மூலம் ஆகிய மூன்றும் இவர்களின் உருப்படிவத்தில் மொழியப்பட்ட முக்கியமான வடிகட்டிகள். லங்காவிலும் தமிழீழத்திலும் இடம்பெற்ற பாரிய நிகழ்வுகளின் செய்தியாக்கத்தில் காணப்பட்ட ஒவ்வாமையை உற்றுப் படிக்கும்போது மேற்சொன்ன உருப்படிவத்தின் செய்தி மூலமெனும் வடிகட்டியின் சில தமிழீழ மட்டப் பரிமாணங்களை எம்மால் காணமுடிந்தது. செய்திகள் தமிழீழத்திலிருந்து வெளிவரு முன்பே பல வடிகட்டிகளைத் தாண்டி வரவேண்டி இருந்தது. இவ்வடிகட்டிகளும் பல செய்திகளை வடிகட்டிய பின்னரே தமிழீழத்திலிருந்து அருமையாகச் சில செய்திகள் வெளிவந்தன. இவையே பின்னர் சொம்ஸ்கி–கேர்மன் வடிகட்டிகள் ஊடாக மேலும் வடிகட்டப்பட்டுப் பொதுமக்கள் பாதிப்புகளைப் பற்றிய இரு பகுதிச் செய்திகளிலும் நம்பமுடியாத அளவிற்கு ஒவ்வாமையை உண்டாக்கின. நாம் தமிழீழத்தில்

அவதானித்த வடிகட்டிகளை, பீதி, வளங்கள், ஈர்ப்பு–மையம் ஆகிய மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

இக்காலத்தில் தமிழீழப் பகுதிகளில் லங்கா ராணுவத்தின் பாதுகாப்பில் கொலைக்குழுக்கள் சுதந்திரமாக இயங்கின. ஊடகவியலாளர்கள் மேலும் ஊடக மையங்கள் மேலும் பல தாக்குதல்கள் இடம்பெற்றன. இதனால் செய்திகளை உள்ளபடி சொல்வதற்குப் பொதுமக்கள் உட்பட எல்லோருமே தயங்கினர். இதையே பீதி–வடிகட்டி என்று குறிப்பிட்டேன்.

நான் குறிப்பிட்ட இரண்டாவது வடிகட்டி வளங்கள். எவ்வளவு செய்திகள், வெளி ஊடகங்களால் விரும்பப்படும் வகையில் வெளியில் கிடைக்கின்றன என்பது அப்பகுதியில் கிடைக்கும் வளங்களிலும் தங்கியிருக்கிறது. ஆங்கில அறிவு, எரிபொருள் – மின்சாரம், கணனியறிவு, தொடர்பாடல் வசதிகள் என்பன தேவையான வளங்களில் முக்கியமானவை. இருபகுதிகளிலும் இவ்வளங்கள் கிடைப்பதில் பாரிய வித்தியாசம் இருந்தது என்பது நிச்சயம். லங்கா அரசு வன்னிப்பகுதிகளுக்கு மேல் போட்டிருந்த தடையாணை அங்கு கிடைக்கும் வளங்களை மேலும் குறைத்தது.

நான் குறிப்பிட்ட மூன்றாவது வடிகட்டி ஈர்ப்பு–மையம். இலங்கைத் தீவில், குறிப்பாகத் தமிழீழத்தில் மட்டுமே இயங்கிய சர்வதே அமைப்புக்களின், தலைமைச் செயலகங்கள் எல்லாம் கொழும்பிலேயே அமைக்கப்பட்டிருந்தன. இவற்றில் சில தமிழீழத்திலும் பிரதிநிதிகளை அமர்த்தியிருந்தாலும் இவற்றின் தலைமைச்செயலகங்களே முடிவெடுக்கும் அதிகாரத்தைக் கொண்டிருந்தன. இதனால் இவ்வமைப்புக்கள் லங்கா அரச தரப்பினருடன் கூடிய தொடர்புகளைக் பேணக்கூடியதாக லங்கா அரசின் செல்வாக்குக்கு உட்பட்டவையாக இயங்கின. இதையும்விட தாக்குதல்கள் இடம்பெற்ற இடங்களுக்கு ஊடகவியலாளர்கள் செல்வதையும் லங்கா அரசு கடுமையாகக் கட்டுப்படுத்தியது. இவையும் செய்திகள் லங்கா அரசுக்குச் சார்பாக வருவதற்கு பெரிதும் துணைபோயின.

2007ம் ஆண்டுக்கு முன்வரை உள்ளூரில் எரிபொருள் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட மின்சாரம் சமாதானச் செயலகத்திற்குக் பகல் முழுவதும் கிடைத்தது. எரிபொருள் தடைக்குப் பின் பகலில் சில மணி நேரங்களே மின்சாரம் கொடுக்கப்பட்டதால் பல மணித்தியாலங்கள் நாம் மின்சாரம் இல்லாமல் வேலை செய்ய வேண்டிய சூழல் உண்டாயிற்று. இக்காலத்தில் கட்டாய ஆட்சேர்ப்பு மூலம் இணைக்கப்பட்ட சில புதிய போராளிகளுக்கு ஆங்கிலம் சொல்லிக் கொடுத்தது மகிழ்வான ஒரு மாற்றமாகவிருந்தது. புதிதாக

இணைக்கப்பட்டவர்களில் கல்வித் தேர்ச்சியுள்ள சிலரைத் தேர்ந்தெடுத்து இவ்வகுப்புக்கள் அரசியல்துறையின் கீழ் நடத்தப்பட்டன. இவர்களின் கல்வியில் தமிழ்ச்செல்வனே தனி அக்கறை எடுத்து இவர்களுக்குச் சிறப்பான கல்விக்கான வசதிகளைச் செய்து கொடுத்தார். வழக்கம்போல இவ்வகுப்புக்களும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெவ்வேறாக ஆனால் ஒன்றிணைக்கப்பட்ட முறையில் நடத்தப்பட்டது. இவ்வகுப்புக்களின் முக்கிய நோக்கம் ஆங்கில மொழி படிப்பதாகவே இருந்தது. பலரும் அவர்களுக்கு வகுப்புக்கள் எடுத்தாலும் ஆசிரியர்களுக்குள் அதிக கலந்துரையாடல்கள் தேவைப்படாமல் தமிழ்ச்செல்வனுக்கு நெருக்கமான குழுவின் உறுப்பினர் ஒருவரால் இக்கல்வி திறம்பட ஒருங்கிணைக்கப்பட்டது. என்னுடைய வகுப்பில் ஆங்கிலத்துடன் மனிதம் பற்றிய எனது மாற்றுக் கருத்துக்களையும் சேர்த்தேன். மாணவர்களுக்கும் எனக்கும் இவ்வகுப்புக்கள் மிகவும் திருப்தி தருவதாக இருந்தன. இவ்வகுப்புக்களில் இருந்த இளையோரிடம் அவர்கள் கட்டாய ஆட்சேர்ப்பில் இணைக்கப்பட்டவர்கள் என்பதால் ஏற்படக்கூடிய தயக்கங்கள் எதையும் என்னால் காணமுடியவில்லை. அவர்கள் விடுதலைப்புலிகளின் நோக்கத்திற்கு அர்ப்பணிப்பு உள்ளவர்களாவே தோன்றினர். பல விடயங்களைப் பற்றிச் சுதந்திரமாக கலந்துரையாடினார்கள். திறமையும் அர்ப்பணிப்பும் கொண்ட இத்தகைய இளையோர்களிடம் பாசம் வைக்காமல் இருப்பது கடினம். இவர்கள் எல்லோருமே பின்னர் களத்துக்கு அனுப்பப்பட்டு பலர் களத்தில் இறந்தார்கள்.

சமாதானச் செயலகத்திற்குக் குண்டுகள் போடப்பட மாட்டாது என்று தமிழ்ச்செல்வன் நம்பிக்கையுடன் சொல்வார். இருப்பினும் சமாதானச் செயலகக் காணியில் சீமெந்தினால் (Cement) ஒரு சிறிய பதுங்குமிடம் கட்டப்பட்டது. ஆனால் நாம் அங்கு பாதுகாப்புத் தேடியது மிகக்குறைவு. மாறாக அருகேயிருந்த விளையாட்டு மைதானத்திற்கு மத்தியில் நின்றுகொண்டு குண்டு விமானங்கள் குண்டுவீச்சுக்காகக் குத்தியிறங்குவதைப் பார்த்தபடி நிற்போம்.

தமிழ்ச்செல்வனின் தங்குமிடத்திற்கு 2007ம் ஆண்டு நவம்பர் 2ம் திகதி குண்டுகள் போடப்பட்டதே அதுவரை நான் நின்ற இடத்திற்கு மிக அருகாமையில் குண்டு விழுந்த சம்பவம். காலம் போக இன்னும் மிக மிக அருகாமையில் குண்டுகள் விழுந்து மயிரிழையில் தப்பிய நேரங்கள் பல வந்து போயின. தமிழ்ச்செல்வனின் இருப்பிடம் மீதான தாக்குதல் நான் தங்கியிருந்த இடத்திற்கு ஒரு மீட்டருக்கும் குறைவான தூரத்திலேயே நடந்தது. அவரின் கொலை அறிவிக்கப்படும் முன்னரே

மக்கள் அச்செய்தியை அழுதுகொண்டே பகிர்ந்துகொண்டார்கள். செய்தி அறிவிக்கப்பட்டதும் வன்னியைப் பனிமூட்டம் கவ்வி அமுக்குவது போல் சோகம் கவ்விக்கொண்டது. அவரின் கொலை மக்களின் இதயத்தில் மிக ஆழமாகச் சென்று குத்தியது. இதை மிகவும் தெளிவாக அவரின் இறுதி நிகழ்வின்போது காணமுடிந்தது. அவரின் வித்துடல் ஏ–9 வீதியிலிருந்த கலாச்சார மண்டபத்தில் இறுதி நிகழ்வுக்காக வைக்கப்பட்டிருந்தது. இது நான் தங்கியிருந்த பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் விடுதிக்கு அருகிலேயே இருந்தது. கலாச்சார மண்டபத்தின் சுற்றாடல்கள் வீதிகள் எங்கும் இறுதி நிகழ்வுக்காக மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. எனது அறையிலிருந்தபடியே அங்கு நடந்த உரைகளை என்னால் கேட்க முடிந்தது. அப்போது லங்கா ராணுவத்தின் குண்டுவீச்சு விமானங்கள் குண்டுகள் போடுவதுபோலத் தாழப்பறந்தன. அவை கீழ்நோக்கிக் குத்தும்போது கேட்கும் சத்தமே வழமையாக மக்களிடம் பெரும் பீதியை உண்டாக்கும். எல்லோரும் பதுங்குகுழிகளை நோக்கி ''கிபிர் கிபிர்'' என்று கூச்சலிட்டுக்கொண்டு ஓடுவார்கள். அன்று மட்டும் ஒருவர் கூட அக்கூட்டத்திலிருந்து அசையவில்லை. மக்களின் உணர்வை மிகப்பலமாகவே அன்று காணமுடிந்தது. இந்த மனிதர்தான் கட்டாய ஆட்சேர்ப்பை நடைமுறைப்படுத்தி மக்களின் ஆத்திரத்தைச் சம்பாதித்துக்கொண்டவர். தனது உயிரைக் கொடுத்து அக்கோபத்தை எல்லாம் கழுவிவிட்டார் போல இருந்தது மக்களின் அன்றைய செயல்.

தமிழ்ச்செல்வனின் கொலைக்கு முன்னரே பலர் அவருக்கு வரவிருந்த ஆபத்தைப்பற்றி முன்னெச்சரிக்கை செய்தார்கள். அவருக்கான ஒரு புதிய இடமும் தயாராக இருந்தது. தமிழ்ச்செல்வன்தான் இடமாற்றத்தை விரும்பாமல் காலத்தை இழுத்தடித்தார். இதற்கு முக்கியமான காரணம் சர்வதேச ஆதரவுடன் நடைமுறைப்படுத்தப்பட்ட ஒரு ஒப்பந்தத்தின் மையமான அவரையும் அவரது இடத்தையும் தாக்கமாட்டார்கள் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது.

தமிழ்ச்செல்வனின் புத்திக்கூர்மையும், அர்ப்பணிப்பும், தலைமைத்துவ பண்பும் அபூர்வமானவை. கூட்டங்களை அவர் நடத்தும் முறை அழகானது. பல தரப்பினர்களைக் கொண்ட கூட்டங்களை அவர் அடிக்கடி கூட்டினார். உறுப்பினர்கள், சர்வதேச அமைப்புகளின் வெளிநாட்டுப் பணியாளர்கள், சமயத் தலைவர்கள், லங்கா அரச பணியாளர்கள் எனப் பலரும் அவர் கூட்டங்களில் இருப்பார்கள். அக்கூட்டங்களில் கருத்து வேற்றுமைகள் கூர்மையாக இருக்கும்போதும் அவர் இக் கூட்டங்களை நல்லிணக்கத்தோடு

சிறப்பாக நடத்தினார். அவரின் விரிந்த செயற்பாட்டில் அரசியல்துறையின் கீழியங்கிய ஒரு பெரிய அமைப்பையே அவர் அற்புதமாக நடத்தினார். தன்னோடு வேலை செய்பவர்களைச் சுற்றி அவருக்கே உரித்தான ஒரு ஆதரவான சூழலை அவர் உருவாக்கினார். இச்சூழலில் பணியாற்றியவர்கள் மிகவும் மகிழ்வோடு குற்றம் குறைகள் சொல்லாமல் பணியாற்றினார்கள். அவர் உருவாக்கிய அச்சூழலில் எல்லோருமே மகிழ்வுடன் நீந்துவது போன்ற ஒரு தோற்றம் அங்கு இருந்தது. அதற்கான காரணம் புத்திக்கூர்மையும் திறமையும் மட்டுமல்ல. அவரின் தன்னலமற்ற சேவை மனப்பாங்கும் இதற்குக் காரணம். வெளியுலக ஊடகங்கள் அவரின் இறப்பைப் பற்றிய செய்திகளில் புன்னகையுடைய போராளி என்றும் நடைமுறைப் பிரதமர் என்றும் வர்ணித்தன. அவரைப் பற்றி இறப்பின் பின்னர் நான் எழுதிய கட்டுரையில் இவ்வாறு எழுதினேன்.

> *‘‘விடுதலைப்புலிகளின் உலகொட்டிய பார்வைபற்றி அவருடனான எனது உரையாடல்களிலிருந்து நான் கற்றுக் கொண்டேன். இது நேரடியாகச் சொன்னது அல்ல. ஆனால் அவர் சாவுக்குப் பயப்படவில்லை என்பது பரிபூரண உண்மை. பழைய விடுதலைப்புலி உறுப்பினர்கள் சாவுக்கு அஞ்சாதவர்கள் என்ற கருத்துக்கு அவரின் செயல்களூடாக நான் அர்த்தம் கண்டேன்....’’*

தமிழ்ச்செல்வனின் இழப்பு வன்னியில் ஆழமாக உணரப்பட்டது. சில உறுப்பினர்கள் அவரைப்பற்றி பேசும் போதெல்லாம் கண் கலங்குவார்கள். அவரின் கீழ் இயங்கிய நிறுவனங்கள் எல்லாம் அவரின் தலைமைத்துவம் இல்லாத குறையை நீண்ட காலமாக உணர்ந்தன. பிரச்சினைகள் எழும் போதெல்லாம் அவர் இருந்திருந்தால் எனும் தொனியில் பிரச்சினையை அலசுவார்கள். சமாதானச் செயலகத்தில் எனது வேலையிலும் அவரின் இழப்பு தாக்கங்களை ஏற்படுத்தியது.

அவரின் இறப்புக்கு மூன்று வாரங்களுக்குப் பின் 2007ம் ஆண்டு மாவீரர் நாள் வந்து சேர்ந்தது. மாவீரர் நாளின் உச்ச நிகழ்வான பிரபாகரனின் மாவீரர் நாள் உரையின் போதும் லங்கா ராணுவத்தின் குண்டுவிமானங்கள் வன்னியைச் சுற்றித் தாழப்பறந்து மக்களைப் பீதியடையச் செய்தன. அப்போது புலிகளின் குரல் வானொலியின் கட்டடத்தின் மேல் குண்டுகள் போடப்பட்டு அங்கு பணியாற்றிக் கொண்டிருந்த பொதுமக்களும் வீதியில் சென்றுகொண்டிருந்த பொது மக்களும் கொல்லப்பட்டார்கள். மாவீரர் நிகழ்வு பற்றிய செய்தியை இணையத்தில் போடுவதற்கு நாங்கள் சமாதானச் செயலகத்தில்

காத்திருந்தோம். குண்டுவிமானங்களின் ஆபத்தைக் கருதி நான் கண்காணிப்புக்குழுவின்இடத்தில்காத்திருக்கும்படிஅனுப்பப்பட்டேன்.

## 2008

இவ்வாண்டின் ஆரம்பத்திலேயே பேரளவில் இருந்த போர்நிறுத்த ஒப்பந்தத்தை லங்கா அரசு அதிகாரபூர்வமாக ரத்துச் செய்தது. இது பேரளவிலேயே அதுவரை இருந்தாலும் இதை ரத்துச் செய்ததால் கண்காணிப்புக்குழு தீவிலிருந்து வெளியேற்றப்பட்டது. வன்னியின் தொடர்ச்சியான தனிமைப்படுத்தலில் இதுவும் ஒரு மைல்கல். ஏற்கனவே கிளிநொச்சியில் பல குண்டுத்தாக்குதல்கள் நடந்துவிட்டிருந்தன. இப்போது சமாதானச் செயலகம் என்பதற்கே அர்த்தமின்றிப் போனதுடன் அது பாதுகாப்பான இடம் என்று கருதுவதற்கு எவ்வித காரணமும் இல்லாமல் போனது.

லங்கா அரசின் உள்ளூர் நிறுவனம் இடம்மாற்றப்பட்டு சமாதானச் செயலகத்தின் ஒரு பகுதி அதில் இயங்கத் தொடங்கியது. அவ்விடத்தை ரகசியமாக வைத்திருக்கவும் முயற்சிகள் எடுக்கப்பட்டது. நான் தங்கியிருந்த இடமும் பாதுகாப்பற்றது என்று கருதியதால் இப்புதிய சமாதானச் செயலகத்திலேயே தங்கி அங்கேயே வேலை செய்யவும் ஆரம்பித்தேன். இங்கு ஒரு சிலரே வேலை செய்ததால் பழைய சமாதானச் செயலகத்திற்கு வரும் பலருடனும் உரையாடும் சந்தர்ப்பம் எனக்கு இல்லாமல் போனது. உவகையற்ற இத்தனிமை எனக்கு அவசியமாகப்பட்டது. ஏனெனில் இதில் தங்கியிருந்ததால் குண்டுவிமானச் சத்தம் கேட்கும் போதெல்லாம் பதுங்கு குழிகளை நோக்கி ஓடவேண்டிய தேவை எனக்கிருக்கவில்லை. இம்மாற்றத்தின் காரணமாகப் புதிய அரசியல்துறைப் பொறுப்பாளர் நடேசனுடன் நான் அதிகம் தொடர்பாடல்கள் பேண முடியவில்லை. நடேசனும் 18 வயதிற்குக் குறைந்தோரை அமைப்பில் இணைப்பதில்லை என்ற கொள்கையை கடைப்பிடித்தாலும், தமிழ்ச்செல்வனிடமிருந்த கொள்கை உறுதியை நான் இவரிடம் காணவில்லை. தமிழ்ச்செல்வனின் இறப்புக்குப் பின்னர் சிறுவர் போராளிகள் இணைப்பை நிறுத்தும் திட்டத்தின் முன்னேற்றம் எனக்கு ஏமாற்றத்தைத் தந்தது.

இப்போது தொடர் குண்டுவிமானத் தாக்குதல்களும் கிளைமோர் தாக்குதல்களும் எமது வாழ்க்கையின் ஓரம்சமாகவே மாறியிருந்தது. எரிபொருள் தடையால் இவற்றை வெளிக்கொண்டு வரமுடியாமல் திணறினோம். இத்தாக்குதல்கள் இரண்டைப்பற்றிய ஆவணப்படங்களை நாங்கள் தயாரித்து வெளியிட்டோம். இதில்

ஒன்று மடுத்தேவாலயத்திற்கு அருகில் ஜனவரி 2008ம் ஆண்டில் இடம்பெற்ற பாடசாலைச் சிறுவர்கள் பலர் கொல்லப்பட்ட கிளைமோர் தாக்குதல் பற்றியது. சிறுவர்களின் உடலை அகற்றியோர் ''மடு அம்மா மடு அம்மா'' என்று கதறிக் கதறி உடல்களை அகற்றியதால் இவ் ஆவணப்படத்திற்கு ''மடு அம்மா''[22] என்று பெயரிட்டோம். மற்றைய ஆவணப்படம் கிராஞ்சி என்ற கிராமத்தில் நடத்தப்பட்ட தாக்குதல் பற்றியது. அங்கே முதல் குண்டு வீச்சில் கொல்லப்பட்டவர்களின் உடலை மக்கள் அகற்றிக் கொண்டிருந்தபோது குண்டுவிமானம் மீண்டும் வந்து குண்டுகள் போட்டது. நாம் தயாரித்த படத்திற்கும் (Bomber) ''பொம்மர் திரும்பியது''[23] என்றே பெயரிட்டோம். வன்னியில் ஒரு குண்டு தாக்குதலில் கொல்லப்பட்ட காயப்பட்ட மக்களின் உடல்களை அகற்றிக்கொண்டிருக்கும்போது குண்டுவிமானங்கள் மீண்டும் அதே இடத்தில் குண்டுகள் போடுவது அடிக்கடி நிகழ்ந்தது.

வன்னியிலிருந்து வெளியேறுவது பற்றி இக்காலத்தில் நான் தீவிரமாக யோசித்தேன். லங்கா ராணுவத்தின் சோதனைச் சாவடிகளைத் தாண்ட வேணும் என்ற பயத்தையும் மீறி என்னால் வெளியேற முடியவில்லை. ஏற்கனவே புலத்துத் தமிழர் ஒருவர் லங்கா ராணுவத்தின் சோதனைச் சாவடியில் காணாமற் போயுள்ளார் என்ற செய்தியும் அக்காலத்தில் வந்திருந்தது. இச்சூழலிலேயே ஏப்பிரல் 2008ல் நிசோரின் தலைவர் கிளிபாதர் கிளைமோர் தாக்குதலில் கொல்லப்பட்டார் என்ற அதிர்ச்சியான செய்தி வந்து சேர்ந்தது. இவ்வதிர்ச்சியிலிருந்து மீளும் முன்னரே அவரின் பணியை ஏற்கும்படி என்னைக் கேட்கப் போகிறார்கள் என்பதை ஊகித்தேன். மே 2006க்குப் பின்னர் நான் நிசோர் வேலைகளில் நேரடியாக ஈடுபடவில்லை. நான் ஊகித்தபடியே புலித்தேவன் என்னை நிசோரின் தலைமைப்பதவியை ஏற்கும்படி கேட்டார். இலங்கைத் தீவின் குடியுரிமை எனக்கில்லாததால் இதை ஏற்பது சரியல்ல என்ற காரணத்தால் இதை நான் அதிகாரபூர்வமாக ஏற்கவில்லை.

இக்காலத்திலிருந்து கிளிநொச்சி இடப்பெயர்வு வரையும் வன்னியில் மனித உரிமை நிலை பற்றிய பல நிசோர் அறிக்கைகளை எழுதுவதிலே காலம் துரிதமாகப் போனது. நிசோரின் ஒருங்கிணைப்பாளர் ரமணனனும் அக்காலத்தில் நிசோர் அறிக்கைகளுக்குத் தரவுகள் சேகரிப்பதற்காகக் கடுமையாக உழைத்தார். இப்போது லங்கா ராணுவத்தின் தடைகளால் ஏற்படுத்தப்பட்ட உணவுத் தட்டுப்பாடு, மருந்துத் தட்டுப்பாடுகள் போன்றவை வன்னியை கடுமையாகப் பாதித்தன. இவைபற்றியும் நிசோர் பல அறிக்கைகளை வெளியிட்டது. வன்னி விவசாய நிலமாதலால் இங்கு மக்கள் பட்டினியால் வாடமாட்டார்கள் என்ற

நம்பிக்கையைப் பலர் வெளியிட்டார்கள். மக்கள் விவசாய நிலங்களிலிருந்தும் வெளியேறத் தொடங்கிய பின்னர் இந்நம்பிக்கையும் தளர்வடைந்தது.

பால்மா பற்றாக்குறையும் வன்னியை அதிகம் பாதித்தது. ஏனெனில் தமது பால் தேவைகளுக்கு அதிகமானோர் பால்மாவினையே நம்பியிருந்தார்கள். வன்னியில் எல்லா நிறுவனங்களிலும் தேநீருடன் பால்மா கலந்தே கொடுக்கும் வழக்கம் இருந்தது. இப்போது பாலில்லாமல் வெறும் தேநீரே நிறுவனங்களில் அனைவரும் அருந்தினார்கள். மருந்துகளும் கடைகளில் இல்லாமல் போனது. நான் உட்பட எனக்குத் தெரிந்த ஆஸ்துமா நோயுள்ளவர்கள் பலர் இதற்கான பம்ப் மருந்தில்லாமல் துன்புற்றோம்.

இப்போது எனக்குத் தெரிந்த பல விடுதலைப்புலி உறுப்பினர்கள் களத்தில் காயப்படுவதும் வீரமரணம் அடைந்து வருவதும் அடிக்கடி நிகழத்தொடங்கியது. எனக்கு நன்றாகத் தெரிந்த வசந்தி என்ற ஒரு பெண் போராளியின் இறப்பு என்னை மிகவும் பாதித்தது. வேறு போக்குவரத்து வசதியில்லாத என்னை இவர் அடிக்கடி தன் ஈருருளியில் ஏற்றி அழைத்துச் செல்வார். அவரின் வீரமரணத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னர்தான் களத்தில் நின்று அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். சில வருடங்களுக்கு முன்னர் பொது மகனான தனது அண்ணன் லங்கா ராணுவத்தால் கொலை செய்யப்பட்டதைப் பழிவாங்குவதற்காக மட்டக்களப்பைச் சேர்ந்த வசந்தி விடுதலைப்புலிகள் அமைப்பில் சேர்ந்தார். சக போராளியான தபேதனை விரும்பி இருவரும் திருமணம் செய்வதற்கு அனுமதி பெற்றிருந்தார்கள். இவரின் வீரமரணத்திற்குச் சில வாரங்களின் பின்னர் தபேதனும் களத்தில் வீரமரணம் அடைந்தார். அடுத்தடுத்து வரும் இத்தகைய இழப்புக்களை மனிதர் எவ்வாறு தாங்குகிறார்கள்? ஒரு தனி இழப்பின்போது நாம் துயரம் அனுஷ்டிக்கிறோம். அப்போது புண் ஆறி தளும்பு ஏற்படுவது போல் மனமும் ஆறுகிறது. அதே இடத்தில் மீண்டும் மீண்டும் புண் ஏற்பட்டால் தோல் தடித்து நிரந்தரமாகத் தடித்த தோலாகி விடுகிறது. எனக்குத் தெரிந்த பலரின் சாவு நிகழ்வுகளுக்கு அடிக்கடி சென்று வந்தபோது இதயமும் துன்பத்தைத் தாக்குவதற்காக இவ்வாறு தடித்துவிடுகிறதோ என்று தோன்றியது.

பல மாவீரர்களின் இறுதி நிகழ்வுகளுக்குச் சென்றேன். மாவீரருக்குத் தெரிந்த ஒவ்வொருவரும் தமது இறுதி வணக்கத்தைச் செலுத்துவதற்கு இசைவாக இத்தகைய ஒவ்வொரு நிகழ்வும் நாட்கணக்கில் நீண்ட நிகழ்வுகளாக இருக்கும். முதலில் மாவீரரின் வித்துடல் பதனப்படுத்தப்படும். அதன் நோக்கம் நிகழ்வுகள்

இடம்பெறும் அச்சில நாட்களுக்குள் அவ்வித்துடல் கெட்டுப்போகாமற் பாதுகாப்பதே. வித்துடல் முதலில் அவரின் குடும்பத்தின் வீட்டில் வைக்கப்படும். இருபோராளிகள் வித்துடலின் இருமருங்கும் காவலுக்கு நிற்பார்கள். பலர் இறுதிவணக்கம் செலுத்த வந்து போவார்கள் ஆதலால் வீட்டைச்சுற்றி தகரக் கொட்டைகைகளும் போடப்படும். வித்துடலின் இறுதிப் பிரயாணத்தின் போது அது ஒரு பொதுமண்டபத்தில் வைக்கப்படும். இங்கே வீரமரணம் அடைந்த அம்மாவீரரைப்பற்றி அவருக்குத் தெரிந்தவர்கள் உரையாற்றுவார்கள். முடிவில் வித்துடல் அதன் இறுதி இடமான துயிலுமில்லத்தை நோக்கிய பயணத்தை ஆரம்பிக்கும். வழி நெடுகிலும் மக்களின் மலரஞ்சலி. துயிலும் இல்லத்தை அடைந்ததும் அங்கும் ஒரு நீண்ட நிகழ்வு. முதலில் எல்லோராலும் மலர் அஞ்சலி. துயிலும் இல்லங்களின் மத்தியில் ஒரு பெரிய அரங்கம் உண்டு. பின்னர் வித்துடல் அங்கு வைக்கப்பட்டுச் சுற்றி ஏறக்குறைய முப்பது போராளிகள் சீருடையுடனும் துப்பாக்கியுடனும் நிற்பார்கள். இங்கே ஒரு மாவீரர் கீதம் இசைக்கப்பட்டுத் தொடர்ந்து போராளிகள் ஒன்றாக வித்துடல் மேல் சபதம் எடுப்பார்கள். இதுவே மாவீரருக்கான இறுதி அஞ்சலி. இந்நிகழ்வின்போது உறவினரும் நண்பர்களும் சுற்றி நின்று ஓலமிட்டு அழுவார்கள். பின்னர் அம்மாவீரருக்காக ஒதுக்கப்பட்ட புதைகுழியில் வித்துடல் இறக்கப்படும். அது மூடப்படும் முன் எல்லோரும் அக்குழியில் மண் போடுவார்கள். இறுதியில் களைத்துச் சோர்ந்திருக்கும் எல்லோருக்கும் மரநிழல்களின் கீழே இருந்து அருந்துவதற்கு ஏதாவது கொடுக்கப்படும். விடுதலைப்புலிகளின் கொடியினால் சுற்றிய அம்மாவீரரின் சட்டம் போட்ட படம் ஒன்று நெருங்கிய ஒரு உறவினரிடம் கொடுக்கப்பட்டு அவர்கள் துயிலும் இல்லத்திலிருந்து வீட்டுக்கு அனுப்பிவைக்கப்படுவார்கள். இந்நீண்ட சோர்வு தரும் நிகழ்வு துயரம் போக்குவதற்கு மருந்தாகவும் அமைந்திருந்தது. துயிலும் இல்லத்திலிருந்து கிளம்பும்போது மாவீரர் அங்கு துயில்கிறார் என்ற உணர்வு ஏற்படும்.

பல வகைகளில் துன்பங்களால் சூழப்பட்ட காலகட்டமான செப்டம்பர் 2008ல் லங்கா அரசு சர்வதேச நிறுவனங்களை வன்னியிலிருந்து வெளியேறுமாறு உத்தரவு போட்டது. அது வரப்போகும் இனக்கொலையின் முன்னோடி என்று வன்னியில் பலர் அப்போது சொன்னார்கள். யூனிசெப் கிளிநொச்சி பிரதிநிதியை அப்போது சந்தித்துச் சிறுவர் விடுவிப்புத் திட்டம் முழுமை பெற முன்னர் அவர்கள் வெளியேறுகிறார்கள் என்ற கவலையை வெளியிட்டேன். அப்போதிருந்த தம் கரிசனைகளில் அது ஒரு பெரிய விடயமல்ல என்ற வார்த்தைகள் அவரையறியாமலேயே அவர்

வாயிலிருந்து வந்தது. யுஎன்எச்சிஆர் பிரதிநிதியையும் நிசோர் அலுவலகத்தில் வைத்து சந்தித்தோம். தாங்கள் மூன்று மாதத்தில் திரும்பி வருவோம் என்று அவரும் உறுதியாகச் சொன்னார். நானும் எனது அறியாமையில் இதை நம்பினேன். வன்னி மக்கள் கூட்டம் இவர்களின் அலுவலகம் முன் வன்னியை விட்டுப் போகவேண்டாம் என்று ஆர்ப்பாட்டம் போட்டார்கள். இதனால் ஐநாவின் வெளியேறல் ஒருநாள் பிந்திப்போடப்பட்டது. இத்துடன் வன்னியிலிருந்து ஐசிஆர்சி தவிர்த்த ஏனைய சர்வதேச நிறுவனங்கள் எல்லாம் வெளியேறின. லங்கா அரசு ஐசிஆர்சி ஐயும் வெளியேறுமாறு உத்தரவு போட்டது. ஆனால் ஐசிஆர்சி உறுதியாக வெளியேற மறுத்தது. இதனாலோ என்னவோ கிளிநொச்சியை விட்டு இடம்பெயர்ந்த பின்னர் 2009ம் ஆண்டு ஜனவரி – பெப்பிரவரி காலகட்டத்தில் இதன் இடத்தைக் குறிவைத்து எறிகணைத் தாக்குதல்கள் இடம்பெற்றன. இதனால் இதுவும் வெளியேற வேண்டி வந்தது.

ஐநா வெளியேறி இரண்டு மூன்று வாரங்களிலேயே நாம் கிளிநொச்சியிலிருந்து அக்டோபர் மாதம் தொடக்கத்திலேயே இடம் பெயர்ந்தோம். மக்களும் நிறுவனங்களும் கிளிநொச்சி இடப்பெயர்வை முழுமையாக நடத்திய முறை கவரக்கூடியதாக இருந்தது. 2002ம் ஆண்டுக்கும் 2006ம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் மக்கள் தம்மிடமிருந்த வளங்களையெல்லாம் வீடுகள் அலுவலகங்கள் என கட்டடங்களில் செலவு செய்தார்கள். இவற்றையெல்லாம் கைவிட்டுவிட்டு செல்ல அவர்கள் மனம் இடம்கொடுக்கவில்லை. கிளிநொச்சியில் ஒவ்வொருவரும் தமது இடங்களிலிருந்து கழற்றிகொண்டுபோகக் கூடியவற்றையெல்லாம், கூரைகள் உட்பட, கழற்றி ஏற்றினார்கள். இம்மாபெரும் வேலையில் கிளிநொச்சியிலுள்ள மனிதவளங்கள் முழுக்கச் செலவிடப்பட்டது. கிளிநொச்சி லங்கா ராணுவத்தின் கைகளில் விழுந்த பின்னர் லங்கா ராணுவம் சில ஊடகவியலாளர்களைக் கிளிநொச்சிக்கு அழைத்துச் சென்று தம் வெற்றியைப் பறைசாற்றியது. அங்கு வந்த ஊடகவியலாளர்களில் ஒருவர் ஒரு துண்டு பேப்பர்கூட கிளிநொச்சியில காணக்கிடைக்கவில்லை என்றும் இடம்பெயர்ந்த மக்கள் இதைக்கூட விட்டுப்போகவில்லை என்றும் தம் செய்தியில் எழுதினார்.

கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர்ந்த அதிகமானோர் தருமபுரம் என்னும் கிராமத்தில் தம் தற்காலிகக் கூடாரங்களை அமைத்தார்கள். கிளிநொச்சியிலிருந்து அதிக தூரம் இடம்பெயர அவர்களுக்கு மனமிருக்கவில்லை. விரைவில் கிளிநொச்சிக்குத் திரும்பலாம் என்பதே அவர்களின் எண்ணமாக இருந்தது. இதனால்

தருமபுரம் கிளிநொச்சியின் சிறு பிரதியாக மாறியது. தருமபுரம் வீதிகளில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. தீபாவளி வந்தபோது தருமபுரத்திலிருந்த கிளிநொச்சியின் தற்காலிகக் கடைகள் எல்லாம் பலவிதமான பொருட்களை மிகவும் மலிவாக விற்பனை செய்தது. உண்மையில் விற்பனையாளர்கள் தம் சரக்குகளை மேன்மேலும் நகர்த்திக்கொண்டுபோக விரும்பாததால் மலிவாக விற்பனை செய்து சரக்குகளை இறக்கி விட்டார்கள். தருமபுரம் வீதிகளில் இக்காலத்தில் செல்லும்போது, பெரும் அவலங்களுக்கு மத்தியில் போராடும் மக்களின் கூட்டுணர்வைக் கண்டுகொள்ள முடிந்தது.

நான் கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர்ந்து வள்ளிபுனத்திலிருந்த செந்தளிர் என்றழைக்கப்பட்ட பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையம் நடத்திய ஒரு சிறுவர் இல்லத்தில் ஐந்து மாதங்கள் தங்கியிருந்தேன். ஒரு மாதமாக உண்பதும் உறங்குவதும் தவிர வேறெதுவும் செய்ய முடியவில்லை. ரமணன் புதுக்குடியிருப்பில் நிசோருக்கான ஒரு அறை மட்டுமே கொண்ட இடத்தை ஒழுங்குபடுத்திச் சிறப்பாகத் தயார் செய்தார். சமாதானச் செயலகமும் வள்ளிபுனத்தில் நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகிலேயே கட்டி முழுமையாக்கப்படாத ஒரு வீட்டில் நிறுவப்பட்டது.

2008ம் ஆண்டு நவம்பர்–டிசம்பர் மாதங்களில் புதுக்குடியிருப்பிலிருந்த நிசோர் இடத்திலிருந்து வள்ளிபுனத்திலிருந்த சமாதானச் செயலக இணைய வசதிகளைக் கொண்டு எம்மால் முடிந்தளவு வன்னி நிலைமை பற்றிய அறிக்கைகளைக் குண்டுத் தாக்குதல்களுக்கு மத்தியில் வெளியிட்டோம். இக்கட்டத்தில் நான் எழுதிய ஒரு நிசோர் அறிக்கையில்[24] லங்கா ராணுவம் பொதுமக்கள் மேல் மேற்கொண்ட கொத்துக்குண்டுத் தாக்குதலைப் பற்றி விவரித்திருந்தேன். ஏனைய பல தமிழ் ஊடகங்களும் இச்செய்தியை வெளியிட்டன. கொத்துக் குண்டுகள் தடைசெய்யப்பட்ட ஒன்றாக இன்று சர்வதேச மட்டத்தில் கணிக்கப்படுகிறது. இருந்தும் வழமைபோலவே வேறெந்த சர்வதேச ஊடகங்களிலும் தடைசெய்யப்பட்ட கொத்துக்குண்டு தாக்குதல் பற்றிய இச்செய்தி அக்காலத்தில் வெளிவரவில்லை.

டிசம்பரில் நான் தங்கியிருந்த செந்தளிர் சிறுவர் இல்லத்தில் குண்டுத்தாக்குதல் உடனான எனது முதலாவது நேரடிச் சந்திப்பு ஏற்பட்டது. குண்டுவீச்சு விமானங்களின் சத்தம் அருகே அருகே வர நான் எனது அறையிலிருந்து சிறுவர்களால் நிறைந்திருந்த பதுங்குகுழியை நோக்கி நடந்தேன். என் பின்னால் சலசலவென்று குண்டுத் துண்டுகள் விழும் சத்தம் கேட்டது. பின்னர் செந்தளிர் வளாகத்திலிருந்து ஏராளமான சிறிய பெரிய குண்டுத் துண்டுகளைப்

பொறுக்கி எடுத்தோம். இத்துண்டுகளின் கரைகள் மிகவும் கூரானவை. விழுந்தவுடன் தொடமுடியாதளவுக்குச் சூடாக இருக்கும். இவை உடலில் பட்டாலே போதும். பட்ட இடத்தைப் பொறுத்து உயிர் அல்லது உடலில் ஒரு அங்கம் இழப்பு ஏற்படும்.

'குடும்பத்துக்கு ஒருவர் இணைப்பு' என்ற விடுதலைப்புலிகளின் திட்டம் ஏறக்குறைய முடிவுக்கு வந்தது. அதனால் ஏற்பட்ட அலைகள் அடங்கிக்கொண்டு வந்தது. ஆனால் களத்தில் இழப்புக்கள் அதிகமாக அவர்களுக்கு மனிதவளப் பற்றாக்குறை ஒரு பெரும் பிரச்சினையாக இருந்தது. ஆண் பொதுமக்கள் ஒருமாத கால ராணுவமல்லாத களப்பணிகள் செய்யும்படி நிர்பந்திக்கப்பட்டனர். களத்தில் நிற்போருக்கு உணவு தயாரித்தல், அகழி வெட்டல் போன்ற வேலைகள் அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது. உறுப்பினர்களாகச் சேர்ப்பதற்கான ஆட்சேர்ப்பு நடவடிக்கைகளின் தீவிரம் இப்போது இவ்வகையான ஆட்சேர்ப்பு நடவடிக்கைகளுக்குத் திருப்பப்பட்டது. இவ்வகையாகக் களத்திற்கு அனுப்பப்பட்டவர்கள் ஒரு மாதத்தில் தமது குடும்பங்களிடம் திரும்பினார்கள். சிலர் எறிகணைத்தாக்குதல்களில் களத்தில் இறந்தார்கள். களத்திற்குப் பணி செய்யும்படி பொதுமக்கள் நிர்ப்பந்திக்கப்பட்டதை மக்கள் அதிகம் விமர்சித்ததை நான் கேட்டவில்லை. அம்மாதிரியான களப்பணிகளைப் பொதுமக்கள் முந்தைய போர்க்காலங்களிலும் செய்திருக்கிறார்கள். களப்பணிக்காகக் கொண்டு செல்லப்பட்டவர்கள் அவர்களுக்குப் போதிய அவகாசம் கொடுக்காமல் வீதிகளிலிருந்து இழுத்துச் செல்லப்பட்டார்கள் என்பது பற்றியே சிலர் விமர்சித்ததைக் கேட்டிருக்கிறேன். களமுனையில் இவர்களில் சிலர் கொல்லப்பட்டதும் மக்களின் ஆத்திரத்திற்குக் காரணம். பொதுமக்களை ராணுவமல்லாத களப்பணிக்கு அனுப்பும் வேலையில் ஈடுபட்டிருந்த சில உறுப்பினர்களுடன் நான் கதைத்திருக்கிறேன். இவர்கள் இவ்வேலையை முறையாகவே செய்து பொதுமக்களைச் சம்மதிக்க வைத்தார்களே அல்லாமல் மக்கள் விமர்சித்தது போல பலவந்தமாக இழுத்துச் செல்லவில்லை. துரதிஷ்டவசமாக இவர்களிலும் சிலர் களத்தில் பணியில் ஈடுபட்டிருந்தபோது எறிகணைத் தாக்குதலால் கொல்லப்பட்டிருக்கிறார்கள்.

நவம்பர் 2008 மாவீரர் நாளைச் சிறப்பாக நடத்துவதற்குப் பெரு முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஆனால் பொதுமக்களிடையே இதற்கான உற்சாகம் காணப்படவில்லை. இருப்பினும் மாவீரர்களின் குடும்பங்களிடையே மாவீரர் நாளன்று துயிலும் இல்லம் போக வேண்டும் என்ற உணர்வு அன்றும் ஆழமாக இருந்ததை நான்

கண்டேன். அன்றைய மாவீரர் நாளில் கடும் மழையால் வீதிகள் எல்லாம் பேருந்துகள் போகமுடியாத அளவிற்கு வெள்ளம் ஓடியது. குடும்பங்கள் வெள்ளத்தினூடாக வெகுதூரம் நடந்து துயிலும் இல்லங்களுக்குப் போனார்கள்.

டிசம்பர் 2008 கிறிஸ்துமஸ் நாளுக்காக ஒரு தேவாலயத்தின் முன் அமைக்கப்பட்டிருந்த ஒரு காட்சியமைப்பைக் கண்டோம். மக்களுக்கு நம்பிக்கை ஊட்டும் எண்ணத்துடன் இது அமைக்கப்பட்டிருந்தது. பைபிளிலிருந்தும் அதில் சில வாசகங்கள் போடப்பட்டிருந்தன. அதன் படத்தைச் சமாதானச் செயலக இணையத்தில் போட்டுச் சில வாசகங்களையும் சேர்த்தோம். அதிலிருந்த ஒரு பைபிள் வாசகம் கீழே:

> ''நீங்கள் அழுவீர்கள். புலம்புவீர்கள். அப்போது உலகம் மகிழும். நீங்கள் துயருறுவீர்கள். ஆனால் உங்கள் துயரம் மகிழ்ச்சியாக மாறும்.''

## 2009

ஜனவரி 2009 பிறந்தபோது புதுகுடியிருப்பிலிருந்த நிசோரிலும் வள்ளிபுனத்திலிருந்த சமாதானச் செயலகத்திலும் வேலை செய்யும் வசதிகள் ஓரளவு சீராகி வந்தன. இம்மாதத்திலேயே வள்ளிபுனத்திலிருந்த சமாதானச் செயலகத்தில் பதுங்கு குழி அமைக்கப்பட்டது. வன்னியில் மக்கள் மிக நெருக்கமாக இருந்த இடமான தர்மபுரம் மீது ஜனவரி 2009ல் எறிகணைத் தாக்குதல்கள் இடம்பெற்றதைத் தொடர்ந்து மக்கள் அங்கிருந்து இடம்பெயர்ந்து கொண்டிருந்தார்கள். இதனால் வள்ளிபுனம் பிரதான வீதியில் பெருங்குழப்பம். அப்போதும் நான் கொக்கிளாய், கொக்குத்தொடுவாய், கருநாட்டுக்கேணி ஆகிய மூன்று கிராமங்களிலிருந்து 1990களில் மக்கள் வெளியேற்றப்பட்டதைப் பற்றிய அறிக்கை தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தேன். அச்சூழலிலும் இவ்வேலை எனக்குத் திருப்தியைத் தந்தது.

ஜனவரியில் லங்கா அரசு அதன் முதலாவது ''பாதுகாப்பு வலையத்தை'' அறிவித்தது. நான் தங்கியிருந்த செந்தளிர் இல்லம் அதன் எல்லையோடு இருந்தது. செந்தளிரும் பாதுகாப்பு வலையத்திற்குள் வருகிறதா இல்லையா என்பது பற்றிய உரையாடல்கள் அப்போது செந்தளிரில் இடம்பெற்றது. இதுபற்றி எனக்கும் ஆர்வம் இருந்தது. நானும் அவ்வுரையாடல்களில் பங்கு பற்றினேன். இதைக் கேட்டுகொண்டிருந்த பெண் போராளி ஒருவர் ''பாதுகாப்பு வலையம்'' என்பது ஒரு பொய்யான பரப்புரை என்று

சர்வசாதாரணமாக எமக்குச் சொன்னார். எனக்கு அப்போது குழப்பமாக இருந்தது. இப்போது தெரிகிறது பாதுகாப்பு வலையம் என்பதை அவர் எவ்வளவு துல்லியமாகக் கணித்திருக்கிறார் என்பது.

ஜனவரி 22ம் திகதி, நான் வள்ளிபுனத்திலிருந்த சமாதானச் செயலகத்திலிருந்தேன். எறிகணைத் தாக்குதல் மிக மோசமாக ஆரம்பித்தது. அப்போதுதான் கட்டி முடிக்கப்பட்ட பதுங்கு குழிக்குள் நாங்கள் எல்லாம் நெரிசலாகக் கிடந்தோம். எறிகணைகள் வெடிக்கும் சத்தம் காதைப் பிளந்தது. மிக நெருக்கமாக இருந்த எம்மால் அருகிலிருந்தவர் பேசுவதைக்கூடக் கேட்கமுடியவில்லை. வள்ளிபுனம் பாடசாலை வளாகத்தில் நிறுவியிருந்த முல்லைத்தீவு வைத்தியசாலையின் ஒரு கிளைக்குக் காயப்பட்டவர்கள் இறந்தவர்களின் தரவுகளைச் சேகரிப்பதற்குச் சென்றிருந்த நிசோரின் பணியாளர் ஒருவர் காயங்களுடனும் கிழிந்த உடைகளுடனும் எமது பதுங்கு குழிக்குள் ஓடிவந்தார். அவரின் காமெரா நிறைய அங்கு நடைபெற்ற தாக்குதலின் படங்கள் இருந்தன. பதுங்கு குழிக்குள் இருந்தே அவற்றைப் பார்த்தோம். அன்றிலிருந்து, எறிகணைகள் வெடிக்கும் சத்தங்கள் காதைப் பிளந்தபடியே இருந்தன. ரோட்டில் போவதென்பது உயிரைப் பணையம் வைப்பது போலத்தான். ரோட்டில் போவோர்கள் நடுக்கத்துடனேயே வேகமாகப் போக விரும்பினார்கள். ஆனால் வீதியெங்கும் இடம்பெயரும் மக்களின் சன நெருக்கம். எம்மைச் சுற்றி பல பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். சமாதானச் செயலக தம்பதிகளான செல்வியும் பவனும் ஈருருளிகளில் தமது ஒருவயதுக் குழந்தையுடன் இடம்பெயர்ந்து போய்க்கொண்டிருக்கும்போது படுகாயமுற்றார்கள். பவன் பல வருடங்களுக்கு முன்பே களத்தில் ஒருகாலை இழந்தவர். இத்தாக்குதலின் போது செல்வியும் ஒரு காலை இழந்தார்.

இதன் பின்னர் என்னால் புதுக்குடியிருப்பிலிருந்த நிசோருக்குப் போக முடியவில்லை. சமாதானச் செயலகத்திற்கு இன்னும் ஒரு தடவை சென்றேன். வீதியில் ஈருருளிகளில் வேகமாகச் செல்ல வேண்டியிருந்ததால் முட்டாள்தனமாக எனது மடிக்கணனியை சமாதானச் செயலகத்தில் விட்டுவிட்டுச் சென்றேன். இவ்விரவே எனது தரவுகள் எல்லாவற்றுடனும் எனது கணனி தொலைந்து விட்டது. தொலைந்தவற்றில் என்னை மிகவும் கவலைகொள்ளச் செய்தது கொக்கிளாய், கொக்குத்தொடுவாய், கருநாட்டுக்கேணி பற்றி நான் தயாரித்து வந்த நிசோர் அறிக்கையே. இதன் பிறகு இரண்டு வாரங்கள் கூவிக்கொண்டு செல்லும் எறிகணைகளின் சத்தங்களைக் கேட்டபடி செந்தளிரில் எனது அறைக்குள்ளேயே முடங்கிக் கிடந்தேன். அதிகமாகக் கட்டிலுக்குக் கீழேயே கிடந்தேன். குழந்தைகள் நெரிசலாக இருந்த பதுங்குகுழிக்குள் போவதை விடக்

கட்டிலின் கீழ் கிடப்பது மேலென்று பட்டது. இப்போது பெண்கள் அபிவிருத்திப் புனர்வாழ்வு மையத்தின் ஏனைய பயனாளிகளும் அவர்களின் இடங்களில் எறிகணைத் தாக்குதல்கள் தாங்கமுடியாமல் செந்தளிர் காணியிலேயே வந்து முடங்கிவிட்டார்கள். இவர்களெல்லோருமே பதுங்கு குழிகள் அமைப்பதில் முழுநேரமாக ஈடுபட்டிருந்தார்கள். பெப்பிரவரி நடுப்பகுதியில் கட்டிலுக்குக் கீழேயே கிடக்கும் என்னைப் பார்த்துவிட்டு புலித்தேவன் தனது தற்காலிகக் கொட்டகைக்கு என்னையும் அழைத்துச் சென்றார்.

தனது தற்காலிகக் கொட்டகையில் புலித்தேவன் இருப்பது மிகவும் குறைவே. நான் அவர் மனைவி குறிஞ்சியுடனேயே தங்கியிருந்தேன். எங்களைவிட அக்காணியில் இன்னும் மூன்று நான்கு குடும்பங்கள் தற்காலிகக் கொட்டகை போட்டு இருந்தன. எங்கள் எல்லோருக்கும் பொதுவாக ஒரு கிணறும் ஒரு கழிவறையுமே இருந்தன. இக்கட்டத்தில் நான் வன்னியிலிருந்து வெளியேற வேண்டுமென்று புலித்தேவனிடம் சொல்லி வைத்திருந்தேன். ஆவன செய்வதாகப் புலித்தேவனும் எனக்குச் சொல்லியிருந்தார். நான் செந்தளிரிலிருந்து வெளியேறி இரண்டொரு வாரங்களின் பின் செந்தளிரில் தங்கியிருந்த பெண்கள் குழந்தைகள் எல்லோருமே அங்கிருந்து வெளியேறினார்கள். அவர்கள் சுதந்திரபுரத்தில் தற்காலிகக் கூடாரங்களில் இருந்தபோது நடந்த ஒரு எறிகணைத் தாக்குதலில் ஒரு செந்தளிர்ச் சிறுமி கொல்லப்பட்டார். மூவர் காயமடைந்தனர். இதுபற்றிப் பல நாட்களுக்குப் பின்னரே நான் அறிந்தேன். ஏனெனில் இக்கட்டத்தில் அவர்களைப் பார்க்கச் செல்வதென்பது நினைத்தும் பார்க்கமுடியாததாக இருந்தது. கூவிச்செல்லும் எறிகணைகளுக்குக் காதைக் கொடுத்துக் கொண்டிருப்பதே எமது பொழுது போக்காயிற்று. இரவிலும் எறிகணைச் சத்தம் அருகில் கேட்கும் போதெல்லாம் பல தடவைகள் எழுந்து பதுங்கு குழிக்குள் செல்வோம். பதுங்கு குழியும் அங்கேயே உறங்கும் குழந்தைகளால் ஏற்கனவே நிரம்பியிருக்கும்.

இறுதியாக எனக்கும் குறிஞ்சிக்கும் எமக்கென ஒரு பதுங்கு குழி வசதி கிடைத்தது. நாமும் பதுங்கு குழிக்கு உள்ளேயே உறங்கத் தொடங்கினோம். அவ்வசதி எமக்குக் கிடைத்து ஒருவாரத்திற்குள்ளேயே நாம் மீண்டும் இடம்பெயர்ந்தோம். இங்கு நாமிருந்த கடைசி நாள், பெப்பிரவரி 17–22 வரையான காலப்பகுதி என்று நினைக்கிறேன், எறிகணைகளின் கடுமை பலமடங்கு அதிகமானது. எமக்குத் தெரியாத பலர், பெண்கள், குழந்தைகள், ஆண்களென, எமது பதுங்கு குழிக்குள் ஓடி வந்தார்கள். தமது காணியில் எறிகணைகள் விழுந்து பலர் இறந்துவிட்டதாகச் சொன்னார்கள்.

அன்றே நாங்கள் அங்கிருந்து வெளியேறி இரணைப்பாலைக்குச் சென்றோம். நான் குறிஞ்சியின் ஈருருளியில் பின்னமர்ந்து சென்றேன். வழியில் ஆபத்து நிறைந்த பிரதான வீதியில் எக்காரணத்தைக் கொண்டும் நிற்கக்கூடாது என்றும் அதில் அதிவேகமாகப் போகவேண்டுமென்றும் எம் எல்லோருக்கும் அறிவுரை சொன்னார்கள். அப்பிரதான வீதியில் எமது ஈருருளி வேகமாகப் போய்க்கொண்டிருந்தபோது வழிநெடுகிலும் எறிகணைத் தாக்குதலில் கொல்லப்பட்டு அழுகிக்கொண்டிருக்கும் மாடுகள், ஆடுகள், நாய்களின் பிணங்கள் கிடந்தன. இரணைப்பாலையில் நான் இரண்டு வாரங்கள் தங்கியிருந்தேன். இப்போது வேறொரு நண்பரின் குடும்பத்துடன். இது ஒன்றும் முன்னையதைவிட எறிகணைச் சத்தம் குறைந்தது என்றில்லை. இங்கும் எறிகணைகள் கூவிக்கொண்டு செல்வது தொடர்ந்தது. ஒருநாள் அப்போதுதான் அடுத்த காணியில் விழுந்த இருபத்தைந்து சென்ரிமீட்டர் நீளமுள்ள எறிகணைத் துண்டு ஒன்றை ஒருவர் என்னிடம் தந்தார். சூட்டைத் தாங்கமுடியாமல் உடனேயே அதைக் கீழே போட்டேன்.

நான் இரணைப்பாலையில் தங்கியிருந்த அதே காணியில் நடேசனின் அரசியல்துறை உறுப்பினர்கள் ஒரு இணைய வசதி அமைத்திருந்தார்கள். எம்மைச் சுற்றி எங்கும் இடம்பெற்றுக் கொண்டிருந்த பொதுமக்கள் பாதிக்கப்பட்ட தாக்குதல்களின் ஒளிப்படங்களை அரசியல்துறை உறுப்பினர்கள் அன்றாடம் உடனுக்குடன் வெளியுலகத்திற்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். இந்திய ஊடகங்களுக்கு இவற்றை அனுப்புவதற்குக் கடும் பிரயத்தனங்கள் எடுக்கப்பட்டன. இங்கு வேலை செய்வதற்கு விரைத்திறனுடைய உடல்வளம் கட்டாயம் தேவை. எப்போது எறிகணைகளோ குண்டுவிமானமோ வருமென்று சொல்ல முடியாது. கண்மூடும் நேரத்திற்குள் பாய்ந்து பதுங்குகுழிக்குள் போய்விட வேண்டும். என்னையும் இங்கு வேலை செய்யும்படி கேட்டார்கள். நான் முயற்சி செய்தேன். ஆனால் இச்சத்தங்களுக்கு மத்தியில் அமைதியாகச் சிந்திப்பது கடினமாகவே இருந்தது. இவ்விணைய வசதியிலிருந்து நியூசிலாந்திலிருந்த எனது குடும்பத்துடன் தொடர்பு கொண்டு வன்னியிலிருந்து நான் விரைவில் வெளியேற இருப்பதாக அவர்களுக்குச் சொன்னேன்.

நான் நடேசனை இறுதியாக இவ்விடத்திலேயே கண்டேன். மே 2009ல் போரின் இறுதிக்கட்டத்தில், நடேசனும், புலித்தேவனும் சர்வதேச சமாதான முன்னெடுப்பாளர்களின் தொலைதூரப்

பேச்சுக்களின் பின்னர், வெள்ளைக் கொடியுடன் லங்கா ராணுவத்திடம் சரணடைந்தபோது கொல்லப்பட்டனர். இச்சம்பவம் இன்று வெள்ளைக் கொடி[25] விவகாரம் என்றழைக்கப்படுகிறது.

இங்கிருந்தபோது ஒரு விடுதலைப்புலி உறுப்பினர் என்னைத் தனது ஈருருளியில் அழைத்துச்சென்று அங்குள்ள நிலைமையைச் சுற்றிக் காட்டினார். மாத்தளன் வரை சென்று திரும்பினோம். வீதியெங்கும் மக்கள் மரங்களின் கீழ் சில பொருட்களைப் பரப்பி வியாபாரம் செய்தனர். கடற்கரையில் கூடாரங்களில் இருந்த மக்கள், குழந்தைகள் வெய்யில் தாங்காமல் தவித்தனர். தாய்மாரும் குழந்தைகளும் எங்கே சிறு நிழல் கிடைத்தாலும் அங்கு பாதுகாப்புத் தேடினர். சிலர் பெரிய வாகனங்களுக்குக் கீழும் கூட நிழல்களைத் தேடினர். வழியில் இறந்தஉடல்கள் நிறைந்த ஒரு வண்டியை நாங்கள் தாண்டினோம்.

இரணைப்பாலையிலிருந்து முள்ளிவாய்க்காலுக்கு மார்ச் மாதஅளவில் இடம்பெயர்ந்தோம். பகலும் இரவுமென இடைவெளியின்றி எப்போதும் எறிகணைத் தாக்குதலும் குண்டு வீச்சும் என்ற நினைவிலேயே எமது காலம் கடந்ததால் குறிப்பாகத் திகதி நினைவில்லை. இப்போது ஒரு கணம் கூட தளர்வடைய முடியாத நிலையிலிருந்தோம். எறிகணைச் சத்தமோ குண்டுவிமானச் சத்தமோ கேட்கும்போதெல்லாம் பந்தய ஒட்டத்திற்கு தயாராவதைப் போன்ற ஆயத்தநிலையை எடுப்போம். சத்தம் அருகில் வரும் போலத் தெரிந்தால் பதுங்குகுழி தேடி ஓடுவோம். எம்மைச்சுற்றி குழந்தைகளுடன் கூடிய பல குடும்பங்கள் கூடாரங்களில் இருந்தன. இவர்களெல்லாம் லங்கா ராணுவத்தின் கையில் அகப்படுவதை எண்ணி பீதியுற்றவர்களாகவே இருந்தனர்.

விடுதலைப்புலிகளின் ஆட்சேர்ப்பு முயற்சிகள் குடும்பத்துக்கு ஒருவர் என்ற கொள்கையை விட்டு இப்போது வயதுக்கு வந்த திருமணமாகாத எல்லோரையுமே கட்டாயமாக இணைக்கும் முயற்சியாக மாறியது. எனக்கருகிலிருந்த ஒரு கூடாரத்தில் ஆட்சேர்ப்புக் குழு வந்தபோது தாய் கதறி அழத்தொடங்கினார். அவரின் மகளோ மறுபேச்சில்லாமல் அமைதியாக நடந்து சென்று ஆட்சேர்ப்பாளர்களின் வாகனத்தில் ஏறினாள். இன்னுமொரு கூடாரத்தில் ஒரு விடியற்காலையில் தனது மகன் கூட்டிச் செல்லப்பட்டதை நினைத்து அழுத தாயின் அழுகைக்குரல் கேட்டபடியே இருந்தது.

அண்மையில் தனது மகனைக் களத்தில் இழந்த ஒரு தாயைச் சந்தித்தேன். இம்மகனுக்கு நான் ஆங்கிலம் சொல்லிக்

கொடுத்திருக்கிறேன். இவர் ஒரு நீண்டகால உறுப்பினர். களமுனைகளில் நின்றவர். பின்னர் ஆங்கிலக் கல்விக்காகத் தமிழ்ச்செல்வனின் கீழ் அரசியல்துறை ஆரம்பித்த ஆங்கிலக் கல்லூரியில் இணைக்கப்பட்டார். 2008ம் ஆண்டில் அவ்வாங்கிலக் கல்லூரி கலைக்கப்பட்டு அங்கிருந்தவர்கள் எல்லோரும் களத்திற்கு அனுப்பப்பட்டார்கள். இம்மகனை 2008ம் ஆண்டு நடுப்பகுதியில் வீதியில் சந்தித்தேன். தன்னை ஆட்சேர்ப்புப் பணிக்கு விட்டிருப்பதாகவும் இதைவிட களத்தில் நிற்பது மேலென்றும் எனக்குச் சொன்னார்.

இக்கால கட்டத்திலேயே முதன்முதலில் விடுதலைப்புலிகள் கட்டுப்பாட்டுப் பகுதிகளிலிருந்து வெளியேற முனைந்த பொதுமக்களை நோக்கி அவர்கள் சுட்டார்கள் என்ற வதந்திகளைக் கேட்டேன். அவை உளத்தாக்கத்தை ஏற்படுத்திய செய்திகள். பிற்காலத்தில் நான் மெனிக்பாம் முகாமில் தடுத்து வைக்கப்பட்டிருந்தபோது அங்கிருந்த வன்னி மக்கள் தாம் வெளியேற முயன்றபோதும் தம்மை நோக்கி துப்பாக்கிச் சூடுகள் வந்ததென்று ஆத்திரத்துடன் பேசினார்கள். அவர்களெல்லோரும் விடுதலைப்புலிகளே தம்மை நோக்கிச் சுட்டதாக நம்பினார்கள்.

இப்போதெல்லாம் விடுதலைப்புலிகளின் வீரமரண நிகழ்வுகள் மிகவும் சுருக்கமாகவும் அடக்கமாகவுமே நடந்தன. துயிலுமில்லங்கள எல்லாம் இழந்துபோன நிலையில் தற்காலிகத் துயிலுமில்லங்கள் அமைக்கப்பட்டு வித்துடல்கள் அங்கே விதைக்கப்பட்டன. பொதுமக்களின் இறப்புக்களும் உறுப்பினர்களின் இறப்புகள்போலவே இக்காலத்தில் அதிகமாக நிகழ்ந்தன. பொதுமக்களின் இறப்புகளுக்கு இறுதி நிகழ்வுகள் என்பது இல்லையென்றே சொல்லுமளவுக்கு இப்போது நிலைமை இருந்தது. இதுபோல ஒன்று எனது கூடாரத்திற்கு அருகில் நடந்தது.

2009ம் ஆண்டு மார்ச் மாதத்தில் மூன்று கிழமைகள் நான் முள்ளிவாய்க்காலில் தங்கியிருந்தபோது எனது கூடாரத்திலிருந்து 200 கிலோமீட்டர் வட்டத்திற்குள் பல பொதுமக்கள் கொல்லப்பட்டதை அறிந்தேன். ஒரு சம்பவம் மிகவும் அருகிலேயே நடந்தது. திகதி குறிப்பாக நினைவில்லை. நான் முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறுவதற்கு ஏறக்குறைய பத்து நாட்களுக்கு முன் இது நடந்தது. எனது கூடாரத்தின் வாசலில் நான் இருந்தேன். ஒரு பெரும் வெளிச்சம் என் கண்முன்னே மூன்று மீட்டர் தொலைவில் தோன்றியது. சிந்திக்கு முன்பே நான் நிலத்தில் விழுந்து படுத்தேன். வெடிச்சத்தம் கேட்கத் தொடங்கியது. அது பல நிமிடங்களுக்குத்

தொடர்ந்தது போலிருந்தது. சத்தம் நின்றபோது நான் அருகிலிருந்த பதுங்குகுழிக்கு ஏனையோர் பலரையும் போல ஓடிவிட்டேன். அதன் பின் உடனே வெளியே வரும் தைரியம் எனக்கிருக்கவில்லை. வேறு சிலர் வெளியே சென்றார்கள்.

எமது கூடாரத்திற்கு அடுத்திருந்த கூடாரத்திலிருந்த அறுபது வயதான முத்துலிங்கம் என்பவர் மதிய உணவருந்திக் கொண்டிருந்தார். அந்த இடத்திலேயே தலைவெடித்து இறந்தார். அருகேயிருந்த வேறொரு கூடாரத்திற்கு வெளியே சமைத்துக் கொண்டிருந்த இளம்பெண் வயிற்றில் பாரிய காயமடைந்தார். இவர்கள் இருவரையும் எமக்கு நன்றாகவே தெரியும். கூடாரத்திற்கு வெளியேயும் கிணற்றடியிலும் ஒவ்வொரு நாளும் பல தடவைகள் இவர்களைச் சந்திப்போம். அருகேயிருந்த காணியில் ஒரு சிறு குழந்தை உட்பட இன்னும் மூன்று உயிர்கள் போனதென்று பின்னர் அறிந்தோம்.

தாக்குதல் நடந்து சில நிமிடங்களிலேயே தமிழர் புனர்வாழ்வுக் கழக வாகனம் வந்து இறந்த உடல்களையும் காயப்பட்டோரையும் ஏற்றிக்கொண்டு போனது. ஒரு மணித்தியாலத்திற்குள் இறந்த உடல்களைச் சுத்தம் செய்து மீண்டும் கொண்டு வந்தார்கள். தாக்குதலிலிருந்து தப்பிய ஒரு கூடாரத்திற்குள் முத்துலிங்கத்தின் உடலை வளர்த்தினார்கள். முத்துலிங்கத்தின் மனைவி கதறியழ எங்களில் பத்து பேர் சுற்றி நின்றோம். ஒருவர் சில தேவாரங்கள் பாடினார். ஒரு மணித்தியாலத்தில் தமிழர் புனர்வாழ்வுக் கழக வாகனம் மீண்டும் முத்துலிங்கத்தின் உடலை ஏற்றிச் சென்றது. அயலிலிருந்த சில ஆண்களும் உடலைப் புதைப்பதற்குக் குழி வெட்டுவதற்காக வாகனத்தில் ஏறினார்கள்.

இச் சம்பவத்திற்குச் சில நாட்களின் பின் புலித்தேவனைச் சந்தித்தேன். அத்தாக்குதலின்போது அவரும் அருகிலே நின்றிருக்கிறார். லங்கா ராணுவம் துளியும் மனச்சாட்சியில்லாமல் பொதுமக்களிருக்கும் இடத்தைக் குறிவைத்துத் தாக்குகிறது என்று விரக்தியுடன் சொன்னார். இவ்வாறான பொதுமக்களை குறிவைக்கும் தாக்குதல்கள் நீடிக்கமுடியாது என்று நம்பினவர் போல அவர் எனக்குத் தெரிந்தார். விடுதலைப்புலிகளின் தலைமைத்துவமும் இத்தகைய நம்பிக்கை வைத்திருந்ததோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

இப்போதே ஐசிஆர்சி கப்பலில் வெளியேற எனக்கு அனுமதி கிடைத்தது. மூன்று மாதமாக நான் இவ்வனுமதிக்குக் காத்திருந்தேன். 19ம் திகதி மார்ச் மாதம் ஐசிஆர்சி கப்பலைப் பிடிக்கும் எண்ணத்துடன் அது நங்கூரமிடும் இடமான மாத்தளனுக்குச் சென்றேன். போகும் வழியில் ஒரு கூடாரம் கிழிந்து ரத்தக்கறை படிந்திருந்தது. இரண்டு

நாட்களுக்கு முன் அங்கு ஒரு எறிகணைத் தாக்குதல் நடந்திருந்தது. அன்று கப்பல் வரவில்லை. முல்லைத்தீவு கச்சேரியாக அப்போது இயங்கிய ஒரு கொட்டகையில் சில மணி நேரம் கப்பலுக்காகக் காத்திருந்தேன். நாலு மீட்டர் சதுரமான இக்கொட்டகைக்குச் சுவர்களில்லை. ஒரு பக்கம் மட்டும் உயரமாக மண்மூட்டைகள் அடுக்கப்பட்டிருந்தது. அப்பக்கத்திலிருந்து எறிகணைகள் வரும் என்று சொன்னார்கள். கச்சேரி பணியாளர்கள் ஐசிஆர்சி கப்பலில் வந்துகொண்டிருந்த சில உணவுப்பொருட்களுக்காகக் காத்திருந்தார்கள். இவர்களின் அப்போதைய முதன்மைப் பணிகளாக வெளியுலகத்திடமிருந்து உணவுக்கு வேண்டுகோள் விடுப்பதும் ஐசிஆர்சி கப்பலில் வரும் சிறியளவு உணவைப் பெற்றுக் கொள்வதுமாகவே இருந்தன. நான் இங்கு கப்பலுக்குக் காத்துக் கொண்டிருந்தபோது அருகே எறிகணைத் தாக்குதல் நடந்ததாகச் செய்தி வந்தது. கொட்டகையிலிருந்த ஒருவரின் குடும்பத்தினர் தாக்குதல் நடந்த இடத்திலிருந்தார்கள். அவர் உடனே பார்த்து வருவதற்குச் சென்றார். அரை மணி நேரத்தில் திரும்பி வந்து தனது குடும்பம் தப்பிவிட்டதென்றும் வேறு சிலர் கொல்லப்பட்டிருக்கிறார்கள் என்றும் சொன்னார். அன்று நான் முள்ளிவாய்க்காலுக்குத் திரும்பினேன். அடுத்த நாள் மார்ச் 20 அன்று காலை வந்த ஐசிஆர்சி கப்பலில் ஏறி இரவு 7.00 மணிக்குப் புல்மோட்டையை அடைந்தேன்.

# தடுப்பு முகாம்

ஐசிஆர்சி கப்பலில் புல்மோட்டையில் நாம் வந்திறங்கியதும் லங்கா நேவியின் கைகளிலே விடப்பட்டோம். மிருகங்கள் ஓட்டுவது போல எம்மை ஓட்டும் நடைமுறை உடனேயே ஆரம்பித்தது. அன்றிரவே பேருந்துக்களில் ஏற்றி இறுதியாக அடையவேண்டிய இடமான மெனிக்பாம் நோக்கி எம்மை அனுப்பினார்கள். அந்த 100 கிலோமீட்டர் பயணம் நிற்பதற்கு மட்டுமே இடமுள்ள பேருந்துகளில் இரு இரவுகளும் மூன்று பகல்களுமாக நீண்டது. வயதானோர் வேதனை தாங்கமுடியாமல் ஓலமிட்டு அழுதனர். பயணத்தின் முதலாவது இரவை பதவியா என்னும் இடத்தில் ஒரு பொதுமண்டபத்தில் கழித்தோம். இரண்டாவது இரவை ஓமந்தையில் கரடுமுரடான நிலத்தில் போதிய கழிவறை வசதிகள் இன்றிக் கழித்தோம். நடுவில் குறுக்குவிசாரணை செய்தல், எமது பைகளை நுணுக்கமாக ஆராய்தல், குற்றவாளிகளைப்போல் எம்மை படம்பிடித்தல், கைரேகை பதிதல் என்பன பல தடவைகள் நடந்தேறின. லங்காவின் நேவி, பொலிஸ், ராணுவம் மூன்றைச் சேர்ந்தவர்களும் மீண்டும் மீண்டும் கேட்ட கேள்விகள் எம்மை விடுதலைப்புலிகளின் மேல் குற்றம் சுமத்தவும் லங்கா படைகளைப் பாராட்டவும் செய்யும் நோக்குடன் கேட்கப்பட்டன. எமது சக்தியெல்லாம் இழந்த நிலையில் மூன்றாம் நாள் மெனிக்பாமை அடைந்தோம். இன்னும் பல மணி நேரத்திற்குப் பின்னரே வெய்யிலிலிருந்து பாதுகாப்புத் தேடமுடிந்தது. எமக்களிக்கப்பட்ட வெய்யிலில் கொதிக்கும் கூடாரங்களின் கழிவறைகள் கட்டிமுடிக்கப்படாமல் இருந்தன. எம்மில் பலர் குடிப்பதற்குக் கூடாத தண்ணீரைக் குடித்து உடனேயே வயிற்றோட்டதினால் அவதிப்பட்டோம். உணவுக்கும், குடிதண்ணீருக்கும், என எமது போராட்டங்கள் இறுதிவரை தொடர்ந்தது. ஒவ்வொரு நாளும் குறைந்தளவில் இருந்த இவ்வளங்களைப் பெரும்தொகையாக இருந்த நாங்கள் பெற்றுக்கொள்வது என்பது ஒரு போராட்டமாகவே இருந்தது. விரைவில் எமக்கெல்லாம் நோயின் தாக்கங்கள் வந்தடைந்தன.

இம்முகாம்கள் லங்கா ராணுவத்தினால் லங்கா அரச ஊழியர்களைக் கொண்டு நடத்தப்பட்டது. லங்கா ராணுவம் கொட்டன்தடிகளையும் துப்பாக்கிகளையும் கையில் வைத்துக்கொண்டு எம்மைக் குற்றவாளிகள் போலவே நடத்தினார்கள். இவற்றைக் கொண்டு ஆண்களையும், பெண்களையும், வயோதிபர்களையும்கூட தாக்குவதற்கு இவர்கள் தயங்கவில்லை. கோபம் வந்தபோது காலில் அணிந்திருந்த ராணுவக் காலணிகளால் மக்களை தாராளமாக உதைத்தார்கள். ராணுவத்தின் இக்கொடுமைகளைப் பற்றி முறைப்பாடுகள் செய்ய எவருக்கும் துணிவில்லை. சிங்கள் அரச மந்திரிகள் முகாமுக்கு வருகை தந்தபோது அவர்களுடன் வந்திருந்த படப்பிடிப்பாளர்கள் தம் வாகனத்திலிருந்து முகாமிலிருந்த மக்களை நோக்கி உணவு வீசுவார்கள். மக்கள் அதை எடுப்பதற்கு முண்டியடிக்கும்போது சிரித்துக்கொண்டே அவற்றைப் படம் பிடிப்பார்கள். மெனிக்பாம் முகாமில் முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறிய ஏனைய மூன்று இலட்சம் மக்களுடன் நான் நான்கு மாதங்கள் சிறைப்பிடிக்கப்பட்டேன். இந்நரகக்குழியிலிருந்து வெளியேறுவது பற்றிய சிந்தனைகள் எம் மனங்களை எப்போதும் ஆக்கிரமித்திருந்தது.

நான் அங்கிருந்த நான்கு மாதங்களும் அங்கிருந்த சிறுவர்களின் நிலையே என்னை மிகவும் மனச்சோர்வடையச் செய்தது. எல்லோரும் மிகவும் நெருக்கமாக இருந்த அவ்விடத்தில் சுற்றிச் சென்று புள்ளிவிபரங்கள் சேகரிப்பது ஒரு விதத்தில் சுலபமாகவே இருந்திருக்கும். எனக்கு அத்தைரியம் இருக்கவில்லை. இருப்பினும் நான் சிறுவர்களைக் கவனமாக அவதானித்தேன். சீரழிந்துகொண்டே போன சிறுவர்களின் உடல்நிலை என்னைத் திணறச் செய்தது. சிறுவர்கள் எனது பராமரிப்பில் இல்லாதது எனது நற்பேறு என்று எண்ணிக்கொண்டேன்.

எனது கூடாரத்தை அண்மித்திருந்த எட்டு கூடாரங்களை எடுத்துக் கொள்வோம். இதில் ஐந்து கூடாரங்களில் பத்து வயதிற்குட்பட்ட சிறுவர்கள் ஒன்பது பேர் இருந்தார்கள். மூன்று வயதுச்சிறுவன் ஒருவன் நோயினால் இறந்தான். இரண்டு வயதுடைய சிறுவன் ஒருவன் கடும் நோயினால் வவுனியா வைத்தியசாலைக்கு எடுத்துச் செல்லப்பட்டான். ஏனைய ஏழு சிறுவர்களும் தொடர்ந்து காய்ச்சல், சத்தி, வயிற்றோட்டம் ஆகிய நோய்களால் பாதிக்கப்பட்ட வண்ணமே இருந்தார்கள். சில சிறுவர்களுக்கு வைத்தியரிடம் பல தடவைகள் மருந்தெடுத்தும் தோல்வியாதிகள் தொடர்ந்த வண்ணமே இருந்தது. நான்கு சிறுவர்களுக்குச் செங்கமாரி (அக்கி) நோய் வந்தது. வைத்தியர்களிடம் இதற்கு மருந்து கையிருப்பில் இல்லாததால்

அவர்கள் பெற்றோரிடம் சிறுவர்களுக்கு நிறைய பழங்கள் கொடுக்கும்படி அறிவுரை சொன்னார்கள். முகாமில் பழங்கள் எக்கச்சக்கமான விலை. அநேகமான பெற்றோரிடம் கையில் பணமிருக்கவில்லை. செங்கமாரி வியாதிக்கு உள்ளூர் மருந்தாக கீழ்க்காய்நெல்லி எனும் ஒரு தாவர வகையை அரைத்துக் கொடுப்பார்கள். இதைப் பெறுவதற்கும் வெளியேயிருந்து எவராவது இதைக்கொண்டு வந்து தரவேண்டும். வெளியேயிருந்து வருவோர் முகாமில் தடுத்துவைத்திருப்போரைச் சந்திப்பதில் உள்ள தடைகள் பற்றி கீழே விவரிப்பேன்.

இந்த மோசமான வயதானவர்களுக்கே கேடு தரும் சூழலுக்கு பிறந்து ஒன்றிரண்டு நாட்களிலே வைத்தியசாலையிலிருந்து தாயும் பிள்ளையும் அனுப்பப்பட்டார்கள். அப்போதுதான் நடக்கத் தொடங்கிய குழந்தைகளும் கழிவறைகளுக்கு முன்பே விளையாடினார்கள். அங்கு காணப்பட்டதைப்போல பெருந்தொகையான இலையான்களையும் நுளம்புகளையும் நான் என் வாழ்நாளிலே கண்டதில்லை. உண்ணும்போது ஒரு கை உணவின் மேல் விசிறியபடியே இருக்காவிட்டால் படையாக இலையான்கள் உணவின் மேல் வந்திருக்கும். சிறுவர்களுக்கு உண்ணும்போது அப்பழக்கம் வராது. அதனால் கழிவறையிலிருந்து வந்த இலையான்கள் அமர்ந்த உணவையே அவர்கள் உண்பார்கள்.

பச்சிளம் குழந்தை உட்பட அநேகமான குழந்தைகளுக்குப் பால்மா இருக்காது. எப்போதாவது ஒரு நிறுவனம் சிறு குழந்தைகளுக்கு மட்டும் பால்மா பாக்கட் கொடுக்கும். ஒரு தடவை ஒரு தகப்பன் தனது ஏழு மாதக் குழந்தைக்கு வெறும் தேநீரில் போடுவதற்குச் சீனி கேட்டு வந்தார். தாயிடம் பாலில்லாததால் அக்குழந்தைக்கு வெறும் தேநீரே உணவாகிவிட்டது. சில நிறுவனங்கள் சிறுவர்களுக்கெனச் சத்துணவு விநியோகித்தாலும் சிறுவர்களுக்குக் கிடைத்த உணவில் நிச்சயமாகப் போதிய சத்து இருக்கவில்லை. அவர்களின் உணவில் பாலோ, இறைச்சி–மீனோ, மரக்கறிகளோ இல்லை. சிலசமயம் சோயா உலருணவு விநியோகிக்கப்பட்டது. ஆனால் அது மிக மோசமானதாகவும் சிறுவர்களால் உண்ண முடியாததாகவும் இருந்தது.

சிறுவர்கள் நிரந்தரமாக நோய்களால் பாதிக்கப்பட்டார்கள். அது அவர்களை தாக்கியது வெளிப்படையாகத் தெரிந்தது. சிறு காயங்களும் பெரிதாகிப் பழுதாகிப் பிரச்சினைகள் கொடுக்கும். சத்தியும், காய்ச்சலும், வயிற்றோட்டமும் சிறுவர்களின் நிரந்தர நிலையாக இருந்தது. சிறுவர்களுக்குக் காய்ச்சல் வந்தபோது இது செங்கமாரியாக இருக்குமோ என்று பெற்றோர் வருந்தினர். மிகவும்

மோசமான ஊட்டக்குறைவுள்ள சிறுவர்களின் நிலையை வெளிப்படுத்த இதற்கான ஒரு அளவிடுவது வழக்கமாகக் கையாளப்படும் ஒரு வழி. ஆனால் முகாமில் சிறுவர்கள் எதிர்கொண்ட சூழலையும் அது அவர்களின் உடல்–உள்ளம் இரண்டையும் நலிவடையச் செய்ததையும் இவ்வாறான அளவினால் வெளிக்கொண்டுவர முடியாது. முகாமில் வந்திறங்கியபோது ஊட்டமுள்ள சிறுவர்களாக இருந்தவர்களும் கண்முன்னே தேய்ந்து கொண்டே போனார்கள். வன்னிப் போர்ச்சூழலிலும் பார்க்க இத்தடுப்பு முகாம் வாழ்க்கை சிறுவர்களின் உடல்–உள நிலையை தாக்கியது ஆச்சரியத்தைத் தந்தது. சத்தற்ற உணவு, கடும் வெய்யில், சுகாதாரமின்மை போன்றவை வன்னிப் போர்ச்சூழலிலும் பல மாதங்களாக இச்சிறுவர்கள் எதிர்நோக்கியவையே. தடுப்பு முகாமிற்கும் வன்னிப் போர்ச்சூழலுக்கும் இருந்த ஒரு பெரும் வேறுபாடு ஒட்டு மொத்த இச்சமூகத்தின் உளநலமே என்று நான் நினைக்கிறேன். இதுவும் சிறுவர் உடல்–உள நலத்தை எத்துணை பாதிக்கிறது என்பது கவனிக்கப்பட வேண்டியது.

முகாமிலிருந்த வைத்தியர்களைப் பார்க்குமிடத்தில் மக்கள் கூட்டத்தின் வரிசைகள் எப்போதுமே மிக நீண்டு செல்லும். வைத்தியர்களும் தலைதெறிக்கும் வேகத்தில் நோயாளிகளைப் பார்த்து மருந்தெழுதுவார்கள். மருத்துவர்கள் பெரும்பாலும் தமிழ் தெரியாத சிங்களவர்களாவே இருப்பார்கள். சில முகாம்களில் தமிழ் தெரியாத இந்திய மருத்துவர்களும் இருந்தார்கள். ஒரு மருத்துவர் தன் முன்னாலிருந்த பன்னிரண்டு வயதுப் பையனிடம் என்ன வருத்தம் என்று கேட்காமலே அவனுக்கு மருந்தெழுதுவதை நான் கண்டிருக்கிறேன். இதைப் போலவே மருந்துகளைக் கொடுப்போரும் தலைதெறிக்கும் வேகத்தில் கொடுப்பார்கள். ஒரு மேசையில் ஏறக்குறைய முப்பது மருந்து வகைகள் இருக்கும். இவற்றிலிருந்தே மருந்துகள் கொடுக்கப்படும். ஒரு படித்த தாய் ஒருவர் என்னிடம் தனது ஒரு அனுபவத்தைச் சொன்னார். தனது சிறிய குழந்தைக்கும் தனக்கும் சேர்த்து வைத்தியரிடம் மருந்துக்குப் போயிருக்கிறார். மருந்து கொடுப்பவர்கள் குழந்தையின் மருந்தையும் தாயின் மருந்தையும் மாற்றி எழுதிக் கொடுத்துவிட்டார்கள். விபரமறிந்த தாயாதலால் அவர் இதைக் கவனித்தார். முகாமிலிருந்த அதிகமான தாய்மாருக்கு இத்தகைய விபரம் இருக்காது. இவ்வாறு மருத்துவர்களின் கவனமின்மையால் எத்தனை குழந்தைகளும் பெரியவர்களும் இறந்தார்களோ என்று கடவுளுக்குத்தான் தெரியும். இதைக் கண்காணிக்க முகாமில் யாரும் இல்லை. முகாமிலிருந்த வைத்திய வசதிபற்றிய புரிதலுக்கு அவ்விடங்களில் மருத்துவரைக்

காண்பதற்குக் காத்து நிற்கும் நீண்டு செல்லும் வரிசைகளில் ஏராளமான இளம் தாய்மார்கள் கையில் தம் கைக்குழந்தையுடன் கண்களில் நீர்வழிய நிற்கும் காட்சி ஒன்றே போதும்.

பெரிய கொட்டகைகளில் முகாமிலிருந்த ஆசிரியர்களைக் கொண்டு நடத்தப்பட்ட பள்ளிக்கூடங்களுக்குச் சிறுவர்கள் சென்றார்கள். கரடுமுரடாக இருந்த நிலத்தின் மேல் தறப்பாள்கள் போடப்பட்டு அதன்மேல் அமர்ந்து சிறுவர்கள் கற்றார்கள். எழுதும்போது தம் புத்தகத்தை நிலத்தில் வைத்துக்கூட எழுத முடியாது. மடியில் வைத்தே எழுதவேண்டும். இத்தகைய முகாம் சூழலிலிருந்து கொண்டு தாம் எவ்வாறு பாடம் கற்பிக்க முடியும் என்று ஆசிரியர்களும் நொந்தார்கள்.

தனியாக அவதியுறும் தம் தாயாருக்கு உதவியாகச் சிறுவர்கள் மிகவும் பாரமான தண்ணீர் வாளிகளைத் தூக்கிச் செல்வார்கள். அச்சிறு உடல்கள் அப்போது பாரத்தினால் கேள்விக்குறி போல வளையும். இது எத்தகைய நிரந்தரமான பாதிப்பை அச்சிறு உடல்களுக்குக் கொடுத்திருக்கும்?

பல காரணங்களால் குடும்பங்கள் பிரிந்து ஒருவரிருக்குமிடம் மற்றவருக்குத் தெரியாமல் பல காலம் சென்றது. இதுவும் முகாம் சமூகத்தை மிகவும் பாதித்தது. போர்க்காலத்தில் வன்னியில் காயப்பட்ட நூற்றுக்கணக்கானவர்கள் அங்கு வைத்திய வசதி போதாமையினால் ஐசிஆர்சி கப்பலின் மூலம் வெளியே எடுத்துச் செல்லப்பட்டார்கள். இவர்களுடன் அக்குடும்பங்களிலிருந்து வேறொருவரும் காயப்பட்டவரை பராமரிப்பதற்காக அழைத்துச் செல்லப்பட்டார். அக்குடும்பத்துச் சிறுவர்களும் சிலசமயம் சேர்ந்து செல்வார்கள். ஐசிஆர்சி கப்பலிலிருந்து இறங்கிய ஓரிரு நாட்களிலேயே காயப்பட்டவர் ஏனைய குடும்பத்தினரிடமிருந்து பிரிக்கப்படுவார்கள். காயப்பட்டவர் ஏதாவது வைத்தியசாலைக்கு அனுப்பப்பட, பிரிக்கப்பட்ட குடும்பத்தினர் மெனிக் பாம் முகாமில் அடைக்கப்படுவார்கள். முகாமில் இவ்வகையாகப் பிரிக்கப்பட்ட ஏராளமான குடும்பங்கள் தமது காயப்பட்ட உறவினரைக் மாதக்கணக்காகக் கண்ணீருடன் தேடுவதை நான் கண்டேன். அவர்கள் இறுதியில் ஒன்று சேர்க்கப்பட்டால் அது குடும்பங்களின் முயற்சியால் அல்லாமல் அதிகாரிகளிடமிருந்து கிடைத்த உதவியினால் அல்ல.

போரின் போதும், போரின் இறுதிக்கட்டத்தின் போதும் பல குடும்பங்கள் பிரிக்கப்பட்டன. முகாமில் அடைக்கப்பட்ட குடும்பங்கள் தமக்குத் தெரிந்த இடங்களுக்கெல்லாம் கடிதம் மேல் கடிதமாக எழுதுவார்கள். முகாமின் அலுவலகத்திற்குக் கண்ணீருடன் உறவினரைத் தேடித் திரிந்தார்கள். இக்குடும்பங்கள் ஒன்று சேர்ந்ததும்

தற்செயலாகவே நடந்தேறினவே அன்றி ஒன்று சேர்ப்பதற்கான எதுவித நடைமுறைகளும் இல்லை. எல்லாம் ஒரே குழப்பமாகவே நடந்தன. போரின் இறுதி முடிவின் முன்னர் வெளியேறிய மக்களைப் பல பேருந்துகளில் முகாமுக்குக் கொண்டு வருவார்கள். முகாமிலிருந்தவர்கள் தம் உறவினர்கள் இப்பேருந்துகளில் வருகிறார்களா என்றறிவதற்காக அவற்றின் பின்னால் ஓடுவது மனதை உருக்கும் காட்சி. பேருந்திலிருந்து யாராவது ஒருவர் கையை ஆட்டினால் அவர் யாராக இருக்கும் என்ற ஊகத்தில் பல உரையாடல்கள் இடம்பெறும். தம் உறவினர்கள் பற்றிய மக்களின் ஏக்கங்களை இவை பிரதிபலித்தன.

இவ்வாறு தம் உறவினர்களை நினைத்து ஏங்கிய மக்களையே லங்கா ராணுவம் அடுத்த முகாமிற்குப் போய் உறவினர்களைத் தேட விடாமல் தடுத்தது. இவ்வாறு உறவினர்களைத் தேடுவதற்குப் போகும் போது லங்கா ராணுவம் அவர்களைத் தடுத்து கொடுமையாக அடித்தது என்பது நாளாந்தம் நடைபெற்று வந்தது. நானிருந்த சோன்–3 முகாமில், அடுத்திருந்த சோன்–2 முகாமை அண்டி, ஒரு வீதி இருந்தது. ஒன்றிலிருந்து மற்றதற்கு மக்கள் போவதைத் தடுப்பதற்கு இவ் வீதியோரமாக முள்வேலி போடப்பட்டிருந்தது. இவ்வீதியால் நடந்தால் இம்முள்வேலி பல இடங்களில் முகாம் மக்களால் உடைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவ்வாறு உடைக்கப்பட்ட இடங்களைத் துப்பாக்கியுடன் நிற்கும் லங்கா ராணுவம் முகாமிலிருந்த ஆண்களைக்கொண்டு திருத்துவதையும் காணலாம். உறவினரை நினைத்து ஏங்கிய மக்களும் மீண்டும் மீண்டும் முள்வேலியை உடைத்த வண்ணமே இருந்தார்கள்.

போரின் இறுதிக்கட்டத்தில் திரளாக மக்கள் வன்னியிலிருந்து வெளிவந்தபோது லங்கா ராணுவம் பலரைக் குடும்பங்களிடமிருந்து பிரித்துக் கைதுசெய்தது. பல குடும்பங்களுக்குத் தமது உறவினர் வன்னியில் இறுதிப்போரின்போது கொல்லப்பட்டாரா அல்லது வெளியேறினாரா என்பதும் தெரியாமல் இருந்தது. கைது செய்யப்பட்ட தம் உறவினர்களை எண்ணி ஏங்கிய முகாம் மக்களுக்கு ஐசிஆர்சி தேடித் தகவல் கொடுக்கும் பணியைச் செய்தது. ஐசிஆர்சி ஆல் தகவல் கொடுக்கமுடியாத சந்தர்ப்பங்களில் உறவினரைத் தேடிக் கண்டுபிடிப்பது சிறைப்பட்டுக் கிடந்த முகாம் மக்களால் முடியாத காரியமாகவே இருந்தது. ஜுலை 2009க்குப் பின்னர் ஐசிஆர்சியும் இப்பணியை செய்யமுடியாமல் லங்கா அரசு தடைவிதித்தது. நான் முகாமிலிருந்து வெளியேறியபோது பெரும் தொகையான குடும்பங்கள் தம் உறவினர்களின் கதியைப்பற்றி எதுவும் தெரியாமலே இருந்தார்கள்.

வன்னிக்கு வெளியே இருந்த தமது ஏனைய குடும்பத்தவர்களைத் தொடர்பு கொள்வதும் முகாம் மக்களுக்குக் கடும் சோதனையாகவே இருந்தது. பலர் வெளியேறும்போது அவர்களின் முகவரி, தொலைபேசி இலக்கம் முதலியனவற்றை தொலைத்துவிட்டனர். நான் முகாமிலிருந்து வெளியேறிய காலத்திலும் முகாமில் செல்போன் வைத்திருப்பதை ஒரு பாரிய குற்றமாக லங்கா ராணுவம் தடைசெய்திருந்தது.

மெனிக்பாம் ஒரு சிறைச்சாலை என்பதில் எவருக்கும் சந்தேகம் இருந்தால், முகாம் மக்களை வெளியிலிருந்து வருவோர் சந்திப்பதற்கு இருந்த தடைகள் இச்சந்தேகத்தைத் தீர்க்கும். மெனிபாம் முகாம் ஐந்து ஆறு சோன்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு சோனுக்கும் ஒரு சந்திப்பிடம் இருக்கும். ஆரம்பத்தில் சந்திக்க வருவோர் முகாமிலிருப்பவர்களுக்கு ஒரு பொருளும் கொடுக்கமுடியாதபடி அரை மீட்டர் முள்ளுக் கம்பி சுருள் அவர்களைப் பிரித்திருக்கும். ஓரிரு மாதத்தில் இது சிறிது தளர்த்தப்பட்டது. வருவோர் ஒரு காகிதத்துண்டில் தாம் சந்திக்க விரும்புவர்களின் பெயரை எழுதி அவ்விடத்திலிருக்கும் ராணுவத்திடம் கொடுக்க வேண்டும். இது முகாமிலிருந்த அறிவிப்பு ஒலிபெருக்கியில் அறிவிக்கப்படும். பரந்து கிடந்த முகாம் கூடாரங்கள் எல்லாம் இவ்வொலிபெருக்கி கேட்கக்கூடிய தூரத்தில் இருக்காது. முகாமிலிருப்போர் தமது பெயரை ஒலிபெருக்கியில் கேட்டுப் பின்னர் நடந்துசென்று சந்திக்கும் இடத்திற்கு வந்துசேர ஒன்றிரண்டு மணித்தியாலங்கள் ஆகும். சந்திக்கும் இடத்தில் பத்து மீட்டர் இடைவெளிவிட்டு முள்ளுக்கம்பிகளால் பிரிக்கப்பட்ட இருமருங்கிலும் முகாம் மக்களும் வருகைதந்தோரும் காத்திருப்பார்கள். இத்தூரத்திலிருந்தே இருசாராரும் தாம் சந்திக்கவேண்டியவரை அடையாளம் காணவேண்டும். சந்திக்கும் இடத்திற்கு ஒரு குறிப்பிட்ட தொகையினரே உள்ளே செல்ல இடமிருக்கும். இருசாராரும் தத்தம் வரிசையில் நின்று ஒரேநேரத்தில் சந்திக்கும் இடத்திற்குள் செல்வதற்குச் சைகைகாட்டியே உட்செல்லவேண்டும். சந்திக்கும் இடம் தகரங்களால் பிரிக்கப்பட்டு நெஞ்சுயரத்திற்கு மேல் மட்டுமே மற்றவரைப் பார்க்கக்கூடியதாக மரக்கிராதிகள் கொண்டதாக இருக்கும். இக்கிராதியூடாக இருசாராரும் பேசலாம். கிராதிக்கு மேலாகப் பொருட்கள் கொடுக்கலாம். இருபது நிமிடமே இங்கு நின்று பேசலாம். ஏனெனில் பெரும் தொகையானோர் இவ்வாறான சந்திப்புக்காகக் காத்திருப்பார்கள். அவர்களுக்கும் சந்திப்பிடத்தை விட்டுக்கொடுக்க வேண்டும். இக்குறுகிய சந்திக்கும் நேரத்திலும் லங்கா ராணுவம் வந்திருப்போரை அடையாள அட்டை கேட்டுக்

குறுக்குவிசாரணை செய்யும். நானிருந்த சோன்–3 மெனிக்பாம் முகாமில் வருகை தருவோர் காத்திருக்கும் இடத்தில் நிழல் கிடையாது. வெய்யிலிலேயே அவர்கள் பல மணித்தியாலங்களாக முகாமிலிருக்கும் உறவினரைச் சந்திக்கக் காத்திருப்பார்கள்.

மக்களின் துன்பங்களுக்கு முடிவைப்பது போல லங்கா ராணுவத்தின் இன்னும் சில கொடூரங்கள் நடந்தேறின. பல தடவைகள் லங்கா ராணுவம் தமது களிப்புக்காக மக்களை துன்புறுத்தியதை நான் நேரே கண்டிருக்கிறேன். ஒருதடவை ஒரு வயோதிபர் எனது முகாமான சோன்–3 முகாமில் அதன் எல்லையிலிருந்த வீதியோரத்தில் குந்தியிருந்து அடுத்த முகாமான சோன்–2 முகாமில் நடப்பவற்றை முள்ளுக்கம்பியூடாகப் பொழுதுபோக்காகப் பார்த்துக் கொண்டிருந்தார். அவ்வழியே வந்த ஒரு லங்கா ராணுவப் சிப்பாய் அவ்வயோதிபரை வீதிக்கு நடுவே வரும்படி கட்டளையிட்டுவிட்டு எக்காரணமுமின்றி அவரை கொட்டாந்தடியினால் அடிக்கத் தொடங்கினான்.

இன்னுமொரு சம்பவம் முகாமிலிருந்த ஒரு வைத்தியசாலைப் பணியாளர் பற்றியது. முகாமிலிருந்த சில மக்கள் முகாம் சந்தையில் சிங்கள வெளி வியாபாரிகள் விற்கும் பொருட்களை வாங்கி ஒவ்வொரு கூடாரங்களுக்கும் சென்று சிறிய லாபத்திற்கு அதை விற்க முனைவார்கள். லங்கா ராணுவம் இதைத்தடை செய்திருந்தது. இப்படிச் செய்தவர்களைக் கண்டால் அவர்களைக் கொடும் குற்றவாளிகள் போல் அடித்து உதைத்தது. குறிப்பிட்ட வைத்தியசாலைப் பணியாளர் குளிர்ப்பெட்டியில் இருந்த சில மருந்துகளை வைத்தியர்கள் மக்களை பார்க்குமிடத்திற்கு எடுத்துக்கொண்டு போனார். அவர் வீதிவழியே போகாமல் கூடாரங்களுக்கு இடையே இருந்த பாதைவழியாகச் சென்றார். ஈருருளியில் சென்ற இரு லங்கா ராணுவச் சிப்பாய்கள் இவர் பொருட்கள் விற்கிறார் என்ற சந்தேகத்தில் இவரை நிறுத்த முயற்சித்திருக்கிறார்கள். வைத்தியசாலைப் பணியாளருக்கு லங்கா ராணுவம் தன்னைத்தான் நிறுத்த முயற்சிக்கிறது என்ற சந்தேகம் எழாததால் தொடர்ந்து நடந்தார். கடும்கோபம் கொண்ட சிப்பாய்கள் கூடாரங்களுக்கு இடையேயிருந்த குறுகிய பாதை வழியாகத் துணிகள் உலரப்போட்டிருந்த எதிரெதிராக இருந்த கூடாரங்களில் கட்டிய கொடிகள் அறுந்து விழ அங்கு விளையாடிக்கொண்டிருந்த குழந்தைகளுக்கு ஆபத்து விளைவிக்ககூடிய வகையில் தம் ஈருருளியில் மிக வேகமாக வந்து எனது கூடாரத்திற்கு முன்னால் போய்க்கொண்டிருந்த வைத்தியப் பணியாளர் முன் நிறுத்தினார்கள். ஈருருளியிலிருந்து இறங்கி சிங்களத்தில் கோபமாக எதையோ

கத்திக்கொண்டு வைத்தியப் பணியாளரை நோக்கிப் போனார்கள். சிங்கள் மொழி புரியாத அவ்வைத்தியப் பணியாளர் ''ஹொஸ்பிட்ல்... ஹொஸ்பிட்ல்'' என்ற சொல்லைத் திரும்பத் திரும்பச் சொன்னார். இச்சொல்லின் பொருள் படிப்பறிவு உள்ள உலக மக்கள் எவருக்கும் தெரிந்திருக்கும். (முகாமிலிருந்த தமிழர்களில் 95 வீதமானோருக்குச் சிங்கள மொழி தெரியாது. முகாமை கொட்டாந்தடியும் துவக்கும் கொண்டு நடத்திய லங்கா ராணுவச் சிப்பாய்களில் 99 வீதமானோருக்குத் தமிழ் தெரியாது. இவர்களே சிங்கள மொழி புரியாத தம் தமிழ் அடிமைகளுக்குச் சிங்கள மொழியில் கட்டளைகளை வழங்கினர்.) சிப்பாய்களிலொருவன் அவ்வைத்தியப் பணியாளரின் முகத்திலும் வயிற்றிலும் தனது ராணுவக் காலணிகள் அணிந்த காலால் மாறிமாறி உதைத்தான். பணியாளரோ மீண்டும் மீண்டும் ''ஹொஸ்பிட்ல்... ஹொஸ்பிட்ல்'' என்ற வார்த்தையையே மந்திரம் போலச் சொல்லிக்கொண்டிருந்தார். அடித்து உதைத்து களைத்த பின்னரே சிப்பாய் நிறுத்தினான். வைத்தியப் பணியாளர் தூக்கிச்சென்ற பெட்டியில் என்ன இருக்கிறது என்று இதன் பிறகுதான் அச்சிப்பாய் பார்த்தான். நாங்கள் பலர் பீதியில் விறைத்து நின்று இதைப் பார்த்துக்கொண்டிருந்தோம். எல்லோரும் கலைந்த பின்னர் அருகில் நின்ற லங்கா அரச ஊழியரான ஒரு கிராம சேவகரிடம் இதைப்பற்றி நாம் முறையிட வேண்டும் என்று கேட்டேன். அப்படி ஏதும் செய்தால் நான் காணாமற்போகச் செய்யப்படுவேன் என்று அவர் எச்சரித்தார்.

முகாமிற்கு அருகே ஓடிய ஒரு நதியில் உடல்கள் மிதந்தன என்ற வதந்தியும் மக்கள் முகாமிலிருந்து காணாமற் போகின்றனர் என்ற வதந்தியும் பரவலாகப் பேசப்பட்டது. இவ்வதந்திகளின் உண்மைத்தன்மையை அறிவது முடியாத காரியமாக இருந்தது. முகாமில் பெண்கள் உணவுக்காக லங்கா ராணுவத்திற்கு விபசாரம் செய்கிறார்கள் என்பதும் மக்களால் பேசப்பட்டது. முகாம் எல்லையிலிருந்த கூடாரங்களிலிருந்த பெண்களால் ராணுவத்தின் தங்குமிடங்களில் இரவில் இவை நடைபெறுவதாக மக்கள் பேசிக்கொண்டனர். முகாமிலிருந்த இளம்பெண்கள் சிலர் லங்கா ராணுவச் சிப்பாய்களுடன் நெளிந்து குழைந்து பேசுவதும் பொதுவாகக் காணும் காட்சி. இவ்விளம் பெண்கள் உணவுக்காக இப்படிச் செய்கிறார்கள் என்பதும் எளிதாக ஊகிக்கக்கூடியதே.

சிஐடி என்று முகாம் மக்களால் அழைக்கப்பட்ட சில தமிழர்களும் மக்களிடையே கூடாரங்களில் இருந்தார்கள். லங்கா ராணுவம் மூத்த சில விடுதலைப்புலி உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து சில வாரங்கள் எங்கோ வைத்திருந்துவிட்டு பின்னர்

முகாமுக்குத் தம் குடும்பத்தினருடன் தங்குவதற்கு விட்டார்கள். லங்கா ராணுவத்திடம் சரணடையாத விடுதலைப்புலி உறுப்பினர்களையும் தமிழீழ காவல்துறையினரையும் லங்கா ராணுவத்திற்கு அடையாளப்படுத்துவதே இவர்களின் முக்கிய பணி. இவ்வாறு மக்களால் சிஐடி என்றழைக்கப்பட்ட ஒருவர் எனது கூடாரத்திற்கு அருகிலிருந்தார். விடுதலைப்புலி உறுப்பினர்கள் என்று சந்தேகப்பட்டோரை அவர் குறுக்கு விசாரணை செய்ததை நான் கண்டிருக்கிறேன். லங்கா ராணுவம் தன்னைச் சித்திரவதை செய்தே இவ்வேலையைச் செய்ய வைத்ததென்று அவர் சொன்னதாக மக்கள் பேசிக்கொண்டனர்.

போர் முடிவுக்கு வந்து மக்கள் தொகை முழுமையாக வெளியேறி முடியும் வரை முகாம் மக்கள் தாம் வெளியேறிய பின்னர் போரில் யார் யார் கொல்லப்பட்டார்கள் என்பதைப்பற்றி அதிகம் பேசினார்கள். குடும்பம் குடும்பமாகக் கொல்லப்பட்ட செய்திகளும் பேசப்பட்டன. ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர்களோ அல்லது ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களோ வெளியேறிய பின் முதன்முதல் சந்திக்கும்போது இவ்வகையான பேச்சுக்களையே நீண்டநேரம் பேசுவார்கள். அதுவரை தொடர்பு கிடைக்காத உறவினர்களை எவ்வாறு தேடலாம் என்பதும் உரையாடல்களில் பொதுவாக இடம்பெறும். போர் நிலத்திலிருந்து தாம் வெளியேறிய அனுபவங்களைப் பற்றியும் மிகவும் விரிவாகப் பேசுவார்கள். வெளியேறும் போது லங்கா ராணுவத்தாலோ விடுதலைப்புலிகளாலோ சுடப்படுவோம் என்ற பெரும் பீதியுடனேயே மக்கள் வெளியேறினார்கள். சூட்டுச்சத்தம் வரும்போது பீதியால் குடும்பங்கள் இக்கட்டத்திலும் பிரிந்தன. ஒரு தாய் ஒரு வாடகை மோட்டார்ப் படகில் வெளியேறியபோது லங்கா ராணுவம் விடுதலைப்புலிகள் என்ற சந்தேகத்தில் அதை நோக்கிச் சுட்டதால் தனது நாலு பிள்ளைகளையும் இழந்தார்.

போரின் முடிவின் பின்னர் வெளியேறியோர் நானிருந்த முகாமில் குறைவாகவே இருந்தனர். இருந்தவர்கள் இறுதி நாட்களைப்பற்றி விவரமானப் பேசினார்கள். இறுதிநாட்களில் உச்சமான எறிகணைத் தாக்கத்தால் தாம் நிமிர்ந்து நடக்கவில்லை என்று சொன்னார்கள். வெளியேறும்போது இறந்த உடல்களைக் கடந்து வெளியேறியதாகவும் சொன்னார்கள்.

அவர்களின் பேச்சில் அதிகம் இடம்பெற்ற வேறொரு விடயமாக அவர்கள் வன்னியில் பல தடவைகள் இடம்பெயர்ந்த போது தமது பொருட்களைத் தம்முடன் நகர்த்துவதற்காக விரயமாக்கிய பணச்செலவு பற்றிய பேச்சுக்களும் இருந்தது.

இறுதியில் இவற்றையெல்லாம் இழந்தது அவர்களுக்குப் பெரும் வேதனையைக் கொடுத்தது. கொஞ்சம் மனம் ஆறி இருக்கும்போது வன்னியிலிருக்கும் தமது காணியில் வளரும் மா, பலா போன்ற பழ மரங்களைப் பற்றியும் தோட்டத்தில் நட்ட மரக்கறி வகைகளைப் பற்றியும் பேசுவார்கள். தமது காணியில் இருக்கும் குடைவிரித்த மரங்கள் தரும் குளிர்ந்த நிழலை நிழலே இல்லாத கொதிக்கும் முகாமுடன் ஒப்பிட்டுப் பேசுவார்கள்.

முகாமின் நெருக்கமான இடர்பாடான வாழ்க்கையில் அங்கு நடப்பவைகளைப் பற்றியும் மக்கள் தீவிரமாகப் பேசுவார்கள். மக்களிடையே அதிகம் இடம்பெற்ற பேச்சுப் பொருளாகத் தண்ணீர் பிடிக்கும் வரிசைகளில் மட்டுப்படுத்தப்பட்ட தண்ணீருக்கான சண்டைகள் இருந்தது. முகாமில் சுமூகமாகவும் ஒற்றுமையாகவும் இருந்த மக்களிடையே தண்ணீர் சண்டைகள் வெறுப்புக்களை உருவாக்கியது.

நியூடெல்லியில் இருக்கும் இலங்கைக்கான நியூசிலாந்து தூதுவர் முகாமிலிருந்து என்னை வெளியே எடுப்பதற்கு முயற்சிகள் எடுத்தும் அவை பலனளிக்கவில்லை. உறவினர் ஒருவர் நான் அறுபது வயதைத் தாண்டியவர் என்ற அடிப்படையில் எனக்கு வெளியேபோக அனுமதி எடுத்து வந்தார். ஆனால் நான் வெளியே போவதற்கு ஆயத்தமானபோது லங்கா பாதுகாப்பு அமைச்சு எனது அனுமதியை ரத்து செய்து அமைச்சின் அனுமதியில்லாமல் நான் வெளியேற முடியாது என்று தடைவிதித்தது. அதிகாரரீதியாக நான் வெளியேற முடியாது என்பது எனக்குப் புலப்பட்டது. இறுதியில் வேறு வழியாக நான் வெளியேறி நியூசிலாந்து வந்து சேர்ந்தேன்.

டிசம்பர் 2009 கால கட்டத்தில் முகாமிலிருந்த பெரும் தொகையினர் தமது இடங்களுக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டனர். இருப்பினும் ஆயிரக்கணக்கானோர் தமது இடங்களுக்குச் செல்ல அனுமதியில்லாததால் வேறு வழியில்லாமல் இம்முகாமிலேயே இருந்தனர். மீள்குடியேற்றம் என்ற பெயரில் அனுப்பப்பட்டவர்களில் பலர் தமது சொந்தக் காணிகளுக்குப் போக அனுமதியின்றி வன்னியில் பல இடங்களில் தற்காலிகக் கூடாரங்களில் வசித்தனர். யாழ்ப்பாணத்தில் மீள்குடியேற்றம் செய்யப்பட்டவர்களில் அங்குள்ள துணைக்குழுக்களின் சித்திரவதைகளும் தொல்லைகளும் தாங்க முடியாமல் இரகசியமாக மீண்டும் மெனிக்பாம் முகாமுக்குத் திரும்பச் சென்றவர்களும் உண்டு.

# தேசமொரு தீவல்ல

நியூசிலாந்துக்கு வந்துசேர்ந்த பின்னர் வன்னி பற்றிய எனது நினைவுகளை ஒன்றுகூட்டும் போராட்டம் என்னுள் ஆரம்பமானது. நான் சேர்ந்து வேலை செய்த மனிதர்கள் என்னவானார்கள் என்பதை அறிவதற்கான ஒரு வேதனை கலந்த தேடல் முடிவில்லாமல் தொடர்ந்தது, தொடர்கிறது. ஒரு சமூகமே அழிக்கப்பட்டதால் அதன் பழைய தொடர்பாடல் வலைப்பின்னல்களும் இல்லாமல் போய்விட்டது. எனக்குத் தெரிந்தவர்களில் சிலர் உயிரிழந்தார்கள், சிலர் அங்கவீனமானார்கள், சிலர் தீவிலிருந்து தப்பி வெளியேறினார்கள், சிலர் காணாமற் போய்விட்டார்கள். வன்னியில் நான் 1990ம் ஆண்டிலிருந்து 2008ம் ஆண்டுவரையான காலத்தில் காணாமற்போனவர்களின் கதைகளைப் பதிந்திருக்கிறேன். இப்போது அந்த மனதைப் பிழியும் வேதனை எனக்கும். ஈழத்தமிழர் ஒவ்வொருவரும் அவர்களுக்குத் தெரிந்த ஒருவர் காணாமற் போய்விட்ட வேதனையை இப்போது அனுபவிக்கிறார்கள். எனக்கு மிகவும் நேசமான ஒரு மூன்று வயதுப் பெண் குழந்தையும் அவளின் பெற்றோர்களும் முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறிய பின்னர் காணாமற் போயுள்ளனர்.

முள்ளிவாய்க்கால் அழிவின்பின் ஈழத்தமிழர்களில் பெரும்பாலோர் ஒரு மாபெரும் இழப்பையும் தொடர்ந்த ஒரு வெறுமையையும் உணர்ந்தார்கள். ஈழத்தமிழ் அரசியல் தளத்தில் எங்கும் வியாபித்திருந்த விடுதலைப்புலிகள் அழிக்கப்பட்டதால் எல்லோரும் தமிழ் தேசியத்தை மீண்டும் பரிசீலிக்க வேண்டியவர்கள் ஆனார்கள். அதே நேரத்தில் முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறிய மக்களுக்கான ஒரு மாபெரும் மனிதாபிமானப் பணியையும் சுமக்க வேண்டியவர்கள் ஆனார்கள்.

முள்ளிவாய்க்கால் அழிவைத் தொடர்ந்து ஒரு வருடத்திற்கும் மேலாக விடுதலைப்புலிகளின் தோல்விக்கான காரணிகளை ஆய்வு செய்வதில் தமிழர்கள் மூழ்கியிருந்தார்கள். விடுதலைப்புலிகளின் அரசியல் திறமையின்மை, சர்வதேசமட்டத்தில் நண்பர்களை ஈட்டிக்கொள்ளாமை, லங்கா அரசின் ராணுவச் சாணக்கியம், புதிய

நண்பர்களை லங்கா அரசு தன்னுடன் இணைத்துக் கொண்டமை, லங்கா அரசின் இறுதிவரை போர் எனும் கடும்போக்கு, கருணாவின் துரோகம், போர்நிறுத்த ஒப்பந்தமும் அதனால் லங்கா அரசு உட்பட வெளியுலகத்திற்குக் கிடைத்த விடுதலைப்புலிகள் பற்றிய புலனாய்வு வாய்ப்புக்கள், மற்றும் விடுதலைப்புலிகளை அழிப்பதற்குச் சர்வதேச மட்டத்தில் தீட்டப்பட்ட சதிகள் என்பனவெல்லாம் விடுதலைப்புலிகளின் தோல்விக்குக் காரணிகளாக அலசப்பட்டன. இக்காரணிகள் எல்லாவற்றிலுமே சிறிதேனும் உண்மை இருக்கவே செய்கிறது. இவைகளில் முதலிரண்டு காரணிகளைத் தவிர ஏனைய காரணிகள் விடுதலைப்புலிகளால் கட்டுப்படுத்தப்பட்டிருக்கக் கூடியனவல்ல. விடுதலைப்புலிகள் சர்வதேச மட்டத்தில் நண்பர்களைத் தம்முடன் இணைக்கமுடியாமல் போனதற்கு வெளிக்காரணிகள் பல இருந்தன. இவைபற்றிக் கீழே அலசப்படும். இதை ஏற்றுக்கொண்டால் விடுதலைப்புலிகளின் தோல்விக்கான காரணிகளில் அவர்களின் அரசியல் திறமையின்மை ஒன்று மட்டுமே அவர்களின் கட்டுப்பாட்டுக்குள் இருந்த ஒரே காரணி. விடுதலைப்புலிகள் அரசியல் சாணக்கியத்துடன் உரிய நேரத்தில் சரியான முடிவுகள் எடுக்கத் தவறினார்களா? தமிழர்கள் இதைப்பற்றி சிந்திக்க வேண்டியவர்களாய் உள்ளனர்.

முள்ளிவாய்க்காலுக்குப் பின்னரான சர்வதேச பங்காளர்களின் உடனடி நடவடிக்கைகள் துயரம் தோய்ந்த சிரிப்பையே தருகின்றன. தீவிரவாதத்தை அழித்ததற்காக லங்கா அரசைப் பாராட்டி 2009ம் ஆண்டு மே 27 அன்று ஐநா மனித உரிமைச் சபை ஒரு தீர்மானத்தை[26] நிறைவேற்றி தன்னைத்தானே அவமதித்துக் கொண்டது. ஐநா பாதுகாப்புச்சபையில் நடந்தேறிய அரசியல் விளையாட்டுக்கள் சர்வதேச (அ) நீதியின் தரத்தைப் பகிரங்கப்படுத்தியது. இங்கும் லங்காவுக்கு எதிரான தீர்மானத்தைச் சீனாவும் ரஷ்யாவும் தமது தடுப்புரிமையைக் கொண்டு தடுத்துவிட்டன. ஐநா செயலாளர் நாயகத்தினால் அமர்த்தப்பட்ட நிபுணர் குழுவின் 2011ம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் வெளிவந்த அறிக்கை[27] துயரம் நிறைந்த நகைப்புக்குரிய இச்சர்வதேச நடவடிக்கைகளுக்கு ஓரளவு மாற்று மருந்தாக அமைந்தது. லங்கா–தமிழீழம் என்னும் கருப்பொருளில் சர்வதேசத்தரப்பினர் மூன்று பிரிவுகளாகப் பிரிந்தனர். இந்தியா, சீனா – ரஷ்யாவைக் கொண்ட லங்காவுக்குச் சாதகமான பிரிவு, மற்றும் மேற்குலகம் என்பனவே இம்மூன்று பிரிவுகள். விடுதலைப்புலிகளின் இம் மூன்று பிரிவினர் சார்ந்த நிலைப்பாடுகள் கவனத்திலெடுக்கப்பட வேண்டியவை.

ஈழத்தமிழரின் ஆயுதப் போராட்ட ஆரம்ப காலத்தில் ஈழத்தமிழரிடையே உருவான பல போராட்டக் குழுக்களுக்குப்

பயிற்சி அளிக்க இந்தியா உதவி செய்தது. இக்குழுக்களில் முதன்மையான போராட்டக் குழுவாக வளர்ச்சியடைந்த விடுதலைப்புலிகள் தமிழீழத் தனிநாட்டுக் கொள்கையில் உறுதியாக இருந்தார்கள். தமிழீழம் தனிநாடாவது இந்தியாவின் நலனுக்கு எதிரானது என்று இந்தியா கணிப்பிட்டது. சிறுபான்மையினரை ஒடுக்கும் ஓர் அரசுக்குக் கொள்கை உறுதியுள்ள ஊழல் அற்ற ஓர் ஆயுதக்குழு அயலில் வளர்வது அச்சுறுத்தலாகவே இருந்தது. விடுதலைப்புலிகளும் இந்தியாவின் கைப்பிள்ளையாக ஆட மறுத்தனர். இக்காரணங்களால் இந்தியா விடுதலைப்புலிகளை ஒரு பகைமை அமைப்பாகவே கையாண்டு வந்தது. 1980களில் பிற்பகுதியில் இந்தியப் படைகளுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையில் இடம்பெற்ற போர் இப்பகைமையின் விளைவே அல்லாமல் இப்பகைமை அப்போரின் விளைவால் ஏற்பட்டதல்ல.

தமிழ்நாட்டு மக்களும் ஈழத்தமிழரும் கலாச்சாரத்தால் இறுக்கமாகப் பிணைக்கப்பட்டவர்கள். விடுதலைப்புலிகளின் இயற்கையான நண்பர்களாக இருக்கவேண்டியவர்கள். ஆனால் இந்தியா விடுதலைப்புலிகள் மேல் கொண்டிருந்த பகைமை காரணமாகத் தமிழ்நாட்டு மக்களின் நட்பும் மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட அளவிலேயே இருந்தது. இருந்தும் நீண்டகால நோக்கில் விடுதலைப்புலிகள் இந்தியாவை தம் நட்பு நாடாகவே கருதி வந்தனர். இதை என்னால் வன்னியில் அவதானிக்கக் கூடியதாக இருந்தது. இந்தியாவின் நலனுக்கு எதிராக இருக்கக்கூடிய எவ்விதமான நட்புறவையும் விடுதலைப்புலிகள் ஏற்றிருக்க மாட்டார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. இக்காரணத்தால் சீனாவிடம் உதவி பெறுவதும் விடுதலைப்புலிகளின் கணிப்பில் இருக்கவில்லை. 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தத்தின் பின்னர் விடுதலைப்புலிகளை முதன்முதலில் சென்று சந்தித்தது இலங்கைக்கான சீனாவின் தூதுவரே என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

விடுதலைப்புலிகள் வேறொரு நாட்டுடன் ஒப்பந்தம் செய்வதற்கும் அவர்களின் கொள்கை இடம் கொடுத்திருக்காது என்றே நான் நம்புகிறேன். அத்தகைய நட்புறவு ஒப்பந்தம் தமிழீழத்தின் இறைமையைப் பாதித்திருக்கும் என்பது நிச்சயம். ஈழத்தமிழர் போராட்டம் வேறு ஒருவரிலும் தங்கியிருக்காமல் ஈழத்தமிழரில் மட்டுமே தங்கியிருக்கிறது என்று வன்னியில் விடுதலைப்புலிகள் தொடர்ச்சியாகச் சொல்லி வந்தார்கள். மேலும் மேற்குலகில் வாழ்ந்த செல்வாக்குள்ள புலத்துத் தமிழரும் விடுதலைப்புலிகள் மேற்குலகின் நலனுக்கு எதிரான நட்புகளைப்

பேணுவதை ஆதரித்திருக்க மாட்டார்கள். விடுதலைப் போராட்டத்தினூடாகப் புதிதாக அங்கீகரிக்கப்பட்ட கிழக்குத்திமோர், எரித்திரியா ஆகிய இரு நாடுகளுடனும் விடுதலைப்புலிகள் நட்புறவை நாடினார்கள். வலிமை குறைந்த இவ்விரு நாடுகளும் எவ்விதத்தில் விடுதலைப்புலிகளுக்கு ஆதரவு கொடுத்தார்கள் என்பது பற்றி எனக்குத் தெரியவில்லை.

அமெரிக்காவுக்கும், சோவியத் குடியரசுக்கும் இடையே நிகழ்ந்த பனிப்போரின் முடிவுக்குப் பின்னர் சீனா பொருளாதாரப் பலம் மிக்க நாடாக வளர்ச்சி அடைந்திருக்கிறது. ஆப்பிரிக்கா, பசுபிக் போன்ற உலகின் பல பாகங்களில் தனது பொருளாதார வலிமையூடாக தனது செல்வாக்கை நிலைநிறுத்தி வருகிறது. 2002ம் ஆண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தச் சூழலில் இலங்கைத் தீவிலும் தனது செல்வாக்கை நிலைநாட்ட சீனா விரும்பியிருக்கும் என்பது நிச்சயம். போர்நிறுத்த ஒப்பந்தம் 2006ம் ஆண்டிலிருந்து வலுவிழந்து போனபோது அவ்வொப்பந்தத்தை மதிக்கும்படி மேற்குலகம் லங்கா அரசுக்கு அழுத்தங்கள் கொடுத்தது. இவ் அழுத்தங்களைச் சமப்படுத்தும் நோக்குடன் லங்கா அரசு சீனாவின் செல்வாக்கை வரவேற்றது. சீனாவின் ஒரு பெரும் திட்டமாக ஹம்பாந்தோட்ட துறைமுகத் திட்டம் அமைந்தது. இந்தியக் கடலில் தனது ஆதிக்கத்தை செலுத்தும் நேக்குடன் சீனா முன்னெடுக்கும் திட்டத்தின் ஒரு அம்சமாக இத்திட்டத்தைப் பலர் கணிப்பிட்டனர். விடுதலைப்புலிகளுடனான இறுதிப்போரில் லங்கா ராணுவத்திற்குச் சீனா பெரும் ஆயுத உதவிகளையும் வழங்கியது. சீனாவின் லங்காவுடனான உறவைத் தொடர்ந்து ரஷ்யா உட்பட்ட வேறும் பல நாடுகள் லங்காவிற்குச் சாதகமான பிரிவிற்குப் பலம் சேர்த்தன.

இத்தகைய பின்னணியிலும் கூட விடுதலைப்புலிகளின் வளர்ச்சியும் பலமும் தொடர்ந்தது. இது சார்ந்த மேற்குலகத்தின் நிலைப்பாட்டையும் ஆராய்வது முக்கியம். முள்ளிவாய்க்கால் அழிவுக்குப் பிந்திய காலத்தில் சர்வதேச மன்னிப்புச் சபை, மனித உரிமை கண்காணிப்பகம், சர்வதேச நெருக்கடிக்குழு ஆகிய மூன்று அமைப்புக்களும் சேர்ந்து லங்காவின் மேல் போர்க்குற்றங்கள் சுமத்துவதில் தீவிரமாகச் செயற்பட்டன. அவர்களின் செயல்களுக்கு ஆதரவாகப் பிரிட்டனின் சனல்–4 தொலைக்காட்சிச் சேவையின் இதுசார்ந்த ஒளிபரப்புக்கள்[28] இருந்தன. முள்ளிவாய்க்காலில் இடம்பெற்ற இனஅழிப்பின் ஒரு சிறுபகுதியையே தொட்டுக்காட்டிய இத்தொலைக்காட்சியின் ''சிறிலங்காவின் கொலைக்களம்'' என்னும் ஆவணப்படம் இவர்களின் முக்கியமான ஆயுதமாகியது. ஐநா நிபுணர் குழுவின் 2011ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தின் அறிக்கையிலும்

இவர்களின் படைப்புகள் வெளிப்படுகிறது. இம்மூன்று அமைப்புக்களும் ஒரே நோக்குடன் செயற்படுகின்றன என்பதைச் சுலபமாக ஊகிக்கலாம்.

மூன்று தசாப்தங்களாகத் தொடர்ந்த விடுதலைப்புலிகளின் போராட்டத்தை மேற்குலகம் கையாண்டமுறையை உன்னிப்பாக அவதானித்து வந்தவர்களுக்குச் சர்வதேச உறவாடல்களைப் பற்றிய ஆழமான புரிதலுக்கான அரிய சந்தர்ப்பமாக இது விளங்குகிறது. முள்ளிவாய்க்காலுக்கு முந்திய காலத்தில் இதே அமைப்புக்களான சர்வதேச மன்னிப்புச் சபை, மனித உரிமை கண்காணிப்பகம், சர்வதேச நெருக்கடிக்குழு மூன்றும் எவற்றைக் கவனத்திலெடுத்து வந்தன? இவை முக்கியமாகக் கவனத்திலெடுத்து வந்தவற்றுள் விடுதலைப்புலிகளுக்கு எதிரானதும் புலத்துத் தமிழருக்கு எதிரானதுமான குற்றச்சாட்டுக்கள் பல அடங்கும். புலத்துத் தமிழருக்கெதிரான குற்றச்சாட்டுகள் சில முள்ளிவாய்க்கால் அழிவுக்குப் பின்னரும் தொடர்கிறது. இதையும்விட தமிழீழம் தனி நாடாவது பற்றிய அவர்களின் தீர்க்கமான எதிர்ப்பையும் கணக்கிலெடுக்க வேண்டும். இதேபோன்ற கருத்துக்களை அமெரிக்கா உட்பட மேற்குலக நாடுகள் பலவும் வெளியிட்டிருப்பதால் இவர்களின் கருத்தையே பொதுவான மேற்குலகத்தின் கருத்தாக எடுத்துக் கொள்ளலாம். இவை ஆராயப்பட வேண்டியவை.

முள்ளிவாய்க்கால் அழிவுக்கு முந்திய காலத்தில் இதே மேற்குலக அமைப்புக்களும் நாடுகளும் விடுதலைப்புலிகளுக்கு எதிரான ஒரு மூர்க்கமான பிரச்சாரத்தை முன்னெடுத்தன. அவற்றுள் விடுதலைப்புலிகளின் சிறுவர் போராளிகள் பற்றிய பிரச்சாரம் மிகவும் மூர்க்கமாகவும் தளர்ச்சியில்லாமலும் முன்னெடுக்கப்பட்டது. அடுத்ததாக அவர்களின் கடும் கண்டனங்களுக்கு உள்ளானதாக: அரசியல்வாதிகள், தமிழ்த்துரோகிகள் என கருதப்பட்டோர், தீவின் தெற்கில் வசிக்கும் பொதுமக்கள் ஆகியோரை விடுதலைப்புலிகள் கொலை செய்கிறார்கள் என்ற குற்றச்சாட்டு இருந்தது. விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசத்தில் அவர்கள் ஆட்சியாதிக்கம் செய்கிறார்கள் என்பதும் தொடர்ச்சியாகக் கண்டனத்துடன் கூறப்பட்டு வந்தது. இதையும்விட விடுதலைப் புலிகளின் அனைத்துலகப் பிரிவின் செயற்பாடுகளென புலத்துத் தமிழரிடம் கட்டாயப் பணவசூல், ஆட்கடத்தும் வியாபாரம், போதைப்பொருள் கடத்தல், கடன் அட்டை மோசடி எனப் பல குற்றச்சாட்டுக்கள் வைக்கப்பட்டன. விடுதலைப்புலிகளுக்கு எதிரான மேற்குலகத்தின் இம்மூர்க்கமான பிரச்சாரத்திற்குள் புலத்துத் தமிழ்

ஆர்வலர் பலரைப் போல நானும்[29] அகப்பட்டிருக்கிறேன். விடுதலைப்புலிகளுக்கு எதிராக இக்கடும் செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட்ட அதே காலத்திலும் அதற்கு முன்னரும் லங்கா அரசின் நீண்டு தொடர்ந்த தமிழர் மேலான கொடுமைகள் ஏராளம். இவைபற்றியெல்லாம் நிசோர் உட்பட்ட தமிழர் அமைப்புகளே பதிவுகள் செய்தன அல்லாமல் மேற்குலக அமைப்புக்கள் பெயருக்காக மட்டும் சிலவற்றைப் பதிவு செய்துவிட்டு ஏராளமானவற்றைப் புறக்கணித்தன. கண்டனங்களை வெளியிடுவதில் மேற்குலக அமைப்புக்களின் நேர்மையின்மையும் பக்கசார்பும் உன்னிப்பாக அவதானித்தோருக்குத் தெளிவாகவே தெரிந்தது. அக்காலத்தின் மேற்குலக அமைப்புக்களின் நிலைப்பாட்டிற்கும் முள்ளிவாய்காலுக்குப் பின்னான அவர்களின் நிலைப்பாட்டிற்கும் உள்ள பாரிய வேறுபாடுகளை ஒப்பிட்டால் முக்கியமான சில புரிதல்கள் ஏற்படும்.

முள்ளிவாய்க்கால் அழிவுக்கு ஒரு சில மாதங்களுக்குள்ளேயே சர்வதேச நெருக்கடிக் குழு அமைப்பு புலத்துத் தமிழர் தமிழீழ தனிநாடு என்ற நோக்கத்தை கைவிடாததால் மீண்டும் வன்முறைகள் வெடிக்கலாம் என்று அறிக்கை[30] விட்டார்கள். ஒரு மாபெரும் அழிவினால் பாதிக்கப்பட்டு கலக்கத்திலிருந்த புலத்துத் தமிழர் மேல் இத்தகைய ஒரு குற்றச்சாட்டை அது வைத்தது. இது ஏன்? இதே சர்வதேச நெருக்கடிக் குழுவின் அறிவிக்கப்பட்ட கொள்கை[31] ஒன்றும் கவனிக்கப்பட வேண்டும். உலகில் இன்று காணப்படும் ஏராளமான தனிநாடு வேண்டுமென்ற கோரிக்கைகளில் இரண்டு தனிநாட்டுக் கோரிக்கைகளுக்கே இவ்வமைப்பு எதிராக உள்ளதாம். இதில் ஒன்றாக தமிழீழ கோரிக்கை உள்ளது. மற்றது குர்திஸ்தான் கோரிக்கை. இது ஏன்??

மேற்குலகம் தொடர்ச்சியாகவும் பக்கச்சார்பாகவும் விடுதலைப்புலிகளுக்கு எதிரான கொள்கையைக் கடைப்பிடித்து வந்திருக்கிறது. விடுதலைப்புலிகளின் தவறுகளை பெரிதாக்கி அவ்வமைப்பை மிகவும் மோசமானதாகச் சித்தரித்தது. அதே நேரத்தில் அக்காலத்தில் லங்கா அரசின் கொடுமைகளைப் பற்றிப் பாராமுகமாக இருந்தது. மேலும் தமிழீழத் தனிநாடொன்றே தீர்வு என்று சந்தேகமில்லாமல் காட்டப்பட்ட பின்னரும் இக்கோரிக்கையை அடியோடு நிராகரிக்கிறது. இப்புதிர்கள் தமிழர்களால் விடுவிக்கப்பட வேண்டியவை.

இயற்கை பற்றியும் எமது சுற்றுச்சூழல் பற்றியும் எமக்கு விழிப்புணர்வு ஏற்படுவதற்குச் சூழல்–மண்டலம், உயிரியல்கோளம் போன்ற சில சொற்பதங்கள் இன்று பிரபலமாகவுள்ளன. உயிர்கள்

எல்லாம் ஒன்றோடொன்றும் சூழலிலும் தங்கியிருப்பதை இப்பதங்கள் எமக்கு உணர்த்துகின்றன. இதைப்போலவே உலகளாவிய மனிதரிடையேயும் ராணுவ–அரசியல்–பொருளாதாரம் சார்ந்த ஒரு இருப்புநிலை உருவாகியுள்ளது. ஆனால் இதை எமக்கு உணர்த்துவதற்கான சொற்பதங்கள் எதுவும் பிரபலமாக்கப்படவில்லை. இத்தகைய விழிப்புணர்வு மனிதர்களுக்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்பதே உத்தேசமாகவும் இருக்கலாம். தமிழர்களுக்கு திணிக்கப்பட்டிருக்கும் பல புதிர்களை விடுவிப்பதற்கு உலகளாவிய ரீதியில் இன்று நிலவும் ராணுவ–அரசியல்–பொருளாதாரம் சார்ந்த தங்குநிலை பற்றிய விழிப்புணர்வு மிகவும் அவசியம். விடுதலைப்புலிகளுடைய போராட்டத்தின் முடிவின் மேல் இத்தங்குநிலை ஏற்படுத்திய தீர்க்கமான தாக்கத்தையும் புரிந்துகொள்ளல் அவசியம்.

விடுதலைப்புலிகள் பல தவறுகளைச் செய்திருக்கிறார்கள். ஆனால் மேற்குலக அமைப்புக்கள் தொடர்ச்சியாக வர்ணித்ததைப் போல விடுதலைப்புலிகள் ஒரு கொடிய அமைப்பல்ல. விடுதலைப்புலிகளை ஒழித்தால்தான் உலகம் நன்மையடையும் என்று கூட இவர்கள் வர்ணித்திருக்கிறார்கள்[32]. புலத்துத் தமிழரின் உதவியுடனும் வேறு எவரினதும் உதவியுமில்லாமலும் கொடூரமான லங்கா அரசை மட்டுமே விடுதலைப்புலிகள் எதிர்த்தார்கள். அவர்கள் சர்வதேச மட்டத்தில் தனிமைப்படுத்தப்பட்டிருந்தாலும் தம் இலக்கை நோக்கி வெற்றிகரமாக முன்னேறிக் கொண்டிருந்தார்கள். முழு உலகையும் எதிர்த்து அதிலும் கூட வெற்றி கொள்ளுவார்கள் போலத் தோன்றியது. விடுதலைப்புலிகள் பற்றிய இத்தகைமையே உலகில் இன்று நிலவும் ஒழுங்கைக் குலைப்பதாக இருந்தது. அடைக்கப்பட்ட ஆட்டுமந்தைகளில் ஒன்று படகைத் திறந்து வெளியேற அறிந்துகொண்டால் அதைச் சுடுவதைத்தவிர வேறு வழியில்லை. இல்லாவிட்டால் ஆட்டுமந்தைகள் எல்லாம் தொடர்ந்து வெளியேற ஆரம்பித்துவிடும். படகைத் திறக்கத் தெரிந்த ஆடுதான் விடுதலைப்புலிகள். அவர்களை அழிப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஈழத்தமிழர்கள் செய்த தியாகங்களிலும் பார்க்க மிகக் குறைவான தியாகங்களுடன் எத்தனையோ தேசங்கள் தம் தனிநாட்டுக் கோரிக்கையை அடைந்திருக்கின்றன. அவர்களின் வெற்றிக்குக் காரணம் அவர்களின் கோரிக்கை உலகின் ராணுவ–அரசியல்–பொருளாதார கோளத்துடன் ஒத்துப் போனமையே.

வன்னியில் விடுதலைப்புலிகளின் கீழ் அதிசயிக்கத்தக்க பல சமூக மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. காந்தியும், அம்பேத்கரும்,

பெரியாரும் எட்டாத வெற்றியை வன்னியில் விடுதலைப்புலிகள் எட்டினார்கள். தெற்காசியாவில் வியாபித்திருக்கும் சாதி எண்ணங்கள் வன்னியில் அழிக்கப்பட்டன. பெண் விடுதலைக்கான முன்னோட்டங்கள் அங்கு உருவாகியிருந்தன. போராட்ட உணர்வை மக்கள் இதயங்களில் ஏற்றி அங்கு மக்கள் ஒன்று கூட்டப்பட்டிருந்தார்கள். தமிழரும் தெற்காசிய மக்களும் பலனடையக் கூடிய இன்னும் பல சமூக மாற்றங்களுக்கான சாத்தியங்களை வன்னி தன்னுள் கொண்டிருந்தது. இது இப்போது அழிக்கப்பட்டுவிட்டது. இன்று ஏதேனும் ஒரு அற்புதத்தால் தமிழீழம் தனி நாடாகப் பிறந்தாலும் அன்று வன்னி தன்னுள் கொண்டிருந்த நம்பிக்கைகளையும் சாத்தியங்களையும் இனிவரக் கூடிய தமிழீழத்தால் மீட்டெடுக்க முடியாது.

எனது வன்னி அனுபவங்களின் இத்தொகுப்பை ஒரு கவிதையுடன் நிறைவு செய்கிறேன். இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது எழுதப்பட்ட பாரதியாரின் இக்கவிதை அன்றைய வன்னியின் இன்றைய நிலைமையைத் துல்லியமாகப் பிரதிபலிக்கிறது. இதை வாசிக்கும் போதெல்லாம் அன்றைய வன்னிக்காக நான் அழுகிறேன்.

**சுதந்திரப் பயிர்**

தண்ணீர் விட்டோ வளர்த்தோம்
சர்வேசா இப்பயிரை
கண்ணீரால் காத்தோம்
கருகத் திருவுளமோ

எண்ணமெல்லாம் மெய்யாக
எம்முயிரினுள் வளர்ந்த
வண்ண விளக்கிது
மடியத் திருவுளமோ

ஓராயிரம் வருடம்
ஓய்ந்து கிடைந்த பின்னர்
வராது போல் வந்த
மாமணியை தோற்போமோ

மாதரையும் மக்களையும்
வன் தன்மையால் பிரிந்து
காதல் இளைஞர்
கருத்தழிதல் காணாயோ

மேலோர்கள் வெஞ்சிறையில்
வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ

எண்ணற்ற நல்லோர்
இதயம் புழுங்கி இரு
கண்ணற்ற சேய் போல்
கலங்குவதும் காண்கிலையோ



# சுருக்கமான வரலாற்றுக் குறிப்பு

*இலங்கைத் தீவின் இன்றைய மக்கள் தொகை ஏறக்குறைய இருபது மில்லியன். இவர்கள் நாலு பெரும் இனப்பிரிவுகளாக – சிங்களவர் (74%), ஈழத்தமிழர் (13%), இஸ்லாமியர் (7%), மலையகத்தமிழர் (6%) – உள்ளனர்[33]. கடைசியாக இத்தீவுக்கு வந்த மலையகத்தமிழர்கள் 200 வருடங்களுக்கு முன் வந்து தீவின் நடுவிலுள்ள மலைப்பகுதிகளில் வசிக்கிறார்கள். இவர்கள் பிரித்தானியக் காலனிய ஆட்சியாளர்களால் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்வதற்காக இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்டவர்கள். இஸ்லாமியர்கள் காலனிய ஆட்சிக்கு முன்னரே வணிகர்களாக இத்தீவிற்கு வந்தவர்கள். 1980களில் இனப்பிரச்சினை தீவிரமடையத் தொடங்கு முன்னர் இஸ்லாமியர்கள் தமிழ் மொழியைத் தம் வீடுகளில் பேசினர். இனப்பிரச்சினை தீவிரமடைய இது மாறத் தொடங்கியது. இன்று சிங்களவர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் இடங்களில் சிங்கள மொழியையும் ஈழத்தமிழர் பெரும்பான்மையாக வசிக்கும் இடங்களில் தமிழ் மொழியையும் தம் வீடுகளில் பேசுகிறார்கள். மலையகத்தமிழரும், இஸ்லாமியர்களும் இத்தீவின் இனப்பிரச்சினைக்குள் இழுக்கப்பட்டு இதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.*

*இத்தீவின் இனப்பிரச்சினை இத்தீவில் பல ஆயிரமாண்டுகளாக வாழ்ந்து வந்த சிங்களவருக்கும் ஈழத்தமிழருக்கும் இடையே ஆனதாகும். இலங்கைத் தீவில் பல நூறாயிரமாண்டுகளாக மனிதர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்[34]. இருப்பினும் சிங்களவர்களினதும் ஈழத்தமிழரினதும் வேர்கள் இலங்கையின் புத்தமதத் தொன்மக் கதைகளில் புதைந்து கிடப்பதால் வரலாற்று உண்மையைத் தேடுவதென்பது முரண்பாடுகள் நிறைந்த ஒரு செயலாகவே உள்ளது. இதனால் இத்தீவின் இனப்பிரச்சினை பற்றிய போராட்டம் அரசியல் தளத்தில் மட்டுமல்லாமல் வரலாற்று ஆய்வுத் தளத்திலும் முன்னெடுக்கப்படுகிறது. வாசகர்கள் இதனையும் முக்கியமாகக் கவனத்தில் கொள்ளவேண்டும்.*

இலங்கைத் தீவையும் இந்திய உபகண்டத்தையும் சிறு கப்பல்களில் கடக்கக்கூடிய ஒரு சிறிய நீரிணையே பிரிக்கிறது. இதனூடாகத் தென்னிந்தியாவுக்கும் இத்தீவிற்கும் இடையே வணிகம், மொழி, கலாச்சாரம் ஆகியன தொடர்ச்சியாகப் பரிமாறப்பட்டு வந்திருக்கிறது[35]. புத்த சமயம் இப்பகுதிகளுக்குப் பரவியதைத் தொடர்ந்து இந்தியாவில் புத்தம் அழிந்துபோனது. இந்தியாவை அண்மித்திருக்கும் இலங்கைத் தீவின் பகுதிகளிலும் இது அழிந்துபோனது. இத்தீவின் ஏனைய பகுதிகளில் புத்தம் பெரும் வளர்ச்சி அடைந்தது. இதன் தாக்கத்தால் அங்கு ஒரு புதிய மொழி, சிங்கள மொழி, உருவாகியது. தென்னிந்தியாவை அண்மித்த இத்தீவின் பகுதிகளில் தென்னிந்திய மொழியான தமிழ் மொழி வேரூன்றியது. இதனால் சிங்கள மொழி பேசுவோர் புத்த மதத்தவர்களாகவும் தமிழ் மொழி பேசுவோர் தென்னிந்தியாவின் இந்து மதத்தவர்களாகவும் இருக்கின்றனர்.

பதினாறாம் நூற்றாண்டிலிருந்து நாலு நூற்றாண்டுகள் இலங்கைத் தீவு மூன்று காலனிய ஆட்சியாளரின் அதிகாரங்களுக்கு உள்ளானது. காலனிய ஆட்சியாளர்கள் வந்திறங்கியபோது இத்தீவு பல சிற்றரசர்களினதும் குடித்தலைமைகளினதும் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. முதலில் வந்திறங்கிய காலனிய ஆட்சியாளர் போச்சுகேயர். தீவின் கரையோரப் பகுதிகளிலேயே இவர்களால் அதிகாரம் செலுத்த முடிந்தது. போச்சுக்கேயரின் மதமாற்ற நடவடிக்கைகளால் அதிகமான கரையோரப் பகுதி மக்கள் கத்தோலிக்க மதத்தைத் தழுவினர். இத்தீவிலுள்ள சிங்களவர்கள் ஈழத்தமிழர்கள் ஆகிய இரு இனத்தவர்களிடையேயும் ஒட்டுமொத்தமாக 7 சதவீதமானோர் கத்தோலிக்க மதத்தவர்களாக உள்ளனர். இவர்களுக்குப் பின்னர் டச்சுக் காலனிய ஆட்சியாளர் கரையோரப் பகுதிகளைக் கைப்பற்றினர். டச்சுகாரருக்குப் பின்னர் வந்த பிரித்தானியக் காலனிய ஆட்சியாளர்கள் 1815ம் ஆண்டில் இத்தீவை முழுமையாகக் கைப்பற்றினர். இவர்களூடன் கத்தோலிக்கமல்லாத கிறிஸ்துவ மதமும் இத்தீவிற்கு வந்து சேர்ந்தது. சிங்களவர்கள் ஈழத்தமிழர்கள் ஆகிய இரு இனத்தவரிலும் ஒரு சிறுபான்மையினர் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர்.

இலங்கைத் தீவில் காணப்படும் தீவிர புத்தத்தைப் பற்றி எழுதிய மானுடவியல் ஆய்வாளர் தம்பையா, இதன் விதைகள் பிரித்தானிய காலனியத்தின் காலமான 1860–1915ம் ஆண்டுக் காலத்திலே தோன்றியது என்று கூறுகிறார். இத்தீவிர புத்தத்தின் கோபம் முதலில் காலனிய ஆட்சியாளர்களின் மேலுள்ள எதிர்ப்பாகவும், வணிகத்தில் ஆதிக்கம் செலுத்திய இஸ்லாமியர்கள் மேலுள்ள எதிர்ப்பாகவுமே வெளிப்பட்டது.

1992ம் ஆண்டு வெளியிடப்பட்ட தம்பையாவின் நூல்[36] இலங்கையில் தடைசெய்யப்பட்டுள்ளது. பிரித்தானியக் காலனியத்தின் காலத்திலிருந்து இத்தீவின் அரசியல் வரலாற்றை ஆராயும் இந்நூலிற் காணப்படும் வரலாற்றின் சுருக்கமே கீழே தரப்படுகிறது. 1992ம் ஆண்டுக்குப் பிந்திய வரலாற்றுக் குறிப்புகள் ஆய்வாளர் வேலுப்பிள்ளையின் ஒரு ஆய்வுக் கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது[37].

காலனிய ஆட்சியின் முடிவுக் காலமான 1931ம் ஆண்டு இலங்கை வாழ் மக்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. 1948ம் ஆண்டு பிரித்தானியக் காலனிய ஆதிக்கத்திலிருந்து இலங்கை விடுதலை பெற்றது. காலனிய ஆதிக்கத்தின் இறுதிக் கட்டமான 1915–1946ம் ஆண்டுகளிலேயே இனப்பிரச்சினை சூடு பிடிக்கத் தொடங்கிவிட்டது. சிங்களப் பெரும்பான்மை ஆட்சிக்கு எதிரான தமிழரின் கருத்துக்கள் ஏற்கனவே தோன்றிவிட்டன. தமிழர்களின் இந்த ஆரம்பகால எதிர்ப்புக்களைப் புறந்தள்ளிவிட்டு இலங்கை ஒற்றை ஆட்சியுள்ள சுதந்திர நாடாகப் பிரகடனப்படுத்தப்பட்டது.

சுதந்திர இலங்கையின் முதல் அரசு உடனடியாக மலையகத் தமிழரின் வாக்குரிமையைப் பறித்தது. இதனால் இலங்கையில் வாக்குரிமை பெற்ற தமிழர் தொகை பாதியாயிற்று. இதைத் தொடர்ந்து தமிழரசுக் கட்சியின் தோற்றத்துடன் தமிழீழத்தில் சுயாட்சிக்கான போராட்டமும் ஆரம்பமானது. கூட்டாட்சி முறையில் தமிழீழத்தில் சுயாட்சி கோரிக்கையைத் தமிழரசுக் கட்சி முன்வைத்துத் தேர்தலில் போட்டியிட்டது.

தீவிர புத்தமும் நாடாளுமன்றத் தேர்தல் அரசியலும் இப்போது ஒன்றிணைந்து கொண்டன. சிங்கள – புத்த தேசியவாதம் தேர்தல் வாக்குகளைக் கைப்பற்றுவதற்குச் சிறந்த பிரச்சார உத்தியாயிற்று. சிங்கள மக்களிடையே இரு பெரும் கட்சிகள் தோன்றி இரண்டுமே சிங்கள புத்த தேசியவாதத்தை முன்வைத்து தேர்தல்களில் போட்டியிட்டு மாறி மாறி வெற்றிபெற்றன. இச் சிங்கள – புத்த தேசியவாதம் தமிழ் மக்களுக்கு எதிரான உணர்வுகளையும் தேர்தல் பிரச்சாரத்தில் கையாள ஆரம்பித்தது. 1956ம் ஆண்டில் பிரகடனப்படுத்தப்பட்ட சிங்களம் மட்டுமே என்ற மொழிச்சட்டம் தமிழர்களுக்குப் பெரும் அடியாக விழுந்தது. அன்று வரை சிங்களம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளும் அதிகார மொழிகளாக இருந்ததை மாற்றி சிங்களம் மட்டும் என்ற மொழிச் சட்டம் கொண்டுவரப்பட்டது. இதனால் பெரும்பான்மையான தமிழ் பேசும் மக்கள் ஒரே நாளில் எழுத்தறிவில்லாதவர்களாக ஆக்கப்பட்டனர்.

தமிழரசுக் கட்சியின் தலைமையில் இத் தனிமொழிச் சட்டத்திற்கு எதிராகத் தமிழ் பேசும் மக்கள் எல்லோரும் அமைதிவழிப் போராட்டம் நடத்தினர். போராட்டத்தில் பங்கெடுத்தவர்கள் லங்கா ராணுவத்தால் தாக்கப் பட்டனர். பலர் சிறையில் அடைக்கப்பட்டனர். இதைத் தொடர்ந்து 1958ம் ஆண்டில் ஈழத்தமிழர்களுக்கு எதிரான முதலாவது இனப்படுகொலை நடந்தேறியது. இவ் இனப்படுகொலை பற்றி டார்சி விட்டார்ச்சி என்பவர் எழுதிய "Emergency '58" என்னும் நூல் பிரபலமானது. இந்நூலும் இலங்கைத் தீவில் தடை செய்யப்பட்டது.

1964ம் ஆண்டில் லங்காவும் இந்தியாவும் மலையகத்தமிழர் பற்றிய ஒரு ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டன. 200 ஆண்டுகளுக்கு மேலாக இத்தீவில் வாழ்ந்து வந்த மலையகத்தமிழரில் பாதியை மீண்டும் இந்தியாவுக்கு அனுப்புவதற்காக இவ் ஒப்பந்தம் வரையப்பட்டது. இவ்வொப்பந்தமும், மலையகத்தமிழரின் குடியுரிமையும், அவர்களை இந்தியாவில் மீள் குடியமர்த்தும் திட்டமும் பல காலமாகத் தீர்வில்லாத பிரச்சினைகளாகத் தொடர்ந்தன.

ஈழத்தமிழரின் தமிழரசுக் கட்சிக்கும் சிங்கள அரசுகளுக்கும் இடையே கைச்சாத்திடப்பட்ட பல ஒப்பந்தங்கள் மாறி மாறிக் கிழித்தெறியப்பட்டன. ஆட்சியிலிருந்த சிங்களக் கட்சி தமிழரின் கட்சியுடன் ஒப்பந்தம் செய்தபோதெல்லாம் மற்ற சிங்களக் கட்சிகள் சிங்கள மக்களின் எதிர்ப்பு உணர்வுகளைத் தூண்டிவிட்டு ஒப்பந்தத்தைக் கைவிடச்செய்தன. இவ்வாறு கிழித்தெறியப்பட்ட ஒப்பந்தங்களுக்கு இடையிடையே அரசபடைகளின் ஆதரவுடன் தமிழருக்கு எதிரான இனப்படுகொலைகள் பலவும் நடந்தேறின. 1958ம் ஆண்டில் நடந்ததைத் தொடர்ந்து அதைவிட மிகமோசமான இனப்படுகொலைகள் 1977, 1981, 1983ம் ஆண்டுகளில் நடந்தேறின. இவற்றையும் இன்னும் ஏராளமான லங்கா ராணுவத்தின் படுகொலைகளையும் விபரிக்கும் ஒரு ஆவணத் தொகுப்பைத் தயாரிக்கும் திட்டத்தில் நானும் ஈடுபட்டேன். இதையும் இந்நூலில் விபரிக்கிறேன். 1981ம் ஆண்டு யாழ்ப்பாணப் பொதுசன நூல் நிலையம் லங்கா அரச படைகளின் ஆதரவுடன் சிங்களக் காடையர்களால் எரியூட்டப்பட்டது. ஈடுசெய்ய முடியாத பல பழம் தமிழ் நூல்கள், தெற்காசியாவிலேயே இரண்டாவது பெரிய இத்தகைய நூல்களின் திரட்டு அழிக்கப்பட்டது[38].

1971ம் ஆண்டு லங்கா அரசு பல்கலைக்கழக அனுமதிக்கான ஒரு புதிய திட்டத்தைக் கொண்டு வந்தது. ஈழத்தமிழர்கள் பலர் தமிழருக்கு

எதிரான ஒரு செயற்பாடாக இதை நோக்கினர். அன்னியப்படுத்தப்பட்ட உணர்வுகளுடன் இருந்த தமிழ் இளையோர் இத்திட்டத்தால் பாதிக்கப்பட்டு மேலும் அந்நியப்படுத்தப்பட்டனர். தமிழ் இளையோரின் உணர்வுகளைத் தீவிரமாக்கியதற்கு இது ஒரு முக்கிய காரணி என்று பலர் கருதினர். 1972ம் ஆண்டு பிரித்தானிய காலனிய அரசால் வரையப்பட்ட – அதுவரை நடைமுறையில் இருந்த – அரசியல் சாசனத்தைக் கைவிட்டு லங்கா அரசு தனது புதிய அரசியல் சாசனத்தை அமுலாக்கியது. இத்துடனேயே இத்தீவின் பெயரும் சிறீலங்கா என்று மாற்றப்பட்டது. இப்புதிய அரசியல் சாசனம் புத்த மதத்தையும் நாட்டின் அதிகாரபூர்வமான மதமாகப் பிரகடனப்படுத்தியது. அரசியல் சாசனம் 1978ம் ஆண்டில் மீண்டும் ஒருமுறை மாற்றப்பட்டது. பிரித்தானிய நாடாளுமன்ற முறையை ஒட்டிய அரசாங்கம் கைவிடப்பட்டு சட்டம் நிறைவேற்றும் அதிகாரத்தைக் கொண்ட ஜனாதிபதி பதவி முறை உருவாக்கப்பட்டது. பொதுத் தேர்தல்கள் மூலம் தமது அரசியல் அபிலாசைகளை ஈழத்தமிழர் மீண்டும் மீண்டும் வெளிப்படுத்தி இருந்தும் இப்புதிய அரசியல் சாசனங்களில் இவை புறக்கணிக்கப்பட்டன.

தமது அரசியல் கோரிக்கைகளில் முன்னேற்றம் எதுவும் காணாத ஈழத்தமிழர் 1976ம் ஆண்டு அன்றிருந்த தமிழ் அரசியல் கட்சிகளை எல்லாம் ஒருங்கிணைத்து ''வட்டுக்கோட்டைப் பிரகடனம்'' என்று அழைக்கப்படும் ஒரு தீர்மானத்தை வெளியிட்டனர். இப் பிரகடனம் தமிழீழத் தனிநாட்டுக் கோரிக்கையை முதன்முதலில் முன்வைத்தது. அடுத்து வந்த நாடாளுமன்றத் தேர்தலில் தமிழ் அரசியல் கட்சிகள் ஒருங்கிணைந்து வட்டுக்கோட்டைப் பிரகடனத்தைத் – தமிழீழத் தனிநாட்டுக் கோரிக்கையை – தம் தேர்தல் பிரச்சாரமாக முன்வைத்துத் தேர்தலில் அமோக வெற்றியீட்டின.

பிரித்தானிய காலனிய ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்றது முதல் இதுவரை நடந்தேறிய அரசியல் நிகழ்வுகள் அமெரிக்க–ரஷ்ய நாடுகளின் பனிப்போர் காலத்தில் இடம்பெற்றன. அந்நாட்களில் இத்தீவின் அயல்நாடான இந்தியா ரஷ்யாவின் நட்பு நாடாகவும் இலங்கைத்தீவு அமெரிக்காவின் நட்பு நாடாகவும் இருந்தன. இலங்கைத் தீவை தனது வட்டத்திற்குள் இழுக்கும் இந்தியாவின் முயற்சிக்கு அன்னியப்படுத்தப்பட்டு இருந்த ஈழத்தமிழ் இளையோர் சிறந்த கருவியாகினர். ஈழத்தமிழ் குழுக்கள் இந்தியாவில் ஆயுதப்பயிற்சி எடுக்க இந்திய அரசாங்கம் வழிசெய்து கொடுத்தது. 1983ம் ஆண்டு இடம்பெற்ற தமிழருக்கெதிரான இனக்கொலை

ஈழத்தமிழரின் ஆயுதப்போராட்டத்தை முனைப்பாக்கியது. தமிழ் இளையோர் பெரும் தொகையாக ஆயுதக்குழுக்களில் இணைந்தனர்.

1985ம் ஆண்டு இந்தியாவின் அனுசரணையுடன் பூட்டான் நாட்டின் தலைநகரமான திம்புவில் பேச்சுவார்த்தைகள் இடம்பெற்றன. இந்தியாவின் அனுசரணையுடன், லங்கா அரசுடனான இப் பேச்சுவார்த்தையில் ஈழத்தமிழர் சார்பில் தமிழ் அரசியல் கட்சிகள் ஆயுதக்குழுக்கள் யாவும் பங்குபற்றின. தமிழ் தரப்பினர் ஒருங்கிணைந்து அரசியல் தீர்வுக்கு அடிப்படையாக இருக்கவேண்டிய நாலு கொள்கைகளை முன்வைத்தனர். ஈழத்தமிழர் ஒரு தேசம்; இவர்களுக்கு ஒரு தாயகம் உண்டு; இவர்களுக்கு சுயநிர்ணய உரிமை உண்டு; மற்றும் இத்தீவில் வாழும் எல்லாத் தமிழர்களுக்கும் இத்தீவின் குடியுரிமை உண்டு என்பன அன்று முன்வைக்கப்பட்ட நாலு கொள்கைகள். அன்றிலிருந்து இவை திம்புக்கொள்கைகள் என அழைக்கப்பட்டு தமிழரின் அரசியல் கோரிக்கையின் அடிப்படையாக விளங்குகின்றன. திம்புப் பேச்சுவார்த்தை தோல்வியில் முடிந்தது.

ஏனைய ஈழத்தமிழர் ஆயுதக்குழுக்களை உள்வாங்கியும் அல்லது அழித்தும் விடுதலைப்புலிகள் ஆயுதப்போராட்டத்தின் முன்னோடிகளாகக் எழுந்தனர். 1987ம் ஆண்டு இந்தியாவும் லங்காவும் இந்திய–லங்கா ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டனர். விடுதலைப்புலிகள் இவ் ஒப்பந்தத்திற்குச் சம்மதிக்காததால் தமிழர் சார்பில் இந்தியா கைச்சாத்திட்டது. இவ்வொப்பந்தத்தின் பிரகாரம் ஒரு பெரிய இந்தியப்படை ஈழத்தமிழர் தாயகத்தில் வந்திறங்கியது.

விடுதலைப்புலிகளுக்கும் வந்திறங்கிய இந்தியப்படைக்கும் போர் மூண்டது. சிங்கள மக்கள் மத்தியிலும் இலங்கைத் தீவில் இந்தியப்படையின் பிரசன்னத்தை எதிர்த்துக் கிளர்ச்சிகள் ஆரம்பித்தன. லங்கா அரசுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையே பேச்சுவார்த்தைகள் இடம்பெற்றன. இருதரப்பினரும் இணைந்து தமது பிரச்சினையைத் தாமே தீர்ப்போம் என்று கூறி இந்தியப் படையை வெளியேறச் செய்தனர். இதைத் தொடர்ந்து லங்காவுக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையே மீண்டும் போர் மூண்டது.

விடுதலைப்புலிகள் தமது கட்டுப்பாடான நடத்தையாலும் களச்சாதனைகளாலும் ஈழத்தமிழர்களின் நன்மதிப்பைப் பெற்றுக்கொண்டனர். இதன் கரும்புலிகளின் செயற்பாடுகள் ஈழத்தமிழரிடையே வியப்பையும் மேற்குலகத்தில் அச்சத்தையும் விளைவித்தன. களமோதல்களில் தொடர்ந்து ஏற்பட்ட ஆளணி இழப்புக்கள் விடுதலைப்புலிகளுக்குக் கடும் ஆட்பற்றாக்குறையை

உண்டாக்கியது. அமைதியற்ற தொடர்ந்த போர்ச்சூழலிலிருந்து தப்புவதற்குப் பெருந்தொகையான தமிழர்கள் தாயகத்தை விட்டு வெளியேறினார்கள். பலர் மேற்குலக நாடுகளில் அரசியல் தஞ்சம் புகுந்தனர். இவர்களிடையே அரசியல் வேலைக்கும், நிதி சேகரிப்புக்கும் என விடுதலைப்புலிகள் பெரிய வலைப்பின்னலை உருவாக்கினார்கள். தாயகத்தில் தொடர்ந்த போரில் லங்கா ராணுவத்தின் கொடுமைகளால் பாதிக்கப்பட்ட தமிழர் விடுதலைப்புலிகளின் ஆட்சேர்ப்புக்குக் குறியிலக்கானார்கள். ஈழத்தமிழரின் அரசியல் போராட்டத்தை முன்னெடுப்பதற்கான ஒரு புதிய கலாச்சாரம் உருப்பெற்றது.

தமிழர் தாயகத்தில் வாழ்ந்து வந்த இஸ்லாமியர்கள், தமிழரின் அமைதிவழிப் போராட்டங்களில் ஆர்வமாகப் பங்கு பற்றினர்கள். ஆனால் ஆயுதப்போராட்ட ஆரம்பத்தின் பின் ஈழத்தமிழரின் அரசியல் போராட்டத்திலிருந்து அந்நியப்பட்டனர். இஸ்லாமியர் அதிகம் வாழ்ந்த மட்டக்களப்பு–அம்பாறைப் பகுதிகளில் தமிழருக்கும் இஸ்லாமியருக்கும் இடையே வன்முறைகள் இடம்பெற்றன. லங்கா ராணுவத்தால் ஆயுதம் வழங்கப்பட்ட இஸ்லாமிய இளையோர் தமிழர்களைத் தாக்கினர். விடுதலைப்புலிகளும் இஸ்லாமியர் மேல் தாக்குதல்கள் நடத்தினர். இதே நிலைமை யாழ்ப்பாணத்திலும் வரலாம் என அஞ்சி, 1992ம் ஆண்டு தமது கட்டுப்பாட்டிலிருந்த யாழ்ப்பாணத்தில் வாழ்ந்து வந்த ஒட்டுமொத்த இஸ்லாமிய மக்களையும் விடுதலைப்புலிகள் அகதிகளாக வெளியேற்றினர். இதனால் விடுதலைப்புலிகள் உலகின் கடும் விமர்சனத்திற்கு உள்ளாகினர்.

ஒரு தசாப்தத்திற்கு மேலாகத் தொடர்ந்த போரினால் களைப்புற்ற இலங்கைத் தீவின் ஒட்டுமொத்த மக்களும் 1994ம் ஆண்டு சமாதானம் கொண்டு வருவேன் என்று தேர்தல் பிரச்சாரம் செய்த ஒரு பெண் ஜனாதிபதியைப் பதவியில் அமர்த்தினார்கள். விடுதலைப்புலிகளுடன் போர்நிறுத்த ஒப்பந்தம் செய்யப்பட்டுப் பேச்சுவார்த்தைகளும் இடம்பெற்றன. புதிய ஜனாதிபதி அதிகாரப் பகிர்வு கொண்ட ஒரு அரசிலமைப்பை முன்வைத்தார். அன்றைய தமிழ் அரசியல் பிரதிநிதிகளில் பலரும் அதை வரவேற்றார்கள். ஜனாதிபதி முன்வைத்த அதிகாரப் பகிர்விற்குச் சில மாற்றங்களையும் இத்தமிழ் பிரதிநிதிகள் முன்வைத்தார்கள். ஜனாதிபதியின் இம் முன்மொழிவில் கூறப்பட்ட அதிகாரப் பகிர்வு போதாது என்று கூறி விடுதலைப்புலிகள் இதை ஏற்கவில்லை. அதே நேரத்தில் சிங்கள மக்களிடம் இருந்தும் இம் முன்மொழிவிற்குப் பலத்த எதிர்ப்புக்கள் தோன்றின. இதனால் இம் முன்மொழிவில் கூறப்பட்ட அதிகாரப்

பகிர்வு மேலும் குறைக்கப்பட்டது. ஜனாதிபதியின் முன்மொழிவை முதலில் ஆதரித்த தமிழ் அரசியல் கட்சிகள் இதனால் மிகவும் ஏமாற்றமடைந்தன. சிங்கள மக்களிடையே எழுந்த எதிர்ப்புகள் மாற்றப்பட்ட முன்மொழிவிற்கு எதிராகவும் தொடர்ந்தது. சில புத்தபிக்குகள் இதை எதிர்த்து இம் முன்மொழிவை ஜனாதிபதி கைவிடாவிட்டால் தம்மைத் தாமே எரியூட்டப் போவதாகப் பயமுறுத்தினர்.

சமாதான ஜனாதிபதி என்று அழைக்கப்பட்ட இந்த ஜனாதிபதிக்கு மேற்குலகின் ஆதரவும் அமோகமாக இருந்தது. இவரின் சமாதான முயற்சிகள் ''சமாதானத்திற்கான போர்'' இல் போய் முடிந்தது. போர்நிறுத்த ஒப்பந்தத்தை உடைத்து இப்போரை ஆரம்பித்தார்கள் என்ற கடும் குற்றச்சாட்டு விடுதலைப்புலிகள் மேல் எல்லோராலும் சுமத்தப்பட்டது. 1995ம் ஆண்டு லங்கா ராணுவத்தின் தாக்குதலால் விடுதலைப்புலிகள் யாழ்ப்பாணத்திலிருந்து வன்னிக்குப் பின் வாங்கினார்கள். யாழ்ப்பாணத்தின் ஒட்டுமொத்த நாலு லட்சம் மக்களும் விடுதலைப்புலிகளுடன் வெளியேறினார்கள். வெளியேறிய மக்களில் பெரும் தொகையானோர் வன்னியில் வாழத் தொடங்கினார்கள். கிளிநொச்சியை மையமாக் கொண்ட விடுதலைப்புலிகளின் வன்னி நடைமுறை அரசு இங்கிருந்து ஆரம்பிக்கிறது. சிறுவர் போராளிகளை இணைக்கிறார்கள், அரசியல்வாதிகளையும், பொது மக்களையும் கொலை செய்கிறார்கள் என்ற குற்றங்களைச் சுமத்தி அமெரிக்காவும் பிரித்தானியாவும் விடுதலைப்புலிகள் அமைப்பை 1990களில் பயங்கரவாதிகள் பட்டியலில் சேர்த்தது. வன்னியில் போரின் தாக்கமும் லங்கா அரசின் தடைகளும் சேர்ந்து வாழ்க்கை நிலை மிகவும் மோசமாகியது. யாழ்ப்பாணத்தை விட்டு விடுதலைப்புலிகளுடன் வெளியேறிய மக்கள் பலர் லங்கா ராணுவத்தின் கட்டுப்பாட்டிலிருந்து யாழ்ப்பாணத்திற்கு மீண்டும் திரும்பினர்.

விடுதலைப்புலிகள் ஈட்டிய பல ராணுவ வெற்றிகளைத் தொடர்ந்து, நோர்வேயின் அனுசரணையுடன் வரையப்பட்ட போர்நிறுத்த ஒப்பந்தத்தில் லங்கா அரசும் விடுதலைப்புலிகளும் 2002ம் ஆண்டு கைச்சாத்திட்டனர். மேற்குலகின் நண்பரான அந்நாள் பிரதம மந்திரியே லங்கா அரசின் சார்பில் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். அக்காலத்தில் பிரதமரும் ஜனாதிபதியும் இரு வேறு சிங்களக் கட்சியினராக இருந்தனர். ஒப்பந்தத்தில் கைச்சாத்திடும் முன் தன்னுடன் பிரதமர் கலந்தாலோசிக்கவில்லை என்று சமாதான ஜனாதிபதி என்று பெயரெடுத்த பெண் ஜனாதிபதி குற்றம் சாட்டினார்.

நோர்வே நாட்டினால் அமர்த்தப்பட்ட கண்காணிப்புக்குழு கொழும்பிலும் கிளிநொச்சியிலும் இரு மையங்களை நிறுவி இரு தரப்பினதும் போர்நிறுத்த ஒப்பந்த மீறல்களைக் கண்காணிக்க ஆரம்பித்தது. இதேபோல் நோர்வே நாட்டின் நிதியுடன் இரு சமாதானச் செயலகங்கள் நிறுவப்பட்டன. லங்கா அரசின் சமாதானச் செயலகம் கொழும்பிலும் விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகம் கிளிநொச்சியிலும் நிறுவப்பட்டன.

2003ம் ஆண்டில் இருதரப்பிற்கும் இடையே ஆறு சுற்றுப் பேச்சுவார்த்தைகள் உலகின் வெவ்வேறு நகரங்களில் இடம்பெற்றன. போரினால் மிகவும் பாதிக்கப்பட்ட தமிழீழ மக்களின் வாழ்வுநிலையை மேம்படுத்துவதற்கான கட்டுமானங்கள் பற்றிய தீர்மானங்கள் இப்பேச்சு வார்த்தைகளின் போது எடுக்கப்பட்டன. இவ்வாறு எடுக்கப்பட்ட தீர்மானங்களை லங்கா அரசு நிறைவேற்றவில்லை என்று விடுதலைப்புலிகள் தொடர்ச்சியாகக் குற்றம் சாட்டினார்கள். இதே காலகட்டத்தில் இலங்கைக்கு உதவி வழங்கும் நாடுகள் டோக்கியோ நகரில் கூடின. இக்கூட்டத்தில் லங்கா அரச பிரதிநிதிகளும் விடுதலைப்புலிகளின் பிரதிநிதிகளும் கலந்து கொண்டார்கள். இக்கூட்டத்தின் போது அமெரிக்கா, ஜப்பான், ஐரோப்பிய ஒன்றியம், நோர்வே ஆகிய நான்கு நாடுகளும் தம்மை இக்கூட்டத்தின் கூட்டுத் தலைமையாக அமர்த்திக் கொண்டன. பின்னர் இக்கூட்டுத் தலைமையும் சமாதான நடவடிக்கையில் ஒரு முக்கிய பங்கு வகிக்கத் தொடங்கியது. இதைச் சமாதான நடவடிக்கையின் கூட்டுத் தலைமை என்றே ஊடகங்களும் ஏனையோரும் அழைத்தனர். இவர்களின் அடுத்த கூட்டம் அமெரிக்காவில் இடம்பெற்றது. அமெரிக்கா ஏற்கனவே விடுதலைப்புலிகளைப் பயங்கரவாதிகள் என்று தடை செய்திருந்ததால் விடுதலைப்புலிகள் இக்கூட்டத்திற்கு அழைக்கப்படவில்லை. 2004ம் ஆண்டு விடுதலைப்புலிகள் நேரடிப் பேச்சுவார்த்தைகளைத் தற்காலிகமாக நிறுத்தியபோது அதற்கு இரண்டு காரணங்களைச் சொன்னார்கள். முன்னர் பேச்சுவார்த்தைகளின் போது எட்டப்பட்ட தீர்மானங்களை அமுல்படுத்தாமை ஒரு காரணம். உதவி வழங்கும் நாடுகளின் கூட்டத்திலிருந்து தம்மைத் தவிர்த்தமை இரண்டாவது காரணம்.

நேரடிப் பேச்சுவார்த்தைகள் நிறுத்தப்பட்ட பின்னர், விடுதலைப்புலிகள் ''இடைக்காலத் தன்னாட்சிக் கட்டுமானம்'' என்ற ஒரு முன்மொழிவை பேச்சுவார்த்தைக்காக முன்வைத்தார்கள். போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்ட லங்கா பிரதமரும் வேறு ஒரு முன்மொழிவு செய்தார். இருதரப்பினரும் இவையிரண்டையும்

பற்றிய பேச்சுவார்த்தைகளுக்குச் சம்மதம் தெரிவித்தனர். இவை இடம்பெறுவதைத் தடுக்கும் நோக்குடன் சமாதான ஜனாதிபதி என்றழைக்கப்பட்ட பெண் ஜனாதிபதி தனது அதிகாரத்தை பாவித்து நாடாளுமன்றத்தைக் கலைத்தார். தொடர்ந்து 2004ம் ஆண்டு நாடாளுமன்றத் தேர்தல் இடம்பெற்றது. போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்ட பிரதமர் தேர்தலில் படுதோல்வி அடைந்தார். போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கு எதிராகத் தேர்தல் பிரச்சாரம் செய்த சிங்களக் கட்சி வெற்றியீட்டியது. இத்தேர்தலுக்கு முன்னர், விடுதலைப்புலிகளின் முதன்மையான மட்டக்களப்புத் தளபதி ஒருவர் விடுதலைப்புலிகளின் அமைப்பிலிருந்து விலகி லங்கா அரசுடன் இணைந்தார். லங்கா அரசு இவரை ஒரு நாடாளுமன்றப் பிரதிநிதியாக நியமித்தது. விடுதலைப்புலிகளை ஆதரித்துத் தேர்தலில் போட்டியிட்ட தமிழ்க்கட்சி தமிழர்களிடையே அமோக வெற்றியீட்டியது. இதற்குப் பின்னர், 2009ம் ஆண்டில் போர் முடியும் வரையும் பிரதமரும் ஜனாதிபதியும் ஒரே கட்சியாளர்களாகவே இருந்தனர். போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்ட பிரதமர் இதன் பின்னர் பதவிக்கு வரவே இல்லை.

2004ம் ஆண்டு சர்வதேச சமாதான முன்னெடுப்பாளர்களின் கோரிக்கையின்படி கிளிநொச்சியில் மனித உரிமை அமைப்பான நிசோர் உருவாக்கப்பட்டது. 2004ம் ஆண்டு டிசம்பர் மாதச் சுனாமிப் பேரழிவு தமிழ் மக்களையும், சிங்கள மக்களையும் மோசமாகப் பாதித்தது. இதன் பின்னரான புனரமைப்புக்குப் பெருமளவு சர்வதேச நிதியுதவி வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன. விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டிலிருந்த பாதிக்கப்பட்ட பிரதேசங்களுக்கு நிதி சென்று சேர்வதை லங்கா அரசு கடுமையாகக் கட்டுப்படுத்தியது. நோர்வேயின் அனுசரணையுடன் வரையப்பட்ட சுனாமி மற்றும் பேரழிவு மீள்கட்டுமானம் பற்றிய ஒரு ஒப்பந்தத்தில் இருதரப்பினரும் கைச்சாத்திட்டனர். இது முதலில் நம்பிக்கையைக் கொடுத்தாலும் இவ்வொப்பந்தம் லங்காவின் சட்டத்தின் கீழ் செல்லுபடியாகாது என்று நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது.

இத்துடன் சமாதான முன்னெடுப்புக்கள் தேங்கி நின்றன. 2005ம் ஆண்டு இறுதியில் ஜனாதிபதித் தேர்தல் நடந்தது. சமாதான ஜனாதிபதி என்றழைக்கப்பட்ட பெண் ஜனாதிபதி தனது பன்னிரண்டு வருடப் பதவிக் காலத்தை முடித்துக்கொண்டதால் அவர் மீண்டும் தேர்தலில் போட்டியிடவில்லை. போர்நிறுத்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்ட மேற்குலகின் நண்பரான பிரதமர் அன்றைய நாடாளுமன்றக் கட்சியைச் சார்ந்த கடும்போக்காளரான

வேட்பாளருக்கு எதிராகப் போட்டியிட்டார். லங்காவின் ஜனாதிபதித் தேர்தலில் ஈழத்தமிழருக்குப் பங்கில்லை எனும் தொனியில் தேர்தலைப் புறக்கணிக்குமாறு விடுதலைப்புலிகள் ஈழத்தமிழருக்கு மறைமுகமாக வேண்டுகோள் விடுத்தனர். தமிழரின் தேர்தல் புறக்கணிப்பால் கடும்போக்காளரான ஜனாதிபதி நவம்பர் 2005ல் தெரிவு செய்யப்பட்டார். இவரே 2009ம் ஆண்டு மே மாதம் போரை முடிவுக்குக் கொண்டு வந்தார்.

*நிகழ்வுக் காலவரிசை:*

ஈழத்தமிழரின் அரசியல் போராட்டம் பற்றிய நிகழ்வுகளின் காலவரிசை இணையத்தில் பல தளங்களில் கிடைக்கிறது[39].

# இறுதிக் குறிப்புகள்

1. ஈழத்தமிழர்களின் தாயகத்தை குறிப்பதற்கான ஒரு தனிச்சொல் தொடர்ச்சியாக வழக்கத்தில் இருக்கவில்லை. ஈழம் என்ற சொல் இலங்கைத் தீவு முழுவதையும் குறிக்கும் சொல்லாகும். 1976ம் ஆண்டு வட்டுக்கோட்டைத் தீர்மானத்தின் பின்னர் தமிழீழம் என்ற சொல் தமிழர் தாயகத்தைக் குறிப்பதற்குப் பிரபலமாகியது. இன்று இப்பதம் தமிழரின் தனிநாட்டுக் கோரிக்கையுடன் இறுக்கமாக அடையாளப் படுத்தப்படுகிறது. ஆகையால் தாயகப் பிரதேசத்தை மட்டுமே குறிப்பதற்கு இச்சொல் இலகுவில் இடம் கொடுக்காது. இந்நூலில் தாயகப் பிரதேசத்தைக் குறிக்கும் ஒரு சொல் மிகவும் தேவையானதால் இச்சொல் தாயகத்தைக் குறிக்கும் சொல்லாக மட்டுமே கையாளப்படுகிறது.
2. ஐநாவின் சிறுவர் உரிமைச் சாசனம் 1987ம் ஆண்டு பிரகடனப்படுத்தப்பட்டது. இச்சாசனத்தில் 15 வயதைத் தாண்டியவர்களையே ராணுவத்தில் இணைக்கலாம் என்று சொல்லப்பட்டது. இச்சாசனத்துக்கு 2001ம் ஆண்டு மேலதிகமாகச் சேர்க்கப்பட்ட சேர்க்கையிலும் இதே வயதுக் கட்டுப்பாடே சொல்லப்பட்டது. ஆனால் இச்சேர்க்கையில் அரசல்லாத ஆயுதக்குழுக்கள் மட்டும் 18 வயதைத் தாண்டியவர்களையே தம் அமைப்பில் இணைக்கலாம் என்று சொல்லப்பட்டது. சிறிலங்காவில் யூனிசெப் அமைப்பு சிறுவர் போராளிகளை கண்காணிக்க ஆரம்பித்தது. 2002ம் ஆண்டு ஒப்பந்தத்தின் பின்னர் கண்காணிப்புக் குழுவும் ஐசிஆர்சியும் கூட சிறுவர் போராளிகள் பிரச்சினையை கண்காணிக்க ஆரம்பித்தனர். ஐநா பாதுகாப்புச் சபையின் 2005ம் ஆண்டு 1612 தீர்மானம், ஆயுதப் போராட்டங்களில் சிறுவர்களைப் பற்றியது. இப்பிரகடனத்தின் பிரகாரம் தெரிவு செய்யப்பட்ட நாடுகளில் சிறுவர் போராளிகளைக் கண்காணிப்பதற்காக ஐநா பாதுகாப்புச் சபை குழுக்களை அமைக்கும் என்று சொல்லப்பட்டது. சிறிலங்காவுக்கான குழுவாக யூனிசெப் அமர்த்தப்பட்டு அதில் போர்நிறுத்தக் கண்காணிப்புக் குழுவும் இணைக்கப்பட்டது.
3. Impact of Armed Conflict on Children, 1996, Graca Machel, UNICEF, http://www.unicef.org/graca (இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 1996ம் ஆண்டு கிரேசா மசேல் என்பவரால் எழுதப்பட்ட "ஆயுதப்போராட்டங்களில் சிறுவர்" என்னும் இந்த அறிக்கை ஐநா செயலாளர் நாயகத்தின் பணிப்பின் கீழ்

*எழுதப்பட்டது. ஆயுதப் போராட்டங்களுக்குள் அகப்பட்ட சிறுவர்களைப் பாதுகாக்க வேண்டியது பற்றியும் ஒன்றோடொன்று தொடர்புபட்ட சிறுவர் சந்திக்கும் தாக்கங்களைப் பற்றியும் இவ்வறிக்கை விபரிக்கிறது.*

4. Foot prints in sand - M-A-M report, 2005, NESOHR, http://www.nesohr.org/inception-sept2007/human-rights-reports/MAM-Report-A4N.PDF *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). யாழ்ப்பாணத்தை அண்டிய மண்டைதீவு-அல்லைப்பிட்டி-மண்கும்பான் ஆகிய மூன்று தீவுகளில் 1990ம் ஆண்டு காணற்போகச் செய்யப்பட்டவர்களை பற்றிய நிசோரின் இவ் அறிக்கை நானும் கிளி பாதரும் சேர்ந்து விசாரணைகள் மேற்கொண்டு எழுதியது.*
5. Forced eviction of Tamils from Northeast by Sri Lankan armed forces, 2005, NESOHR, http://www.mesohr.org/inception-sept2007/human-rights-reports/ForcedEvictions-Jaffna.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 2002ம் ஆண்டு போர்நிறுத்த ஒப்பந்தத்திற்கு முன்னர் தமிழர் தாயகத்தில் மக்களை அவர்கள் சொந்தக் காணியிலிருந்து வெளியேற்றிய பின் அவற்றில் லங்கா ராணுவத்தால் அமைக்கப்பட்ட பாதுகாப்பு வலையங்கள் பற்றிய நிசேரின் அறிக்கை வடகிழக்கு புள்ளிவிபர மையத்தால் சேகரிக்கப்பட்ட விபரங்களை கொண்டு நான் எழுதியது.*
6. Lest We Forget Part I, 2007, NESOHR, http://www.nesohr.org/files/Lest We Forget.pdf *(இ றுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 1956–2002ம் ஆண்டுகள் வரையான தமிழர் படுகொலைகள் பற்றிய* Lest We Forget Part-I 1956-2002 *என்ற நிசோரின் அறிக்கை வடகிழக்கு புள்ளிவிபர மையத்தால் சேகரிக்கப்பட்டு தமிழில் பதிவு செய்யப்பட்டவற்றை ஆதாரமாகக் கொண்டு நான் எழுதியது.*
7. Lest We Forget Part 2, 2008, NESOHR, http://www.nesohr.org/files/Lest We Forget-II.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 2004–2008ம் ஆண்டுகள் வரையான தமிழர் படுகொலைகள் பற்றிய* "Lest We Forget Part-2 2002-2004" *என்ற நிசோரின் அறிக்கை நான் சேகரித்த தரவுகளைக் கொண்டு எழுதியது.*
8. Statistics on civilians affected by war in Northeast, 2006, NESOHR, http://www.nesohr.org/inception-sept2007/human-rights-reports/StatisticsOnCiviliansAffectedByWar.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). வடகிழக்கு புள்ளிவிபர மையத்தால் சேரிக்கப்பட்ட 2002ம் ஆண்டுக்கு முந்திய போர் பாதிப்புகள் பற்றிய புள்ளிவிபரங்களை தொகுத்து நான் எழுதிய நிசோர் அறிக்கை.*
9. Piramanthanaru massacre, 2006, NESOHR, http://www.nesohr.org/inception-sept2007/human-rights-reports/PiramanthanaruMassacre1985.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 1985ம் ஆண்டு பிரமந்தனாறு என்னும் கிராமத்தில் நடந்த படுகொலை பற்றிய நிசோரின் அறிக்கை நான் விசாரணைகள் மேற்கொண்டு எழுதியது.*

10. Reluctant Mercenary, 2002, Tim Smith, Book Guild Limited, UK.

11. Fishing communities of Northeast and Ethnic factor, 2006, NESOHR, http://www.nesohr.org/inception-sept2007/human-rights-reports/NorthEastFishing.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*. *தமிழ் மீனவர்களின் உரிமைகள் மறுக்கப்பட்டதைப் பற்றிய நிசோரின் அறிக்கை நான் விசாரணைகள் மேற்கொண்டு எழுதியது.*

12. Demographic changes in the Tamil homeland in the island of Sri Lanka over the last century, 2008, LTTE peace Secretariat, http://www.sangam.org/2008/05/Demographic Changes.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*. *தமிழர் தாயகத்தில் லங்கா அரசின் திட்டமிட்ட குடிப்பரம்பல் மாற்றங்களைப் பற்றிய இவ்வறிக்கை வன்னியில் கிடைக்கப்பெற்ற தமிழ் ஆவணங்களை வைத்து ஆங்கிலத்தில் நான் எழுதியது.*

13. Extrajudicial, summary or arbitrary executions, Report of the Special Rapporteur, Philip Alston, MISSION TO SRI LANKA, (28 November to 6 December 2005) http://daccess-dds-ny.un.org/doc/UNDOC/GEN/G06/121/17/PDF/G0612117.pdf?OpenElement *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*.

14. The SLMM report 2002-2008, The Operation - The Organisation, 2010, Norwegian Ministry of Foreign Affairs, http://www.slmm-history.info/filestore/slmm report 101029 final.pdf, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*. *கண்காணிப்புக் குழுவின் தலைவர் 2003ம் ஆண்டு இரண்டு தடவைகள் மாற்றப்பட்டதை விபரிக்கும்* "Key events and Developments" *என்ற பகுதியைப் பார்க்கவும். இதே சம்பவத்தை தமிழ்நெற் செய்தி இணையத்திலும் இங்கு பார்க்கலாம்*, http://www.tamilnet.com/art.html?catid=13&artid=10681 *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*.

15. Children and armed conflict in the Northeastern part of the Island of Sri Lanka, 2006, Child Protection Authority, LTTE Peace Secretariat, http://www.crin.org/docs/ltte cac.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012)*. *விடுதலைப்புலிகளின் சமாதானச் செயலகத்தின் சிறுவர் பாதுகாப்பு ஆணையகத்தின் அறிக்கை நான் வன்னியில் பார்த்துக் கேட்டு அறிந்தவற்றை அடிப்படையாக கொண்டு எழுதியது.*

*16. விடுதலைப்புலிகளின் தலைவர் பிரபாகரனை நான் சந்தித்திருக்கிறேனா என்று பல தமிழர்கள் என்னைக் கேட்டிருக்கிறார்கள். அவரைச் சந்திக்க வேண்டும் என்று நான் ஒருபோதும் ஒருவரையும் கேட்டதில்லை. நான் அவரை இரு தடவைகள் கண்டிருக்கிறேன். டிசம்பர் 2005ல் மட்டக்களப்பு நாடாளுமன்ற உறுப்பினரான ஜோசப் பரராஜசிங்கம் கொலை செய்யப்பட்டபோது அவரின் உடல் கிளிநொச்சிக்கும் கொண்டு வரப்பட்டது. அவரின் உடலை ஊர்வலமாக கொண்டுசென்றபோது கிளிபாதருடன் நானும் சென்றேன். இறுதியில் அவரின் உடல் கிளிநொச்சியில் ஒரு மண்டபத்தில் வைக்கப்பட்டது. அங்கிருந்தவர்கள்*

வெளியேறுமாறு வேண்டப்பட்டனர். பரராஜசிங்கத்தின் குடும்பத்தினர் சிலர் உட்பட வேறு ஒருசிலரே அங்கிருந்தனர். புலித்தேவன் என்னையும் இருக்கும்படி கேட்டார். எனக்குக் குழப்பமாக இருந்தது. சிறிதுநேரத்தில் பிரபாகரன் காவலுடன் அவ்விடத்துக்கு வந்து பரராஜசிங்கத்தின் உடலுக்கு இறுதிமரியாதை செலுத்தினார். துயரத்திலிருந்த அவரின் குடும்பத்தினருடன் சிறிதுநேரம் பேசிவிட்டுச் சென்று விட்டார். நான் பிரபாகரனுடன் உரையாடினேனா என்று அடுத்தநாள் புலித்தேவன் என்னைக் கேட்டார். நான் இல்லையென்று சொன்னபோது அவர் ஏமாற்றமடைந்தவர் போல் தோன்றினார். இரண்டாவது தரமாக நான் பிரபாகரனைக் கண்டது 2006ல் செஞ்சோலையின் புத்தம் புது வளாகத்தின் திறப்பு விழாவின் போது. திறப்புவிழாவுக்கு ஜனனி என்னையும் அழைத்திருந்தார். நான் சென்ற ஏனைய விழாக்களைப் போலவே அதுவும் இருக்கும் என்று நான் முட்டாள்தனமாக நினைத்துக்கொண்டு சென்றேன். அங்கு சென்றதும் எல்லோரும் கடும் சோதனைக்கு உள்ளாக்கப்பட்டதைக் கண்டேன். அப்போதுதான் பிரபாகரனும் அங்கு வரப் போகிறார் என்பதை ஊகித்தேன். அன்று தற்செயலாக நான் பிரபாகரன் தம்பதிகளுக்குப் பின்னால் அமர்ந்தேன். புலித்தேவனைத் திருப்திப்படுத்தும் எண்ணத்துடன் என்னைப் பிரபாகரனுக்கு அறிமுகப்படுத்தும்படி மதிவதனியைக் கேட்டேன். தொடர்ந்து அவருடன் சில வார்த்தைகள் பரிமாறிக் கொண்டேன்.

17. ***கரும்புலிகள்:*** *தமிழ்ச்செல்வனின் கொலையைத் தொடர்ந்து 2008ம் ஆண்டில் எனக்குத் தெரிந்த பல விடுதலைப்புலி உறுப்பினர்கள் கரும்புலியாவதற்கு விண்ணப்பம் செய்திருக்கிறார்கள் என்று அறிந்தேன். அவர்களில் சிலர் கரும்புலியாக ஏற்கப்பட்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பெண் போராளியை மட்டுமே அவர் ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னர் சந்தித்தேன். சில வருடங்களுக்கு முன்னரே இணைந்த வேறு இரண்டு கரும்புலிகளையும் சந்தித்திருக்கிறேன். ஏனைய உறுப்பினர்கள் கரும்புலிகளான தங்கள் நண்பர்களைப்பற்றிப் பேசுவதையும் கேட்டிருக்கிறேன். இச்சிறிய தரவுகளிலிருந்து இவர்கள் எல்லோரும் சாதாரண மக்களைப் போன்றவர்களே என்று என்னால் அறிய முடிந்தது. இவர்கள் எல்லோருமே தமது குடும்பங்களைப் பற்றி மிகுந்த கரிசனையுள்ளவர்களாக இருந்தனர். இவர்களைச் சுற்றியிருந்தவர்கள் இவர்கள்மேல் ஒரு விசேடமான உணர்வைக் கொண்டிருந்தனர். ஆனால் இது வெளிப்படையாக காட்டப்படவில்லை. அச்சமூக சூழலில் கரும்புலியாகப் போவது இயற்கைக்கு மாறுபட்ட செயலாகப் படவில்லை. ஒரு வகையான தனித்தன்மை கொண்ட மக்கள் சில வகையான வெளிச்சூழல்களில் சில அனுபவங்களாலும் உணர்வுகளாலும் பாதிக்கப்பட்ட பின்னர் இவ்வகை முடிவை எடுப்பது இயற்கையாகவே தோன்றியது.*

நானறிந்த அல்லது கேள்விப்பட்ட கரும்புலிகள் ஏனையவர்களிலிருந்து சில குறிப்பிட்ட குணாதிசயங்களில் மாறுபட்டவர்களாக இருந்தனர். மனிதர்கள் எல்லோரும் ஒரேமாதிரியாகத் தம்மைச் சுற்றியுள்ளோர் மீது கரிசனை காட்டுவதில்லை என்பது தெரியும். ஒரு குடும்பத்திலேயே இதைத் தெளிவாகக் காணலாம். கரும்புலிகளாக போனவர்கள் தம்மைச் சுற்றியுள்ளவர்கள் மேல் அதிக கரிசனை கொண்டவர்களாக இருந்தனர். கரும்புலிகள் தமது வாழ்க்கையிலே அவர்களை மிகவும் பாதித்த ஒரு பாரிய துன்பகரமான நிகழ்வையும் சந்தித்திருந்தார்கள். நான் சந்தித்த அல்லது எனக்குத் தெரிந்த கரும்புலிகளுக்கிடையில் பொதுவான குணாதிசயங்களை நான் தேடியபோது இவையிரண்டும் எனக்குத் தென்பட்டன.

18. www.nesohr.org *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). நிசோரின் ஏனைய அறிக்கைகளை இங்கு பார்க்கலாம்.*

19. White van, www.youtube.com/watch?v=m eJt5Op SE *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). வெள்ளைவான் கடத்தல்கள் பற்றி நானும் பங்குகொண்டு தயாரித்த ''வெள்ளைவான்'' என்று பெயர் சூட்டப்பட்ட ஆவண ஒளிப்படத்தின் சுருக்கம்.*

20. Kfir fodder, www.youtube.com/watch?v=Ph0CwlmAgAI) *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). குண்டுவிமானத் தாக்குதல்களால் பாதிக்கப்படும் சிறுவர்களைப் பற்றி நானும் பங்குகொண்டு தயாரித்த ''கிபிர் உணவு'' என்று பெயர் சூட்டப்பட்ட ஆவண ஒளிப்படத்தின் சுருக்கம்.*

21. Propaganda Model, http://en.wikipedia.org/wiki/Propaganda model *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). சொம்ஸ்கி– கேர்மன் மொழிந்த பிரச்சார உருப்படிவத்தின் விளக்கம்.*

22. Madhu amma, www.youtube.com/watch?v=slkRdTm-1T0 *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 2008ம் ஆண்டு ஒரு பாடசாலை மாணவர்கள் நிறைந்த பேருந்தின் மீதான கிளேமோர் தாக்குதல் பற்றி நானும் பங்குகொண்டு தயாரித்த ''மடு அம்மா'' என்று பெயர் சூட்டப்பட்ட ஆவண ஒளிப்படத்தின் சுருக்கம்.*

23. Bombber returned,www.youtube.com/watch?v=X zKetfLv6A *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). 2008ம் ஆண்டு கிராஞ்சி என்னும் கிராமத்தில் இடம்பெற்ற குண்டுவிமானத் தாக்குதல் பற்றி நானும் பங்குகொண்டு தயாரித்த ''பொம்மர் திரும்பியது'' என்று பெயர் சூட்டப்பட்ட ஆவண ஒளிப்படத்தின் சுருக்கம்.*

24. Vanni Bombing and shelling victims since November - released 2 December, 2008, NESOHR, http://www.nesohr.org/files/November victims of bombing and shelling.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச்2012). நான் எழுதிய இந்த நிசோர் அறிக்கையில் 2008ம் ஆண்டு நவம்பர் 29ம் திகதி இடம்பெற்ற ஒரு கொத்துக்குண்டு தாக்குதலைப் பற்றி விபரித்திருந்தேன்.*

இதுவும் தொடர்ந்து இடம்பெற்ற பல கொத்துக்குண்டுத் தாக்குதல்களும் தமிழ் ஊடகங்களில் தொடர்ச்சியாக வெளியிடப்பட்டன. ஆனால் சர்வதேச ஊடகங்கள் எதுவும் இச்செய்தியை அக்காலத்தில் கவனத்தில் எடுக்கவில்லை. தமிழருக்கு இழைக்கப்பட்ட இத்தகைய பல கொடுமைகள், ஒட்டுமொத்தத் தமிழருக்கும் உண்மையென்று தெரிந்திருந்தும், சர்வதேசத்தால் ஏற்கப்படாமை பல தசாப்தங்களாகத் தொடர்கிறது. கொத்துக்குண்டுகள் பற்றிய இச்செய்தி மூன்று வருடங்களுக்குப் பின்னர் 2012ம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் இலங்கையில் கண்ணிவெடி அகற்றும் பணியில் ஈடுபட்டிருந்த ஒரு ஐநா பணியாளரின் இமெயிலூடாகக் கசிந்ததாக செய்திகள் வந்தன. இச்செய்தியைத் தொடர்ந்து மூன்று வருடங்களுக்கு முன் கொத்துக்குண்டுகளால் பாதிக்கப்பட்ட தமிழ் சாட்சிகள் பற்றிய செய்திகளும் வெளிவந்தன. இந்த ''புதிய செய்தி வெளிப்பாடுகள்'' விடுதலைப்புலிகள் அற்ற போருக்குப் பின்னரான காலத்தில் லங்கா அரசுக்கு எதிரான போர்க்குற்றச் செயற்பாடுகளுக்காக மேற்குலக நலன் சார்ந்து செய்யப்படுகின்றன என்ற சந்தேகத்தை என் மனதிலிருந்து என்னால் அகற்ற முடியவில்லை. பொஸ்பரஸ் குண்டுகளும் மக்கள் மேல் ஏவப்பட்டதானது தமிழ் மக்களுக்குத் தெரிந்த ஆனால் சர்வதேசத்தால் இன்றுவரை நிராகரிக்கப்பட்ட இன்னுமொரு கொடுமை.

25. ***வெள்ளைக்கொடி விவகாரம்:*** *2009 மே 16–19 வரையான போரின் இறுதிக்கட்டத்தில் நடந்தவற்றைப் பற்றி இன்றும் பல மர்மங்கள் உள்ளன. லங்கா ராணுவத்தால் தொகையாக பாலியல் வல்லுறவுகள், துப்பாக்கிமுனையில் நிறுத்திச் சுட்டுக் கொல்லுதல், கைது செய்து காணாமற் போதல்கள் ஆகியன ஐநா நிபுணர் அறிக்கை உட்பட்ட பல அறிக்கைகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. போரின் இறுதிக்கட்டத்தில் அரசியல்துறைப் பொறுப்பாளர் நடேசன் மற்றும் புலித்தேவன் உட்பட சில மூத்த விடுதலைப்புலி உறுப்பினர்கள் ஐநா, நோர்வே ஆகியோரின் தூண்டுதலுடன் லங்கா ராணுவத்திடம் சரணடைந்தார்கள். ஒரு வெள்ளைக் கொடியுடன் லங்கா ராணுவத்தை நோக்கி நடக்கும்படி இவர்களுக்குச் சொல்லப்பட்டது. இவர்கள் எல்லோருமே சுட்டுக் கொல்லப்பட்டார்கள். இதுவே வெள்ளைக் கொடி விவகாரம் என்று இன்று அழைக்கப்படுகிறது.*

26. The human rights situation in Sri Lanka, Eleventh Special Session of the Human Rights Council: Tuesday 26 and 27 May 2009, http://www2.ohchr.org/english/bodies/hrcouncil/specialsession/11/index.htm *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). போரின் முடிவுக்குப் பின்னர் அமர்ந்த ஐநா மனித உரிமை அமைப்பின் கூட்டத்தின் இவ் அறிக்கை பயங்கரவாதத்தை ஒழித்ததற்காக சிறீலங்காவை பாராட்டியது.*

27. Report of the UN Secretary-General's Panel of Experts Report on Accontability in Sri Lanka, 2011, http://www.un.org/News/dh/infocus/Sri Lanka/POE Report Full.pdf *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). ஐநா நிபுணர் குழுவின் இலங்கையில் போர்க் குற்றங்கள் பற்றிய அறிக்கை.*

28. Sri Lanka's killing fields, 2011, UK Channel 4 documentary, http: //www.channel4.com/programmes/sri-lankas-killing-fields/4od, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). ''சிறிலங்காவின் கொலைக்களம்'' என்றழைக்கப்பட்ட பிரித்தானியாவின் சனல்–4 தொலைக்காட்சியின் ஆவண ஒளிப்படம்.*

*29. விடுதலைப்புலிகளின் காலத்தில் தமிழீழ மக்களுக்கான மனிதாபிமானச் செயற்பாடுகளில் ஈடுபட்ட நியூசிலாந்து நாட்டில் வாழும் ஈழத்தமிழர் சிலரை இந்நாட்டின் புலனாய்துறையினர் தமிழர்களின் வீடுகளுக்கு வந்து குறுக்குவிசாரணை செய்தார்கள். எனது வன்னிக் காலத்துக்கு முன்னர் ஒரு தடவை என்னையும் குறுக்குவிசாரணை செய்தார்கள். எனது நகரத்திலிருந்த ஒரு பாராளுமன்ற உறுப்பினரூடாக நியூசிலாந்து நாட்டுப் பிரதமருக்கு இதுபற்றி முறையிட்டுக் கடிதம் எழுதினோம். புலனாய்வுத்துறையினர் நியூசிலாந்தில் வாழும் வெவ்வேறு சமூகங்களைப்பற்றி அறிந்துவைப்பதற்காகவே இவ்வாறு செய்கிறார்கள் என்ற பிரதமரின் பதில் வந்தது. நிச்சயமாக புலனாய்வுத்துறையின் விசாரணை சிநேக நோக்கத்தோடு இருந்ததாக எனக்குப்படவில்லை. பிரதமருக்கு கடிதம் எழுதிய பின்னர் புலனாய்வுத்துறை என்னை அணுகவில்லை. ஆனால் இத்தகைய மறுப்புத் தெரிவிக்காத ஏனைய தமிழர்களை அவர்கள் தொடர்ந்தும் விசாரணை செய்து வந்தார்கள்.*

*கனடாவில் வசித்து வந்த எனது தாயார் மார்ச் 2003ல் கடும் வருத்தமாக இருந்தபோது அவரைப் பார்ப்பதற்காக நான் நியூசிலாந்திலிருந்து கனடாவுக்குப் பயணம் மேற்கொண்டேன். எனது இரண்டாவது 2004ம் ஆண்டு வன்னிப் பயணத்திற்கு முன்னர் இது நடந்தது. எனது பயணத்திற்கு அமெரிக்க நகரான லொஸ் ஏஞ்சலிஸ் ஊடாக செல்ல வேண்டும். பாஸ்போட்டை பரிசீலிக்க நான் விமானப் பணியாளர்களுக்கான வரிசையில் தற்செயலாக நின்றேன். பரிசீலித்தவர் எனது பாஸ்போட்டை பார்த்துவிட்டு தயங்கியபோது கணனியில் எழுதியிருந்த ஒரு வரியை என்னால் படிக்க முடிந்தது. ''விடுதலைப்புலிகளுக்காக வேலை செய்பவர்'' என்று அதில் எழுதியிருந்தது. லொஸ் ஏஞ்சலிஸ் விமான நிலையத்தில் என்னைப் பல மணி நேரம் தடுத்துவைத்தார்கள். விமான நிலையப் பணியாளர்கள் என்னிடம் மூர்க்கமாக நடந்துகொண்டார்கள். பல தடவைகள் நான் குறுக்குவிசாரணை செய்யப்பட்டேன். என்னைப் படமெடுத்து, விரலடையாளமும் எடுத்தார்கள். எனது பைகள் நுணுக்கமாகப் பரீசிலணை செய்யப்பட்டது. இவையெல்லாம் நடக்கும் போது நான் விரைவில் எனது பயணத்தைத் தொடர அனுமதிக்கப் படுவேன் என்றே சொல்லி வந்தார்கள். இரவானதும் என்னை விமான நிலையத்திற்கு வெளியே ஒரு தடுக்குமிடத்தில் வைப்பது பற்றிய அவர்களின் உரையாடல்கள் எனது காதில் விழுந்தது. உடனேயே நான் விமானநிலையத்திற்கு வெளியே வரப்போவதில்லை என்றும் அமெரிக்காவுக்குள் நுழையும் எண்ணம் எனக்கில்லையென்றும்*

*அடித்துக் கூறினேன். பதிலாக அவர்கள் விரும்பினால் என்னை நியூசிலாந்துக்கு திருப்பி அனுப்பும்படி சொன்னேன். அப்படியே அவர்கள் செய்தார்கள். எனது தாயார் சிறுநீரக நோயினால் பாதிக்கப்பட்டிருந்தார். அம்முறை அவர் செயற்கைக் குருதி சுத்திகரிப்பு திட்டத்தை ஆரம்பித்ததால் உயிர் தப்பினார். அதன் பின்னர் 2004ல் இப்போது காலமாகிவிட்ட எனது தாயாரைப் பார்ப்பதற்காக இரண்டு தடவைகள் நான் கனடா சென்றிருக்கிறேன். இரண்டு தடவைகளும் அமெரிக்காவைத் தவிர்த்து நீண்ட பிரயாணங்கள் செய்தே கனடாவைச் சேர வேண்டியிருந்தது. இரண்டு தடவைகளும் கனடா விமானநிலையத்திலும் என்னைக் கடுமையாகக் குறுக்குவிசாரணை செய்தார்கள்.*

*2011ல் கூட அவுஸ்திரேலிய விமானநிலையத்தில் என்னை ஒரு மணித்தியாலம் தடுத்து வைத்தபோது எனக்கு திகைப்பாக இருந்தது.*

30. The Sri Lankan Tamil Diaspora after the LTTE, 2010, International Crisis Group, http://www.crisisgroup.org/en/publication-type/media-releases/2010/asia/the-sri-lankan-Tamil-diaspora-after-the-ltte.aspx *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). புலம்பெயர் தமிழர் விடுதலைப்புலிகளின் நோக்கத்தை கைவிடாமல் இருப்பதால் இலங்கையில் மீண்டும் போர் ஆரம்பிக்கலாம் என்று சர்வதேச நெருக்கடிக் குழு இவ் அறிக்கையில் கூறியது.*

31. Self-Determination and Conflict Resolution: From Kosovo to Sudan, 2010, Speech by Louise Arbour, International Crisis Group, http://www.crisisgroup.org/en/publication-type/speeches/2010/Louise-Arbour-self-determination-and-conflict-resolution-from-kosovo-to-sudan.aspx *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). சர்வதேச நெருக்கடிக் குழுவின் தலைவர் இவ் உரையில் தமிழீழ தனிநாடு பற்றிய அவரது அமைப்பின் நிலைப்பாட்டைப் பற்றி பேசினார்.*

32. http://www.foreignpolicy.com/articles/2011/04/26/tiger blood, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012). ''விடுதலைப்புலிகள் அழிக்கப்பட்டதால் உலகம் நன்மையடைகிறது* (World is a better place without LTTE)'' *என்ற இச் சொற்பதம் கோடன் வைஸ் என்பவராலேயே முதன்முதலில் சொல்லப்பட்டிருக்கலாம். இவர் போரின் இறுதி பற்றிய ஒரு நூலை 2011ம் ஆண்டில் வெளியிட்டார். இவரும் மேற்குலகத்தின் போர்க்குற்ற விசாரணை பற்றிய அழுத்தங்களில் பங்குள்ளவர்.*

33. The Prehistory of Sri Lanka, 1992, Siran Deraniyagala, Department of Archaeological Survey, Colombo

34. Demanding Sacrifice: War and Negotiations in Sri Lanka (chapter on Historical Context), 1998, Elizabeth Nissan, Conciliation Resources, http://www.c-r.org/accord-article/historical-context-accord-sri-lanka, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012).*

35. The Evolution of an Ethnic Identity, 2006, K Indrapala, Kumaran Book House, Chennai.

36. Buddhism Betrayed, 1992, Stanley Tambiah, Chicago University Press.

37. Sinhala fears of Tamil demands, 2006, A Velupillai, in Buddhism, Conflict and Violence in Modern Sri Lanka, Ed: Mahinda Deegalle, Routeledge.

38. Destroying a Symbol: Checkered History of Sri Lanka's Jaffna Public Library, 2006, Rebecca Knuth, World Library and Information Congress-IFLA 2006, Seoul: (http://archive.ifla.org/IV/ifla 72/papers/119-Knuth-en.pdf) *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012).*

*39. காலவரிசை:*

1. Chronology of the Sinhala-Eelam Tamil conflict, 1998, Conciliation Resources, http://www.c.-r.org/accord-article/chronology-accord-sri-lanka, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012).*

2. Sri Lanka profile, A chronology of key events, http//www.bbc.co.uk/news/world-south-asia-12004081, *(இறுதியாகப் பார்த்தது மார்ச் 2012).*

*****



"வன்னியில் விடுதலைப்புலிகளின்கீழ் அதிசயிக்கத்தக்க பல சமூக மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. காந்தியும், அம்பேத்கரும், பெரியாரும் எட்டாத வெற்றியை வன்னியில் விடுதலைப்புலிகள் எட்டினார்கள். தெற்காசியாவில் வியாபித்திருக்கும் சாதி எண்ணங்கள் வன்னியில் அழிக்கப்பட்டன. பெண் விடுதலைக்கான முன்னோட்டங்கள் அங்கு உருவாகியிருந்தன. போராட்ட உணர்வை மக்கள் இதயங்களில் ஏற்றி அங்கு மக்கள் ஒன்றுகூட்டப்பட்டிருந்தார்கள். தமிழரும் தெற்காசிய மக்களும் பலனடையக் கூடிய இன்னும் பல சமூக மாற்றங்களுக்கான சாத்தியங்களை வன்னி தன்னுள் கொண்டிருந்தது. இது இப்போது அழிக்கப்பட்டுவிட்டது. இன்று ஏதேனும் ஒரு அற்புதத்தால் தமிழீழம் தனி நாடாகப் பிறந்தாலும் அன்று வன்னி தன்னுள் கொண்டிருந்த நம்பிக்கைகளையும் சாத்தியங்களையும் இனிவரக் கூடிய தமிழீழத்தால் மீட்டெடுக்க முடியாது.

விடுதலைப்புலிகள் பல தவறுகளைச் செய்திருக்கிறார்கள். ஆனால் மேற்குலக அமைப்புக்கள் தொடர்ச்சியாக வர்ணித்ததைப் போல விடுதலைப்புலிகள் ஒரு கொடிய அமைப்பல்ல. விடுதலைப்புலிகளை ஒழித்தால்தான் உலகம் நன்மையடையும் என்றுகூட இவர்கள் வர்ணித்திருக்கிறார்கள். புலத்துத் தமிழரின் உதவியுடனும் வேறு எவரினதும் உதவியுமில்லாமலும் கொடூரமான லங்கா அரசை மட்டுமே விடுதலைப்புலிகள் எதிர்த்தார்கள். அவர்கள் சர்வதேச மட்டத்தில் தனிமைப்படுத்தப்பட்டிருந்தாலும் தம் இலக்கை நோக்கி அணியமாக முன்னேறிக் கொண்டிருந்தார்கள். முழு உலகையும் எதிர்த்து அதிலும் கூட வெற்றி கொள்ளுவார்கள் போலத் தோன்றியது. விடுதலைப்புலிகள் பற்றிய இத்தகைமையே உலகில் இன்று நிலவும் ஒழுங்கைக் குலைப்பதாக இருந்தது. அடைக்கப்பட்ட ஆட்டுமந்தைகளில் ஒன்று படகைத் திறந்து வெளியேற அறிந்துகொண்டால் அதைச் சுடுவதைத் தவிர வேறு வழியில்லை. இல்லாவிட்டால் ஆட்டுமந்தைகள் எல்லாம் தொடர்ந்து வெளியேற ஆரம்பித்துவிடும். படகைத் திறக்கத் தெரிந்த ஆடுதான் விடுதலைப்புலிகள். அவர்களை அழிப்பதைத் தவிர வேறு வழியில்லை."



விடியல்



ISBN 978-81-89867-57-7



விடியல்

விடியல் பதிப்பகம், கோவை